# பதஞ்சலி யோகம்

## ஒரு விஞ்ஞான விளக்கம்

**பாகம் - 10**

ஓஷோ

தமிழில் :
சி. எஸ். தேவநாதன்


Since 1976


**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு.
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

**PATHANJALIYOGAM : ORU VIGYANA VILAKKAM - 10 (Tamil)**



Originally published in English under the title:
**THE ALPHA AND THE OMEGA, VOLUME - 10**


For more information : www.osho.com

A Comprehensive multilingual web site featuring Osho's meditations, books and tapes and an online tour of Osho International Meditation Resort.




| | | |
|---|---|---|
| Translated by | : | **C. S. Devanathan** |
| Coordination by | : | **Dhyan Sanjay** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | December, 2007 |
| Second Edition | : | 2013 |
| Third Edition | : | 2019 |
| Pages | : | **368** |
| Price | : | **Rs. 350/-** |
| Printed at | : | Sree Durga Printers, Chennai |

Published by :

**KAVITHA PUBLICATION**
8, Masilamani Street, Pandy Bazaar,
T. Nagar, Chennai - 600 017
Ph: 044-4216 1657 What'sapp : +91-7402222787
e-mail: kavitha_publication@yahoo.com
Website : www.kavithapublication.in

தேடல் உள்ளவர் தன்னுடைய இருப்புணர்வின் பாலை வனங் களைக் கடந்தாக வேண்டும். அவர் நெருப்பினுள் நுழைந்து, தன்னுடைய உடைகளைக் களைந்து, அந்திச்சூரியனின் ஆரஞ்சுக் கதிர்களின் முன்பாய் நிர்வாணப்பட வேண்டும். மணற்காற்றில் ஊறுபடத் தக்கவராய் அவர் இருக்க வேண்டும். அந்தக் காற்று அவரை நயமும், இணக்கத் தன்மையும் உடையவராக்கி விடும். புராணத்தில் வருகிற பீனிக்ஸ் பறவை மாதிரி தன்னுடைய சாம்பலில் இருந்து அவர் உயிர்த்தெழுவார். தோல்வியில் கிடைத்த சாம்பல் விவேகத்துக்குத் தீனியாகும். அரிதான பாலைவனச் சோலையில் அவர் உணவிற்காகச் சற்று தாமதிக்கலாம். பயணம் நீண்டது, நிறையவே வாழ்ந்துபார்க்க வேண்டியுள்ளது.

வறட்டுத் தன்மையுள்ள யோகாவின் வழியே கடுமையான முயற்சி, செயல்முறை, ஒவ்வொரு தப்படியாய் செய்வது இவற்றின் மூலம் பகவான் நம்மைக் கொண்டு செல்கிறார். அது மிக இனிமையாகவும், மகிழ்ச்சியாகவும் இருப்பதை நாம் குறைந்த அளவே கவனிக்கிறோம். இந்தச் சோலை வனத்துக்கு நம்மைக் கொண்டுவந்தது அவர்தான். அந்த இடத்தில் இருந்து நாம் விலகுவது என்பதேயில்லை.

பகவானின் தோட்டத்தில் பலவகை இளஞ்செடிகள், வாழ்வின் வெகுமதியை வாரிப்பருகும் இதழ்களை உடைய பல்வேறு பூக்கள் இருக் கின்றன. அந்த வானைக்காணும் உணர்வில் தங்கள் குட்டித்தூக்கத்தில் இருந்து அவை விழித்துக்கொள்கின்றன வாழ்வின் அழைப்பு காதில் விழுகிற கணத்துக்காகக் காத்திருக்கும் ஒவ்வொன்றினுள்ளும் பகவான் வீற்றிருக்கிறார், வெகு அமைதியாக புரிதல், நிகழ்வதற்காகவும், தேடல் தொடங்குவதற்காகவும் அவர் காத்திருக்கிறார். அதன்பிறகு அவர் எங்களைக் கொண்டு செல்கிறார்.

அவர் எங்களைக் கொண்டு சென்றுவிட்டார். நாங்கள் பாலைவனத் தைக் கடந்துவிட்டோம். தற்போது அந்தச்சோலை... முடிவான முடிவு.

**– மா. யோகசுதா**

# பொருளடக்கம்

அத்தியாயம்–1

# செயற்கை மனதைக் கைவிடுதல்

(பதஞ்சலி சூத்திரங்களின் கடைசிப் பிரிவான
கைவல்ய பாதம் தொடங்குகிறது)

*சூத்திரம்: 1* *'ஜன்மௌ திமந்த்ர தய; ஸமாதிஜா; ஸித்தய'*

*'பிறவி, ரசாயன மருந்துகள், மந்திர ஆற்றல், தவம், சமாதி இவற்றின் மூலம் சித்திகள் கிடைக்கின்றன'.*

*சூத்திரம்: 2* *'ஜாத்யந்தர பரிணாம; ப்ரக்ருத்யாத் பூராத்'*

*'பிறப்பு, சில வேளைகளில் மருந்துகள், தவம் இவற்றின் மூலம் ஒருவனுக்கு சித்திகள் வாய்க்கும்'. (யோகம் சொல்லும் பரிணாமத்தில் ஆத்மனின் தன்மை வெளிப்படும் போது இயற்கையால் தடை ஏற்படுகிறது. அத்தடை கொஞ் சம் கொஞ்சமாய் விலகும்போது உயிரினத்தின் இயல்பு மாறும். அதற்கேற்ப வடிவும், பெயரும் கொண்டதாய் உடலும் மாறும்.)*

*சூத்திரம்: 3* *'நிமித்த மப்ரோய ஜகம் ப்ரக்ருதீனாம்*
*வர்ண பேத ஸ்துத: க்ஷேத்ரிக வத்'*

*'இயற்கையின் மாறுபாட்டிற்கு நற்செயல்களும், தீச்செயல் களும் நேரடிக்காரணமில்லை. நீரின் போக்கில் உள்ள தடையை விவசாயி நீக்கும்போது அதுதன் சொந்த இயல்பாலேயே பாய்வதுபோல் செயல்களும் இயற்கையின் பரிணாமத்திற்கான தடைகளை நீக்குகின்றன.*

*சூத்திரம்: 4* *'நிர்மாண சித்தாந்த்யஸ்மி,தா மாத்ராத்'*

*'அகந்தை உணர்வில் இருந்தே செயற்கை மனங்கள் தோற்றுவிக்கப் படுகின்றன.'*

*சூத்திரம்: 5* *'ப்ரவிருத்தி பேதே ப்ரயோஜகம்*
*சித்தமேக மனே கேஷாம்'*

*'தோற்றுவிக்கப்பட்ட மனங்களின் செயல்கள் வெவ்வேறாக இருந்தாலும், அவையனைத்தையும் அடக்கியாள்வது முதன்மை மனமே (மூல சித்தம்) ஆகும்.*

மனிதனைச் சிந்தனைத் தெளிவற்றவன் என்றுதான் சொல்ல வேண்டும். தன்னிடம் முன்பே உள்ளதை அவன் கண்டடைய முயற்சிக்கிறான். தான் யார் என்பதையும் அவன் அறிந்திருக்கவில்லை அவனுடைய ஆசைகளும், விருப்பங்களும் அவனைப் பைத்தியமாக்கி விட்டிருக்கின்றன. இறுதியாக, அவன் விரக்திக்குள்ளாக அவையே காரணமாய் இருந்திருக்கின்றன. முயற்சியின் மூலம் உங்களை நீங்கள் கண்டடைவதற்கில்லை. அதனால் தான் நீங்கள் ஏமாற்றத்துக் குள்ளாக நேர்கிறது. நீங்கள் முன்பே அங்கு இருந்து கொண்டி ருக்கிறீர்கள். முயற்சியை நிறுத்திவிட வேண்டும், தேடுதலை நிறுத்தி விட வேண்டும். நீங்கள் எதிர் கொண்டேயாக வேண்டிய மிகப்பெரிய பிரச்சினை இது.

ஒன்று உங்களிடம் இருந்து கொண்டிருக்கிறது, இருந்தாலும் நீங்கள் அதைத் தேடிக் கொண்டிருக்கிறீர்கள், அதுதான் பிரச்சினை தற்போது நீங்கள் அதை எப்படிக் கண்டுபிடிப்பீர்கள்? முன்பே உங்களிடம் இருப்பதை உங்களால் கண்டுகொள்ள முடியவில்லை. உங்களால் அதைக்காண முடிவதில்லை. ஆனாலும், கண்டுபிடிக்கிற வேலையை நீங்கள் தொடர்கிறீர்கள். நீங்கள் எதைத் தேடுகிறீர்களோ அது இப்போது இந்தக் கணத்தில் உங்களிடந்தான் இருக்கிறது. தேடப்படுவது தேடுபவனுக்குள் இருக்கிறது. இதன் காரணமாகவே அவன் உணர்ச்சி மிகைப்புக்கும், பித்து நிலைக்கும் உள்ளாவது.

உங்கள் மனம் ஏதோ ஒன்றில் ஒரு முனைப்பட்டிருக்கிறது என்றால், உங்களிடம் ஒரு செயல் நோக்கம் இருக்கவே செயயும். உங்கள் கவனம் இனியும் தடையற்றதாக இருக்காது. நோக்கம் கவனத்தை முடக்கிப்போடுகிறது. நீங்கள் தீவிரமாக ஒன்றை ஆராயமுற்படுகிறபோது உங்களுடைய உணர்வுநிலை குறுகிவிடும். அது மற்ற எல்லாவற்றையும் தவிர்த்துவிடும். அது உங்களுடைய ஆசை, நம்பிக்கை, கனவு இவற்றை மட்டுமே உள்ளடக்கி இருக்கும். நீங்கள் என்பதைத் தெளிவாகப்புரிந்து கொள்ள, உங்களுக்கு ஒரு

நோக்கம் தேவைப்படாது. உங்களுக்குத் தேவை (கவன ஒருமை) தூய்மையான கவனம் மட்டுமே. உங்கள் உணர்வு இங்கிருந்தால் போதும், எங்கேயும் செல்ல வேண்டியதில்லை. அடிப்படையில் பிரச்சினை இதுதான். நாய் தன்னுடைய வாலை தானே துரத்துகிறது. அந்த வேலையில் ஏமாற்றந்தான் மிஞ்சுகிறது. தோல்வியைத்தவிர வேறெதுவும் கைக்குவரப் போவதில்லை என்கிற நிலையில் அதற்குப் பைத்தியமே பிடித்துவிடுகிறது.

தாம் விரக்தியுற்றிருப்பதாக அன்றொருநாள் ஒரு சந்நியாசி சொன்னார். எனக்குப் பெரிய அளவில் மகிழ்ச்சி. காரணம், நீங்கள் விரக்தியாய் உணர்கிற போது உங்களுக்குள் ஏதோவொன்று திறந்து கொள்கிறது. நீங்கள் விரக்தியாய் உண்மையிலேயே விரக்தியாய் உணர்கிறபோது அந்நிலையில் வருங்காலம் மறைகிறது. எதிர்பார்ப்பு, விருப்பம், நோக்கம் இவற்றின் பின்னணியோடுதான் வருங்காலம் என்பது இடம்பெற முடியும். வருங்காலம் என்பது செயல்திட்டம் அல்லாது வேறேயென்ன. அந்த மனிதனின் விரக்தி எனக்கு மகிழ்ச்சியளிக்கிறது.

ஃபிரிட்ஸ் பேர்ல்ஸ் – இந்த நூற்றாண்டின் புரிந்துகொள்ளும் திறன் மிக்க மனிதர். அவர் கூறுவார்; இந்த மருத்துவரின் ஒட்டு மொத்த வேலையும் ஏமாற்றத்தைத் தோற்றுவிப்பதன்றி வேறில்லை.

அவர் குறிப்பிடுவது என்ன? நீங்கள் உண்மையிலேயே உங்களுடைய ஆசைகளில் எதிர்பார்ப்புகளில் நம்பிக்கைகளில் ஏமாற்றம் அடையாவிடில் மீண்டும் உங்கள் இருப்புணர்வுக்கு (being) வீசியெறியப்பட மாட்டீர்கள். உண்மையான ஏமாற்றத்தை ஓர் ஆசி என்றே சொல்ல வேண்டும். அந்தச் சந்நியாசி சொன்னார்,' நான் ஏமாற்றம் அடைந்தவனாக இருக்கிறேன். எதுவும் நேராதது போல் அது தோன்றுகிறது. நான் அத்தனை வகை தியானங்களையும், சிகிச்சைகளையும் செய்து பார்த்தாயிற்று.'' தியானங்கள், சிகிச்சைகள் இவற்றின் நோக்கம், எதுவுமே உங்களுக்கு நேரவில்லை என்று உணர்த்துவதுதான். எல்லாம் முன்பே நடந்தாயிற்று. கடுமையான ஏமாற்றத்தில் உங்களுடைய சக்தி மூலத்துக்கே திரும்புகிறது.

உங்கள் மீதே உங்களுக்கு நம்பிக்கைக்குறைவு உண்டாகிறது. அதனால்தான் மக்கள் தங்கள் குருமார்களையும், தங்கள் ஆசான் களையும் தங்களுடைய மருத்துவர்களையும் மாற்றிக் கொண்டே யிருக்கிறார்கள், காரணம் 'இங்கேதான் ஏமாற்றப்பட்டேன். நம்பிக்கைக்கான புதிய விதைகளை வேறு எங்காவது விதைக்கப் பார்க்கிறேன்' என்று சொல்கிறார்கள். அந்நிலையில் நீங்கள் தொடர்ந்து தவறவிட்டுக் கொண்டே இருப்பீர்கள்.

'உங்களை எப்படி நீங்கள் நம்புகிறீர்கள், உங்கள் ஆசைகளில் எப்படி ஏமாற்றமடைகிறீர்கள் என்பதுதான் பிரச்சினை. நீங்கள் இதனைப்புரிந்து கொண்டுவிட்டால், உண்மையில் அது மிகப்பெரிய மிகப்பெரிய திறமைதான்.

நான் அதைத்தான் இங்கு செய்து கொண்டிருக்கிறேன். உங்களிடம் விருப்பங்கள் எதுவும் இல்லை என்றால் நான் முதலில் அவற்றை உண்டுபண்ணுகிறேன்.

நான் நம்பிக்கையை உங்களுக்கு வழங்குகிறேன். 'ஆமாம், சீக்கிரமே ஏதோ ஒன்று நடக்கப்போகிறது' என்று நான் சொல்கிறேன். காரணம், அங்கே ஆசை இருப்பதை – விருப்பம் இருப்பதை, ஆனால், முழுவீச்சில் இல்லை என்பதை நான் அறிந்திருக்கிறேன். அது ஒருவிதையின் வடிவில் அங்கே மறைந்துள்ளது, அது முளைத்தாக வேண்டும், மலர்ந்தாக வேண்டும், ஆசை மலர்கிறபோது அந்த மலர்கள் ஏமாற்றத்தில் மலர்ந்தவையாகவே இருக்கின்றன.

அந்நிலையில் நீங்கள் ஒட்டுமொத்த அறிவின்மையையும், தவறையும் கைவிடுகிறீர்கள். புதிதாய் ஒரு நம்பிக்கையைத் தொடங்காதீர்கள் என்று நான் சொல்கிறபோது உண்மையான ஏமாற்றத்தில் அதிகார பூர்வமாக அதை நான் சொல்கிறேன். நீங்கள் அப்படியே அதை ஏற்றுக்கொண்டு வீடு திரும்புகிறீர்கள் – சிரிக்க ஆரம்பிக்கிறீர்கள். நீங்கள் இதைத்தானே தொடர்ந்து கண்டுபிடிக்க முயற்சித்தது. அது எப்போதுமே உங்களுக்குள் இருந்து கொண்டி ருக்கிறது. அது எப்போதுமே உங்களுக்குள் இருந்தாலும் நீங்கள் அதைக்கண்டு பிடிக்கும் முயற்சியைத் தொடர்ந்து மேற்கொண்டி ருக்கிறீர்கள்.

'The king of Hearts' என்றோர் அருமையானபடம். அது முதல் உலகப் போரை மையமாக வைத்துப் பின்னப்பட்ட கதை. பிரான்சுக்குச் சொந்தமான ஒரு நகரத்துக்காக ஜெர்மன் காரர்களும் ஆங்கிலேயர் களும் போரிட்டுக் கொண்டிருக்கின்றனர். ஜெர்மன்காரர்கள் அந்த நகரத்துக்கு 'டைம்–பாம்' வைத்துவிட்டு வெளியேறுகின்றனர். குண்டு வைக்கப்பட்டதை அறிந்த பிரெஞ்சுக்காரர்களும் அங்கிருந்து வெளியேறி விடுகின்றனர்.

மனநல நோயாளிகள் தங்கள் விடுதியில் இருந்து வெளியில் வந்து அந்த நகரத்தை வசப்படுத்திக் கொள்கிறார்கள். எல்லாருமே மனம் இயல்பு நிலையில் இல்லாதவர்கள். அவர்களுக்குப் பாதுகாப்பாக இருந்த காவலர்களும் ஓடிவிடுகிறார்கள். அவர்கள் நகரத்துக்குள் வந்துபார்த்த போது கடைகளும், அலுவலகங்களும் வெறிச்சோடிக் கிடக்கின்றன. எனவே, நகரத்தைத் தங்கள் பிடியில் எடுத்துக் கொள்கிறார்கள். காலியான நகரத்தை அவர்கள் தங்கள் வசம் வைத்திருக்கிறார்கள். அவர்களுக்கு வியப்பும், புத்துணர்ச்சியும் தோன்றுகிறது. வித்தியாசமான உடைகளை அணிந்து மகிழச்சி அடைகிறார்கள். அவர்களுடைய முரட்டுத் தன்மையும், அநாகரிகமும் மறைகிறது. அவர்கள் அதற்கு மேலும் பைத்தியக்காரர்கள் அல்லவே. அவர்கள் அத்தனைகாலமும் அடைய விரும்பிய, அடைய முடியாமல் போன ஒன்றை தற்போது எவ்வித முயற்சியும் இல்லாமல் அடைந்து விடுகிறார்கள்.

ஒருவர் இராணுவத் தளபதி ஆகிறார் அல்லது கோமகனாகிறார், ஒருவர் சீமாட்டி ஆகிறார் இன்னொருவர் மருத்துவராகிறார், மதகுரு ஆகிறார் அல்லது தாம் விரும்புகிற எதுவாகவும் ஆகிறார். எதற்கும் தடை இல்லை. அவர்கள் வெவ்வேறு வித ஆடைகளை அணிந்து மகிழ்ச்சியாக அனுபவிக்கிறார்கள். அதிகாரி, நிலப்பிரபு, சீமாட்டி, மதகுரு என்று ஊரில் அவரவருக்கும் ஒரு பாத்திரம் (role) இருக்கிறது. ஒருவர் நாவிதராகிறார். தமது வாடிக்கையாளருக்குத் திருப்தியளிப்பதன் மூலம் மேலும் பல வாடிக்கையாளர்களை அவர் பெறுகிறார்.

தங்கள் பாத்திரத்தை அவர்கள் வாழ்ந்து பார்க்கிறார்கள். அவர்கள் இந்தக் கணத்தில் வாழ்கிறவர்கள், தாங்கள் வாழும் கணத்தை முழுமையாக அனுபவித்து மகிழ்கிறவர்கள்.

முன்பு வைக்கப்பட்ட குண்டை செயலிழக்கச் செய்வதற்காக ஒரு பிரிட்டிஷ் அதிகாரி அனுப்பி வைக்கப்படுகிறார். அந்தக் குண்டு எங்கே வைக்கப்பட்டிருக்கிறது என்பது எளிதாக தெரியாத காரணத்தால் அவர் பெருத்த ஏமாற்றத்துக்குள்ளாகிறார்; நாம் எல்லாருமே சாகப் போகிறோம் என்ற, படைத்தலைவர், கோமகன், மதகுரு என்று பல பாத்திரங்களை ஏற்ற அந்த பைத்தியக்காரர்கள் அவனுடைய (பிரிட்டிஷ் அதிகாரி) செயலைக் கவனிக்கிறார்கள். மகிழ்ச்சியும், உற்சாகமுமாய் கரவொலி செய்கிறார்கள். உண்மையில் அவனுக்கு ரொம்பவே பைத்தியம் பிடித்து விடுகிறது.

அடுத்தநாளில் ஜெர்மானியப்படையும், பிரிட்டிஷ் படையும் நகரத்துக்குள் திரும்பவும் நுழைகின்றன. பைத்தியக்காரர்கள் அதனை ஓர் அணிவகுப்பாக எண்ணிக் கொள்கிறார்கள். எதிரும் புதிருமாய் வந்து விட்ட படைகள் ஒன்றோடொன்று மோதிக் கொள்கின்றன. ஒருவரையொருவர் கொன்று தீர்க்கிறார்கள். மேல்மாடி முற்றத்தில் நின்றிருந்த கோமகன், வீதியில் கிடக்கும் சடலங்களைப் பார்த்து விட்டு 'இவர்களுடைய நடிப்பு மிகையாக இருக்கிறது' என்று வெறுப்புடன் சொல்லிக் கொள்கிறார். ஓர் இளம்பெண் கீழே பார்த்துவிட்டு 'வேடிக்கையான மனிதர்கள் என்று சொல்லிக் கொள்கிறாள். மதகுரு சொல்கிறார், 'உண்மையிலேயே இவர்கள் பைத்தியங்களாகி விட்டனர்' என்று.

பைத்தியக் காரர்களுக்குப் பைத்தியம் பிடித்திருப்பதாக நீங்கள் எண்ணிக் கொள்கிறீர்கள். அப்படியே உங்களையும் பாருங்கள் நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் என்று. தன்னை பிரமத மந்திரியாகவும், அதிபராகவும் தன்னைப் பாவித்துக் கொள்கிறார் என்றால் அவர்கள் பைத்தியங்கள் என்றா நீங்கள் கருதுகிறீர்கள்?

உங்களுடைய தலைமை அதிகாரிகளும், அதிபர்களும் என்ன செய்கிறார்கள்? உண்மையில் அவர்கள்தாம் பெரிய அளவில் பித்துப் பிடித்தவர்கள். பைத்தியக்காரன் தான் செய்து கொண்ட கற்பனையில் மகிழ்ச்சியடைகிறான். அதை நடைமுறைப் படுத்துவது பற்றி அவன்

கவலைப்படுவதில்லை. ஆனால் அதிபர்களும், தலைமை வகிப்பவர்களும் தங்கள் கற்பனையில் நிறைவு காண்பதில்லை. அவர்கள் அதை நடைமுறைப்படுத்த முயல்கிறார்கள். யாராவது ஒரு பைத்தியக்காரன் தன்னை அலக்சாண்டராகவோ, ஒரு செங்கிஸ் கானாகவோ பாவித்துக் கொண்டாலும் அவன் யாரையும் கொல்லமாட்டான், அவனால் எந்த ஆபத்தும் இல்லை. அவன் பாட்டுக்கு அப்படியே இருந்து விடுவான். தன்னை எவ்விதத்திலும் நிரூபித்துக்காட்ட அவன் முயல்வதில்லை. ஆனால், தங்களைத் தெளிந்த அறிவுடையராக சொல்லிக் கொள்பவர்கள் ஓர் அலக்சாண்டராகவோ, செங்கிஸ் கானாகவோ, தமூரலினாகவோ கருதிக் கொண்டால் அந்தக் கருத்தோடு அவர்கள் நின்றுவிடுவதில்லை. அவர்கள் அதைச் செயல்பூர்வமாக்க முயல்கிறார்கள். பைத்தியக்காரவிடுதியில் உள்ள பைத்தியங்களைவிட அதிக பைத்தியம் உங்கள் அடால்ஃப் ஹிட்லர்களுக்கும் மாசேதுங்குகளுக்கும்.

ஒட்டு மொத்த மனித சமுதாயமும் அறிதுயில் நிலையில் ஆழ்த்தப்பட்டிருப்பதுதான் பிரச்சினை.

நீங்கள் அனைவருமே வசியப்படுத்தப்பட்டிருப்பது போலவும், அதில் இருந்து விடுபடும் வகையை அறியாமல் இருப்பதாகவும் படுகிறது. நம்முடைய வாழ்க்கை முறைகள் அனைத்துமே பைத்தியக்காரத் தனமாகவும், உணர்ச்சிமிகைப்பு (neurotic) டையதாகவும் இருக்கிறது. அவர்கள் மகிழ்ச்சியை விட துன்பத்தையே அதிகம் தோற்றுவித்துக் கொள்கிறார்கள். அவர்கள் மனநிறைவை விட அதிக ஏமாற்றத்தையே உருவாக்கிக் கொள்கிறார்கள். நீங்கள் வாழும் முறையானது மேலும் மேலும் நரகத்துக்கு வெகு நெருக்கமாகவும், சமீபமாகவும் உங்களைக் கொண்டு செல்கிறது. சொர்க்கம் ஒரு விருப்பமாகவும், நரகம் ஒரு யதார்த்தமாகவும் இருக்கிறது. நீங்கள் நரகத்தில் வாழ்ந்து கொண்டு, சொர்க்கத்தைப் பற்றிக் கனவு காண்கிறீர்கள். உண்மையில் சொர்க்கம் ஓர் அமைதியூக்கி (transquilizer) அது உங்களுக்கு நம்பிக்கையைக் கொடுக்கிறது. ஆனால் எல்லா நம்பிக்கைகளுமே ஏமாற்றத்தை அளிப்பவைதாம். சொர்க்கம் பற்றிய நம்பிக்கை, ஏமாற்றம் என்கிற நரகத்தையே உண்டாக்குகிறது. இதனை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். அப்போதுதான் பதஞ்சலியின் கடைசி

அத்தியாயத்தை - கைவல்யபாதத்தை நீங்கள் புரிந்து கொள்ள முடியும்.

விடுபடுவதற்கான திறன் என்பது என்ன? விடுபடும் திறன் (art of liberation) என்பது இந்த அறிதுயில் நிலையில் இருந்து எப்படி விடுபடுவது என்பதுதான். எப்படி கட்டுப்பாடற்றவராகி விடுவது என்பதுதான். உங்களுக்கும், மெய்ம்மை (reality)க்கும் இடையே எவ்விதத் தடுப்பையும் உண்டாக்குகிற எந்தவொரு கருத்தும் இல்லாமல் பார்க்க முடிவதுதான் அது. எந்தவொரு செயல் தூண்டல் உணர்வும் இல்லாமல் இருப்பதே அது. யோகா என்பது இவற்றை உள்ளடக்கியது ஆகும். அந்நிலையில் அது உங்களுக்குள் இருக்கிறதோ, எது உங்களுக்குள் தொடக்கத்தில் இருந்தே இருந்து கொண்டிருக்கிறதோ, அது சற்றும் எதிர்பாராத விதமாய் வெளிப்படுகிறது.

## சூத்திரம்-1

*'ஜன்மௌ தி மந்த்ர தப: ஸமாதிஜா ஸித்ய'*

இந்தச் சூத்திரத்தின் நேரான பொருளை – விளக்கத்தை நான் இதுவரை எடுத்துச் சொன்னதில்லை. அதன் மையப்பகுதிக்குள் ஊடுருவிச் செல்லாதவரைக்கும் அதை உங்களால் புரிந்து கொள்ளமுடியாது.

*'பிறவி, ரசாயன மருந்துகள், மந்தி ஆற்றல், தவம், சமாதி இவற்றின் மூலம் சித்திகள் கிடைக்கின்றன.'*

நீங்கள் எப்படிப்பட்டவராயினும் அது பிறப்பின் போதே எவ்வித முயற்சியும் இல்லாமல் வெளிப்படுகிறது. ஒவ்வொரு குழந்தையும்தான் பிறக்கும் போதே உண்மையை அறிந்திருக்கிறது காரணம் அது இன்னமும் அறிதுயிலில் (hypontize) ஆழ்த்தப்படவில்லை. அவனிடம் ஆசைகள் இருக்கவில்லை. அவன் கள்ளம் கபடமற்றவனாக, புத்தம் புதிதாய் இருக்கிறான். அவன் எவ்வித விருப்பத்தாலும், களங்கப்பட்டு விடவில்லை. அவனுடைய கவனம் தூய்மையாகவும், எந்தவொன்றிலும் குவிக்கப்படாமலும் இருக்கிறது. குழந்தை இயல்பாகவே ஆழ்ந்த சிந்தனை உடையதாயிருக்கிறது. அவன் ஒரு சமாதி நிலையில் இருக்கிறான். கடவுளின் கருவறையில் இருந்து வெளிப்பட்டவன்

அவன். அவனுடைய வாழ்வென்னும் நதி அப்போதுதான் தன்னுடைய மூலத்தில் இருந்து வெளிப்பட்டதாய், புத்தம்புதிதாய் இருக்கிறது.

அவன் உண்மையை அறிந்திருக்கிறான். ஆனாலும், தான் அறிந்திருக்கிறோம் என்பது அவனுக்குத் தெரியாது. கொஞ்சமாவது அறியாமை இருந்தால்தான் அறிவை உணரமுடியும். அறியாமை இல்லாமல் அறிவை உணர முடியாது. இருட்டு இல்லாமல் நட்சத்திரங்களை நீங்கள் காணமுடியாது. பகல் வெளிச்சமாக இருப்பதால், பகலில் நட்சத்திரங்களை நீங்கள் பார்க்க முடிவதில்லை. இரவில் நட்சத்திரங்களைப் பார்க்க முடிவதற்குக் காரணம் அப்போது எங்கும் இருட்டாக இருப்பதுதான். முரண் தேவைப்படுகிறது. முழுமையான வெளிச்சத்தில் பிறக்கிறது குழந்தை, ஆனாலும் அதை உணர்வதற்கு இருட்டு அனுபவம் அவனுக்கு இருக்கவேண்டும், அவன் இருட்டைக் கடந்தாக வேண்டும். அப்போதுதான் அவனால் ஒப்பிட்டுப் பார்க்கவும், புரிந்துகொள்ளவும், தான் அறிந்திருக்கிறோம் என்பதை தெரிந்து கொள்ளவும் முடிகிறது. அவனுடைய அறிவு இன்னமும் உணரப்படவில்லை. அது உண்மையில் இருக்கவே செய்கிறது. மேலும், தன்னுடைய அறிவில் இருந்து அவன் விலகி விலகியிருக்கவில்லை. அவன் தன்னுடைய அறிவாகவே இருக்கிறான்.

பதஞ்சலி இதைத்தான் சொல்லிக் கொண்டிருக்கிறார். 'நீங்கள் எதைக் கண்டறிய முயல்கிறீர்களோ அது முன்பே உங்களிடம் இருக்கிறது, நீங்கள் அதை முன்பே அறிந்திருக்கிறீர்கள். நீங்கள் முன்பே அறிந்திருப்பது தெரியாமல்தான் அதைக்காண முயல்கிறீர்கள். நாம் அறிந்திருப்பது மங்கலாக, அத்தனை தெளிவதற்றதாக இருக்கக்கூடும். விழிப்புணர்வு தெளிவில்லாமல் இருந்திருக்கலாம். அது பனி மூட்டத்தால் மூடப்பட்டிருக்கலாம், ஆனால், முன்பே நீங்கள் அறிந்திராத ஒன்றை எப்படி அடைய முற்படுவீர்கள். கடவுளை எப்படி நீங்கள் கண்டு கொள்வீர்கள்? பரமசுகத்தை (bibiss) எப்படிக் கண்டடைவீர்கள்? மெய்ப் பொருளை எப்படித் தேடிப் பெறுவீர்கள்? உங்களுடைய ஆன்மாவை எப்படி முயன்று அடைவீர்கள்? அதை அறிதவற்கு அதன் சுவையை நீங்கள் கொஞ்சமாவது உணர்ந்திருக்க வேண்டும். அதன் சுவைபற்றிய நினைவு உங்கள் இருப்புணர்வில் எங்கோ இன்னமும் பொக்கிசமாய் இருந்து கொண்டிருக்கும். நீங்கள்

ஏதோ ஒன்றைத் தவற விடுகீறிர்கள் அதனால் தான் தேடலும், தேடிப்பெறுகிற முயற்சியும் தோன்றுகிறது.

சமாதியின் முதல் அனுபவமும், சித்தியின் முதல் அனுபவமும், இறையானுபவமும் பிறப்பிலேயே வெளிபட்டுவிடுகிறது.

ஆனால், அந்தச் சமயத்தில் அதில் இருந்து ஓர் அறிவை நீங்கள் உருவாக்கிக் கொள்ள முடியாது. அதன் பொருட்டு ஆன்மா வின் இருண்ட இரவின் வழியே நீங்கள் சென்றாகவேண்டும். நீங்கள் சரியான பாதையை விட்டு விலகிச் செல்லும்படி இருக்கும். அதன் பொருட்டு நீங்கள் இறையாணையை மீறி நடக்கும் படி இருக்கும் (பாவம் செய்தல்). 'பாவம்' என்கிற சொல் அருமையானது. சரியான பாதையைத் தவறவிடுவது. தன்னுடைய இலக்கை, குறிக்கோளைத் தவறவிடுவது என்பது இதன் பொருள். ஏடன் தோட்டத்தைவிட்டு ஆதாம் வெளியே சென்றாக வேண்டும். அது முற்றிலும் தவிர்க்க முடியாத ஒன்று. நீங்கள் கடவுளைத் தவறவிட்டாலன்றி கடவுளை அறிய முடியாது. கடவுள் இருக்கிறாரா இல்லையா என்பதை அறிந்திராத நிலைக்கு வராமல் அவரை நீங்கள் அறியமுடியாது. வலியை துயரத்தை வேதனையை அறியாமல் பேரின்பத்தை நீங்கள் அறிந்து கொள்ள முடியாது. துயரமே பரவசத்தின் வாயிலா யிருக்கிறது.

பதஞ்சலியின் முதலாவது சூத்திரம் சொல்கிறது, யோகியால் அடையப்பட்டது எதுவாயினும் அதுபுதிதல்ல. அது இழந்த ஒன்றை மீண்டும் பெறுதல் ஆகும். அது நிலையில் இருந்து கொண்டிருப்பது தான். அதனால்தான் இந்தியாவில் ஒருவர் சமாதி நிலை அடைந்ததும் அதனை மறுபிறப்பு என்று நாம் சொல்கிறோம். அவர் மறுபிறவி எடுத்திருக்கிறார். நாம் அதனை 'த்விஜா' என்கிறோம். இரண்டு முறை பிறத்தல். ஒரு பிறவி தன்னுணர்வற்றதாயிருக்கிறது. அதுதான் முதல் பிறப்பு. இரண்டாவது பிறப்பில் உணர்வு இருக்கிறது. அவர் துன்பங்களை அனுபவித்து, நிலையிலிருந்து நீங்கி எங்கெங்கோ அலைந்து திரிந்தபின் வீட்டுக்குத் திரும்புகிறார். ஆதாம் தன்னுடைய வீட்டுக்குத் திரும்புகிறபோது இயேசுவாகிறான். எந்தவொரு இயேசுவும் தன்னுடைய வீட்டில் இருந்து வெகுதூரம் சென்று விடுகிறபோது அவர் ஆதாமாகி விடுகிறார். ஆதாம் திரும்பும்

பயணத்தைத் தொடங்குகிறபோது அவன் இயேசுவாகி விடுகிறான். ஆதாம் தான் முதலாவது மனிதன். இயேசு கடைசி, ஆதாம் தொடக்கமாகவும் இயேசு முடிவாகவும் இருக்கிறார்கள். வட்டம் முழுமை அடைகிறது.

'ஆற்றல்கள் பிறப்பில் வெளிப்படுகின்றன.' அந்நிலையில் தோன்றுகிறது இந்துக்களால் மாயை என்று அழைக்கப்படுகிற உலகம். மாயையை ஏமாற்று (illusion), நம்பமுடியாதது (magic) என்றும் சொல்மாற்றம் செய்யலாம். அடுத்து வருவது வசியம். நம்மைச் சுற்றி ஆயிரத்தியோரு வசியப்படுத்தல்கள் இருக்கின்றன. இங்கே, இவன் 'இந்து' என்று கற்பிக்கப்பட்டிருப்பது ஒரு வித வசியந்தான். அவன் 'கிறிஸ்தவன்' என்று கற்பிக்கப்பட்டால் அதுவும் ஒரு வசியந்தான். அவனுடையது கட்டுப்படுத்தப்பட்டு, ஒரு குறுகிய நிலைக்குள் தள்ளப்படுகிறது. அடுத்து ஓர் ஆண் அல்லது பெண் என்று கற்பிப்பதும் அவனை வசியப்படுத்துகிற ஒரு செய்கை தான்.

உங்களுடைய ஆண்பருவம் அல்லது பெண்பருவத்தில் தொண்ணூறு சதவிகிதம் வசிய நிலைதான். உங்களுடைய உயிரியலுக்கும் (liology) அதற்கும் தொடர்பில்லை. ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள உயிரியல் சார்ந்த வேறுபாடு எளிதில் விளங்கும்படி தெளிவாக இருக்கிறது. வெளிப்படையாக இருக்கிறது. ஆனால், உளவியல் சார்ந்த வேறுபாடோ மிகவும் சிக்கலாயிருக்கிறது. பையன்கள் பையன்களாக நடந்து கொள்ள வேண்டும். பெண்குழந்தைகள் பெண் குழந்தைகளுக்குரிய விதத்தில் நடந்து கொள்ள வேண்டும் என்று நீங்கள் கற்பிக்கிறீர்கள். அவ்வாறாக அவர்களை இரண்டு பிரிவுகளாய் நீங்கள் பிரித்து விடுகிறீர்கள். சிறுமிகள் அழகான பெண்களாகவும், பையன்கள் ஆற்றல்மிக்க ஆண்களாகவும் ஆகிவிடவேண்டும் என்கிற கருத்து அது. பெண்கள் இல்லத்தரசி, தாய் என்கிற பெயரில் வீட்டுக்குள் சிறைப்படுத்தப்பட்டு விடுகிறார்கள். ஆண்களோ பணம், அதிகாரம் பேரார்வம் இவற்றுடன், உலகில் சாகசங்களை நிகழ்த்தப்புறப்பட்டு விடுகிறார்கள். நீங்கள் வெவ்வேறான நோக்கங்களை அவர்களுக்குள் தோற்றுவித்து விடுகிறீர்கள்.

பல்வேறு சமுதாயங்களிலும் பல்வேறு சூழ்நிலைகள் இருக்கின்றன. பெண்ணாதிக்கம் உள்ள சமூகம் இருக்கிறது. அதில் பெண்ணுக்கு அதிகாரமும் செல்வாக்கும் அதிகம். அத்தகைய சமுதாயத்தில் ஆண் பலவீனமாகி விடுகிறான், பெண் அதிகாரம் மிக்கவளாயிருக்கிறாள். வெளிவேலைகளை அவள் நிர்வகிக்கிறாள், வீட்டுவேலைகளை ஆண் கவனித்துக் கொள்கிறான்.

ஆனால், நாம் ஆணாதிக்கச் சமூகத்தில் வாழ்கிறோம். இந்த அமைப்பில் ஆண் அதிகாரம் பண்ணுகிறவனாகவும், பெண் பலவீன முற்றவளாகவும் இருக்கின்றனர். ஆனால், இதுவும் ஒரு வசியப் படுத்தல்தான். இது இயல்பானதல்ல. இயற்கையில் அப்படி அமைக்கப் படவில்லை. ஒரு குறிப்பிட்ட வழிநடத்தலை நீங்கள் வழங்குகிறீர்கள், ஆயிரத்தியொரு வகை வசியங்கள் செயல்படத் தொடங்கு கின்றன.

இந்தியாவில் ஒருவன் தீண்டத்தகாத ஏழைக் குடும்பத்தில் பிறந்துவிட்டால் அந்த சூத்ரன் தன்னுடைய வாழ்க்கை முழுவதும் சூத்ரன் என்கிற எல்லைக்குட்பட்டே இருந்தாக வேண்டும். தன்னுடைய தொழிலைக் கூட அவன் மாற்றிக் கொள்ள முடியாது. அவன் ஒரு பிராமணனாகி விடமுடியாது. ஒரு குறுகிய பொந்துக்குள் அவன் கட்டுப்படுத்தப்பட்டு விடுகிறான். சுரங்கப்பாதை போன்ற குழி அது. அந்த வழியே தான் அவன் போயாகவேண்டும். மாற்றுகள் (alternatives) எதுவும் கிடையாது. ஒரு குறிப்பிட்ட முறையில் தான் அவனுடைய உட்பட்டதாகவே இருக்கும். அந்நிலையில் கடவுள் பற்றிய கருத்துகள் உங்களுக்கு வழங்கப்படும். சோவியத் ரஷ்யாவில் கடவுள் இல்லை என்கிற கருத்தை உங்களுக்கு வழங்கி யிருப்பார்கள்.

ஸ்டாலினுடைய மகள் ஸ்வெட்லானா தன்னுடைய வாழ்க்கையின் முக்கிய நிகழ்ச்சிகள் பற்றிய குறிப்பில், ஸ்டாலினுக்கு மகள் என்கிற முறையில் தொடக்கத்தில் இருந்தே ஒரு நாத்திகராக (atheist) இருக்கும்படி அவர் கற்பிக்கப்பட்டிருந்தார். ஆனால் காலப் போக்கில், கடவுள் இல்லை என்றால் ஏன் அவருக்கு எதிராக பெரிய அளவில் பிரசாரங்கள் நடத்தப்பட வேண்டும்? அதற்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டுமா? கடவுள் இல்லை

என்றால் தீர்ந்தது. கடவுளுக்கெதிரான பிரசாரம், கையேடுகள், இலக்கியங்கள் எல்லாம் ஏன் உருவாக்கப்பட வேண்டும்? நிரூபிக்க முயல்வது ஏன்? ஏதோ ஒன்று இருக்கத்தான் செய்கிறது என்பதை அந்த முயற்சியே வெளிப்படுத்துகிறது. அவருக்குச் சந்தேகம் உண்டாயிற்று, ஸ்டாலின் இறந்த பிறகு அவர் கலகக்காரி ஆனார். அவர் சமய நம்பிக்கை கொண்டவராக மாறினார். ஆனால் அவருடைய சிந்தனை குறுகிப்போயிற்று. அவர் ஓர் அருமையான பிறவி, இந்தியாவில் நாத்திகராக இருப்பதைவிட ரஷ்யாவில் ஆத்திகராக (theist) இருப்பது சிரமம்.

இந்த விசயங்கள் எல்லாம் போதிக்கப்பட்டவை அல்ல, இவையெல்லாம் தாயின் இரத்தத்தில் இருந்து, தாய்ப்பாலில் இருந்து தாயின் சுவாசத்தில் இருந்து பற்றிக் கொள்ளப்பட்டவை. இவற்றை யெல்லாம் உங்களுக்குக் கற்பிக்கமாட்டார்கள். நீங்களாக அவற்றைப் பற்றிக் கொள்கிறீர்கள். ஓர் இந்துக் குழந்தை முதல் முதலாகத் தனது கண்களையும் காதுகளையும் திறந்து கொள்கிறபோது அதன் காதில் விழுவது ஒரு மந்திரமாக இருக்கிறது.

அல்லது பகவத் கீதையில் சொல்லப்பட்ட ஏதேனும் ஒரு சுலோகமாக இருக்கும். அவன் எதையும் புரிந்து கொள்வதில்லை. ஆனால் அவனுக்குள் ஏற்படுத்துகிற முதல் விளைவு ஏதேனும் ஒரு சமய நூல் தொடர்பாய் அதுவும் வடமொழியில் உள்ளதாகவே இருக்கிறது. பிறகு அவன் வளரத் தொடங்குகிறான். தெய்வச் சிலை களின் முன்பாக மலர்களையும், நறுமணப் பொருள்களையும் வைத்து தன்னுடைய தாய் பிரார்த்தனை செய்வதை அவன் பார்க்கிறான். அவன் அங்கே ஊர்ந்து சென்று, நடப்பதையெல்லாம் கவனமாகப் பார்க்கிறான். தன்னுடைய தாய் அழுவதை, அவனுடைய கண்களில் நீர்வடிவதை, அவள் மகிழ்ச்சியுடன் இருப்பதை, அவளிடம் அருள் பொங்குவதை அவனால் பார்க்க முடிகிறது. மிகச்சிறந்த ஏதோஒன்று நிகழ்கிறது. அது என்னவென்று அவனுக்குத் தெரிந்திருக்காது, ஆனால் ஏதோ ஒன்று நிகழ்ந்தபடி இருக்கிறது. அவன் புரிந்து கொள்கிறான். கோயில், மதகுரு, பளிச்சென்று கண்ணைக் கவரும் அங்கிகள் என்று ஒட்டு மொத்த சூழலையும் அவன் புரிந்து கொள்கிறான். அந்தச் சூழலை அவன் பருகுகிறான். அது அவனுடைய இருப்புணர்வின் ஒரு பகுதியாகிறது. அது தாய்ப்பாலில்

இருந்தோ, வாழ்க்கையின் இயல்பில் இருந்தோ வந்திருக்கலாம், ஆனால் இவையெல்லாம் அவனுக்குத் தெரியாமலே அவனைப் பற்றிக் கொண்டவை. நீங்கள் ஒரு கிறிஸ்தவராகிறீர்கள். நீங்கள் விழிப்படைகிறபோது நீங்கள் முன்பே ஒரு கிறிஸ்தவராக, இந்துவாக, ஒரு முகமதியராக, ஒரு சமணராக, ஒரு புத்தமதத்தவராக இருக்கிறீர்கள். உங்களை நிபந்தனையற்றவராக்குவது கடினம்.

பதஞ்சலியின் ஒட்டு மொத்த முயற்சியும் உங்களை எப்படி நிபந்தனையற்றவராக்குவது என்பதுதான், உங்களுடைய கட்டுக்களில் இருந்து உங்களை விடுவித்துக் கொள்ள எப்படி உதவுவது என்பது தான். உங்களிடம் வழங்கப்பட்டிருக்கிற அனைத்தையும் கைவிட்டு விடுங்கள். அப்போதுதான் நீங்கள் மேகமூட்டத்தில் இருந்து வெளிவர முடியும், நிர்மலமான நீலவானில் நுழையமுடியும். இந்து, முகமதியன், பொதுவுடைமைவாதி போன்ற குறுகிய வழியில் இருந்து வெளிவரமுடியும். எவ்வித பரிமாணத்திலும் அடங்காத பெருவெளியைக் கண்டுபிடியுங்கள். மதங்கள் அதற்கு அனுகூலமா யிருக்காது. மதங்கள் குறுகிய வழிகளை அலங்கரிக்கிற வேலையைத்தான் செய்கின்றன. தங்களுடைய வழிதான் கடவுளை அடைதற்கான ஒரேவழி என்பது போல் அவை மக்களின் மீது விசயங்களைத் திணிக்கின்றன.

நான் ஒரு ப்ராட்டஸ்டண்ட் பற்றி, மரித்த பின் சொர்க்கத்துக்குப் போன ஒரு மனிதனைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவன் புனித பீட்டரிடம் சென்று, நான் எங்காவது குடியேறுவதற்கு முன் ஒரு பயணம் செய்ய விரும்புகிறேன். இந்த வானமண்டலம் முழுவதையும் நான் கண்டு வரவிரும்புகிறேன்'. என்று கேட்டான். பீட்டர் சொன்னார், 'உன்னுடைய அறிந்து கொள்ளும் ஆர்வத்தை என்னால் புரிந்து கொள்ளமுடிகிறது. ஆனால், ஒன்றை நீர் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். நாம் உம்மை அழைத்துச் சென்று சுற்றிக் காட்டுகிறேன். ஆனால் எங்குமே பேசாமல், வாயை மூடிக்கொண்டிருக்க வேண்டும். நடக்கிறபோது ஓசையெழக் கூடாது'' என்று. ப்ராட்டஸ்டண்ட் 'ஏன் இந்த அளவுக்கு...?' என்று கவலைப்பட்டான். அவன் எதையாவது சொல்ல முற்படுகிற போதெல்லாம் பீட்டர் அவருடைய விரலை உதட்டில் வைத்து 'உஷ்... சும்மா இரு' என்று சொல்வார். பயணம் முடிந்த நிலையில் அவன்

கேட்டான், 'என்ன விசயம், ஏன் இத்தனை அமைதி?' என்று. பீட்டர் சொன்னார் 'இங்குள்ள எல்லாருமே நம்புகிறவர்கள். உதாரணமாக, கத்தோலிக்கர்கள் தாங்கள் மட்டும் சொர்க்கத்தில் இருப்பதாக நம்புகின்றனர். ப்ராட்டஸ்டண்ட்களோ தாங்கள் மட்டுமே சொர்க்கத்தில் இருப்பதாக நம்புகின்றனர். இந்துக்களும், முஸ்லிம்களும் கூட அப்படித்தான் நம்பிக்கொள்கின்றனர். வேறுயாரோ இருப்பது அவர்களுக்குத் தெரிய வந்தால் அவர்கள் கோபமடைவார்கள். அவர்களால் அதை நம்புவது முடியாத காரியம்.

மண்ணுலகில் மக்கள் குறுகிய வழிகளில் வாழ்கிறார்கள். அதே போலத்தான் விண்ணுலகிலும். வெளிப்படையான மனதுக்கு அனுகூலமாக எந்தவொரு மதமும் ஒழுங்கு செய்யப்பட்டிருக்கவில்லை. ஒழுங்கு செய்யப்பட்டு விட்டால் அது மதமாக இருக்காது. அரசியலாகிவிடும்.

அன்றொரு நாளில் அமிதாவிடமிருந்து எனக்கு ஓர் கடிதம் வந்தது. அவள் ஆரிக்காவில் இருந்தாள். தற்போது இங்கே வந்திருக்கிறாள். அதனால் ஆரிக்கர்கள் குழப்பம் அடைந்திருப்பார்கள். அவள் சந்நியாசியானியாகிவிட்டாள், எனவே, அவளை வெளியேற்று வதாக அவர்கள் கடிதம் எழுதி விட்டனர். அவள் வெளியேற்றப்பட்டு விட்டாள். இது அபத்தமாய் படுகிறது. இதில் தந்திரம் இருக்கிறது. தற்போது அவர்களுடைய கூட்டங்களில் கலந்து கொள்ள அவனுக்கு அனுமதி இல்லை. தங்களுடைய புதிர் மொழியில் 'உன்னைத் தண்ணீருக்குள் தள்ளியாகிவிட்டது' என்று அவர்கள் சொல்கிறார்கள் அவர் நிந்திக்கப்பட்டார். எங்குமே அப்படித்தான் ஆகிறது. அறிவியலும் அதையேதான் செய்கிறது. அமிதாவை தண்ணீருக்குள் போட்டமாதிரி, நீங்கள் எதிரியாகி விட்டீர்கள் என்று அவர்கள் அறிக்கை விடுவார்கள்.

எப்போதுமே இப்படித்தான் நடந்து வந்திருக்கிறது. எங்கே உங்களுடைய மனம் கட்டுப்படுத்தப்படுகிறதோ, அங்கிருந்து உடனே தப்பிவிடுங்கள். அது மதமல்ல தந்திரம், சூழ்ச்சி, அது அகந்தை செய்யும் தவறு.

மதம் உங்களை விசாலமடையச் செய்கிறது. உங்களைச் சுற்றியுள்ள வீடு முழுதும் மெள்ள மெள்ள மறையும்படி மதம்

உங்களை விரிவு படுத்துகிறது. நீங்கள் வானத்துக்குக் கீழே முற்றிலும் நிர்வாணமாய், பிரபஞ்சத்துடன் முழுமையான தகவல் தொடர்பை மேற்கொள்கிறீர்கள். பிரபஞ்சத்துக்கும் உங்களக்கும் இடையே எதுவும் இருப்பதில்லை. பிறக்கும் போதே இந்தச் சந்திப்பு எளிதில் அடையப்பட்டு விடுகிறது. ஆற்றல்கள் பிறப்பிலேயே வெளிப் படுத்தப்படுகிறது. பயனுள்ள நிலைக்கு மீண்டும் கொண்டுவருவது பற்றிய பிரச்சினைதான் இது. அதனை மீண்டும் நினைவுகொள்ள முடியுமா என்பதுதான் கேள்வி. அது ஒன்றும் கண்டுபிடிப்பு அல்ல, மறுகண்டுபிடிப்பு அவ்வளவே.

பலரும் என்னிடம் வந்து கேட்கிறார்கள், ‘சமாதி நிகழ்கிற போதும். ஞானம் வாய்க்கிறபோதும் நாங்கள் எப்படி அது தான் என்று அதை அடையாளம் கண்டு கொள்வது?’ என்று, நான் அவர்களுக்குச் சொல்கிறேன் ‘நீங்கள் கவலைப்படாதீர்கள். நீங்கள் அதனை அடையாளம் கண்டு கொள்வீர்கள். காரணம் அது என்னவென்பதை நீங்கள் அறிவீர்கள். நீங்கள் மறந்து விட்டீர்கள். மறுபடியும் அது நிகழ்கிறபோது, திடீரென்று உங்கள் உணர்வு நிலையில் அந்த நினைவு போலவும். உடனடியாய் நீங்கள் அதைக்கண்டு கொள்வீர்கள்.

மேலும், இதனை நான்கு வழிகளில் நீங்கள் பெறமுடியும். முதலாவது போதை மருந்துகள் மூலம் பெறுவது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் இந்துக்கள் போதை மருந்தைப் பயன்படுத்தி இருக்கிறார்கள். மேற்கில் இந்த ஆர்வம், வெறி ரொம்பப்புதிது. இந்தியாவைப் பொறுத்தவரை ரொம்பப் பழசு.

பதஞ்சலி சொல்கிறார், ‘போதை மருந்துகள் மூலமும், புனிதமான சொற்கள் மந்திரங்கள் அல்லது சமாதி நிலை மூலமும் அதை அடையமுடிகிறது’ என்று. அவர் சமாதி நிலைக்குச் சாதகமானவர் என்றாலும், அறிவில் சார்ந்தவர். அவர் எதையும் விட்டுவைக்க வில்லை.

ஆம், போதை மருந்துகள் மூலம் அதை அடையக்கூடும். ஆனால் அது ரொம்பவும் கீழ்ப்படியில் கிடக்கிற காட்சி, தாழ்வான தீர்வு. இரசாயனப் பொருள்கள் மூலம் ஒரு குறிப்பிட்ட காட்சி கிடைக்கலாம், ஆனால் அது கிட்டத்தட்ட ஒரு வன்முறையாக,

கடவுளையே பங்கப் படுத்துகிற செயலாக இருக்கும். நீங்கள் அந்தக் காட்சியை கட்டாயப்படுத்திப் பெறுகிறீர்கள். நீங்கள் எல்.எஸ்.டியை அல்லது மரியுவானாவை (Marijuana) அல்லது வேறெதையும் எடுத்துக்கொள்ளலாம். உங்களுடைய இரசாயனத்தை (Chemistr'y)யே நீங்கள் நிர்ப்பந்திக்கிறீர்கள். அந்த ரசாயனம் ரொம்பவே நிர்ப்பந்திக்கப்பட்டால் ஒரு சில கணங்களுக்கு அதுமனதின் கட்டுப்பாட்டில் இருந்து தளர்த்தப்பட்டு விடுகிறது. சுரங்கப்பாதை போன்ற உங்களுடைய குறுகிய வாழ்க்கை முறையில் அதுவிடுபட்டுப் போகிறது. நீங்கள் குறிப்பிட்ட ஒரு காட்சியைப் பெறுகிறீர்கள். ஆனால் அதைப் பெறுவதற்கு தற்போது நீங்கள் போதைக்கு அடிமையாகி விடுகிறீர்கள். அந்தக் காட்சி உங்களுக்குத் தேவைப்படுகிற போதெல்லாம் நீங்கள் அந்தப் போதை மருந்தைத் தேடிச்செல்வீர்கள். அதைத் தேடிச் செல்கிற ஒவ்வொரு முறையும் அளவைக் கூட்டிக் கொள்ளும்படி இருக்கும். நீங்கள் இருந்தபடி இருப்பீர்கள். மிகப்பெரிய விலை கொடுத்துப் பெறுகிற நேர்த்தியான, கணநேரக் காட்சியிது. அது அத்தனை பெறுமானமுடையதாய் இருக்காது. அது உங்களை நாசம் பண்ணிவிடும். அது தற்கொலைக்கு ஒப்பானது. ஆனாலும், பதஞ்சலி அதனை ஒரு சாத்தியமாக வைத்திருக்கிறார். பலரும் அதனை முயன்று பார்த்து, பைத்தியமாகி விட்டிருக்கிறார்கள். பிரபஞ்ச இருப்பில் வனமுறைப் பிரயோகம் ஆபத்தானதாகும். வளர்ச்சி என்பது இயல்பாக, இயற்கையாக அமையவேண்டும். பெருமளவில் அது ஓர் கனவு போன்றிருக்கும், அதில் நடைமுறைக்கு ஏற்றதாய் எதுவும் இருக்காது. நீண்டகாலமாய் எல்எஸ்டியை பயன்படுத்துகிறவர் இருந்த படியேதான் இருப்பார். தாம் முயன்று அடைந்த புதிய இடங்களைப் பற்றி அவர் பேசலாம், தொலைதூர அனுபவங்கள் பற்றியதாகவே அவருடைய பேச்சு இருக்கும். ஆனால் அந்த மனிதர் அப்படியே – எவ்வித மாற்றமும் இல்லாமல் இருப்பதை நீங்கள் காணமுடியும். அவர் மாற்றமடையவில்லை. அருட்தன்மையைக் கொஞ்சமும் அவர் அடைந்துவிடவில்லை. அதுவேறு விதமாகி விட்டிருக்கலாம். அவர் தம்மிடம் முன்பே இருந்த அருட் தன்மையை இழந்து விட்டிருக்கக் கூடும். அதிக மகிழ்ச்சியை, பேரின்பத்தை அவர் அடைந்திருக்க மாட்டார். போதைமருந்தின் விளைவாக அவர் சிரிக்கலாம். ஆனால்

அந்தச் சிரிப்பும் இழிநிலைக்குரியதாய் இருக்கும். அது இயல்பாய் தோன்றுவதல்ல, அதில் இயற்கையான மலர்ச்சி இருப்பதில்லை. அந்த மருந்தின் தாக்கத்தில் அவர் மந்தகதி அடைந்துவிடுவார். அதே காட்சியைத்தான் அவர் திரும்பத் திரும்பக் காண விழைவார். தற்போது, அந்த போதை மருந்தின் அனுபவம் அவரை வசியப்படுத்தி விடுகிறது. அது மிகவும் இழிவான சாத்தியம்.

இதைவிட சிறந்தது, இரண்டாவது – மந்திரம். ஒரு குறிப்பிட்ட மந்திரத்தை நீங்கள் நீண்டகாலம் ஜெபிக்கிறபோது நுட்பமான இரசாயன மாற்றங்கள் உங்களுடைய இருப்புணர்வில் தோன்றும். அது போதை மருந்துகளைவிட உயர்ந்தது, ஆனாலும், அதுவும் ஒரு நுட்பமான போதை மருந்து என்றே சொல்லவேண்டும். நீங்கள் ஓம் ஓம் ஓம் என்று தொடர்ச்சியாய் சொல்கிறபோது, அந்த உச்சாடனமே உங்களுக்குள் ஒலி அலைகளை உண்டு பண்ணும். அது நீர்நிலையில் கற்களைத் தொடர் எறிகிறபோது, ஏரியில் அலைகள் எழுந்து பரவுவதைப் போன்றதாகும். ஒரு மந்திரத்தை நீங்கள் பிரயோகிக்கிற போதும் அப்படித்தான் ஆகிறது. ஓம், ராம், ஆவேமரியா, அல்லது அல்லா இவற்றுக்கு அதனுடன் எந்தத் தொடர்பும் இல்லை. நீங்கள் 'ப்ளா... ப்ளா... ப்ளா' என்றாலும் பயனளிப்பதாகவே இருக்கும். ஆனால் நீங்கள் அதையே, அதே ஒலியையே, அதே தொனி (tone)யில் ஒரே சீராக மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும். அதுமறுபடியும் மையத்தில் விழுந்து, சிற்றலைகளை உண்டுபண்ணியபடி இருக்கும். அதிர்வுகளை, துடிப்புகளை ஏற்படுத்தும். உங்கள் இருப்புணர்வின் உட்பக்கமாய் அது நுழைந்துபரவும். ஆற்றலின் அலைகளை அவை தோற்றுவிக்கும், அது மந்திரத்தை விட சிறந்தது தான் என்றாலும் அதே பண்பைக் கொண்டிருக்கும்.

அதனால்தான் ஜே.கே என்கிற ஜே. கிருஷ்ணமூர்த்தியும் மந்திரம் ஒரு போதைப்பொருள் என்ற தொந்து சொல்லி வந்திருக்கிறார்.

அது ஒரு போதை மருந்துதான், அவர் புதிதாய் எதையும் கூறிவிடவில்லை. பதஞ்சலியும் அதையேதான் கூறுகிறார். அது போதைமருந்தைவிட சிறந்தது. உங்களுக்கு ஊசி (injection) எதுவும் தேவைப்படட்டது. நீங்கள் புறத்தே உள்ள எந்தவொரு நிறுவனத்தையும்,

போதைமருந்து வியாபாரியையும் சார்ந்திருக்க வேண்டியதில்லை. போதை மருந்துகளைவிட அது (மந்திரம்) சுதந்திரமானது. உங்களுடைய மந்திரத்தை உங்களுக்குள்ளாகவே நீங்கள் உச்சரித்துக் கொள்ளமுடியும். அத்துடன், அது சமூகத்திற்கு இசைவானதாயும் இருக்கிறது. நீங்கள் ஓம் ஓம் ஓம் என்று எத்தனை தடவை திருப்பி திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்தாலும் சமூகம் அதை மறுக்கப் போவதில்லை. அது உங்களைத் தள்ளிவைத்துவிடாது. ஆனால், நீங்கள் எல்எஸ்டியைப் பயன்படுத்தினால் சமூகம் அதை மறுக்கும். மந்திர ஜபம் மதிப்புக்குரியது. உயர்ந்தது ஆனால் இன்னமும் ஒரு போதைப் பொருள்தான் அது. சப்தத்தின் மூலம் உங்களுடைய தேக ரசாயனத்தில் மாற்றம் ஏற்படுகிறது.

தற்போது ஒலி, இசை, உச்சாடனம் பற்றி அதிக அளவில் பரிசோதனைகள் நடை பெற்றுக் கொண்டிருக்கின்றன. அது நிச்சயமான இரசாயன மாற்றத்தை உண்டுபண்ணுகிறது. இசையொலி நிரம்பிய சூழலில் ஒரு தாவரம் துரிதமாய் வளர்கிறது. அது சாஸ்திரிய சங்கீதமாகவோ, இருந்து ஸ்தானியாகவோ இருக்கலாம். இல்லையேல் அதன் வளர்ச்சி தடைப்படும், அந்தச் செடிக்குப் பைத்தியம் பிடித்தது போலாகிவிடும். நுட்பமான அதிர்வுகளுடன் சிறந்த சீர்த்தன்மை மற்றும் இணக்கத்துடன் அந்தச் செடி விரைவாக வளர்கிறது. அதன் வளர்ச்சி இருமடங்காகிறது, பூக்கள் அதிக நிறத்துடன் மிகப்பெரியதாய் பூக்கின்றன. அதிக நறுமணத்துடன் அவை நீண்டகாலம் வாழ்கின்றன. இவையெல்லாம் அறிவியல் வளர்ச்சி, அறிவியல் உண்மை எனலாம். ஒரு செடியானது அந்த அளவு ஒலிகளால் பாதிக்கப்படுகிறபோது, மனித சீவன்களுக்குள் அதைவிட அதிக விளைவை அது ஏற்படுத்தும்தானே. உள்ளார்ந்த ஓர் ஒலியை நீங்கள் தோற்றுவிக்க முடியுமாயின், தொடர்ச்சியான ஓர் அதிர்வை உங்களால் உண்டு பண்ண முடியுமாயின் அது உங்கள் தேக தத்துவத்தை, உடல் மன இரசாயனத்தை மாற்றும். ஆனாலும், அது புறத்தேயிருந்து பெறப்படுகிற ஓர் உதவியாகவே இருக்கும். அது இயற்கையில் தானாகவே நிகழ்வதல்ல. நீங்கள் தொடர்ந்து சில நாட்களுக்கு அதைப் பராமரிக்காவிடில் அது மறைந்துவிடும். ஆக, அதுவும் ஓர் வளர்ச்சி என்று சொல்ல முடியாது.

ஒரு சமயம் சுஃபி ஒருவர் என்னைக் காண வந்திருந்தார். முப்பது ஆண்டுகளாக ஒரு சுஃபி மந்திரத்தை அவர் உருப் போட்டுக் கொண்டிருந்தார். அதை உண்மையான அக்கறையுடன் அவர் செய்து வந்தார் என்றே சொல்ல வேண்டும். சமாதிநிலையில் இருப்பதுபோல், மதுவுண்டது போல் நாள் முழுக்க உற்சாகத்துடனும், மகிழ்ச்சியுடனும், பரவசத்துடனும் அவர் காணப்பட்டார். அவரிடம் முழுமையான அளவில் அதிர்வுகள் இருந்தன. அவருடைய சீடர்கள் அவரை என்னிடம் அழைத்து வந்தனர். அவர் என்னுடன் மூன்று நாட்கள் தங்கியிருந்தார். நான் அவரிடம் சொன்னேன். 'ஒன்று செய்யுங்களேன் ஒரு குறிப்பிட்ட உச்சாடனத்தை நீங்கள் முப்பது ஆண்டுகளாய் செய்து வந்திருக்கிறீர்கள். மூன்று நாட்களுக்கு அதை நிறுத்தி வையுங்கள்' என்று அவர் சொன்னார், 'ஏன்?' என்று. 'அது உங்களுக்குள் இன்னும் நிகழ்ந்ததா இல்லையா என்று அறிவதற்காகத்தான் என்றேன். நீங்கள் தொடர்ந்து உச்சாடனம் பண்ணிக் கொண்டேயிருந்தால் ஒரு போதும் அதை அறிய மாட்டீர்கள். இந்த போதையை நீங்கள் தொடர்ந்து (ஒரு மந்திரத்தை) உச்சரிப்பதன் மூலம் உண்டாக்கிக் கொள்வீர்கள், ஒரு மூன்று நாட்களுக்கு அதை நிறுத்திப்பாருங்கள், அப்போது தெரியும்' என்று நான் கூறினேன். அவர் கொஞ்சம் பயந்துவிட்டார் என்றாலும் முக்கியக் கருத்தைப் புரிந்து கொண்டார்.

ஒன்று இயல்பாக உங்களை வந்தடையாத வரை நீங்களாக எதையும் செய்ய வேண்டியதில்லை.

மூன்றே நாட்களில் எல்லாமும் மறைந்து விட்டன. ஆம், வெறும் மூன்றே நாட்களில்தான். முப்பது ஆண்டுகால முயற்சி. மூன்று நாட்களுக்குப் பிறகு அந்த மனிதர் கதறியழுதபடி சொன்னார், 'என்ன காரியம் பண்ணிவிட்டீர், என்னுடைய ஒட்டு மொத்த சாதனையையும் நீர் மூலப்படுத்தி விட்டீரே' என்று நான் சொன்னேன், 'நான் எதையும் பாழ்பண்ணிவிட வில்லை. நீங்கள் மறுபடியும் அதைத் தொடங்க முடியும். ஆனால், ஒன்றை நினைவில் வையுங்கள், இன்னும் முப்பது பிறவிகளுக்கு நீங்கள் தொடர்ந்து உச்சரித்துக் கொண்டிருந்தாலும் உங்களால் அதை அடைய முடியாது. இது உரிய செயல் முறை ஆகாது. முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு, ஒரு மூன்று நாள் விடுமுறையில் இருக்க உங்களால் முடியவில்லை. அது

தளைப்பட்டிருப்பதாகவே, அது இன்னமும் உங்களில் ஒரு பகுதியாகிவிடவில்லை, நீங்கள் இன்னும் வளர்ச்சியடைய வில்லை. உங்களுடைய முப்பது ஆண்டு முயற்சியும் தவறான போக்கில் மேற்கொள்ளப்பட்டது என்பது இந்த மூன்று நாட்களில் வெளிப்பட்டிருக்கும்.

நீங்கள் விரும்பினால் அதை மேலும் தொடரலாம், அது உங்கள் விருப்பத்தைப் பொறுத்தது. ஆனால், ஒன்றை நினைவில் வையுங்கள், அது எப்போது வேண்டுமானாலும் மறைந்துபோகக் கூடும். தொடர்ந்து உச்சரித்ததன் மூலம் நீங்கள் தோற்றுவித்துக் கொண்ட கனவு அது. ஒரு திட்டவட்டமான அதிர்வை நீங்கள் வைத்திருக்கிறீர்கள், ஆனால் அது தானாக தோன்றியதல்ல. அது வளர்த்துக் கொள்ளப்பட்ட, மேம்படுத்திக் கொள்ளப்பட்ட ஒன்று. அது உங்களுடைய இயல்பாகாது.''

மூன்றாவது செயல்முறை ஆடம்பரமில்லாமல், எளிமையாய் இருப்பது. உணவு, உறக்கம், உடலுறவு இவற்றில் பெரியதாய் எந்த ஆசையும் கொள்ளாமல் இருப்பது. மனதின் ஆசைகளைக் கைவிட்டு அவற்றுக்கு எதிரிடையாய் செயல்படுகிறது. இது வாழ்க்கை முறையை மாற்றிக்கொள்வதன் மூலம் சாத்தியமாகும். இது மந்திரங்களைவிட சற்று உயர்ந்தது எனலாம். மனம் உறங்கச் செல்லும்படி கூறுவதாக வைத்துக் கொள்வோம், ஆசைகளை விட்டவன் என்ன சொல்வான் தெரியுமா, 'இல்லை, நான் உறங்கப் போவதில்லை. நான் உனக்கு அடிமையாக இருக்க மாட்டேன். நான் எப்போது உறங்க விரும்புகிறேனோ அப்போது உறங்கிக் கொள்வேன்' என்று மனம் சொல்கிறது' தற்போது நீ பசியில் இருக்கிறாய். உன்னுடைய உணவைத் தேடி உண்கிற வழியைப்பார்' என்று. ஆசைகன.஌ உதறியவன் சொல்வான்,' மாட்டேன்' என்று. ஆசைகளைத் துறந்தவன் தொடர்ந்து தனது மனதின் பேச்சை மறுத்து விடுகிறான். அதுதான் துறவு என்பது: மனதை மறுத்திருப்பது. நீங்கள் தொடர்ந்து உங்களுடைய மனதை மறுப்பீர்களாயின் கட்டுப்படுத்துதல் தளர்ந்துவிடும். அந்நிலையில் மனம் உங்கள் மீது தொடர்ந்து அதிகாரம் செலுத்த முடியாமல் போகும், அப்போது நீங்கள் ஓரளவு பேச்சைக் கேட்டாலும், திரும்பவும் மனம் உங்கள் மீது அதிகாரம் செலுத்தி உங்களைத் தனது பிடியில் வைத்துக் கொள்ளும்.

மந்திர உச்சாடனம் செய்து கொண்டிருப்பவரைவிட, ஆசைகளைத் துறந்தவர் சிறப்பாகவே செயல்படுகிறார், நிலையான ஒன்றைச் செய்கிறார். காரணம், நீங்கள் மந்திரங்களை உச்சரிக்கிற பொழுது உங்களுடைய வாழ்க்கை முறை மாறுவதில்லை. உள்ளுக்குள் நீங்கள் தகுதியாகவே உணர்கிறீர்கள். அதனால்தான் மகரிஷி மகேஷ் யோகியின் சூழ்நிலைத் தியானத்துக்கு அதிக மவுசு. காரணம், உங்களுடைய வாழ்க்கை முறையை மாற்றிக் கொள்ளும்படி அவர் கூறவில்லை.

'நீங்கள் எப்படியிருந்தாலும், எங்கே இருந்தாலும் சரியே' என்று அவர் சொல்கிறார். ஒரு கட்டுப்பாடான வாழ்க்கையை நீங்கள் மேற்கொள்ள வேண்டும் என்று அவர் கூறவில்லை. மந்திரத்தை காலையில் இருபது நிமிடம், மாலையில் இருபது நிமிடம் ஜபித்துக் கொண்டிருந்தால் போதும். உண்மையில் நல்ல உறக்கத்தை, சுவை நாட்டத்தை (appetite) அது உண்டு பண்ணும். நீங்கள் மிகவும் அமைதியாகி விடுவீர்கள். எளிதாய் கோப்படுகிற நிலைகளில் கோப்படமாட்டீர்கள். ஆனால் ஜபத்தை ஒவ்வொருநாளும் தொடர வேண்டியிருக்கும். அது உள்ளார்ந்த ஒளியலைகளின் குளியலை உங்களுக்கு வழங்கும். அது ஓரளவு தூய்மையையும் வழங்கும், ஆனால், உங்கள் வளர்ச்சிக்கு அது உதவும் என்று சொல்லமுடியாது. ஆசைகளை உதறிவிடும் போது உங்கள் வாழ்க்கையும் மாறத் தொடங்கும்.

ஒரு குறிப்பிட்ட காரியத்தை நீங்கள் செய்வதில்லை என்று தீர்மானித்துவிட்டால், அதைச் செய்யும்படி மனம் உங்களை வற்புறுத்திக் கொண்டேயிருக்கும். நீங்கள் தொடர்ந்து மனதின் வார்த்தையை மறுக்கிறபோது உங்கள் வாழ்க்கையின் முழு அமைப்பும் மாறிப்போகும். ஆனால் அது கூட ஒரு திணிப்பு வேலை தான். ஆசைகளை ஒரேயடியாய் துறந்து விட்டவர்கள் தங்கள் பொலிவை பெருமளவு இழக்க நேரிடும், ஓரளவு அருவருக்கத் தக்கவராயும் தெரியலாம். இடையறாத போராட்டமும், யுத்தமும், தொடர்ந்து மனதை அடக்கை வைத்தலும். மாட்டேன் முடியாது என்று மறுத்தபடி இருப்பதும் அவர்களுடைய இருப்பில் ஓர் ஆழமான பிளவை உண்டு பண்ணி விடும். போதைப்பொருளைப் பயன்படுத்துகிறவரைவிட, மந்திரங்கள் ஜபிப்பவரைவிட அவர்களுக்கு அதிகக்காட்சிகள்

(glimpses) கிடைக்கலாம். டிமோதிலியரி, மகேஷ்யோகி இவர்களைவிட நிலையான விளைவுகள் (பலன்கள்) இவர்களுக்குக் கிடைத்திருக்கும். ஆனால், அதுவும் தானாக நிகழ்ந்ததாய் தன்னிச்சையாக மலர்ந்ததாய் இருக்கிறத. அது 'ஜென்'னாகவோ, உண்மையான யோகாவாகவோ, தந்த்ராவாகவோ இருப்பதுமில்லை.

...அல்லது சமாதி.

அடுத்து, பதஞ்சலி உங்களுக்கு விளக்க முயல்கிற நான்காவது செயல்முறை வருகிறது. சம்யமாவின்மூலம், சமாதியின் மூலம் எதுவும் அடையப்படுகிறது. அவர் சம்யமா அல்லது சமாதிமூலம் உங்களுக்கு இதுவரை கற்பித்தது எதுவாயினும் அது உங்களிடம் விழிப்புணர்வை ஏற்படுத்துகிறது. போதை மருந்தைப் பயன்படுத்து கிறவர் தம்முடைய இரசாயனத்தின் (Chemistry) மூலம் செயல்படு கிறார்.

ஆசைகளை உதறியவர் தேகதத்துவத்தின் மூலம் செயல்படு கிறார். ஜபிப்பவர் தம்முடைய இருப்புணர்வின் ஒலிஅமைவு மூலம் செயல்படுகிறார். ஆனால், அவை எல்லாமே பகுதியளவிற்குத்தான். அவருடைய முழுமை இன்னும் அவரால் தீண்டப்பட்டிருக்காது. அவையனைத்தும் சமனற்ற ஒரு நிலையைத் தோற்றுவிக்கும். ஒருபகுதி மிகப் பெரியதாய் வளரும், மற்ற பகுதிகள் பின்தங்கிவிடும். அவர்மிகவும் அருவருக்கத் தக்கவராகி விடுவார்.

சமாதி முழுமையின் வளர்ச்சி நிலை.

அந்த வளர்ச்சி எவ்வித கட்டாயமுமின்றி இயல்பாக, தானாகவே நிகழ்வதாயிருக்க வேண்டும். வேதியியல் மூலமாகவோ, இயற்பியல் மூலமாகவோ, ஒலியின் மூலமாகவோ அது நிகழ்த்தப்படுவதில்லை. விழிப்புணர்வின் மூலம் அது நிகழ்த்தப்படுகிறது. நீங்கள் பிறந்தபோது இருந்த சமாதிநிலை உங்களை அந்த முனைக்குக் கொண்டு சென்றிருக்கும். நீங்கள் சற்றும் எதிர்பாராத நிலையில் உங்களுடைய இருப்புணர்வை, நீங்கள் யார் என்பதை அது உங்களுக்கு வெளிப் படுத்தியிருக்கும்.

சமாதி பற்றி ஒரு சில கருத்துகளை தற்போது நீங்கள் அறிந்து கொள்ளவேண்டும்.

ஒன்று – அது முயன்று அடையப்பட வேண்டிய ஒரு குறிக்கோள் அல்ல. அது நிறைவேற்றிக் கொள்ளப்பட வேண்டிய ஆசையும் அல்ல, அது ஓர் எதிர்பார்ப்பும் அல்ல, நம்பிக்கையும் அல்ல. அது எங்கோ வருங்காலத்தில ஓரிடத்தில் இருக்கவில்லை. அது இங்கே இப்போது இருக்கிறது. அதனால்தான் சமாதிக்கான ஒரே நிபந்தனை விருப்பமற்றிருப்பது ஆகும். சமாதி அடைய வேண்டும் என்கிற விருப்பமும் இருக்கக் கூடாது.

நீங்கள் சமாதி நிலையை அடைய விரும்பினால், தொடர்ந்து நீங்களாகவே அதில் கரைந்து விடுவீர்கள். ஆசையின் இயல்பை புரிந்து கொண்டுவிட்டால், அந்தப் புரிதலின் மூலம் தானாகவே அது தன்னை விட்டு விடும். அதனால்தான் நான் சொல்கிறேன், உங்களுடைய நம்பிக்கைகள் ஏமாற்றத்துக்குள்ளாகிற போது, நீங்கள் ஓர் அழகான இடத்தில் இருக்கிறீர்கள், அந்த இடத்தைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள் என்று. அந்தக்கணத்தில் தான் நீங்கள் சமாதிநிலைக்குள் மிகஎளிதாக நுழைய முடியும்.

நம்பிக்கையற்றவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். இயேசுவின் மற்ற பேரின்ப நிலைகளுடன் இதுவும் சேர்க்கப்படட்டும். 'அடக்கமானவர்கள் ஆசீர்வதிக்கப் பட்டவர்கள். அவர்கள் மண்ணுலகைத் தங்கள் மரபுரிமையாய் பெற்றவர்கள்'.

நான் உங்களுக்குச் சொல்கிறேன். 'நம்பிக்கையற்றவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்' என்று. காரணம், அவர்கள் முழுமையை அடைகிறவர்கள்.

நம்பிக்கை எப்படி உங்களை நாசமாக்குகிறது என்பதைப் புரிந்து கொள்ள முயலுங்கள். நம்பிக்கையுடன் அச்சமும் மேலெழுகிறது. அச்சத்தை நாணயத்தின் மறுபக்கம் எனலாம். நீங்கள் நம்பிக்கை கொள்கிறபோது கூடவே அச்சமும் வந்துவிடுகிறது. 'நம்முடைய நம்பிக்கையை நம்மால் நிறைவேற்ற முடியுமோ முடியாதோ' என்று நீங்கள் அஞ்சுகிறீர்கள். நம்பிக்கை தனியே வருவதில்லை. அது அச்சத்துடன் கூட்டு வைத்துக் கொண்டிருக்கும். பிறகு, அச்சத்துக்கும், நம்பிக்கைக்கும் இடையே நீங்கள் சிதறிப் போகிறீர்கள். நம்பிக்கை வருங்காலத்தில் இருக்கிறது. அச்சமும் வருங்காலத்தில் இருக்கிறது. நீங்கள் நம்பிக்கைக்கும் அச்சத்துக்கும் இடையே

ஊசலாடிக் கொண்டிருக்கிறீர்கள். சிலநேரங்களில், 'ஆம், அது நிறைவேற்றப்படப் போகிறது' என்று நீங்கள் எண்ணுகிறீர்கள். சிலநேரங்களில், 'இல்லை, அது நடவாத காரியம்' என்று எண்ணிக் கொள்கிறீர்கள். அச்சத்துக்கும் நம்பிக்கைக்கும் இடையில் உங்கள் இருப்புணர்வை நீங்கள் இழக்க நேரிடும்.

இந்தியப் பழங்கதையொன்றை நான் உங்களுக்குச் சொல்கிறேன்.

ஒரு முட்டாளை அனுப்பி உப்பும், மாவும் வாங்கிவரச் சொன்னார்கள். தான் வாங்கும் பொருள்களை எடுத்துவர, ஒரு தட்டினை அவன் கொண்டு சென்றான். இரண்டு பொருள்களையும் கலந்துவிடக் கூடாது என்று அவனுக்குச் சொல்லப்பட்டிருந்தது. கடைக்காரர் அவனுடைய தட்டில் மாவைப்போட்டார். மாவும், உப்பும் தனித் தனியே வைக்கப்பட வேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டி ருந்தது அந்த முட்டாள், அடுத்து உப்பை வாங்குவதற்காகத் தட்டைக் கவிழ்த்துப் பிடித்தான். மாவு கீழே கொட்டிப்போக உப்பு மட்டுமே அவனிடம் எஞ்சியிருந்தது. தன்னுடைய எஜமானரிடம் உப்பைக் கொண்டு சென்றான். எஜமான் கேட்டார் 'மாவு எங்கே?' என்று. அவன் மாவைக் காட்டுவதற்காக தட்டைக் கவிழ்த்தான். உப்பும் கீழே கெட்டிப் போயிற்று.

அச்சத்துக்கும் நம்பிக்கைக்கும் இடையே உங்களுடைய ஒட்டுமொத்த இருப்புணர்வும் (being) இழக்கப்பட்டுவிடுகிறது. அவ் விதமாகவே நீங்கள் பிளவுண்டு, தூள் தூளாகிறீர்கள், மனநோய்க்கு உள்ளாகிறீர்கள். அதன் முக்கியக் கருத்தைக் கவனியுங்கள்; உங்களிடம் நம்பிக்கை இல்லையெனில் நீங்கள் அச்சத்தைத் தோற்றுவித்துக் கொள்வதில்லை. காரணம் நம்பிக்கை இல்லாமல் அச்சம் வருவதில்லை. உங்களுக்குள் இருக்கும் அச்சத்தின் ஒரு படிதான் நம்பிக்கை. அச்சம் உள்ளே நுழைவதற்கான வாசலை நம்பிக்கையே உருவாக்குகிறது. உங்களிடம் எவ்வித நம்பிக்கையும் இல்லையென்றால் எவ்வித அச்சத்துக்கும் இடமில்லை. உங்கள் அச்சத்துக்கு அர்த்தமே இல்லை. உங்களிடம் இருந்து நீங்கள் விலகிப் போவதற்கில்லை. நீங்கள் நீங்களாகவே இருக்கிறீர்கள்.

இந்தக் கணத்தில் நிங்கள் இருக்கிறீர்கள். இந்தக் கணம் தீவிர விழிப்பினைக் கொண்டது.

## சூத்திரம்–2

**'பிறப்பு, சில வேளைகளில் மருந்துகள், தவம் இவற்றின் மூலம் ஒருவனுக்கு சக்திகள் உண்டாகும்.'**

மிகுந்த முக்கியத்துவம் உடையது...

நீங்கள் ஆசைகளை விட்டவர் என்றால் நிரம்பிவழிகிற நிலை இருக்காது. உங்களுடைய ஆற்றல்களை நீங்கள் அடக்கி வைத்திருப்பீர்கள். பாலுறவு பற்றிய அச்சம், கோபம் பற்றிய அச்சம், அது இது என்று எடுத்ததற் கெல்லாம் அச்சப்பட்டு உங்கள் ஆற்றல் களை நீங்கள் அடக்கி வைத்திருப்பீர்கள். நிரம்பிவழிகிற நிலையில் நீங்கள் இருக்கவில்லை. பதஞ்சலி சொல்கிறார், 'வழிந்தோடுகிற போதுதான் மாற்றம்' என்று. வாழ்க்கையின் அடிப்படை விதிகளில் அதுவும் ஒன்று.

நீங்கள் எப்போது ஆற்றல் குறைவாக உணர்கிறீர்கள் என்பதை நீங்கள் கவனித்து உண்டா? சற்றும் எதிர்பாராத விதமாய் காதல் மறைந்து போவதை நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? நீங்கள் ஆற்றல் குறைவாக உணரும் போது உங்களுடைய படைப்பாற்றல் மறைந்து விட்டிருக்கும். உங்களால் ஓவியம் வரைய முடியாது, கவிதை எழுத முடியாது. நீங்கள் எழுதினால் உங்கள் கவிதையால் நடக்கக்கூட முடியாது. நடமாடுவதென்பதோ வெகுதொலைவு. அது தாங்கிவைத்து தான் நடக்கும். அதில் கவித்துவமே இருக்காது. ஆற்றல் குறைந்த நிலையில் நீங்கள் ஓவியம் வரைந்தால் உங்கள் ஓவியம் ரொம்ப மோசமாக இருக்கும். அது உங்களுடைய சோர்வை, வருத்தத்தை செயலற்ற தன்மையை வெளிக்காட்டும்.

பிரபல ஓவியர் ஒருவர் தான் வரைந்த ஓவியத்தைக் காண வருமாறு தம்முடைய நண்பரை வேண்டிக் கொண்டார். அவர் ஒரு மருத்துவர்.

ஓவியத்தின் அந்தப்பக்கமும், இந்தப்பக்கமுமாய் நின்று ஓவியத்தைக் கவனித்தார் அந்த மருத்துவர். அவர் மதிப்பிடும் தோரணை மகிழ்ச்சியைத் தந்தது ஓவியருக்கு. தம்முடைய நண்பர்

தம்மை வெகுவாகப் பாராட்டப் போகிறார் என்று அவர் எதிர்பார்த்தார். கடைசியில் தம்முடைய ஓவியம் எப்படி இருக்கிறது என்று அவரே கேட்கும் படியாயிற்று, காரணம் மருத்துவர் முகத்தில் தெரிந்த குழப்பம், குழப்பம் என்பதைவிட கவலை எனலாம்.

ஓவியர் கேட்டார். 'என்ன விசயம்? இந்த ஓவியத்தைப் பற்றித் தாங்கள் என்ன நினைக்கிறீர்கள்?' என்று. அவர் சொன்னார், 'குடல்வால் நோய்', என்று. ஓவியர் யாரோ ஒருவரை வரைந்திருந்தார். அந்த முகத்தில் தெரிந்த வெளிறலும், வலியால் அவதிப்படுகிற உடலும் குடல்வால் நோயின் குறிகளாய் அவருக்குத் தெரிந்திருக்கிறது. உண்மையில் ஓவியர்தாம் குடல்வால் நோயால் பாதிக்கப் பட்டிருக்கிறார். அந்தப்பாதிப்புதான் அவருடைய படைப்பில் வெளிப்பட்டது.

உங்களுடைய கவிதையிலும், ஓவியத்திலும், நீங்கள் படைக்கிற சிற்பத்திலும் உங்களை நீங்கள் பரவச் செய்கிறீர்கள். நீங்கள் எதைச் செய்தாலும் அதில் நீங்கள் இருக்கிறீர்கள். அது அப்படித்தான் ஆகிவிடுகிறது.

உள்ளுக்குள் நிரம்பிவழிகிற நிலையில்தான், ஆற்றல் அதிகரித்துவிட்ட நிலையில் தான் மரங்கள் பூச்சொரிகின்றன. ஒரு மரத்திடம் ஆற்றல் இல்லையெனில் அது பூக்க முடியாது, காரணம் அது இலை விடுவதற்கான திறனையும் பெற்றிருக்காது. வேர்களுக்கான சத்துகூட அதனிடம் இருந்திருக்காது– பிறகெப்படி அந்த மரத்தால் புஷ்பிக்க முடியும்? பூக்கள் கிட்டத்தட்ட சொகுசானவை. நீங்கள் பசித்திருக்கும் போது உங்கள் வீட்டுக்கு ஓவியம் வாங்குவது பற்றிக் கவலைப் படமாட்டீர்கள். உங்களிடம் ஆடையில்லாத நிலையில் நீங்கள் உடைகளைப் பற்றித்தான் சிந்திப்பீர்கள், ஓர் அழகான பூந்தோட்டத்தைப் பெறவேண்டும் என்று எண்ணமாட்டீர்கள். இவையெல்லாம் இன்ப உணர்வைத் தோற்றுவிக்கும் ஆடம்பரங்கள். ஆற்றல் பிரவகிக்கிற போதுதான் கொண்டாட்டம், நிலைமாற்றம் உருமாற்றம் எல்லாம். ஆற்றல் பெருக்கெடுத்து ஓடுகிறபோது நீங்கள் பாடவிரும்புவீர்கள், ஆடவிரும்புவீர்கள், உங்கள் மகிழ்ச்சியை மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்ள விரும்புவீர்கள்.

'ஒரு வகுப்பு இனம் அல்லது வகையில் இருந்து இன்னொரு வகுப்பு இனம் அல்லது வகைக்கு மாறுவது நிரம்பி வழிவதால் தான...'

வழக்கமாக உணர்ச்சிகள் அடக்கிவைக்கப்பட்ட நிலையில் நிரம்பிவழிவது என்பது இருக்காது, அத்துடன் அவை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளப்பட்டுவிடும்.

உங்களுக்குள் ஆற்றல் நிரம்பி வழியாவிடில் உங்களுடைய சகஸ்ர தளத்தில் தாமரை மலர்வதில்லை. அது மேலும், மேலும் உயர்ந்தெழ வேண்டும். அதன் அளவு உயர்ந்து இரண்டாம் மையத்தையும், மூன்றாம் மையத்தையும், நான்காம் மையத்தையும் அடைகிறது. அது எந்தத் தளத்தை அடைந்தாலும் ஆற்றல் வெளிப் படுகிறது, மலர்கிறது. மனித குலத்தின் மலர்ச்சி ஏழாம் தளத்தில். சகஸ்ரம் ஏழாம் தளம். உங்களுக்குள் நிரம்பி வழிகிறபோதுதான் ஆயிரம் இதழ்த்தாமரை மலர்கிறது.

உங்கள் இருப்புணர்வில் ஒரு போதும் தடைகளை ஏற்படுத்திக் கொள்ளாதீர்கள், அடக்கி வைக்காதீர்கள். ஒரேயடியாய் திண்மை (solid)யுற்றி விடாதீர்கள், நல்லெண்ணெத்தையும் நட்பார்ந்த தன்மையையும் இழந்து உறைந்து போய்விடாதீர்கள். உங்கள் ஆற்றல் தொடர்ந்து ஓடிக்கொண்டிருக்கட்டும். யோகமுறையின் முழுமையான நோக்கமே அதுதான். உங்கள் தடைகள் உடைத்தெறியப்படுவது. உங்கள் உடம்புக்குள் நீங்கள் உருவாக்கிய தடைகளை நொறுக்கு வதற்கான செயல்முறைதான் யோகா.

தற்போது, அதேபோன்று மிகச்சரியான ஒன்று மேற்கில் நிகழ்ந்திருக்கிறது. அது ரால்ஃபிங், இடா ரால்ஃப் என்பவரால் நிறுவப்பட்டது. காரணம், மேற்கில் மனம் தொழில்நுட்பம் சார்ந்ததா யிருக்கிறது. மக்கள் தங்களுடைய செயல்களைத் தாங்களே செய்ய விரும்புவதில்லை. அதை மற்றவர்களைக் கொண்டு செய்து கொள்ளவே விரும்புவார்கள். அதன் காரணமாகவே ரால்ஃபிங் செல்படத் தொடங்கியது. ரால்பர் உங்களுக்கு 'மசாஜ்' செய்வார், உங்களுக்குள் இருக்கும் தடைகளை அகற்றுவார். தசைகளில் ஏற்பட்ட இறுக்கங்களை தணிவு நிலையை அகற்றுவார். தசைகளில் ஏற்பட்ட இறுக்கங்கள் தணிவு நிலையை அடையும்.

யோகாவிலும் அதுவேதான் செய்யப்படுகிறது. அதை நீங்கள் மிக எளிதாகச் செய்யக் கூடும். காரணம் உங்களுக்கு நீங்கள் குருவாக இருப்பதுதான். உங்களுடைய இருப்புணர்வை மிகச் சரியாகவும், நுட்பமாகவும் நீங்கள் உணர்ந்து கொள்ள முடியும். தினமும் உங்கள் கண்களை மூடிக்கொண்டு, அமைதியாக அமர்ந்திருந்தால், உங்கள் உடம்பில் எங்கே அசவுகர்யம் என்பதை நீங்கள் உணர முடியும். அந்த ஆசனங்கள் தசை இறுக்கத்தைப் போக்கி, ஆற்றலின் செயல்பாட்டுக்கு இடமளிக்கும். ஆனால், ஒன்றுமட்டும் நிச்சயம், தன் உணர்ச்சிகளை அடக்கிவைக்கிற ஒருவர் மலர்ச்சி காண்பது என்பதேயில்லை.

உணர்ச்சிகளை அடக்கிவைப்பவர் குறைவான, நெருக்கி வைக்கப்பட்ட ஆற்றலையே பெற்றிருப்பார்.

உங்கள் ஆற்றலை நீங்கள் சரியான திக்கில் நெறிப்படுத்தாவிடில் உங்கள் ஆற்றல் நாசமாகி விடக்கூடும், அது தற்கொலைக் கொப்பானது. உதாரணமாக, உங்களுடைய ஆற்றல் அன்பை நோக்கிச் செல்லாவிடில் அதுவே கோபமாகிவிடும். அந்த ஆற்றல் கெட்டு விட்டிருக்கும். கசப்பாகியிருக்கும். கோபவசப்பட்ட ஒருவரைக் காண்கிற போது ஒன்றை நினைவில் கொள்ளுங்கள், அவருடைய ஆற்றல் எப்படியோ அன்பை தவற விட்டிருக்கும். எப்படியேனும் அவர் சரியான பாதையை விட்டு விலகியிருப்பார், அதனால்தான் அவருக்குக் கோபம் வருகிறது. அவருக்கு உங்களிடம் கோபமில்லை. அவரே கோபமாகி விட்டிருப்பார். கோபத்தால் அவருடைய ஆற்றல் தடைப்படுகிறது, வாழ்க்கை எவ்வித சிறப்பும் இல்லாமல் அர்த்தமற்றதாகி விடுகிறது.

டைலன் தாமஸ் புகழ் பெற்ற கவிஞர். அவருடைய தந்தை இறந்து விட்ட இரவில் ஒரு கவிதை எழுதுகிறார். அந்தக் கவிதையின் சிலவரிகள்.

**"ஒடுங்கிக் கொண்டிருக்கும் ஒளிக்கெதிராய்**
**கடுஞ்சினம் படைத்திடு**
**விரும்பத்தக்க இரவென்றாலும் நீ**
**மிருதுவாய் நடந்துகொள்ள வேண்டியதில்லை"**

தம்முடைய தந்தையிடம் அவர் சொல்கிறார், 'மரணத்துடன் போராடுங்கள், அதற்கெதிராய் உங்கள் கோபத்தை வெளிப்படுத்துங்கள். சரணடையாதீர்கள். விட்டுவிடாதீர்கள். நீங்கள் தோற்றாலும் பரவாயில்லை. போரிடாமல் இருந்து விடாதீர்கள். தகுதியான முறையில் எதிர்த்து நில்லுங்கள்' என்று.

தம்முடைய காதல் நிறைவேறாத நிலையில் ஒருவருக்குக் கோபம் வருகிறது. அவர் மரணத்திடம் கோபப்படுவார். நிறைவான வாழ்க்கை வாழ்ந்த ஒருவர் மரணத்திடம் கோபப்பட மாட்டார். அது 'இருண்ட இரவு' என்ற அவர் கூறமாட்டார். 'ரொம்பவும் நேர்த்தி யானது, இளைப்பாற்றக் கூடியது' என்றுதான் கூறுவார், இருட்டு ஒய்வளிப்பது, தாயின் கருவறைபோல் இதமானது, கடவுளின் மிகப்பெரிய கருவறைக்குள் நுழைகிற ஒருவர் எதற்காகக் கோபப்படுவது? யாருடைய மனம் மலர்ந்து விரிகிறதோ அவர் சரணடைவார். ஏமாற்றத்துக்குக் குள்ளானவர் சரணடையார். தங்களுடைய ஏமாற்றங்களில் இருந்து அவர்கள் நம்பிக்கையைத் தோற்றுவித்துக் கொள்கின்றனர்.

ஒவ்வொரு நம்பிக்கையும் அதிக ஏமாற்றங்களைக் கொண்டு வருகிறது. கேடும் துன்பமும் தரக்கூடிய அந்த வட்டம் வெறுக்கத்தக்க அளவில் தொடர்கிறது.

நீங்கள் ஏமாற்றத்துக்குள்ளாமல் இருப்பதற்கு, நம்புதலை விடுங்கள், பிறகு ஏமாற்றம் இருக்காது. நீங்கள் உண்மையிலேயே வளர்ச்சியடைய விரும்பினால், உணர்ச்சிகளை ஒரு போதும் அடக்கிவைக்காதீர்கள். ஆற்றலின் மகிழுங்கள். வாழ்க்கை என்பது ஆற்றலின் வியக்கத்தக்க நிகழ்வு. ஆற்றலை அனுபவித்து மகிழுங்கள். ஆடுவது, பாடுவது, நீந்துவது, ஓடுவது என்று ஆற்றல் உங்களுக்குள் பாய்ந்தோடிப் பரவட்டும். அது ஓர் இயக்கமாகட்டும், நீங்கள் இயக்கத்தில் இருந்தால் மலர்வது எளிதாகிவிடும்.

**'இயற்கையின் மாறுபாட்டிற்கு நற்செயல்களும், தீச்செயல் களும் காரமில்லை, நீரின் போக்கில் உள்ள தடையை விவசாயி நீக்கும்போது, அதுதன் சொந்த இயல்பாலேயே பாய்வதுபோல் செயல்களும் இயற்கையின் பரிமாணத்திற்கான தடைகளை நீக்குகின்றன?**

பதஞ்சலி சொல்கிறார், 'உங்களுக்குள் தடைகள் இல்லாவிடில், நீங்கள் எல்லாவற்றையும் இயல்பாகவே அடைவீர்கள்' என்று நீங்கள் எதையாவது தோற்றுவிக்க வேண்டுமா என்பதல்ல கேள்வி. உங்களுக்குள் இருக்கும் தடையை அகற்ற வேண்டும், அவ்வளவுதான். அது ஊற்று ஒன்றை வெளியே பீறிடாதபடிக்கு ஒரு பாறாங்கல் அடைத்துக் கொண்டிருப்பது போலத்தான். ஊற்று முன்பே இருந்துகொண்டிருக்கிறது, உருவாக்கப்படவில்லை. நீங்கள் பாறையை அகற்றினால் போதும், நீர்வெளியே பீறிட்டிக்கும்' நீங்கள் பாறையை அகற்றியதும் நீர் வெடித்துக் கிளம்பும். குழந்தை இயல்பாகவே அதைப் பெற்றிருக்கிறது, புரிந்து கொள்ளும் திறன் இருந்தால் நீங்களும் அதை அடைய முடியும். சமுதாயம் உங்கள் மீது வலுக்கட்டாயமாக சுமத்தியிருக்கும் அத்தனை தடைகளையும் நீங்கள் கைவிட வேண்டும்.

சமுதாயம் பாலுறவிற்கு எதிராயிருக்கிறது. பாலுணர்வு மையத்திற்குப் பக்கமாய் ஒரு தடையை அது உண்டு பண்ணி யிருக்கிறது. பாலுறவு நாட்டம் ஏற்படுகிறபோதெல்லாம் நீங்கள் அமைதியற்றவராகி விடுகிறீர்கள், நீங்கள் குற்ற உணர்வு கொள்கிறீர் கள், அச்சப்படுகிறீர்கள், நீங்கள் பாய்ந்தோடுவதற்குப் பதிலாகப் பின்வாங்குகிறீர்கள். சமுதாயம் கோபத்துக்கு மாறானது, அது ஓர் தடையை அங்கே தோற்றுவித்திருக்கிறது. ஆக, கோபம் வருகிறது, ஆனால் நீங்கள் அதனுள் முழுமையாய் செல்ல முடியவில்லை.

நீங்கள் அத்தனை தடைகளையும் போகவிட வேண்டும்.

அதனால்தான், ஆற்றல் மிக்க செயல்முறைகளை நான் வலியுறுத்துவது. அவை உங்கள் தடைகளைக் கரைந்து போகச் செய்யும். நீங்கள் கோபத்தில் இருந்தால் கத்தித் தீர்த்து விடுங்கள். ஆனால் யாரிடமும் கூச்சல் போட வேண்டாம். ஒரு தலையணை போதுமானது. தலையணையை அடியுங்கள், அதன் மீது குதியுங்கள், தலையணையை நார் நாராய் கிழித்துப் போடுங்கள், யாரையும் கொன்று தீர்க்கிற அவசியம் இல்லை. நீங்கள் கோபத்துக்குள் புகுந்து புறப்பட்டுவிட்டால், தடை தகர்க்கப்பட்டுவிடும். நீங்கள் யாரையேனும் கொன்று தீர்க்க விரும்பினால், நீங்கள் யாரிடமாவது கோபப்பட விரும்பினால் அதை உங்களால் முழுமையாய் செய்ய முடியாது.

நீங்களும் மனிதப் பிறவிதான், உங்களுக்குள்ளும் அன்பு பரிவு எல்லாம் இருக்கிறது. எனவேதான் ஒருவர் தடுத்து நிறுத்திக் கொள்வது.

தலையணையை அடித்து நொறுக்குங்கள். ஒரு நல்ல கத்தியைக் கொண்டு அந்தத் தலையணையைக் கொன்று தீர்த்து விடுங்கள். தலையணை இறந்து போனதும் சவத்தைப் புதைத்துவிடுங்கள், தீர்ந்தது. சற்றும் எதிர்பாராத விதமாய் உங்களுக்குள் ஏதோவொன்று நொறுங்குவதாய் உணர்வீர்கள். ஒரு பாறை அகற்றப்பட்டுவிட்டது. நீங்கள் குதியுங்கள், தாவிக்குதியுங்கள், பாலுறவு நாட்டம் எழுமாயின் அது மேலெழ உதவுங்கள். சமுதாயம் உங்களுக்குக் கற்பித்த எல்லாவற்றையும் மறந்து விடுங்கள். உங்களுக்குள் தோன்றும் சிற்றின்ப உணர்வில் திளைத்திடுங்கள். அதனுடன் அநுசரிப்பாய் இருங்கள். பின்வாங்கவோ, எதிர்க்கவோ செய்யாதீர்கள். சீக்கிரமே சிற்றின்ப உணர்வு மாறுவதை நீங்கள் கண்டு கொள்வீர்கள். நீரோடை நிரம்பிவிட்டால் வழிந்தோடத் தொடங்கும், வழிந்தோடும் சிற்றின்ப வேட்கை நுட்ப உணர்வாக மாறுகிறது. தங்கள் பாலுணர்வை அடக்கிவைக்கிறவர்கள் நுட்பஉணர்வில்லாமல், மந்தமாகி விடுகிறார்கள். அவர்களிடம் உயிர்ச்சக்தி இருக்காது. அவர்கள் உணச்சியற்றவர்களாகி விடுவார்கள்.

*இயற்கையின் மாறுபாட்டிற்கு நற்செயல்களும், தீச்செயல்களும் நேரடிக்காரணமில்லை.*

யோகாவின் ஒட்டுமொத்த முயற்சியும் தடைகளை அகற்றுவது தான். உண்மையில் நீங்கள் எதையும் செய்ய வேண்டியதில்லை, முன்பே எல்லாமும் உங்களிடம் இருக்கிறது. அது பாய்ந்தோடவில்லை அவ்வளவுதான். பாதையில் சில கற்கள். ஒரு விவசாயி தன்னுடைய நிலத்துக்கு நீர்பாய்ச்சுவது போலத்தான் அதுவும்.

ஒரு விவசாயி வயலுக்கு நீர்ப்பாய்ச்சுவதை நீங்கள் பார்த்தி ருக்கிறீர்களா? தண்ணீர் ஒரு கால் வாயில் ஓடிக்கொண்டிருக்கும். அவர் கொஞ்சம் மண்ணை அகற்றி வழி பண்ணுகிறார், அந்த வழியில் நீர் பாய்ந்தோடும், நீர்பாய்ச்சிய பிறகு அந்த வழி (மடை)யில் கொஞ்சம் களிமண்ணை வைத்து அடைப்பார், நீரின் ஓட்டம் நின்றுவிடும். பிறகு அவர் வேறோர் இடத்தில் கால்வாய் திறப்பார்.

அங்கே நீர் ஓடத்தொடங்கும். நீர் முன்பே இருந்து கொண்டிருக்கிறது. அதற்கு போக்குவழி தேவைப் படுகிறது. சகஸ்ரதளத்தை அடைய ஒருபோக்கு வழி தேவை. அப்போது தான் உங்கள் சிகரத்தை, இருப்புணர்வின் உச்சத்தை நீங்கள் அடையமுடியும்.

'செயற்கையாக உருவாக்கப்பட்ட மனங்கள் தன்னலம் பேணுவதில் (egoism) இருந்தே செயலைத் தொடங்கும்."

நாம் எல்லாருமே செயற்கை மனங்களைத்தாம் கொண்டிருக்கிறோம். அதைத்தான், சமுதாயம் உங்களை வசியப்படுத்தியிருக்கிறது என்று நான் கூறுகிறேன்.

ஆசிரமத்தில் அறிதுயில் சிகிச்சைப்பிரிவு ஒன்று இருக்கிறது. அறிதுயில் சிகிச்சை (hyprotheraphy) என்கிறார்கள். நானோ அதை அறிதுயில் நீக்கும் சிகிச்சை (dehyprotheraphy) என்று அழைக்கிறேன். காரணம், அடிப்படையில் அது உங்களை விடுவிக்கிற, நிபந்தனை யற்றவராக்குகிற முயற்சியே ஆகும்.

எல்லாமனங்களுமே செய்கையாய் உருவாக்கப்பட்டவைதாம். 'நிர்மாண சித்தினி அஸ்மிதா மத்ரத்'. செயற்கை மனங்கள் தன்னலம் பேணுவதில் இருந்தே செயல்படத் தொடங்குகின்றன. நான் ஓர் இந்து, நான் ஒரு முகமதியன், நான் கறுப்பு, நான் வெறுப்பு, நான் அதுவாக இருக்கிறேன், இதுவாக இருக்கிறேன். இவை எல்லாமே செயற்கை மனங்களாகும். அசலாக முகத்தை, அசலாக மனத்தை, மனிதனால் தோற்றுவிக்கப்பட்டதைத் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

நான் கேட்டறிந்தது, நிறக்குறைவான ஒரு பையன், தற்செயலாக, ஒரு வெள்ளை பெயிண்ட் பீப்பாயைத் தன் மீது கவிழ்த்துக் கொண்டு விட்டான். அவன் வீட்டுக்கு வந்ததும் அவனுடைய தந்தை நேரே படுக்கைக்குச் சென்று விடும்படி கூறினார். பையன் புலம்பிக் கொண்டே போனான். 'நான் இருபது நிமிடங்கள்தான் வெள்ளையாய் இருந்திருப்பேன், எனக்குக் கறுப்பர்கள்மீது வெறுப்பு வந்து விட்டது' என்று.

இருபது நிமிடக் குழந்தைகூட தனக்குள் செயற்கை மனதைச் சேர்த்து வைத்துக் கொண்டு விடுகிறது. இருபது நிமிடக் குழந்தை

என்றாலும் மற்றவர்களைவிட தன் தாயை அதிக அன்புடன் நோக்குகிறது. காரணம், ஒரு தந்திரத்தை அவன் தெரிந்து வைத்திருக்கிறான். பயிற்சியின் மூலம் நடத்தையை ஒருமுகப்படுத்தித் தொடங்கிவிடுகிறது. அவள் உணவாக இருக்கிறாள், உணவைச் சார்ந்தே உயிர்பிழைக்க வேண்டியிருக்கிறது. எனவேதான் அருவருப்பான தோற்றமுள்ளதும் அழகாய் தெரிகிறது. அது தப்பிப்பிழைத்தல், தாக்குப்பிடித்தல். குழந்தை தந்திரத்தைக் கற்றுக் கொள்ளத் தொடங்குகிறது. அவன் தந்தையைப்பார்த்து அதிகம் புன்னகை செய்வதில்லை. இந்த மனிதர்யார் என்று அவனுக்குத் தெரியாது. அவன் பிற்பாடு அதனைப் புரிந்து கொள்வான். மெள்ள மெள்ள இந்த மனிதனின் முக்கியத்துவம் அவனுக்குத் தெரிய வருகிறது. உண்மையில் அவர் வீட்டில் அதிகம் இருப்பதில்லை, ஆனாலும் முக்கியமானவர். அரிதாகவே, ஞாயிற்றுக் கிழமைகளில் அவர் அங்கிருக்கிறார், ஆனால், தாயும் அவரைச் சார்ந்தே இருக்கிறாள், தாய்கூட அவரைப்பார்த்து புன்னகைக்கிறாள். அவன் செயற்கை மனத்தைக் கற்றுணர்கிறான். அவன் உறவுகளைத் தோற்றுவித்துக் கொள்கிறான், தன்னுடைய உயிர்பிழைத்திருப்பதை ஒழுங்கு படுத்திக் கொள்கிறான். ஆனால், தப்பிப்பிழைப்பதற்கு தொடக்கத்தில் துணை செய்கிற செயற்கை மனம் பிற்பாடு பெரிய பிரச்சினையாகிவிடுகிறது.

செயற்கை மனம் கழுத்தில் கட்டிய கல்லைப்போல் உங்களைச் சுற்றி தொங்கிக் கொண்டிருக்கும். அதுவே தற்பெருமை ஆகிறது. அதைத்தெரிந்து கொண்டால் போதும், அது தொடர்பாய் எதுவும் செய்ய வேண்டியதில்லை. ஒவ்வொரு குழந்தையும் செயற்கை மனதினுள் செல்லும்படி இருக்கும். ஆனால், நீங்கள் கவனமும், விழிப்புணர்வும் கொண்டவராகி, வாழ்க்கையைப்பற்றி ஆழ்ந்து சிந்திக்கிற பொழுது கொஞ்சம் கொஞ்சமாய் அதை விட்டுவிடலாம். தற்பெருமையை விடுங்கள், தற்பெருமை என்பது செயற்கை மனந்தான், வேறில்லை. செயற்கை மனதின் மையம் தற்பெருமை. உங்களுடைய தற்பெருமையை நீங்கள் தொடும் பட்சத்தில் மட்டுமே செயற்கை மனமும் தொடரப்பட வேண்டும்.

உலகிலேயே மிகச் சிறந்த மதம் தங்களுடையது என்கிறார்கள் இந்துக்கள். உலகிலேயே அதிக அளவில் சமய நம்பிக்கை

கொண்டவர்கள் அவர்கள். அவர்கள் உண்மையிலேயே சமயநம்பிக்கை கொண்டவர்கள் என்றால் அத்தகைய அறிவற்றவார்த்தைகளைப் பேச மாட்டார்கள். காரணம் சமயப்பற்றுடைய மனம் பணிவும், எளிமையும் கொண்டதாயிருக்கும். இது தற்பெருமை. ஒவ்வொரு நாடும் தனக்கேயுரிய தற்பெருமையைக் கொண்டிருக்கும். ரஷ்யனாகட்டும், சீனனாகட்டும், அமெரிக்கனாகட்டும் ஜெர்மானியன் அல்லது ஆங்கிலேயனாகட்டும் ஒவ்வொருவனும் தற்பெருமை கொண்டவனாகவே இருப்பான்.

'நாங்கள் தாம் மேம்பட்டவர்கள்' என்று ஒவ்வொரு நாடும் எண்ணிக்கொள்கிறது. உயர்வாக உணர்தற்கான வழிகளையும், உபாயங்களையும் ஒவ்வொருநாடும் கண்டுபிடித்துக் கொள்ளுகிறது. ஒவ்வோர் இனத்திடமும், பிரிவினிடமும். ஆணிடமும், பெண்ணிடமும் இதனை நீங்கள் காண முடியும்.

நான் கேட்டறிந்தது. யானை தன்னுடைய காலடியில் நின்றிருந்த சுண்டெலியை நோக்கி, அன்பானவனே, நீ ரொம்பவும் சிறியதாயிருக்கிறாய்' என்றது. சுண்டெலியும் 'ஆமாம்' என்று ஒப்புக்கொண்டது. 'கொஞ்ச நாளாகவே எனக்கு உடம்பு சரியில்லை' என்றது. சுண்டெலி கூட தற்பெருமை கொண்டதுதான், இல்லையா?

செயற்கை மனம் தற்பெருமையின் மூலம் வாழ்கிறது. ஆக, உங்களுடைய தற்பெருமையை நீங்கள் விடத்தொடங்கினால் உங்கள் செயற்கை மனம் தூள் தூளாகிவிடும். அல்லது உங்களுடைய மனதை நீங்கள் விட்டுவிட்டால் உங்கள் தற்பெருமை பலகூறுகளாய் சிதைந்து விடும். இந்த கடும் பாறையை விட்டு உண்மையிலேயே நீங்கள் விலக விரும்பினால் இரண்டு செயல் முறைகளையும் ஒன்றாகவே தொடங்கி விடுங்கள். எந்த வழியிலும் தற்பெருமையை அதிகரிக்க விடாதீர்கள். செயல்முறைகள் நுட்பமானவை.

உங்களுடைய அசலான மனம் தற்பெருமையற்றது என்பதை நினைவில் கொள்ளுங்கள். அது 'நான்' என்பதை அறியாதது, காரணம் 'நான்' என்பது சிறுத்துவிடுவது. அசலான மனம் முடிவற்றது அந்த ஆகாயத்தைப் போல.

தற்பெருமையை தொடர்பான ஒரு பிரச்சினை தொடர்ந்து எழவே செய்யும். தொடக்கத்தில் உங்களைப்பற்றி மற்றவர்களை

நீங்கள் முட்டாளாக்கி விடுகிறீர்கள், போகப் போக உங்களை நீங்களே முட்டாளாக்கிக் கொண்டு விடுவிர்கள். உங்களைக் குறிப்பிடத் தக்கவராக மற்றவர்களை நீங்கள் நம்பச் செய்கிறபோது, உங்களையும் நீங்கள் நம்பச் செய்து விடுகிறீர்கள்.

மனநோயாளிகளுக்கென விடுதி அது. அங்கே செல்லப் பிராணிகள் வைத்துக் கொள்ளக்கூடாது என்பது விதி. ஹாரி என்பவன் ரோவர் என்கிற நாயுடன் பேசிக்கொண்டிருப்பதை வார்டர் கேட்டார். அவனை அடைத்து வைத்திருந்த அறையை நோக்கி நடந்தார். அங்கே, ஒரே பற்பசைக்குழாயில் நூலைக்கட்டி இழுத்துக் கொண்டிருந்தான் ஹாரி. 'என்ன அது?' வார்டர் கேட்டார்.

'இது நூலில் கட்டிய டூத் பேஸ்ட் டியூப் என்பது ஒரு முட்டாளுக் குக் கூட தெரியும்' என்றான் ஹாரி. வார்டர் திருப்தியுடன் நகர்ந்து விட்டார். கதவை மூடிய ஹாரி நிம்மதிப் பெருமூச்சுவிட்டான். 'ரோவர், நீ ரொம்ப நல்ல பையன். நாம் அவரை முட்டாளாக்கிவிட்டோம்' என்றான்.

நீங்கள் எந்த அளவு மற்றவர்களை முட்டாளாக்கப் பார்க்கிறீர்களோ, உங்களைக் குறிப்பிடத்தக்க நபராய் காட்டிக்கொள்ள முற்படுகிறீர்களோ, எந்த அளவு அதில் வெற்றி பெறுகிறீர்களோ அந்த அளவு உங்களை முட்டாளாக்கிக் கொள்வதிலும் வெற்றிபெறுகிறீர்கள் அந்த அறிவற்ற செய்கையை முற்றுமாய் கூர்ந்து கவனியுங்கள்.

குறிப்பிடத் தக்க்வர் என்று யாரும் இல்லை எல்லாருமே சிறப்புத் தன்மை உடையவர்தாம். எந்த முறையிலும் எதையும் நிரூபிக்கத் தேவையில்லை. நிரூபிக்க முயல்வது அர்த்தமற்றது.

செயற்கை மனம் தற்பெருமையில் இருந்தே தொடர்ந்து செயல்படுகிறது. ஆக, உங்களுடைய அசலான மனத்தை நீங்கள் வந்தடைய விரும்பினால் – யோக, தந்த்ரா, ஜென் இவற்றின் மூலம் அடையப்படுகிறது – அந்நிலையில் உங்களுடைய செயற்கை மனத்தை நீங்கள் விட்டுவிடுங்கள். அந்த மனம் சமுதாயத்தால் உருவாக்கப்பட்டு, உங்களிடம் வழங்கப்பட்டது. அது புறத்தேயிருந்து வலுக்கட்டாயமாக உங்கள் மீது திணிக்கப்பட்டது. மெள்ள, மெள்ள அதைவிட்டு விடுங்கள். நீங்கள் எந்த அளவு புரிந்து கொள்கிறீர்களோ

அந்த அளவிற்கு அதை விட்டு விடுவீர்கள். செயற்கை மனத்துடன் பிணைப்புற்றிருப்பதாய் நீங்கள் உணரத் தொடங்குகிற போதெல்லாம், 'நான் ஒரு இந்து, நான் ஒரு இந்தியன் அல்லது நான் ஒரு இங்கிலீஷ்காரன், பிரிட்டனைச் சேர்ந்தவன்' என்று நீங்கள் சொல்லிக் கொள்கிற போதெல்லாம் நீங்கள் கையும் களவுமாய் பிடிபட்டு விடுகிறீர்கள். அடியாழத்தில், உங்கள் முகத்தில் அறைந்து கொண்டு, 'என்னவொரு முட்டாள் தனம்' என்று சொல்லிக் கொள்ளுங்கள். கொஞ்சம் கொஞ்சமாய் சமூகத்தின் வரையறைகளில் இருந்து விடுபடுங்கள். அப்போதுதான் உங்களுடைய விவரிக்க முடியாத, அதிகாரபூர்வமான இருப்புணர்வை நீங்கள் கண்டடைவீர்கள்.

**'பல செயற்கை மனங்களின் செயல்பாடுகள் வேறுபாட்டாலும்,**
**ஒரேயொரு அசலான மனம் அவற்றைக் காட்டியாளும்.'**

ஆக, உங்களுடைய செயற்கை மனம் எத்தகையதாயினும் உண்மையில் அதன் பின்னே மறைந்திருக்கும் அசலான மனம் அவற்றையெல்லாம் அடக்கியாளும். அடக்கியாள்பவரைக் கண்டு பிடியுங்கள்.

சமுதாயம் உங்களைக் களங்கப்படுத்துவதற்கு முன் நீங்கள் உண்மையில் யார் என்பதைக் கண்டறிய முயற்சி செய்யுங்கள். சமுதாயம் உங்களுடைய கோபத்தை நாசம் செய்வதற்கு முன் இருந்த உங்கள் அடிப்படையான வடிவத்தை நீங்கள் கண்டடையப் பாருங்கள். 'ஜென்'னில் அவர்கள் இப்படி அழைக்கிறார்கள், பிறப்பதற்குமுன் உங்களுக்கிருந்த முகத்தை, நீங்கள் இறக்கும் போது உங்களிடம் இருக்கக் கூடிய முகத்தைக் கண்டடையுங்கள். சமுதாயத்தால் தொட்டறியப்படாத அந்த அசலான முகம்! அதுவே உங்களுடைய இயல்பு, ஆன்மா, இருப்புணர்வு.

அசலான முகத்தைக் கண்டு பிடித்ததும் நீங்கள் மறுபடியும் பிறப்பீர்கள். அனைத்தும் அறிகிற உண்மையான அந்தணன் ஆவீர்கள். அந்நிலையில் எல்லாமும் உங்களுக்கு மறுபடியும் வெளிப்படும் நீங்கள் பிறந்தபோது வெளிப்பட்டது போலவே அது அமையும். ஆனால், இம்முறை மிகப்பெரிய வேறுபாடு இருக்கும். நீங்கள் கவனமாயிருப்பீர்கள். முதல் முறை நீங்கள் தவறவிட்டீர்கள். இம்முறை தவறவிட மாட்டீர்கள். முதல்முறை அது இயல்பாக

நிகழ்ந்தது. இம்முறை உங்களுடைய கவனத்தால் விழிப்புணர்வில் அது நிகழும். நீங்கள் மீண்டும் பிறப்பதை நீங்களே காண்பீர்கள். கடந்த காலத்தில் இருந்து, மேகமூட்டத்தில் இருந்து, குழப்பத்தில் இருந்து, எண்ணங்களில் இருந்து, தவறான ஊகங்களில் தற்பெருமை களில் இருந்து மேலெழுவிர்கள். தூய்மையுடன், புத்தம் புதிதாய் எழுந்து நிற்பீர்கள். அந்நிலையில் நீங்கள்தாம் ஆற்றல் என்பதை, இருப்புணர்வே நீங்கள் என்பதைப் புரிந்து கொள்வீர்கள்.

ஆக, முதலில் பிறப்பின் போது அது நிகழ்கிறது. இரண்டாவதாக சமாதி நிலையில் அது நிகழ்கிறது. இடையில் மூன்று செயல் முறைகளில் போதைப்பொருள், ஐயம், ஆசைகளை ஒழித்தல் என்கிற மூன்று செயல் முறைகளில் அது நிர்வகிக்கப்படுகிறது. ஆனால் அந்த மூன்று முறைகளுமே ஏமாற்றுவது, மோசடி பண்ணுவது தான். நீங்கள் கடவுளை எமாற்ற முடியாது. உங்களை வேண்டுமானால் ஏமாற்றிக் கொள்ளலாம். இதனை நினைவில் கொள்ளுங்கள்.

## முதற் கேள்வி:

***'சீடன் தன்னுடைய குருவிடம் இருந்து எதையேனும் களவாடி விடுகிறானா?'***

எல்லாவற்றையும். காரணம் உண்மை என்பது கற்பிக்கப்படுவதல்ல, கற்றுணரப்படுவது. குருவால் உங்களைத் தூண்டமுடியும்; உங்களிடம் அதற்கான தாகத்தை உண்டு பண்ணமுடியும். ஆனால் அதை உங்களுக்கு அவரால் வழங்க முடியாது. அது ஒரு பொருள் அல்ல. உங்கள் பெயருக்கு எளிதாக மாற்றிக் கொடுத்துவிட அவரால் முடியாது. அது மரபுரிமை அல்ல. நீங்கள் அதைக் களவாடித்தான் ஆகவேண்டும். ஆன்மாவின் இருண்ட இரவில் நீங்கள் அதற்காகக் கடுமையாய் உழைக்கும்படி இருக்கும். உண்மையில், பொக்கிசத்தை நீங்கள் எளிதில் அடைய முடியாதபடிக்கு அநேக தடைகளை அவர் தோற்றுவித்தபடி இருப்பார். காரணம், அந்தப் பொக்கிசத்தை நீங்கள் எளிதாக அடைந்தால் நீங்கள் வளர்ச்சியடைய மாட்டீர்கள், அந்தப் பொக்கிசத்தை மறுபடியும் இழந்து விடுவீர்கள். அது குழந்தையின் கைக்குக் கிடைத்த பொக்கிசமாகிவிடும். திறவுகோல் தொலைந்து போகும், பொக்கிசமே தொலைந்து போகலாம்.

களவாடுவதற்கு உங்களைத் தயார்ப்படுத்துவதே உங்களுடைய குருதான், அதற்கான திறனை நீங்கள் பெறவேண்டியிருக்கும். உங்களைத் தயார்ப்படுத்திக்கொள்ளும்படி இருக்கும். அவர் அநேக தடைகளை உண்டுபண்ணுவார், பொக்கிசத்தைத் தொடர்ந்து மறைத்து வைப்பார். நீங்கள் தயாரான பிறகே உங்களை அவர் (களவாட) அனுமதிப்பார். உங்களுடைய பேராசையோ விருப்பமோ போதுமானதாக இருக்காது. ஆனால் உங்களுடைய செயல்படும் திறனும், முன்னேற்பாடுந்தான் அவசியம். நீங்கள் அதனை ஈட்டியாக வேண்டும். அது திருடுவதுபோலத்தான், காரணம் அதற்கான முயற்சியை இரவில் செய்யும்படி இருக்கும், அந்த முயற்சியை ஓசைப்படாமல் செய்ய வேண்டும். பாதையில் ஆயிரத்தியொரு

தடைகள் இருக்கும், விட்டு விலகும்படி மனம் தூண்டும். கவனத்தைத் திசை திருப்பும் கவர்ச்சிகள் இருக்கும். குருவின் உதவி உங்கள் திறமையை அதிகரிக்கும், பொக்கிசம் இங்கிருக்கிறதா இல்லையா என்பதைக் கண்டறிதற்கான திறனை அது வழங்கும்.

குருவுடன் வசிக்கிறபோது, அவரால் உருவாக்கப்பட்ட சூழலில் மெள்ள மெள்ள உங்களுடைய விழிப்புணர்வு மேலெழும், செயல்படத் தொடங்கும். உங்கள் பார்வை தெளிவாகும். பொக்கிசம் இருக்குமிடத்தை உங்களால் கண்டு கொள்ள முடியும். அதன் பிறகு, நீங்கள் கடுமையாய் அதற்காக உழைப்பீர்கள். குருவானவர் இமயத்தின் தொலைதூர சிகரக் காட்சியை, பனிமூடிய, சூரிய ஒளியில் பளபளக்கிற உச்சிமுனையை கணநேரம் உங்களுக்குக் காட்டுவார். ஆனால், அது இருப்பது வெகு தொலைவில், நீங்கள் பயணம் செய்ய வேண்டியிருக்கும். அது ரொம்பக் கடினம், பெருமுயற்சி தேவைப்படும். நீங்கள் அதைத் தவறவிட எல்லா சாத்தியங்களும் இருக்கின்றன. உங்கள் குறிக்கோளைத் தவறவிட்டு, சரியான பாதையில் இருந்து நீங்கள் விலகிச் செல்வதற்கான சாத்தியங்கள் இருக்கின்றன. சிகரத்தை எத்தனைக்கு நெருங்கிச் செல்கிறீர்களோ அத்தனைக்கு தவறவிடுகிற சாத்தியம் பெரிதாகி விடுகிறது, மிக அதிகமாகி விடுகிறது. காரணம் உச்சியை நெருங்க, நெருங்க உச்சிமுனையை நீங்கள் குறைவாகவே பார்க்க முடியும். மிகவும் எச்சரிக்கையோடுதான் நீங்கள் மேலேறவேண்டியிருக்கும். தொலைவில் இருக்கும்போது உங்களால் சிகரத்தைப் பார்க்க முடியும். பாதையை அப்போது தவறவிடமாட்டீர்கள். ஆனால் மலையை அடைந்து, நீங்கள் மேல் நோக்கிச் சென்றிடும் உச்சி முனையை உங்களால் பார்க்க முடியாது. நீங்கள் இருட்டில் துழாவும்படி (மனத்தளவில் தேடுதல்) இருக்கும். ஆக, அது களவாடுகிற மாதிரிதான். குருவானவர் அத்தனை எளிதில் உங்களுக்கு வழங்கிவிட மாட்டார். அதை எளிதில் அனுமதித்துவிடமுடியும் – கதவுகளை இப்போதே திறந்த விட முடியும் . ஆனால் அங்கே எந்தவொரு பொக்கிசத்தையும் உங்களால் காண முடியாது, காரணம் உங்களுடைய கண்கள் இன்னும் போதிய அளவு பயிற்றுவிக்கப்படவில்லை. இது ரொம்ப மதிப்பு மக்கது என்று நீங்கள் நம்பினாலும் மறுபடியும், மறுபடியும் உங்கள் நம்பிக்கையை இழந்து கொண்டிருப்பீர்கள். அதன் மதிப்பை நீங்கள் அறிந்து, உணராவிடில்

அதை நீண்ட காலம் நீங்கள் வைத்திருக்க முடியாது. அதை எங்காவது வீசியெறிந்து விடுவீர்கள்.

ஒரு வறியவனை, யாசித்து உண்கிற ஒருவனைப் பற்றி நான் கேட்டறிந்தது. அவன் தன்னுடைய கழுதையுடன் சாலையில் வந்து கொண்டிருந்தான். அந்த கழுதையின் கழுத்தில் ஓர் அழகான வைரம் தொங்கவிடப்பட்டிருந்தது. அந்த ஏழை மனிதன் அதை எங்கோ கண்டெடுத்திருந்தான், அது அழகாக இருக்கிறதே என்றெண்ணி, ஓர் ஆபரணமாக்கி கழுதையின் கழுத்தில் தொங்க விட்டிருந்தான்.

நகை வியாபாரி ஒருவன் அதைக் கண்டான். அவன் அந்த ஏழையிடம், 'இந்தக் கல்லை என்ன விலைக்கு விற்பாய்?' என்று கேட்டான். ஏழை சொன்னான் 'எட்டணா கொடுங்கள்' என்று. நகை வியாபாரி பேராசைக்காரன், 'என்னது, இந்தச் சின்னக் கல்லுக்கு எட்டணாவா? நான்கணா வேண்டுமானால் தருவேன்' என்றான். 'நாலணா காசுக்காக கழுதையின் கழுத்தில் இருப்பதை எடுப்பதா? நான் விற்கப்போவதில்லை' என்றான் ஏழை.

'எப்படியும் இந்த பிச்சைக்காரன் விற்கத்தான் போகிறான்' என்று தனக்குள் சொல்லியபடி கொஞ்சம் முன்னால் நடந்து சென்றான். ஆனால், அந்த நேரத்தில் வந்த மற்றொரு வியாபாரி ஆயிரம் ரூபாய் கொடுக்கத் தயாராயிருந்தான். அடுத்தவன் எட்டணா கொடுக்கவே தயங்குகிறான் என்பதால், இவன் ஆயிரம் ரூபாய் என்றதும் உடனே விற்றுவிட்டான். 'என்ன, அந்த வியாபாரி ஆயிரம் ரூபாய் கொடுத்திருக்கிறானே, அவனுக்கென்ன பைத்தியம் பிடித்து விட்டதா?' பதறியபடி ஓடிவந்தான் முதல் வியாபாரி. அதற்குள் வைரம் கைமாறி விட்டது. அவன் ஏழையிடம் சொன்னான், 'நீ ஒரு முட்டாள், போயும் போயும் ஆயிரம் ரூபாய்க்கு அதை விற்றுவிட்டாயே. அதன் மதிப்பு கிட்டத்தட்ட பத்து லட்சம் ரூபாய்' என்று. பிச்சைக் காரன் சிரித்தான், 'நான் முட்டாளாக இருக்கலாம். ஆனால், உன் விசயம் என்ன? அது வைரம் என்பது எனக்குத் தெரிந்திருக்கவில்லை. ஆனால் உனக்குத் தெரியும், இருந்தாலும் அதை நீ எட்டணாவிற்குக் கூட எடுத்துக் கொள்ள மாட்டேன் என்றாய்.'

நீங்கள் வைரத்தைப் பெறக்கூடும், அது உங்களிடம் இருந்து அபகரிக்கப்பட்டு விடும். உங்களால் அதை ரொம்பகாலம் வைத்துக் கொண்டிருக்க முடியாது. அதன் மதிப்பை நீங்கள் புரிந்து கொள்ளா விட்டால், அது உங்களிடம் இருந்து களவாடப்பட்டு விடும். ஆகவே, நீங்கள் வளர்ச்சியடைந்தாக வேண்டும்.

குருவின் வேலை முரணாகத் தோன்றுகிறது. முரண் இதுதான்; அவர் உங்களைத் தூண்டுகிறார், வரவேற்கிறார் அதே சமயம் பொக்கிசத்தை மறைத்து வைத்து விடுகிறார். அவர் ஒரே நேரத்தில் இரண்டு வேலைகளையும் செய்து விடுகிறார். அவர் உங்களைத் தூண்டுகிறார், வசப்படுத்துகிறார். ஆனாலும் அத்தனை எளிதாய் அண்ட விடுவதில்லை. முரணான இரண்டு முயற்சிகளுக்கிடையில்: தூண்டல் இருக்கிறது, தொடர்ச்சியான தூண்டல்.

நான் தினமும் சொற்பொழிவாற்றிக் கொண்டிருக்கிறேன், இது ஓர் அழைப்பு, தூண்டல் அன்றி வேறில்லை. நீங்கள் களவாடுவதற்கான திறமையைப் பெறாவிடில் நான் கடைசிவரை அதை மறைந்த விடுவேன். அதை நான் வழங்கப்போவதில்லை. அது வழங்கு வதற்கானதல்ல. நீங்கள் அதை களவாடிக்கொள்ளக் கூடும். ஆனால் போகப்போக நீங்கள் தேர்ச்சி பெற்ற திருடனாகி விடுவீர்கள். மனத் தூண்டுதல் உங்களை உருவாக்கிவிடும். நீங்கள் என்ன செய்வீர்கள்? நான் உங்களைத் தூண்டுவேன். ஆனால், உங்களிடம் எதையும் தரமாட்டேன். நீங்கள் என்ன செய்வீர்கள்? அதை எப்படிக் களவாடலாம் என்று சிந்திக்கத் தொடங்குவீர்கள்.

எதுவும் அதற்குரிய நேரத்துக்கு முன்பாய் நிகழ்வதில்லை. ஒன்றின் உண்மை நிலை அதற்குரிய நேரத்துக்கு முன்பாய் வெளிப் படுவதில்லை. நான்அதை உங்களுக்குத் தர முயன்றால், அது அதற்கும் முன்னால் உங்களிடம் வந்து சேராது. அப்படியே வந்தடைந் தாலும் நீங்கள் மறுபடியும் அதை இழந்து விடுவீர்கள். மேலும், நான் அதை உங்களுக்குத் தந்தால் அது என்னைப் பொறுத்தவரை பரிவுடன் கூடிய செய்கை ஆகாது. என்னுடைய இரக்கம் இறுகி யிருக்க வேண்டும். நீங்கள் அதை வேண்டி அழுகிற அளவிற்கு அது இறுகியிருக்க வேண்டும். ஒரு முறை தூண்டப்பட்டுவிட்டால் நீங்கள் அடக்க முடியாத ஆர்வம் கொண்டு விடுவீர்கள். நீங்கள்

வழிகளைக் கண்டுபிடிப்பீர்கள், வழிகளைக் கண்டுபிடிக்க வேண்டும், காரணம் வழிகளைக் காண விழைவதன் மூலமும், கண்டுபிடித்து அடைவதால் மட்டுமே நீங்கள் பழைய அமைப்பில் இருந்து வெளியே வரமுடியும், புதிய பாதைகளை ஆராய்வதன் மூலமே புதிய அமைப்புகளை, புதிய ஒழுங்கு முறைகளைக் கண்டடைய முடியும், நீங்கள் அவ்விதமாகவே வளர்ச்சி காண்பீர்கள், வளம் பெறுவீர்கள். உண்மையில், நீங்கள் வளர்ச்சியுள்ள தருணத்தில் சற்றும் எதிர்பாராத விதமாய் உண்மை அங்கே இடம் பெற்றிருக்கும். ஒருவர் அதை அடையாளம் கண்டு கொண்டாலே போதும், ஆனால் அதன் செயல் முறை கடினமானது. உங்களிடம் உள்ள எல்லாவற்றையுமே நீங்கள் பணயம் வைக்க வேண்டியிருக்கும்; அதுவே களவு செய்தலின் பொருள். அது ஒரு வியாபாரம் அல்ல, அதில் பேரம் கிடையாது. அது களவாடுவதைப் போன்றது.

ஒரு திருடனைப் பற்றி எண்ணிப்பாருங்கள். தான் அறிந்திராத ஒன்றிற்காக அவன் எல்லாவற்றையும் பணயம் வைக்கிறான். அது உண்மையா இல்லையா என்றுகூட அவனுக்குத் தெரிந்திருக்காது. தன்னுடைய சொத்தினை அவன் பணயம் வைக்கிறான், தன் குடும்பத்தையும் உயிரையும் அவன் பணயம் வைக்கிறான்.

ஏதாவதொன்று தவறாகி விட்டால், அவன் தவறவிட்டால் அவன் சிறையில் இருக்கும்படி ஆகும் எப்போதைக்குமாய். அவன் துணிச்சல் மிக்க சூதாடி. அவன் ஒன்றும் வியாபாரி அல்லன். அங்கே இருக்கிற அல்லது இல்லாத ஒன்றுக்காக எல்லாவற்றையுமே அவன் பணயம் வைக்கிறான். வியாபாரி என்றால் ஒரு கருத்து வைத்திருப்பான். 'வருங்காலத்தில் கிடைக்கக்கூடிய முழு ரொட்டிக்காக கையில் இருக்கும் பாதி ரொட்டியை இழந்துவிடக்கூடாது. கற்பனையில் உள்ளதற்கு யதார்த்தத்தைத் தொலைத்து விடக்கூடாது' என்று சொல்வான் அவன். இதுதான் வியாபாரியின் கருத்து, அவனுடைய சிந்தனை.

திருடன் மற்றொரு கருத்தை முழுவதுமாய் பின்பற்றுகிறான். அவன் சொல்கிறான், 'உங்களிடம் இல்லாத ஒன்றுக்காக உங்களிடம் இருக்கிற எல்லாவற்றையும் பணயம் வைக்கலாம்' என்று. தன்னுடைய கனவுக்காக யதார்த்தத்தை (real) அவன் பணயம் வைக்கிறான்.

பத்திரத் தன்மையற்ற ஒன்றுக்காக தன்னுடைய அத்தனை பாதுகாப்புகளையும் அவன் ஆபத்துக்குட்படுத்துகிறான். அதுதான் துணிச்சல் என்பது.

ஆக, ஒரு வியாபாரியாய் இருப்பதைவிட ஒரு திருடனாக, ஒரு சூதாடியாக இருங்கள். காரணம், அறிந்த ஒன்றைக் கைவிட நீங்கள் தயாராகிறபோதுதான் அறிந்திராத ஒன்றைக் கண்டடைய முடிகிறது. அறிந்த ஒன்றுமேலும் தொடராத நிலையில் அறிந்திராதது உங்கள் இருப்புணர்வில் பிரவேசிக்கிறது. எல்லாப் பாதுகாப்புகளையும் இழந்த நிலையில் மட்டுமே, நீங்கள் அறிந்திராத ஒன்று உங்களுக்குள் பிரவேசிக்க இடமளிக்கிறீர்கள்.

**இரண்டாவது கேள்வி:**

> **'ஒருவர் தனியாக வாழக்கையை அனுபவித்து மகிழமுடியாதா? நனையாமல் எப்படி நீருக்குள் முழுகுவது என்று எனக்குத் தெரிந்திருக்கவில்லை அல்லது காயப்படாமல் எப்படித் தீயினுள் புகுவது, அது எனக்கு சாத்தியமாகுமா என்று எனக்குத் தெரியவில்லை. ஒருவர் வாழ்க்கையைத் தனித்திருந்து அனுபவிக்க முடியாதா?**

கேள்வி கேட்டவர் வேண்டுமானால் அனுபவிக்க முடியாமல் போயிருக்கலாம். காரணம் அனுபவித்து மகிழக்கூடிய ஒருவர் அது பற்றி கேள்வி கேட்பதில்லை.

தனித்திருந்து வாழ்க்கையை அனுபவிப்பது உங்களுக்குச் சாத்தியமில்லை என்பது உங்கள் கேள்வியிலேயே வெளிப்படுகிறது. தனியே விடப்படுவது தனித்திருத்தல் ஆகாது.

அச்சத்தின் காரணமாகவே நீங்கள் மக்கள் தொடர்பு இல்லாமல் விலகியிருக்க விரும்புவது. நீரில் நனைந்துவிடுவோமோ என்கிற அச்சத்தின் காரணமாக நீங்கள் அமைவுற்று விடுகிறீர்கள். பலரும் அமைவுற்றிருக்கிறார்கள். மடலாயங்களுக்குச் செல்லுங்கள், பழைய ஆசிரமங்களைச் சென்று பாருங்கள். அச்சத்தின் காரணமாகவே பலரும் அமைவுற்று விட்டார்கள்.

உறவு என்பது ஒரு நெருப்பு, அது சுட்டெரிக்கும். அது யாருடனும் சேர்ந்து வாழமுடியாமல் செய்துவிடும். அது ஒரு

நிலையான போராட்டம். கோழைகள் தப்பித்து ஓடிவிட்டார்கள். அவர்கள் வளர்ச்சியடையாதவர்கள், அவர்களுடைய முயற்சி குழந்தைத்தனமானது. ஆம், அவர்கள் இன்னும் சவுகரியமான வாழ்க்கையை வாழமுடியும், அதுதான் உண்மை. அங்கே மற்றொன்று இல்லாதபோது எல்லாமே எளிதில் போய்விடுகிறது. நீங்கள் தனித்து வாழ்கிறீர்கள். யாரிடம் கோபப்படுவீர்கள்? யாரிடம் பொறாமைப் படுவீர்கள்? யாருடன் சண்டையிடுவீர்கள்? உங்கள் வாழ்க்கை அதன் சுவையை இழந்துவிடும். நீங்கள் ரசனையற்றவராகி விடுவீர்கள்.

வாழ்க்கை பெரிய சுமையாய் தெரிகிறபோது, அதற்கு ஈடுகொடுக்கும் திறமை தம்மிடம் இல்லை என்பதைக் கண்டு கொள்கிறபோது பலரும் வாழ்க்கையிடமிருந்து நழுவியோடி விடுகிறார்கள். நான் அந்த யோசனையைக் கூறமாட்டேன், நான் தப்பியோடுகிறவன் அல்ல. வாழ்க்கையினூடே போரிடுங்கள் என்றுதான் சொல்வேன். காரணம் அது ஒன்றுதான் கவனத்தோடும், விழிப்போடும் செயல்படக்கூடிய வழி. யாரும் உங்களைச் சமச்சீரற்றவராக்கிவிட முடியாத அளவு சமநிலையைப் பெறுங்கள். அடுத்தவருடைய இருப்பு உங்கள் அமைதியைக் குலைக்க முடியாத அளவு நீங்கள் சாந்தமாகிவிடுவீர்கள். அடுத்தவரால் உங்களை இழிவு படுத்தமுடியும். ஆனால் நீங்கள் சீற்றமடைய மாட்டீர்கள். சாதாரணமாக உங்களுக்குப் பைத்தியமே பிடித்துவிடக்கூடிய சூழ்நிலையை அடுத்தவர் உருவாக்கலாம். ஆனால் நீங்கள் பைத்தியமாகி விடமாட்டீர்கள். ஒரு சிறந்த உணர்வு நிலைக்கான படிக்கட்டாக அந்தக் சூழ்நிலையை நீங்கள் பயன்படுத்திக் கொள்வீர்கள்.

வாழ்க்கையை அதிக உணர்வுடையவராக்குகிற ஒரு செயல் நிலையாக, வாய்ப்பாகப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். அதன்மூலம் கூடுதல் தெளிவை, கூடுதல் முக்கியத்துவத்தைப் பெறவேண்டும், கூடுதலாய் வேரூன்ற வேண்டும். நீங்கள் தப்பியோடினால் அது ஒரு விதையானது மண்ணில் இருந்து தப்பியோடி, மண்ணேயில்லாத குகையில் மறைந்து கொள்வதாகவே இருக்கும். விதை பத்திரமாக இருக்கும். மண்ணில் என்றால் விதை மரித்தாக வேண்டும், மறைந்தாக வேண்டும். விதை மறைகிற போது

செடி முறைக்கிறது. பிறகு ஆரம்பமாகிறது ஆபத்துகள். விதையைப் பொறுத்தவரை ஆபத்தில்லை, எந்தவொரு விலங்கும் அதைத் தின்று விடாது, எந்தபொரு குழந்தையும் அதை உடைத்துவிடாது. உலகமே தனக்கு எதிராக இருந்தாலும், தற்போது அந்த அழகான பசிய முளை தலைகாட்டுகிறது. காற்று வரும் அதை வேரோடு பிடுங்கி யெறிய முயற்சி செய்யும். மேகங்கள் இருண்டு வரும், இடி இடிக்கும், அந்தச் சிறிய முளை ஒட்டுமொத்த உலகத்துக்கும் எதிராக ஒரு போராட்டத்தை நடத்தும். குழந்தைகள், விலங்குகள், தோட்டக்காரர்கள் என்று இலட்சோப லட்சம் பிரச்சினைகளை அது எதிர்கொள்ளும்படி இருக்கும். விதையாயிருந்த போது அதன் வாழ்க்கை சவுகரியமாய் இருந்தது, காற்றாலோ, விலங்குகளாலோ எந்தப் பிரச்சினையும் இருந்ததில்லை. அது தன்னை முழுமையாய் மூடி, பத்திரமாய் பாதுகாத்திருந்தது.

ஆக, நீங்கள் இமயமலைக் குகையொன்றில் ஒரு விதையைப் போல் பத்திரமாக இருந்து கொள்ளலாம். நீங்கள் முளைவிட்டிருக்க மாட்டீர்கள். காற்றுகள் உங்களுக்கு எதிராக இருக்கும். அவை ஒரு வாய்ப்பை உங்களுக்கு வழங்கும். நீங்கள் நிலையாக வேரூன்ற அது உதவியாயிருக்கும். 'உங்கள் கால்களை நிலத்தில் அழுந்தப் பதித்து, தகுதியான முறையில் போரிடுங்கள்' என்று அவை கூறும். அது உங்களைப் பலமுடையவராக்கும்.

இங்கே உள்ள ஒரு யூகலிப்டஸ் மரம், சிறு கன்றாக இருந்த போது, அது சாய்ந்துவிடாமல் இருக்க, முக்தா ஒரு மூங்கிலைப் பக்கத்தில் வைத்தார். தற்போது அது உயரமாய் வளர்ந்துவிட்டது. ஆனால் அது சுயமாய் நிற்பது என்பது முடியாத காரியம். மூங்கில் இன்னும் அங்கே இருக்கின்றன. மூங்கில்களை எடுத்துவிட்டால் அந்த மரம் சாய்ந்துவிடும் என்கிற நிலை. அந்த மரம் வளர்ந்திருக்கிறது, ஆனால், வலுவற்றதாய், குழந்தைத் தனத்துடன் இருக்கிறது.

சவால்களை வளர்ச்சிக்கான வாய்ப்புகள் என்றே சொல்ல வேண்டும், காதலைவிட பெரிய சவால் வாழ்க்கையில் இருப்பதற் கில்லை. நீங்கள் யார் மீதேனும் காதல் கொண்டு விட்டால், மிகப் பெரிய குழப்பத்துக்குள்ளாகி விடுவீர்கள். உங்கள் கவிஞர்கள் சொல்கிற மாதிரி வாழ்க்கை ஒன்றும் ரோஜாக்கூட்டம் அல்ல,

அவர்கள் எல்லாரும் முட்டாள்கள். அவர்கள் காதலைப் பற்றிய கனவில் இருந்திருக்கலாம். ஆனால் அவர்கள் ஒருபோதும் அதை அறிந்திருக்க மாட்டார்கள். அது ரோஜாக்களல்ல, நீங்கள் கற்பனை செய்ய முடிவதைவிட கூரிய முட்கள் கொண்டதாகவே அது இருக்கும். அங்கொன்றும் இங்கொன்றுமாய் ரோஜாக்கள் அரிதானவை. இலட்சக்கணக்கான முட்கள். ஆனால், இலட்சம் முட்களிடையே தோன்றுகிற ஒரு ரோஜா தனக்கேயுரிய அழகைக் கொண்டிருக்கும். வாழ்க்கையின் மிகப்பெரிய அபாயம் காதல். அதனால்தான் நான் அழுத்தமாய் சொல்கிறேன், உண்மையிலேயே நீங்கள் வளர்ச்சி காணவிரும்பினால் மிகப்பெரிய அபாயத்தை ஏற்று அதனுள் செல்லுங்கள் என்று.

மக்கள், அதைத் தவிர்ப்பதற்காகப் பல வழிகளைக் கண்டுபிடிக்க முயல்கிறார்கள். சிலர் உலகத்தைவிட்டே சென்றார்கள். உலகத்தைப் பற்றி அவ்வளவு பயம் ஏன் உங்களுக்கு? உலகத்தைப் பற்றிய அச்சம் உண்மையிலேயே காதல் பற்றிய அச்சந்தான், காரணம் அங்கே மற்றவர்களும் இருப்பதால் நீங்கள் காதலில் விழக்கூடிய சாத்தியம் இருக்கிறது. உங்களைச் சுற்றி மிகப்பல கவர்ச்சிகள், மிகப்பல நேர்த்தியான ஆன்மாக்கள், ஏதாவதோர் இடத்தில் நீங்கள் சிக்கிக் கொள்வீர்கள். ஆபத்து... தப்பியோடுங்கள். ஒரு சிலர் மடாலயங் களுக்குத் தப்பி ஓடுகிறார்கள், சிலர் வேறு வழிகளில் தப்பிச் செல்கிறார்கள். சிலர் திருமணம் என்ற போர்வையில் தப்பி விடுகிறார்கள. அது கூட ஒரு தப்பித்தல்தான். காதலைத் தவிர்ப்ப தற்கு மடாலயம் ஒரு தப்பித்தல், திருமணம் ஒரு தப்பித்தல்.

ஒரு காதல் விவகாரத்தின் விளைவு என்னவென்று யாரும் அறிதற்கில்லை. அது அத்தனை கடினமாயிருக்கிறது. அதுஒரு போதும் சவுகரியமாயிருக்கவில்லை, அது ஒரு போதும் வசதியா யிருக்கவில்லை. அது மகிழ்ச்சிக்கான தருணங்களைக் கொண்டு வரலாம். ஆனால், நரகத்தையும் அது கொண்டுவந்துவிடும். அது வலியோடு கூடிய வளர்ச்சி. ஆனால், எல்லா வளாச்சியிலும் வலி இருக்கவே செய்கிறது. வலியில்லாமல் ஒருவர் வளர முடியயாது. வலி ஒரு பகுதி, இன்றியமையாத பகுதி. நீங்கள் வலியைத் தவிர்த்தால் வளர்ச்சியையும் தவிர்க்கும்படி ஆகும்.

பலரும் ஏதாவதோர் இடத்தில் அமைவுற்றுவிடுகிறார்கள். ஒரு சிலர் பதவியை அடையும் ஆசையில் அரசியல் வாதியாகி விடுகிறார்கள். அவர்கள் காதலைப்பற்றிக் கவலைப்படுவதில்லை. தாங்கள் மிகச் சிறந்த காரியங்களை உலகிற்கு செய்ய வேண்டும் என்று அவர்கள் சொல்கிறார்கள். அவர்கள் அதிகாரத்தை ஒருதப்பித்தலாய் பயன்படுத்துகிறார்கள். ஒருசிலர் மடாலயங்கலுக்குள் புதைக்கப் பட்டிருக்கிறார்கள், ஒரு சிலர் திருமணம், குழந்தைகள் அது இது என்று தங்கள் குடும்பங்ளுக்குள் புதையுண்டு விட்டார்கள். ஆனால், காதலின் சவாலை ஏற்றுக் கொண்ட ஒருவனை நான் அரிதாகவே சந்திக்கிறேன். அதில் மிகப்பெரிய புயல் இருக்கிறது. ஆனால், அதை எதிர் கொண்டவர்கள் வளர்ச்சியடைகிறார்கள். அவன் தூய்மையும், பக்குவமும் கொண்டு ஒருநாள் அதில் இருந்து வெளிப்படுகிறான்.

ஆக நீங்கள் கேட்கிறீர்கள், ‘ஒருவர் தனியாக வாழ்க்கையை அனுபவிக்க முடியாதா’ என்று.

தனிமையில் நீங்கள் மகிழ்ச்சியாயிருக்க முடியும். ஆனால், அனுபவிக்க முடியாது. ஒருவழியில் நீங்கள் மகிழ்ச்சியாயிருக்க முடியும். காரணம் அங்கே அமைதிக் குலைவு இருக்காது, குழப்பம் இருக்காது, மோதல் இருக்காது. உங்கள் மகிழ்ச்சி அமைதிக்கு அதிகமாகவும், அனுபவத்துக்குக் குறைவாகவும் இருக்கும். அது தன்னுள் எவ்வித பரவசத்தையும் கொண்டிருப்பதில்லை. பெருமகிழ்ச்சி என்பது ரொம்பவும் பரவசமாயிருப்பது. பெருமகிழ்ச்சி என்பது நடனம் போன்றது. மகிழ்ச்சி அத்தனை ஆர்வம் இருப்பதில்லை, ஏனோதானோ சமாச்சாரம். நீங்கள் அதைத் தனியே செய்ய முடியும். நீங்கள் எப்போதுமே அதைக்குளியலறையில் செய்கிறீர்கள். காரணம் அங்கே தனியாக இருக்கிறீர்கள். ஆனால், மற்றவர்களுடன் சேர்ந்து ஆடுவதும், பாடுவதும் அதன் வயப்பட்டு விடுவதாகும். அது பெருமகிழ்ச்சியை அளிப்பதாகும். மகிழ்ச்சி பகிர்ந்து கொள்ளப் படுவதில்லை. பெருமகிழ்ச்சி மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளப்படுவது.

மக்கள் எப்போதுமே கருமித்தனமாய் மகிழ்ச்சியை (happiness) எதிர்பார்த்திருக்கிறார்கள், பெருமகிழ்ச்சி (joy)யை அல்ல. நீங்கள்

தனிமையில் இருக்கும் போது பெருமகிழ்ச்சியோடு இருக்கமுடியாது. ஒரு குறிப்பிட்ட சூழல் தேவைப்படும். ஒரு குறிப்பிட்ட சுழற்காற்று மக்கள், உணர்வு நிலை என்று தேவைப்படும்.

மகிழ்ச்சி என்பது ரொம்பவும் மகிழ்ச்சியான ஒரு செயல் அல்ல என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

பெருமகிழ்ச்சி என்பது உண்மையிலேயே உயரத்துக்குச் செல்வது. பெருமகிழ்ச்சி என்பது சிகரங்களைப் போல், உச்ச நிலையை அடைவது. மகிழ்ச்சி என்பதோ சமதளத்தில் இருப்பது. எங்காவது விழுந்து விடுவோமோ என்கிற அச்சம் இல்லாமல் ஒருவர் சவுகரியமாகச் செல்வது. நீங்கள் கண்ணை மூடிக்கொண்டு நடக்கலாம். பள்ளத்தாக்கு இல்லை, ஆபத்து இல்லை, பாதையை நீங்கள் அறிவீர்கள். அந்தப்பாதையில் நீங்கள் இப்படியும், அப்படியுமாய் செல்கிறீர்கள். முற்றிலும் தன்னுணர்வற்றவராய் நீங்கள் செல்ல முடியும்.

பெரு மகிழ்ச்சிக்கு விழிப்புணர்வு தேவை. நீங்கள் எப்போதாவது மலைகளின் பக்கம், ஒரு பக்கம் வானை அகலப்பிறந்த பள்ளத் தாக்குடன் கூடிய மலைகளின் பக்கம் சென்றிருக்கிறீர்களா? நீங்கள் எச்சரிக்கையுடன் செல்ல வேண்டியிருக்கும். மலையேற்றத்தின் அருமையான விசயங்களில் இதுவும் ஒன்று. உண்மையான மகிழ்ச்சி மலையில் இல்லை. மகிழ்ச்சி அபாயநிலைகளைக் கடந்து செல்வதில் இருக்கிறது. தொடர்ந்து மரணம் இருக்கிறது எல்லாப் பக்கத்திலும் எந்தக் கணத்திலும் உங்களை விழுங்குவதற்கு பள்ளத்தாக்கு காத்திருக்கிறது. காலடிப் பிடிப்பை இழந்தால், நீங்கள் ஒரேயடியாய் போய்ச்சேர வேண்டியதுதான். அந்த ஆபத்தின் காரணமாகவே ஒருவர் கத்திபோல் கூர்மையான விழிப்புணர்வுடன் இருப்பது. அந்த விழிப்புணர்வே மகிழ்ச்சியைத் தருவது.

நீங்கள் மக்களுடன் பழகுவதிலும் ஆபத்து இருக்கிறது. வாழ்க்கை கூர்மையடைகிறது. அந்நிலையில் நீங்கள் வலுவடை கிறீர்கள். உங்களுடைய ஆற்றல் துருப்பிடித்துவிடாது, அது பாய்ந் தோடும். குகைகளிலும், மடாலயங்களிலும் நீண்ட காலம் வாழ்ந்தவர் களைக் கூர்ந்து பாருங்கள். அவர்களுடைய முகத்தில் துரு (செயலற்றிருக்கும் சோம்பல்) படிந்திருப்பதைக் கண்டு கொள்வீர்கள்.

அவர்கள் சுறுசுறுப்பாகத் தோற்றமளிக்க மாட்டார்கள். முட்டாளைப்போல் தோன்றுமளவிற்கு மந்தமாக இருப்பார்கள். அதனால்தான் துறவிகள் இந்த உலகில் நேர்த்தியான எதையும் படைத்ததில்லை. அவர்களிடம் இருந்து எதுவும் வெளிப்படுவதில்லை. அவர்கள் உபயோக மற்றவர்கள். அவர்கள் விளைகிறநிலமல்ல. தாங்கள் வீரியமற்றவர்கள் என்பதை அவர்கள் நிரூபித்திருக்கிறார்கள்.

தப்பித்தல் உங்களைக் கோழையாக்குகிறது. ஆற்றலற்ற வராக்குகிறது. நீங்கள் எந்த அளவு தப்பியோடுகிறீர்களோ அந்த அளவு தப்பித்தலை விரும்புவீர்கள். தப்பித்தல் தற்கொலைக்கு ஒப்பானது.

அப்படியானால் நான் எதைக் குறிக்க முற்படுகிறேன்? ஒருபோதும் தனியே இருக்காதீர்கள் என்றா சொல்கிறேன்? இல்லை, எவ்வகையிலும் அவ்வாறு இல்லை. நான் சொல்கிறேன், மனிதத் தொடர்பு இல்லாமல் தனித்துவிடப்பட்டு விடாதீர்கள் என்று. தனிமை யில் இருப்பது என்பது உறவுகளில், மனிதத் தொடர்புகளில் இருந்து நீங்கள் கற்றுக் கொண்ட நேர்த்தியான விசயம். உறவுகளில் பல பரிமாணங்கள், பல தன்மைகள் ஒரு தாயுடன் இருப்பது, தந்தையுடன் இருப்பது, நண்பருடன் இருப்பது, உடன் பிறந்தவர்களுடன் இருப்பது, மனைவியுடன் இருப்பது. நேசத்துக்குரியவருடன் இருப்பது. பகைவருடன் இருப்பது என்று அவை பலவாகும். 'உடனிருத்தல்' உலகம். பலவித உறவுகளை, தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்வதன் மூலம் ஒருவர் தன்னை விரிவு படுத்திக் கொள்கிறார். ஒவ்வொரு தொடர்பும் உங்களுடைய மன வளத்துக்குத் தன்னுடைய பங்கை வழங்கும். நீங்கள் மனிதர்களிடையே அதிகம் பரவும் அளவுக்கு விரிவடைகிறீர்கள். நீங்கள் அதிக மதிப்பும், ஆற்றலும் மிக்க ஆன்மாவைப் பெறுகிறீர்கள். இல்லையேல் தரத்திலும், சக்தியிலும் தாழ்ந்து விடுவீர்கள்.

தங்களுடைய முதல் மற்றும் அடிப்படையான உறவைப் பெற்றிராத குழந்தைகளைப் பற்றிய ஆய்வை உளப்பகுப்பாய்வாளர்கள் தற்போது மேற்கொண்டிருக்கின்றனர். குழந்தைக்கும் தாய்க்கும் இடையிலான உறவைப் பற்றியது அது. அந்த உறவைப் பெற்றிராத குழந்தைகள் செயல்பட முடிவதில்லை. அந்தக் குழந்தைகள்

ஒருபோதும் இயல்பாக இருப்பதில்லை. எப்படியோ, விரிவடைவதற்கான முதல் உந்துதல் கிடைக்காமல் போய் விடுகிறது. குழந்தைக்கும் தாய்க்கும் இடையிலான உறவே உலகில் முதல் வருகைப்பதிவு ஆகும்.

உங்கள் தாயின் அன்புடன் இந்த உலகில் நீங்கள் பிரவேசிக் கிறீர்கள் காரணம் உங்கள் தாயுடன் நீங்கள் தொடர்புடையவராய் இருக்கிறீர்கள், தொடர்புற்றிருப்பது எப்படி என்பதை நீங்கள் தெரிந்து கொள்கிறீர்கள். தாய்க்கும் குழந்தைக்கும் இடையில் பாய்ந்தோடுகிற அன்பே ஆற்றல்களின் முதல் பரிமாற்றம். அது மிகப்பெரிய அளவில் பால் சார்ந்தது காரணம் அத்தனை ஆற்றல்களும் பால் சார்ந்தவையே. குழந்தை புன்னகைக்கிறது, தாய் புன்னகைக்கிறாள் ஆற்றல் பெரிய அளவில் பரிமாறிக் கொள்ளப்படுகிறது. தாய் குழந்தையை அரவணைக்கிறாள், தழுவுகிறாள், முத்தமிடுகிறாள் குழந்தையும் அதற்கு எதிர்ச் செயல் புரிய தயாராகிறது. சற்று முன் பின்னாகவேனும் அந்தக் குழந்தை தனது தாயைத் தழுவி, முத்தமிடுகிற நாள் வரவே செய்யும். தற்போது, ஏற்படுவதற்கு மட்டுமின்றி வழங்குவதற்குமான மனப்பக்குவம் அவனுக்கு வந்துவிடுகிறது. அதுதான் அவனுடைய கற்றுத்தேர்ந்த முதல் அறிவு. பிறகு அவன் தன்னுடைய உடன் பிறந்தவர்களுடன், தந்தையுடன் மாமாக்களுடன் பழகுகிறான், அந்த வட்டம் மேலும் மேலும் பெரிதாகிறது. பள்ளிக் கூடத்தில், கல்லூரியில், பல்கலைக் கழகத்தில் என்று தொடர்கிறது.

நீங்கள் எத்தனைக்கு தொடர்புடையவராய் இருக்கிறீர்களோ அத்தனைக்கு விரிவடைகிறீர்கள். தொடர்புகளின் மூலம் உங்கள் இருப்புணர்வு கண்டறியப்படுகிறது. ஒவ்வொரு தொடர்பும் ஒரு நிலைக் கண்ணாடி. உங்களில் ஒரு சிறுபகுதியை அது உங்களுக்கு வெளிக்காட்டுகிறது. உங்களைப் பற்றிய ஏதோ ஒன்றை அது பிரதிபலிக்கிறது. நீங்கள் பெரிய அளவில் வளர்ச்சியுற்று, எல்லையற்ற பெருவெளியை அடைகிறபோது கடவுளுடன் ஒரு நிலையான உறவு ஏற்படுகிறது.

அந்த உறவு நிலைத்திருப்பது.

தங்களைச் சமயவாதிகளாய் சொல்லிக் கொள்கிறவர்களைப் போல் நீங்கள் உறவில் இருந்து தப்பியோடினால்... அவர்கள்

செய்வது ரொம்பவும் அபத்தமானது. அவர்களால் கடவுளுடன் தொடர்பு கொள்ள முடியாது, காரணம் எப்படித் தொடர்பு கொள்வது என்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை. காதலுடன் ஏற்படுத்திக் கொள்ளும் உறவு மிக உயர்ந்தது. மிக அபாயகரமானதுங்கூட.

அன்றொரு நாள் ஒரு கிறிஸ்தவரின் நினைவுக்குறிப்பை நான் படித்துக் கொண்டிருந்தேன். சோவியத் ரஷ்யாவில் பல ஆண்டுகள் சிறைவாசம் அனுபவித்த ஒரு அருமையான மனிதர் அவர். தொடர்பு இன்றி மூன்று ஆண்டுகள் ஒரு நிலவறையில் இருந்திருக்கிறார் அவர். அந்த மூன்று ஆண்டுகளில் அவர் சூரியக்கதிரை, ஒரு பூவை, ஒரு வண்ணத்துப் பூச்சியை, நிலவைப்பார்த்ததில்லை. காவலாளியைத் தவிர வேறு எந்த மனித முகத்தையும் அவர் கண்டதில்லை. மூன்று ஆண்டுகளிலும் அவருக்குப் பைத்தியம் பிடித்த மாதிரி இருந்தது, படிப்பதற்கு ஒரு புத்தகம் கிடையாது, செய்வதற்கு எந்தக் காரியமும் இருந்திருக்கவில்லை. இரவா, பகலா என்பது கூட தெரியாமல் இருந்தார் அவர், வெளியுலகில் சூரியன் உதித்ததா இல்லையா என்பதும் தெரியாது. அவர் முற்றிலும் தொடர்பற்றவராய் இருந்தார். எதைச் செய்வது? செய்வதற்கு என்ன இருக்கிறது கடவுளிடம் உரையாடுவதைத் தவிர? மெள்ள மெள்ள அவர் சமயம் பற்றி விரிவுரையாற்றத் தொடங்கினார். கடவுள் தாம் அவருடைய உரையைக் கேட்கும் கூட்டம்.

அவர் எழுந்துநின்று சொற்பொழிவாற்றுவார். அந்தச் சொற்பொழிவுகள் உண்மையிலேயே அருமையானவை. தற்போது, சிறையை விட்டு வெளியே வந்ததும், அந்தச் சொற்பொழிவுகளைத் தொகுத்து, கடவுளிடம் சமர்ப்பித்ததாய் அவர் கருதிக் கொண்டார். அவர் மறை நூல்களில் இருந்து பல மேற்கோள்களைக் காட்டி கடவுளிடம் பேசுகிறார்! நீர் என்ன கூறினீர் என்பதைக் கவனியும். மனிதன் தனித்திருக்கக் கூடாது என்று பைபிளில் நீர் கூறியுள்ளீர். என் விசயத்தில் என்னவாயிற்று? உம்முடைய புனித நூலையும், இயேசுவின் மூலம் நீர் எமக்களித்த செய்திகளையும் மறந்து போனீரா? நீர் எங்கே இருக்கிறீர்? உம்முடைய விதிகளை நீர் மாற்றிக் கொண்டீரா? ஒரு மனிதன் தொடர்பற்றவனாய் இருக்கக் கூடாது தானே? பிறகு எதற்காக என்னை மட்டும் தனிப்படுத்துகிறது?' அவர் மேலும் பேசுகிறார், 'நினைவிருக்கட்டும், இறுதித் தீர்ப்பு

நாளில் குற்றவாளியாய் நிற்கப்போவது நான் மட்டுமா, நீருந்தான் குற்றவாளியாய் நிற்க வேண்டியிருக்கும். நீர் என்மீது குற்றம் சாட்டுவ தோடு போய்விடாது, நானும், உம்முடைய கடமையில் இருந்து நீர்தவறியதைச் சுட்டிக் காட்டுவேன். நினைவிருக்கட்டும்! ஒன்றை மறந்து விடவேண்டாம், அது ஒன்றும் ஒருவழிப்பாதையல்ல.'

உண்மையிலேயே அந்தச் சொற்பொழிவுகள் நேர்த்தியானவை, கடவுளுடனான உரையாடல்கள் அவை. இத்தகைய உரைகளை நிகழ்த்தியதால்தான் அவர் சித்த சுவாதீனத்துடன் இருக்க முடிந்தது. அவர் முற்றிலும் தெளிந்த அறிவோடு வெளியில் வந்தார். அவர் உள்ளே செல்வதற்கு முன் இருந்ததை விட அதிகத்தெளிவுடன் வெளியே வந்தார். அத்தகைய அற்புதமான உறவு அது, கடவுள் அப்படியே அமைதியாய் இருந்தார். அது எரிச்சலூட்டுவதாயிருக்கும் நீங்கள் பாட்டுக்குப் பேசிக் கொண்டே போகிறீர்கள், அவரானால் எதுவும் பேசாமல் இருக்கிறார்.

கொஞ்சம் சிந்தியுங்கள் – நீங்கள் பேசியபடி இருக்கிறீர்கள், உங்கள் மனைவி வாயைத்திறக்கவேயில்லை. அவர் பாட்டுக்கு சமையல் வேலையைக் கவனிக்கிறார். உங்களுக்குப் பைத்தியம் பிடித்தது போலாகிவிடும். நீங்கள் கூச்சல் போடுகிறீர்கள். அவர் தன் பாட்டுக்கு அமைதியாய் வேலைகளைச் செய்து கொண்டிருக்கிறார். உங்களுக்கு எப்படியிருக்கும்? கடவுளுடலான தொடர்பிலும் அதுதான் நிகழ்கிறது. வாழ்க்கையில் ஒருவர் கற்றுணர வேண்டிய விசயம் இது. அதன் பிறகே நீங்கள் கடவுளுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள முடியும். கடவுளுடன் தொடர்பு என்பது பிரம்மத் துடனான தொடர்பு ஆகும். பிரம்மம் அமைதியானது. மிகப்பெரிய திறமை வேண்டும். தொடர்பு கொள்வதற்கு. நீங்கள் கடவுளுடன் தொடர்பு கொண்டபிறகு அவருடன் இரண்டறக் கலந்து கொள்கிறீர்கள் அந்நிலையில் தோன்றுகிறது ஏகாந்தம் (aloneness).

ஏகாந்தமே இறுதிச் சாதனை.

பதஞ்சலி அதனை 'கைவல்யம்' என்கிறார். முற்றான தனிமை. அது ஆதியில் இருக்கவில்லை, அந்தத்தில் இருக்கிறது. அதனால் தான் நாம் கடைசி அத்தியாத்தைப் படித்துக் கொண்டிருக்கிறோம். கைவல்யபாதம் என்கிற அந்த அத்தியாயம் தனித்திருத்தல் பற்றியது.

அந்தத் தனிமையை, தான்மட்டும் இருக்கிற அந்த இணையற்ற தன்மையை அடைவதற்கே யோகிகள் பலபிறவிகள் தொடர்ந்து முயன்று வந்திருக்கிறார்கள். நீங்கள் நினைப்பது போல் அத்தனை மலிவான காரியம் அல்ல அது: உங்கள் வீட்டைவிட்டு வெளியேறி, ஒரு குகைக்குள் நுழைந்து, தனிமைப்படுத்திக் கொள்வது என்று அதனை எண்ணி விடாதீர்கள். அப்படியென்றால் பதஞ்சலியின் யோக சூத்ரங்களுக்கே அவசியம் இருந்திருக்காது. ஒரு சின்ன சூத்திரமே போதுமானதாய் இருந்திருக்கும். இரயில் நிலையத்துக்குச் சென்று, ஒரு டிக்கட் வாங்கி, இமயமலைக்குச் சென்றால் – தீர்ந்தது. யார் உங்களைத் தடுக்கப் போகிறார்கள்? எப்படித்தடுக்க முடியும்?

ஆனால் அந்தச் செயல் முறையில் வாழ்க்கை மிக மோசமாகி விடும். மதிப்புடையதாயிருக்காது. ஏகாந்த நிலையில் (aloneness) உங்களுடைய உறவுகள் மலர்கின்றன. உங்கள் உறவுகளின் மூலம் விறைகிற நறுமணத்தை நீங்கள் ஒரு சேரப் பெறுகிறீர்கள். நல்லதும் கெட்டதும், அழகானதும் அருவருக்கத் தக்கதும் என்று நீங்கள் நறுமணத்தைச் சேர்த்தபடி இருக்கிறீர்கள். அந்நிலையில் உங்களுக் குள் ஒரு சவாலை தோன்றுகிறது. அந்த ஏகாந்தமே குறிக்கோள். நீங்கள் தற்போது எதைத் தனிமை என்று எண்ணுகிறீர்களோ அது தனிமை அல்ல. அது மற்றவர்கள் தொடர்பின்றி தனியே இருப்பது, பக்கத்தில் யாருமில்லாமல் இருப்பது. தனித்திருப்பது (solitary) தனிமை (solidude) ஆகிவிடாது. தனியே இருப்பது அருவருக்கத்தக்க ஒரு சோகம். தனிமையில் இருப்பது மிகவும் நேர்த்தியான விசயம். அது ஒரு சாதனை என்றே சொல்லப்படவேண்டும்.

**'... காரணம், நீரில் எப்படி நனையாமல் முழுகுவது, தீயில் எப்படி காயப்படாமல் கடந்து செல்வது, அது எப்படி எனக்குச் சாத்தியப்படும் என்பதைதான் உணர்ந்திருக்கவில்லை?**

அப்படியானால் நீங்கள் எப்படி அறிந்து கொள்ளப் போகிறீர்கள்? மேலும் மேலும் செயல் முறைகளைத் துரிதப்படுத்துங்கள். தப்பியோடு வதன் மூலம் நீங்கள் ஒரு போதும் அறிந்து கொள்ள முடியாது. நீங்கள் அறிந்து கொள்ள இத்தகைய சந்தர்ப்ப சூழ்நிலைகள் தேவை. நீங்கள் இந்த உலகில் அறிந்துகொள்ள முடியவில்லை என்றால் உலகிற்கு வெளியே மட்டும் எப்படி அறிந்து கொள்ளப் போகிறீர்கள்?

**இந்த உலகை உங்களுக்கு வழங்கியிருப்பது எதற்காக? நீங்கள் இந்த உலகில் இருப்பது எதற்காக? விழிப்புணர்வைக் கொள்வதற்குத் தான்.**

உங்கள் பாதையில் பலர் குறுக்கிடுகிறபோது, மிகப்பல ஆற்றல்களும் உங்களைத் தொட்டு கொண்டு, வெட்டிக் கொண்டு செல்லும். அது தீர்வு காணப்படவேண்டிய ஒரு புதிர், அதில் இருந்து விழிப்புணர்வு வெளிப்படும். ஆம், ஒரு நாள் நீங்கள் நீரின் மீது நடப்பீர்கள், நீர் உங்கள் பாதத்தைத் தொட்டுக் கொண்டிருக்காது. ஆனால், அது நிகழ்வதற்கு முன் வாழ்க்கையின் பல்வேறு ஆறுகளையும், கடல்களையும் நீங்கள் கடக்க வேண்டியிருக்கும். ஆம், ஒரு நாள் நெருப்பிலும் நீங்கள் கடக்க வேண்டியிருக்கும். ஆம், ஒரு நாள் நெருப்பிலும் நீங்கள் நடப்பீர்கள், அந்த நெருப்பு உங்களைச் சுட்டு விடாது. ஆனால் பல தீக்களில் இருந்தும், பல தீக்காயங்களில் இருந்தும் நீங்கள் கற்றுணர வேண்டியிருக்கும். அனுபவத்தில் இருந்தே ஒருவர் தடையற்றவராவது. உண்மை விடுதலையளிக்கிறது. அனுபவம் உண்மையை வழங்குகிறது. அனுபவம் இல்லாத வாழ்க்கையை முடிவு செய்யாதீர்கள். எப்போதுமே அதிக அனுபவத்துக்காக முடிவு செய்யுங்கள். எத்தனை கடினமாயினும், இடர்பாடுடையதாயினும் அனுபவம் உள்ள வாழ்க்கையைத் தெரிவு செய்யுங்கள். ஒருநாள் நீங்கள் மேம்பட்ட நிலையை அடைவீர்கள், ஆனால் ஒருவர் அறிதலின் மூலமே அந்த நிலையை அடைவது.

## மூன்றாவது கேள்வி:

**'என்னுடைய கேள்விக்குப் பதிலாக அன்றொரு நாள் நீங்கள் சொன்னீர்கள், வாழ்க்கையை முழுமையாய் அனுபவித்து மகிழவேண்டும் என்று. ஆனால், அப்போது வாழ்க்கை பால் சார்ந்த உறவைப் பெறுவதும், பணத்தைப் பெருக்குவதும், உலகியல் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வதும்தானா? உலகாயதப் பொருள் காலப் பேரகில் ஒரு பிண்ணைப்பை உண்டுபண்ணி விடும் என்பது நிச்சயம். கண்டறிய முற்படுகிறவரின் முயற்சி அதனால் நீண்டுகொண்டே போய்விடாதா?'**

ஆமாம். வாழ்க்கை என்பது உங்கள் கற்பனையையும், ஆசையையும் கொண்டது. அதில் பாலுறவும், பணமும் உட்பட்டிருக்கிறது. மனித மனம் விரும்பக் கூடிய எல்லாமும் அதில் இருக்கிறது. ஆனால், ஒருவகை மயக்கத்தில் நீங்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். ஒரு கேள்வியைத் தெளிவாகக் கூறுவதிலும் உங்களுடைய தீர்மானங்கள் தெளிவாயிருக்கின்றன.

'என்னுடைய கேள்விக்குப் பதிலாக, அன்றொரு நாள் நீங்கள் வாழ்க்கையை முழுமையாய் அனுபவியுங்கள் என்று சொன்னீர்கள்' என்பதாய் நீங்கள் கூறுகிறீர்கள். வாழ்க்கை என்பது பால் சார்ந்த உறவும், பணம் பண்ணுவதும், உலகாயத ஆசைகளைப் பூர்த்தி செய்வதுந்தானா?' உங்கள் பழிப்புரை தெளிவாயிருக்கிறது. அந்தக் கேள்வியைக் கேட்பதற்கு முன்பே அதற்கான பதிலும் உங்களுக்குத் தெரிந்திருக்கிறது என்றே படுகிறது. உங்களுடைய கற்றுணர்தல் தெளிவாயிருக்கிறது. பாலுறவைத் துண்டித்தல், அன்பைத் துண்டித்தல், பணத்துடனும் மக்களுடனும் உள்ள தொடர்பைத் துண்டித்துக் கொள்ளால். பிறகென்ன வாழ்க்கையில் மிச்சமிருக்கப் போகிறது? அந்த வாழ்க்கை எப்படிப் பட்டதாயிருக்கும்?

இது புரிந்து கொள்ளப்பட வேண்டியது; நீங்கள் எல்லாவற்றையும் சிதறடித்துக் கொண்டேபோனால் 'வாழ்க்கை' என்கிற சொல்லுக்கே அர்த்தமில்லாமல் போய்விடும். எதையுமே பழித்து ஒதுக்கி விடமுடியும். உண்டு மகிழ்வது வாழ்க்கை யார் வேண்டுமானாலும் அதுபற்றிக் குறைகூற முடியும். 'என்ன முட்டாள்தனம்! உணவை மென்று, விழுங்கித் தீர்ப்பதுதான் வாழ்க்கையா? பிறகு சுவாசித்தல் – மூச்சை உள்ளிழுத்து வெளிவிடுவது – உள்மூச்சு, வெளிமூச்சு என்று சுவாசித்தலே ஒரு சலிப்பூட்டுகிற காரியமல்லவா. இதெல்லாம் எதற்காக? காலையில் படுக்கை விட்டு எழுவது, அந்தியில் படுத்துறங்குவது அலுவலகம் செல்வது, கடைக்குச் செல்வது – ஆயிரத்தியோரு துன்பங்கள். இதுதான் வாழ்க்கையா? அடுத்து ஒரு பெண்ணிடம் கொள்ளும் காதல்? இரண்டு மாசுபடிந்த உடல்கள். ஒரு பெண்ணை முத்தமிடுவதில் – உமிழ்நீரையும் இலட்சக்கணக்கான நுண்கிருமிகளையும் பரிமாறிக் கொள்வதன்றி வேறேயென்ன? அது சுகாதாரமானதுமல்ல. உண்மையில் அது மத உணர்ச்சிகளுக்குச் சற்றும் மதிப்புக் கொடுக்காத ஒன்றாகும்.

ஆக, வாழ்க்கையில் என்னதான் இருக்கிறது? முழுமையின் முன்னும் பின்னுமான சூழ்நிலைகளை எடுத்து விட்டால் அது அர்த்த மற்றுப்போகும். அபத்தமாகிவிடும். சமய நம்பிக்கை உடையவர்கள் காலகாலமாக, வாழ்க்கையை அப்படித்தான் தண்டித்துக் கொண்டி ருக்கிறார்கள். அவர்கள் சொல்கிறார்கள்; என்னய்யாசிரீரம் இது? ஒரு தோற்பைக்குள் இலட்சக்கணக்கான அசுத்தங்கள். அந்தப்பை யைக் கொஞ்சம் திறந்துதான் பார்ப்போமே' என்று. அவை எல்லாமும் மிகச் சரியாக இருப்பதை நீங்கள் கண்டுகொள்வீர்கள். ஆனால், மற்றொரு கேள்வியை நீங்கள் கேட்டதுண்டா? இந்த மக்கள் தாங்கள் அதுவரை கண்டிராத ஒன்றை எதிர்பார்த்திருக்க வேண்டும். தோற் பைக்குள் தங்கத்தையும், வைரத்தையும் நீங்கள் எதிர்பார்க்கிறீர்களா? மற்றொரு கேள்வியைக் கேளுங்கள். நீங்கள் எதிர்பார்ப்பது என்ன? உங்களை சரீரத்தை விட அழகான, சிறந்தை ஒன்றை நீங்கள் கண்டிருக்க முடியாது. ஆனால், நீங்களோ அதன் அசுத்தமான பகுதியை மட்டுமே பார்க்கிறீர்கள். அதன் அருமையான வேலை முறையை நீங்கள் காண்பதில்லை.

ஒட்டுமொத்த உடம்பும் எழுபது எண்பது அல்லது நூறு ஆண்டு களுக்குக் கூட அதே சம ஆற்றலுடன், அத்தகைய அமைதியுடன் தொடர்ந்து செயல்படுகிறது. உடம்புக்குள் ஆற்றலின் துள்ளலை, ஆற்றலின் துடிப்பைக் கூர்ந்து கவனியுங்கள். தவறானதை மட்டுமே காண்பவர்கள் இருக்கிறார்கள், சரியானவற்றை விட்டு விட்டு, தவறானதே மட்டுமே அவர்களால் காணமுடிகிறது. நீங்கள் ஒரே ரோஜாவை அவர்களிடம் காண்பித்தால், அவர்கள் செடியில் இருந்து அதைப்பறித்து விட்டு, 'இதில் என்ன இருக்கு. சில மணி நேரத்தில் வாடி உதிரப்போகிறது. ஆம், அது உதிர்ந்துபோகும், அதன் அழகும் தொலைந்து போகும்' என்று. ஒருவானவில்லின் அழகை அவர்களிடம் காண்பியுங்கள், அவர்கள் சொல்வார்கள், 'அது மாயை, நீங்கள் அங்கே சென்று பாருங்கள், எதுவும் இருக்காது. வெறும் தோற்றம்' என்று. இவர்கள் பழித்துரைப்பவர்கள், வாழ்க்கையில் நஞ் சூட்டுகிறவர்கள். எல்லாவற்றிலும் அவர்கள் நஞ்சேற்றி விடுவார்கள். அவர்கள் சொன்னதை நீங்கள் நிறையவே கேட்டாயிற்று. தற்போது, வாழ்க்கையை அனுபவிப்பது உங்களுக்குச் சாத்தியமாயில்லை என்ற நீங்கள் எண்ணுகிறீர்கள். ஆனால் இந்தத் திறமையின்மையை

உங்களிடம் தோற்றுவித்தது உங்களுடைய மதகுருமார்கள் தாம் என்பதை நீங்கள் ஒருபோதும் எண்ணிப்பார்க்க வில்லை. உங்கள் இருப்புணர்வில் அவர்கள் நச்சுத்தன்மையை உண்டுபண்ணி விட்டார்கள்.

நீங்கள் ஒரு பெண்ணை முத்தமிடுகிற போது கூட அவர்கள் உங்களுக்குள் இருந்து கொண்டு சொல்வார்கள், 'நீ செய்கிறதென்ன? அறிவற்ற காரியமாயிருக்கிறதே. பார்க்கப்போனால் அதில் எதுவுமே இல்லை? என்று. நீங்கள் சாப்பிடுகிறபோது கூட அவர்கள், 'நீ என்ன செய்கிறாய்? அதில் எதுவுமே இல்லை' என்று சொல்லிக் கொண்டி ருப்பார்கள். அந்த பழிப்புரையாளர்கள் (condemno'rs) ஒரு சிறந்த காரியத்தை அல்லவா செய்திருக்கிறார்கள்!

அடிப்படையான பிரச்சினைகளில் இதுவும் ஒன்று. பாராட்டுவது கடினம். பழித்துரைப்பது எளிது. பாராட்டுவது கடினம், ஏனென்றால் நீங்கள் நிச்சயத் தன்மை உடைய ஒன்றை நிரூபித்துக்காட்ட வேண்டி யிருக்கும். அதன் பிறகே நீங்கள் பாராட்டமுடியும். ஜெர்மானியக் கவிஞர் ஹெய்ன்ரிச் ஹெய்ன் தன்னுடைய நினைவுக் குறிப்பேட்டில் இப்படி எழுதுகிறார். 'அந்தப் புகழ்ப் பெற்ற தத்துவ மேதையுடன் (ஹெகல்) நான்நின்று கொண்டிருந்தேன். அது ஒரு அழகான குளிர்ச்சி பொருந்திய இரவு. அமைதியாக இருந்தது. வானம் முழுக்க நட்சத்திரங்களால் நிரம்பியிருந்தது." உண்மையில் கவிஞர் அதைப் பாராட்டத் தொடங்கிவிட்டார். அவர் சொல்கிறார் 'ஆ, எத்தனை அழகு! எத்தனை பேரழகு!' என்று. அவர் மேலும் சொல்கிறார், ஒருவன் ஆகாயத்தை அண்ணாந்து பாராமல், தரையை மட்டுமே பார்த்துக் கொண்டிருந்தால் அவன் கடவுள் நம்பிக்கை இல்லாதவனாகி விடுவான். ஆனால் ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிற ஒருவன் எப்படி நாத்திகனாக முடியும்? அது சாத்தியமில்லை' என்று. மெள்ள மெள்ள அவர் அசவுகர்ய உணர்வு கொண்டு விடுகிறார், காரணம் ஹெகல் முற்றிலும் அமைதியாய் இருந்ததுதான். அவர் ஒரு வார்த்தைகூட பேசவில்லை. அவர் ஹெகலிடம், 'ஐயா, தாங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்று கேட்டார். ஹெகல் சொன்னார், "என்னால் எந்தவொரு அழகையும், வேறெதையும் காணமுடியவில்லை. இந்த நட்சத்திரங்கள் பற்றித்தானே சொல்கிறீர்கள் – அவை

வானத்தின் தொழுநோய் (Leprosy) இல்லாமல் வேறேயென்ன? தொழுநோய்...!

ஒன்றைப் பற்றி பழித்துரைப்பது – கண்டனம் செய்வது ரொம்ப எளிது: அதனால்தான் கண்டனம் செய்பவர்கள் ரொம்பத் தெளிவாக இருப்பது. மக்கள் வாழ்க்கையைப் பற்றி நிச்சயத் தன்மையுடன் பேசுவதில்லை. வாழ்க்கை பற்றி உறுதியாய்ச் சொல்வது கடினம். கண்டனம் செய்பவர்கள் பழித்துரைத்தும், மறுத்துப் பேசியும் ஒரு குறிப்பிட்ட மனதை உங்களுக்குள் உருவாக்கி விடுகிறார்கள். அத்துடன் தொடர்ந்து உங்கள் வாழ்க்கையில் நஞ்சேற்றிக் கொண்டே இருப்பார்கள். தற்போது என்னிடம் நீங்கள் கேட்கிறீர்கள், 'வாழ்க்கையில் என்ன இருக்கிறது, உடலுறவு கொள்வது? பணம் பண்ணுவது? உலகாயத ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்வது அவ்வளவுதானா?'' உலகப்பற்றுகளில் என்ன தவறு? உண்மையில் எல்லா ஆசைகளும் உலகாயதமானவைதாம். உலகம் சாராத ஆசைகள் ஏதாவது உண்டா? கடவுளை எதன் பொருட்டு விரும்புகிறீர்கள்? ஒட்டுமொத்த உலகமும் உங்கள் ஆசைகள் மறைந்துகிடப்பதை நீங்கள் காண வில்லையா? சொர்க்கத்தை எதன் பொருட்டு விரும்புகிறீர்கள்? இந்த உலகம் முழுதும் அதில் ஒளிந்து கிடப்பதை நீங்கள் கண்டறிவீர்கள், அறிந்தவர்கள் சொல்வார்கள் ஆசைதான் உலகம் என்று. அவர்கள் 'உலகாயாத ஆசைகள்' என்று சொல்வதில்லை. புத்தர் உலகாயத ஆசைகள் என்று ஒருபோதும் சொன்னதில்லை. அவர் சொன்னார், 'உலகமே ஆசைகளால் ஆனது' என்று. ஆம், ஆசைதான் உலகம். சமாதிக்கான விருப்பமும், ஞானத்துக்கான விருப்பமும் கூட உலகம் சார்ந்தவைதாம். ஆசைப்படுவதெல்லாம் உலகத்தில் இருப்பதற்குத்தான், ஆசைப்படுவது உலகத்துக்கு வெளியே இருப்பதற்கல்ல.

எனவே, உலகம் சார்ந்த ஆசைகளைப் பழித்துரைக்கவேண்டாம்; எல்லா ஆசைகளுமே உலகாயதமானவைதாம், அதைப்புரிந்து கொள்ள முயலுங்கள். அஞ்சத்தக்க ஒன்று இருக்கறிது. உலகாயத ஆசைகளை நீங்கள் பழித்தால், புதிய ஆசைகளைத் தோற்றுவித்துக் கொள்வீர்கள். அது இவ்வுலக வாழ்விற்கானதல்ல, மறு உலகத்துக் கானது என்பீர்கள். 'நான் சாதாரண ஆளில்லை, பணத்தைத் துரத்திச் செல்கிறவனல்லன், பார்க்கப்போனால் இதில் என்ன இருக்கு. நீங்கள் சாகிறபோது பணத்தையும் உங்களோடு கொண்டு

செல்வதில்லை. நான் சாசுவதமான (eternal) செல்வத்தை கண்டடைய முயல்கிறவன். இவ்வுலகிற்குரிய செல்வம் குறுகிய காலத்தில் மறைவது. மக்கள் இதில் திருப்தி அடையலாம். ஆனால், நீங்களோ நிலையான ஒரு செல்வத்தைத் தேடிக்கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் தந்திரமான, புத்திசாலி.

மக்கள் சாதாரண மனித ஜீவன்களிடம் காதல் கொள்கிறார்கள். அவர்கள் உலகாயத மானவர்கள். நீங்கள் எதற்கு ஆசைப்படுகிறீர்கள்? குர்–ஆனில் பாருங்கள், பைபிளில் பாருங்கள், இந்துக்களின் புனித நூல்களில் பாருங்கள்; நீங்கள் சொர்க்கத்தில் எதை விரும்புகிறீர்கள்? தங்கத்தாலான அழகிய இளம் பெண்களையா? அவர்களுக்கு எப்போதுமே வயது பதினாறுதான், பதினைந்தும் அல்ல பதினேழும் அல்ல வியக்கத்தக்க ஒன்று அது. புனித நூல்கள் எழுதப்பட்ட காலத்திலும் அவர்களுடைய வயது பதினாறாகவே இருந்தது. தற்போது அந்தப்புனித நூல்கள் ரொம்பவும் பழசாகி விட்டன, ஆனாலும் அந்தப்பெண்கள் தொடர்ந்து பதினாறு வயதிலேயே இருந்து கொண்டிருக்கிறார்கள். நீங்கள் எதற்கு ஆசைப் படுகிறீர்கள்?

சில நாடுகளில் ஓரினச் சேர்க்கை மேலோங்கியிருந்தது, எனவே சொர்க்கத்தில் அதற்கான வசதியும் செய்யப்பட்டது. அங்கே அழகான பெண்களுக்குப் பஞ்சமில்லை, அழகான ஆண்களும் தாராளமாய் கிடைத்தனர். இவ்வுலகில் மதுவுண்பது குற்றமாக கருதப் பட்டாலும், முகம்மதிய சொர்க்கத்தில் திராட்சைரச ஊற்றுகள் இருந்தன. ஆம், ஊற்றுகள்தாம் நீங்கள் மதுபானம் விற்கும் கடை களைத் தேடிச் செல்ல வேண்டியதில்லை. நீங்கள் அதில் நீந்தலாம், மூழ்கித் திளைக்கலாம். இவர்களைத் தானா நீங்கள் உலகியலுக்கு ஒவ்வாதவர் என்கிறீர்கள்? உண்மையில் இவர்கள் உலகாயதமானவர் (worldly)கள்தாம், இந்த உலகத்தால் ஏமாற்றத்துக் குள்ளாகி, தற்போது விநோதமான கற்பனையில் வாழ்பவர்கள். தங்கள் கற்பனையில் காணும் உலகை அவர்கள் சொர்க்கம் என்கிறார்கள்; விண்ணுலகம் என்கிறார்கள்.

எல்லா ஆசைகளும் உலகாயதமானவைதாம், ஆசைப்படுவதில் தவறில்லை. ஆசை என்றால் என்னவென்று அறிந்து கொள்ள

கடவுள் ஒரு வாய்ப்பை உங்களுக்கு வழங்கியிருக்கிறார். ஆசையைப் புரிந்து கொள்வதில், அந்தப்புரிதலில் ஆசை மறைந்து போகிறது. காரணம், ஆசை என்பது வருங்காலத்தில் எங்கோ இருக்கிறது, நீங்கள் இந்தக் கணத்தில் இங்கே இருக்கிறீர்கள். நீங்கள் இக்கணத்தில் இருக்க விரும்புகிறீர்கள், வாழ்தல் இந்தக் கணத்தில் நிகழ்ந்து கொண்டிருப்பது. எல்லாமும் இந்தக் கணத்தில் மையம் கொண்டிருக்கின்றன. உங்கள் ஆசையின் அலைக்கழிப்பால் நீங்கள் எங்கோ சென்று விடுகிறீர்கள், அதனால் தொடர்ந்து தவற விடுகிறீர்கள்.

உங்களுக்கு நிறைவளிக்கக்கூடிய ஒன்று இங்கே வர்ஷித்துக் கொண்டிருந்தாலும், நீங்கள் எப்போதுமே பசியோடுதான் காணப் படுகிறீர்கள், காரணம் நீங்கள் வேறு எங்கோ இருக்கிறீர்கள்.

இக்கணமே நிஜம், இங்குள்ளதே வாழ்க்கை. ஆசை உங்களை வேறொரு திக்கில் கொண்டு சென்றுவிடுகிறது.

ஆசையைப் புரிந்து கொள்ள முயலுங்கள், அது உங்களை வஞ்சித்து, வெகு தொலைவிற்குக் கொண்டு சென்று விடுகிறது. அதனால் நீங்கள் தவறவிட்டபடி இருக்கிறீர்கள். நீங்கள் எப்போது நினைவுக்கு வரப்பெற்றாலும் திரும்பிவிடுங்கள், உங்களுடைய இயற்கையான இடத்துக்குத் திரும்பி விடுங்கள்.

நீங்கள் ஆசையிடம் போரிடவேண்டிய அவசியம் இல்லை, காரணம், நீங்கள் ஆசயுடன் போரிட்டால் இன்னொரு ஆசையைத் தோற்றுவித்துக் கொண்டவராவீர்கள். புரிதல் (understanding) என்பது ஆசையுடன் போரிடுவது அல்ல. புரிதலால் ஏற்படும் மனத் தெளிவில் ஆசை மறைகிறது, நீங்கள் ஒரு விளக்கை ஏற்றிவைத்ததும் இருட்டு இல்லாதொழிகிற மாதிரிதான் அதுவும்.

எனவே, இவற்றை உலகாயத ஆசைகள் என்று அழைக்காதீர்கள், பழித்துரைப்பவராகி விடாதீர்கள், இதனைப் புரிந்துகொள்ளுங்கள்.

"அப்படியாயின், ஒருவர் மற்றவர்களைச் சார்ந்திருக்கும்படி ஆகும், உலகயாதப் பொருள்கள் நாளடைவில் தளைப்படுத்துவதாகி விடும். ஆனால், மற்றவர்களைச் சார்ந்திருப்பதில் என்ன தவறு? தற்பெருமை மற்றவர்களைச் சார்ந்திருக்க விரும்புவதில்லை.

தற்பெருமை சுதந்திரமாக இருக்கவே விரும்பும். ஆனால் நீங்களோ சார்ந்திருப்பவராய் இருக்கிறீர்கள். நீங்கள் பிரபஞ்ச இருப்பில் இருந்து விலகிவிடவில்லை. அதில் ஒரு பகுதியாகவே இருக்கிறீர்கள். எல்லாமும் ஒன்றோடொன்று இணைந்தே உள்ளன. ஒரு சேர்ந்திருக்கும் தன்மையில் நாம் இணைந்திருக்கிறோம். ஒருமித்திருப்பது பிரபஞ்ச இருப்பு, அப்படியிருக்க நீங்கள் சுதந்திரமாக இருக்க முடியுமா என்ன? நீங்கள் சுவாசிக்க மாட்டீர்களா, அந்நிலையில் நீங்கள் சாப்பிடமாட்டீர்களா? நீங்கள் உண்பதாயின் மரத்தையும், செடிகளையும் சார்ந்திருக்கும்படி ஆகும். அவை உங்களுக்கான உணவை வழங்குகின்றன. நீங்கள் தண்ணீர் குடிப்பீர்கள்தானே. அப்போது குடிநீருக்காக நதிகளை நீங்கள் சார்ந்திருக்க வேண்டியிருக்கும், இல்லையா? உங்களுக்கு சூரிய ஒளி தேவைப்படாதா?

அது இல்லையேல் நீங்கள் இறக்க நேரிடும். நீங்கள் எப்படி சுதந்திரமானவராயிருக்க முடியும்?

சுதந்திரமான (independent) என்பது ஒரு தவறான வார்த்தை சார்ந்திருத்தல் (dependent) என்பது மாதிரி. நாம் உண்மையில் ஒருவரையொருவர் சார்ந்திருக்கிறோம். அரசனே ஆனாலும் தன்னுடைய அடிமையைச் சார்ந்தே அவன் வாழ வேண்டியிருக்கும், அடிமை தன்னுடைய அரசனை எப்படிச் சார்ந்திருக்க நேரிடுமோ அபபடி. இது ஒருவரை ஒருவர் சார்ந்திருக்கும் நிலை.

கலீபா அரு–அன்–ரஷீத் அவர்களின் வாழ்வில் இது நடந்தது. அவர் தம்முடைய அரசவை விகடகவி பலூல் என்பவருடன் அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தார். அவர்; பலூல், உலகிலேயே நான்தான் சுதந்திரமானவன். எல்லையற்ற அதிகாரங்கள் கொண்ட அரசன் நான். என்னால் விரும்பியதை எல்லாம் செய்யமுடியும். உலகம் முழுதும் என் ஆணைக்கு அடங்கி நடக்கிறது. என்னுடைய கட்டளைக்குப் பணியாத ஒன்றை நீர் கண்டதுண்டா?' என்று பலூலிடம் கூறினார்.

பலூல் அமைதியாக இருந்தார், பிறகு சொன்னார், 'ஐயா, இந்தப் பாழாப் போன ஈ என்னை ரொம்ப நேரமாகத் தொல்லை பண்ணிக் கொண்டிருக்கிறது. என்னைத் தொந்தரவு பண்ண

வேண்டாம் என்று அந்த ஈக்கு நீங்கள் உத்தரவிட வேண்டும்' என்று.

அரூன் அன்ரஷித் சொன்னார், 'நீர் ஒரு முட்டாள். நான் எப்படி ஈக்கு உத்தரவிட முடியும். அது என்னுடைய பேச்சைக் கேட்காது?

பலூல் சொன்னார், 'அரசே தாங்கள் கூறியதை மறந்து விட்டீர்களா? – உங்கள் முன்பாக இந்த ஈ என்னுடைய அறையில் உட்கார்ந்திருக்கிறது. நான் அதைத் தவிர்க்க முயன்றாலும் அது சுற்றிச் சுற்றி வந்து என் மூக்கின் மீது உட்காருகிறது. அது உங்கள் மூக்கின் மீதும் உட்கார்ந்திருந்ததை நான் பார்த்தேன்.

இந்தச் சின்ன ஈக்குக் கூட உங்களால் உத்தரவிட முடியவில்லை. ஆனால், உலகமே உங்கள் கட்டளைக்குப் பணிகிறது. நீங்கள் மறுபடியும் இது பற்றிச் சிந்திக்க வேண்டும்.'

உலகம் ஒன்றை ஒன்று சார்ந்தே இருக்கிறது.

பலூல் அரூண் அன் ரஷீத் அவர்களைவிட மதி நுட்பம் உடையவர். முட்டாள்கள் மத்தியில் உங்களை ஒரு அறிவாளியாக நீங்கள் அறிவித்துக் கொள்ளக் கூடாது. இல்லையேல், அவர்கள் உங்களைக் கொன்றுவிடுவார்கள். இந்த பலூல் சாக்ரட்டீஸைவிடவும், இயேசுவை விடவும் மதி நுட்பம் உடையவராகத் தெரிகிறார். அவர்கள் ஒரு தவற்றைச் செய்துவிட்டிருக்கிறார்கள். தங்களை அறிவாளிகளாக அவர்கள் அறிவித்துக் கொண்டார்கள். அவர்களாகவே தொல்லையை வரவழைத்துக் கொண்டார்கள். முட்டாள்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து, 'உங்களை எங்களால் சகித்துக்கொள்ள முடியாது' என்றார்கள். ஒரு பலூலை நீங்கள் சிலுவையில் அறைய முடியாது. அவர்கள் சாக்ரட்டீஸைவிட, இயேசுவைவிட அறிவாளியாக இருக்கலாம். ஆனாலும் தன்னை ஒரு முட்டாள் என்றே அவர் கூறிக்கொள்கிறார். அவருடைய மனதால் அறியும் திறனை (insight)க் கவனியுங்கள்.

அரூ–அன்–அஷீத் ஒரு சமயம் கவிதையொன்றை எழுதினார். தற்போது எல்லாருமே அதைப் பாராட்டுகின்றனர். அது பொருளற்ற சொற்களாகவே இருந்தது. அவர், அது பற்றிக் கேட்டபோது பலூல் அவையோர் முன்பாக இப்படிச் சொன்னார், 'இது பொருளற்றது.

என்னைப் போன்ற முட்டாள்கள்கூட இப்படி எழுதமாட்டார்கள்' என்று. அரூ–அன்–ரஷீத்திற்கு உண்மையிலேயே கோபம் வந்து விட்டது. பலூல் சிறையில் அடைக்கப்பட்டால், அங்கே அவர் பட்டினி கிடக்கும்படி ஆயிற்று. ஏழு நாட்களுக்குப் பிறகு, மறுபடியும் அவர் அரசவைக்கு அழைத்து வரப்பட்டார். அரூன் அன் ரஷீத் மற்றொரு கவிதை எழுதினார், முதலாவதை விட அது மேம்பட்டதாயிருந்தது. 'ஆகா' என்று அவையோர் புகழ்ந்தனர். மறுபடியும் பலூலிடம் கேட்கப்பட்டது. அவர் கவிதையைக் கூர்ந்து கவனித்தார். உடனே எழுந்து, வெளியில் செல்லப் புறப்பட்டார். அரசர் கேட்டார், 'நீர் எங்கே செல்கிறீர்?' என்று. அவர் சொன்னார், 'சிறைச்சாலைக்கு. மறுபடியும் நான் போகிறேன். என்னை அனுப்புகிற சிரமத்தை நான் தங்களுக்கு வைக்கவில்லை' என்று. உண்மையிலேயே அவர் அறிவாளிதான்.

இதுதான் வஞ்சப் புகழ்ச்சி (* irony) என்பது.

அந்த புத்திசாலி பலமுறை தன்னை முட்டாளாகக் காட்டிக் கொண்டிருக்கிறார். எவருடைய உதவியையும் சார்ந்திராமல் (independent) இருப்பது என்பது முட்டாள்தனம். அது சாத்தியமாகாது, சாத்தியமற்றது. அந்நிலையில் நீங்கள் மேலும் மேலும் ஏமாற்றத்துக்குள்ளாவீர்கள். காரணம், நீங்கள் மறுபடியும் மற்றவர் கையை எதிர்பார்க்கும் நிலையில் இருப்பதைக் கண்டு கொள்வீர்கள். திரும்பத் திரும்ப அப்படித்தான் ஆகிவிடுகிறது. நீங்கள் எங்கு சென்றாலும் அடுத்தவரை நம்பியே இருக்கும்படியாகும். காரணம், இப்பிரபஞ்ச வலையில் இருந்து நீங்கள் வெளியே செல்ல முடியாது. ஒருவகை கண்ணிகளைப் போன்றவர்கள் நாம் – ஆற்றல்கள் நம் வழியே கடந்து செல்கின்றன. ஒரு முனையின் வழியே பல ஆற்றல் கள் கடந்து செல்லும்போது அந்த முனை ஒரு தனித்தன்மை கொண்டு விடுகிறது அவ்வளவுதான். காகிதத்தில் ஒரு கோடு போடுங்கள். அதன் குறுக்காக மற்றொரு கோட்டினைப் போடுங்கள், எங்கே இரண்டு கோடுகளும் சந்திக்கிறதோ அங்கே தனிப்பண்பு (individuality) தோன்றுகிறது. வாழ்வும் மரணமும் சந்திக்கிற இடத்தில் சந்திப்பு முனையாக நீங்கள் இருக்கிறீர்கள்.

* (வஞ்சப் புகழ்ச்சி (irony) – நேர் எதிரான பொருளைக் கொடுக்கும் சொற்றொடர்.)

அந்நிலையில், நீங்கள் சார்ந்திருப்பதுமில்லை. சாராதிருப்பது மில்லை. இரண்டுமே நகைப்பிற்குரியவை தாம். அதன்பிறகு நீங்கள் ஒருவரையொருவர் சார்ந்திருக்கிறீர்கள். அதை ஏற்றுக்கொண்டு விடுகிறீர்கள்.

"ஒருவரை ஒருவர் சார்ந்திருக்கும் நிலையில், உலகாயதப் பொருள்கள் தளைப்படுத்தி விடும் என்பது நிச்சயம்." காலப்போக்கில் அவை உங்களைத் தளைப்படுத்தி விடும் என்று யார் சொன்னது? ஒன்று, உங்களுக்குத் தெரிந்திருக்கும் அல்லது தெரிந்திருக்காது. தெரிந்திருக்கும் பட்சத்தில் என்னைக் கேட்பதில் அர்த்தமேயில்லை. நீங்கள் அடிமையாய் தளைப்பட மாட்டீர்கள். உங்களுக்குத் தெரிந்தி ருக்கவில்லை என்றால் – மற்றவர்களிடமிருந்து கேட்டறிந்தாலும் அது உங்களுக்கு உதவாது. நீங்கள் கலக்கத்துக்குள்ளாவீர்கள்.

நீங்கள் எப்போதுமே அரைவாசி உணர்வோடுதான் இருப்பீர்கள், அது உங்களுடைய புரிதல் ஆகாது, உங்களுடைய புரிதல் மட்டுமே உங்களை விடுவிக்க முடியும்.

சின்னதாய் சில கதைகள் சொல்கிறேன் உங்களுக்கு:

ஒரு கணவனும் மனைவியும் தங்களுக்குள் இப்படி உடன்படிக்கை செய்து கொண்டனர்– 'தங்களுள் யார் முதலில் இறந்தாலும், இறந்தவர் திரும்பிவந்து, அந்த அனுபவம் எப்படியிருந்தது என்பதை அடுத்தவருக்குச் சொல்லிவிட வேண்டும்' என்று. 'இருந்தாலும் ஒரு விசயம், நீ முதலில் இறந்தால், என்னைக் காண நீ பகலில் வருவதாக சத்தியம் செய்துகொடு' என்று கணவன் சொன்னான். அவன் அச்சத்தோடும், அரைமனதோடும் இருந்தான்.

இந்த உலகத்தில் நீங்கள் எங்கு சென்றாலும், தளைப்படுவீர்கள் என்று மற்றவர்கள் சொல்வார்கள். நீங்கள் அதை நம்புவீர்களாயின் எங்குமே பிணைப்புக்குள்ளாகத்தான் செய்வீர்கள். காரணம், அதை நீங்கள் புரிந்து கொள்ளவில்லை. புரிந்து கொள்ளும் திறன் உங்களை விடுவிக்கிறது. தளைப்படுதல் (bondage) என்பது காலப்போக்கில் நிகழ்வதல்ல, அது, உடனடியாய் நிகழ்ந்துவிடுகிறது.

நீங்கள் ஆசைப்படுகிற கணத்தில், அதே கணத்தில் தளைப்பட நேரிடுகிறது. அது ஆசைப்பற்றியது, ஆசை உங்களைச் சுற்றி

வளைக்கிறது. நீங்கள் முன்பே சிறைப்படுத்தப்பட்டிருக்கிறீர்கள். மனதால் உணரும் திறன் உங்களிடம் இருந்தால், ஒவ்வொரு ஆசையும் ஒரு சிறைவாசத்தைக் கொண்டு வருவதை நீங்கள் உடனடியாய் புரிந்து கொள்வீர்கள், நாளடைவில் அல்ல. நாளடைவில்... நீண்டகாலம் என்கிற கருத்து மற்றவர்கள் சொல்வதால் ஏற்பட்டது. இது உங்களுடைய அனுபவமாகாது. உங்கள் அனுபவத்தைப் போல் வேறெதுவும் அத்தனை தகுதியுடையதாயிருக்காது என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

ஒரு நீதி மன்றத்தில் இது நடந்தது. அந்த கப்பல் பயணியிடம் நீதிபதி சொன்னார், 'நீர் பணத்தைத் திருடியதோடு விலைமிக்க நகைகளையும் திருடியதாக எனக்குத் தெரிய வருகிறது' என்று. அந்தப் பயணியும் உற்சாகத்துடன், "ஆமாம், யுவர் ஹானர். உங்களுக்குத் தெரியுமா? குழந்தைப் பருவத்திலேயே என்னுடைய தாய் பணம் மட்டுமே மகிழ்ச்சி தராது' என்று எனக்குச் சொல்லி யிருக்கிறாள்' என்றார்.

அடுத்தவரின் உபதேசங்கள் உதவுவதில்லை. உங்கள் வசதிக்கேற்ப அவற்றின் பொருளை நீங்கள் மாற்றிக்கொண்ட விடுவீர்கள். அது வேண்டுமென்றே நடப்பதில்லை, உணர்வற்ற நிலை யிலேயே நடந்துவிடுகிறது. நீங்கள் தம்ம பதத்தைப் படிக்கிறீர்கள், நீங்கள் படிப்பது புத்தரின் வார்த்தைகளைபல்ல. உங்களுடைய சொந்த விளக்கங்களையே நீங்கள் படிக்கிறீர்கள். பதஞ்சலியின் யோக சூத்திரங்களைப் படிக்கிறீர்களேயன்றி, பதஞ்சலியை அல்ல. பதஞ்சலியின் மூலம் உங்களைப் புரிந்துகொள்கிறீர்கள். ஆக, நீங்கள் அறியாமை உடையவராயின், உங்கள் அறியாமைக்கு உதவக்கூடிய ஒன்றை நீங்கள் கண்டுகொள்கிறீர்கள். நீங்கள் பேராசைக்காரரா யிருந்தால் உங்கள் பேராசைக்கு உதவக்கூடிய ஒன்றை பதஞ்சலியின் விடுதலை (கைவல்யம்)க்கும், நிர்வாணத்துக்கும் ஆசைப்படுவீர்கள்' நீங்கள் தற்பெருமைக் காரராக இருந்தால், உங்கள் தற்பெருமைக்கு அனுகூலமான ஒன்றைக் கண்டுபிடித்துக் கொள்வீர்கள். நீங்கள் தடையற்ற இருப்புணர்வுடையவராய் செயல்படத் தொடங்குவீர்கள். உங்களால் எப்படிச் சார்ந்திருக்க முடியும். நீங்கள் ரொம்பப் பெரிய ஆளாயிற்றே. நீங்கள் எப்படி மற்றொருவரைச் சார்ந்திருப்பீர்கள் – நீங்கள் எவரையும் சாராமல் அல்லவா இருக்க வேண்டும். நீங்கள்

எதைப்படித்தாலும், எதைக் கேட்டாலும் உங்கள் வாழ்க்கையைப் புரிந்து கொள்ளாமல் உங்களை நீங்கள் புரிந்து கொள்ளமுடியாது.

'அத்துடன் தேடுகிறவரின் தேடலை அது வெகு நீண்டதாக்கி விடாதா? - இதுதான் பேராசை. ஏன் அச்சப்படுவது? ஏன் விளைவைப்பற்றி மிகவும் கவலைப்படுவது? நாளையைப் பற்றிய சிந்தனைவேண்டாம் என்று நான் திரும்பத்திரும்ப, தொடர்ந்து சொல்லிவருகிறேன். நீங்களோ நாளையைப்பற்றி மட்டும் சிந்தித்துக் கொண்டிருக்கவில்லை, வரவிருக்கும் பிறவிகளைப் பற்றியும் அல்லவா சிந்தித்துக் கொண்டிருக்கிறீர்கள்.

'தேடல் வெகு நீண்டதாகி விடாதா?' என்று கேட்பீர்கள். ஏன் அதைப் பற்றி அஞ்சுவது? முடிவற்ற தன்மை (Infinity) என்பது கிடைக்கக் கூடியதாய் உள்ளது. காலப்பற்றாக் குறை என்பதே இல்லை. நீங்கள் மிகவும் நிதானமாகவே இயங்கலாம். அவசரம் இல்லை. அவசரத்துக்குக் காரணம் பேராசை. ஆக, மனிதர்கள் பேராசை கொண்டுவிடுகிற போதெல்லாம் அவர்கள் அவசரக் காரர்களாகி விடுகிறார்கள். அதிக வேகத்துக்கான அத்தனை வழிகளையும் அவர்கள் தொடர்ந்து கண்டு பிடிக்கிறார்கள். வாழ்க்கை இதோ தீர்ந்து விடப்போகிறது எண்ணம் தொடர்ந்து அவர்களை விரைவாய் செயல்பட வைக்கிறது. இந்தப் பேராசைக் காரர்கள் சொல்கிறார்கள். 'நேரம் பணமாகும்' என்று. நேரம் பணமா? பணம் வரையறைக்குட் பட்டது, காலமோ எந்த வரையறையும் இல்லாதது. அது எப்போதுமே இங்கு இருக்கிறது, இருக்கும், நீங்களும் தொடர்ந்து இருக்கிறீர்கள், இருப்பீர்கள்.

எனவே, பேராசையை விடுங்கள், விளைவைப்பற்றிக் கவலைப் படாதீர்கள். உங்கள் பொறுமையின்மை காரணமாக சிலசமயம் அப்படி ஆகிவிடுகிறது. நீங்கள் பலவற்றைத் தவறவிடுகிறீர்கள். நீங்கள் பேராசையுடன்,. பேராசை நிறைந்த கண்களுடன் நான் சொல் வதைக் கேட்பீர்களாயின் அப்போது என் வார்த்தைகளைக் கவன முடன் கேட்கமாட்டீர்கள். நீங்கள் தொடர்ந்து உள்ளாகப் பேசிக் கொண்டிருப்பீர்கள். 'ஆம், இது விரும்பத்தக்கது. நான் இதனை முயன்று பார்க்கிறேன். என்னால் இதைச் செய்ய முடியும்' என்று நீங்கள் என்னையும், நான் என்ன சொல்கிறேன் என்பதையும் தவற

விடுகிறீர்கள். நான் என்ன சொல்கிறேன் என்பதைக் கேட்பதில் குறிக்கோள் மறைந்திருக்கிறது.

இங்கே வந்து கொண்டிருந்த மருத்துவர் ஒருவர், இடமாற்றலாகிப் போய்விட்டார். அவர் தொடர்ந்து குறிப்பெடுப்பார். நான் அவரிடம் 'நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்பதுண்டு. அவர் சொல்வார், 'பிற்பாடு வீட்டில் இருக்கும் போது, எவ்வித இடர்ப்பாடுமின்றி அதைப் படிப்பேன். அதன்பிறகு, தேவைப்படுகிற போதெல்லாம் திரும்பவும் படிப்பேன்' என்று. ஆனால், நான் அவரிடம் சொன்னேன், 'நீங்கள் என்னைத் தொடர்ந்து தவறவிட்டபடி இருக்கிறீர்கள். நீங்கள் ஒன்றைக் கேட்கிறீர்கள் எழுதுகிறீர்கள், அந்நேரத்தில் நான் சொல்வதைத் தவறவிட்டு விடுவீர்கள். நீங்கள் தொகுத்ததை எல்லாம் துணுக்குகள், அவற்றை உங்களால் ஒன்றாக இணைக்க முடியாது. அந்த இடைவெளிகளை உங்களுடைய பேராசை, புரிதல்கள், தவறான ஊகங்கள் இவற்றால் நிரப்புவீர்கள், பிற்பாடு ஒட்டுமொத்த செய்கையும் பாழாகிவிடும்' என்று.

குறிக்கோள் இங்கே உள்ளது.

நீங்கள் அப்படியே அமைதியாகவும், பொறுமையாகவும், எச்சரிச்சையாகவும் இருந்தால் போதும். வாழ்க்கையை முழுமையாய் வாழவேண்டும். குறிக்கோள் அந்த வாழ்க்கைக்குள் மறைந்துகிடக்கிறது. உங்கள் வாழ்க்கையில் கடவுள் வருகிறார் இலட்சோப லட்சம் வழிகளில். ஒரு பெண் உங்களைப் பார்த்துப் புன்னகைக்கிற போது, அந்தப் பெண்ணின் வடிவில் கடவுளே புன்னகைக்கிறார் என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஒரு பூ இதழ் விரிக்கிறபோது, அந்தப் பூவின் வடிவில் கடவுள் தம்முடைய இதயத்தை விரியத் திறக்கிறார். ஒரு பறவை பாடத் தொடங்குகிறபோது, கடவுள் உங்களுக்காக ஒரு பாடலைப் பாடவருகிறார் அதைக் கவனமுடன் கேளுங்கள். ஒட்டு மொத்த வாழ்க்கையும் கடவுட் தன்மை கொண்டது, புனிதமானது. நீங்கள் எப்போதுமே புனிதமான அடிப்படையைக் கொண்டிருக்கிறீர்கள், எதைச் செய்தாலும் கடவுளுக்காகவே அதைச் செய்கிறீர்கள். நான் அதைத்தான் கருத்தில் கொள்கிறேன்: வாழ்க்கையை வாழ்ந்து பாருங்கள், வாழ்க்கையை அனுபவியுங்கள், காரணம் அது கடவுளா யிருக்கிறது. அவர் உங்களிடம் வருகிறார், ஆனால் நீங்கள் தாம்

அவரை அனுபவத்தில் கொள்ளவில்லை. அவர் உங்களிடம் வருகிறார் என்றாலும் நீங்கள் அவரை வரவேற்கவில்லை. அவர் உங்களிடம் வருகிறார். நீங்கள் துயரத்துடன், தனிமையில், ஆர்வமற்றவராய் தெளிவில்லாமல் இருப்பதை அவர் காண்கிறார்.

ஆடுங்கள், அவர் எண்ணற்ற வழிகளில், ஒவ்வொரு கணத்திலும் வருகிறார். எல்லாப் பக்கங்களிலும் இருந்து இலட்சோப லட்சம் வழிகளில் வருகிறார். 'வாழ்க்கையை முழுமையாக வாழுங்கள்' என்று நான் சொல்கிறபோது, அந்த வாழ்க்கையைக் கடவுளாகக் கொண்டு வாழுங்கள்' என்றே நான் கருத்தில் கொள்கிறேன். எல்லாமே அதில் உட்பட்டதாகிவிடும். நான் வாழ்க்கை என்கிறபோது எல்லாமே அதில் உள்ளடங்கிவிடுகிறது. பாலுறவு உட்பட்டிருக்கிறது. காதல் உள்ளிட்டிருக்கிறது, கோபம் உட்பட எல்லாமும் அதில் அடங்கும். கோழையாகி விடாதீர்கள். துணிவோடிருங்கள்; வாழ்க்கையை அதன் முழுமையில், அதன் தீவிரத்தன்மையுடன் ஏற்றிடுங்கள்.

## கடைசிக் கேள்வி:

*'ஒருவர் உங்களுடைய சீடராகாமல் உங்களுக்கு நெருக்கமாகி விட முடியுமா?'*

'உங்களுடன் நெருக்கமாக இல்லாத ஒருவர் எப்படி உங்களுக்கு நெருக்கமாக இருக்க முடியும்?' என்று கேட்பது போன்றதுதான் அது.

சீடர் என்றால் என்ன? – சீடன் என்பது ஒரு மனோபாவம், நெருங்கிய தொடர்புக்கான தயார்நிலை. சீடன் ஒரு வரவேற்கும் பண்பு (receptinity), ஏற்கத் தயாராயிருத்தல். சீடத்துவம் ஒரு சாடைக்குறிப்பு (gesture) நீங்கள் தருவதாயிருந்தால் நான் அதை நிராகரிக்க மாட்டேன். ஆனால், நீங்கள் வார்த்தைகளால் குழப்பத்துக்குள்ளாகி விடுகிறீர்கள். நேசத்திலும், நெருக்கத்திலும் மனதால் பார்க்கும் திறனை நீங்கள் இழந்து விடுகிறீர்கள். நீங்கள் சீடராக இல்லாவிடில் உங்கள் தரப்பில் நெருக்கம் இருக்காது. என்னுடைய தரப்பில் அவர்கள் என்னுடைய சீடர்களாக இருந்தாலும்,

இல்லாவிட்டாலும் நான் எல்லாரிடமும் நெருக்கமாகவே இருக்கிறேன். நிபந்தனையற்ற தொடர்பு என்னுடையது.

ஆனால், உங்களைப் பொறுத்தவரை சீடராக இல்லாவிடில், நீங்கள் விளைவுகளுக்கு மனதை ஆட்படுத்த மாட்டீர்கள், அந்நிலையில் என்னுடைய நெருக்கம் மட்டும் எந்தப் பலனையும் தந்துவிடாது. அது உங்களுடன் தொடர்பு படுத்திக் கொண்டதாகாது. நீங்கள் வெளியாகவே நின்று விடுவீர்கள். எப்படியோ உங்களிடம் ஒரு தற்காப்பு மனோபாவம் வந்து விட்டிருக்கும். நீங்கள் விரும்பிய தைத் தேர்வு செய்து கொள்வீர்கள், நீங்கள் விரும்பாததை ஒதுக்கி விடுவிர்கள் என்பது உண்மை. 'பகவானே, நான் உங்களை முழுமை யாய் ஏற்கிறேன். உங்கள் விசயத்தில் நான் தெரிவு செய்வதை மேற்கொள்ளவில்லை' என்று சொல்பவரே சீடர். 'தற்போது என்னுடைய மனதை நான் விட்டுவிடுகிறேன். நீங்களே என்னுடைய மனம் ஆகிறீர்கள். நீங்கள் சொல்வதை நான் கேட்கிறேன். ஏதேனும் முரண்பாடு ஏற்பட்டால் நான் உங்களை உடன் கொண்டிருப்பேனேயன்றி என்னுடைய மனதைச் சார்ந்திருக்க மாட்டேன். அவ்வளவுதான். ஒரு முடிவு எடுகக வேண்டியிருந்தால் அந்நிலையில் என்னடைய மனதைவிட நீங்கள் தாம் நெருக்கமாயிருப்பீர்கள்.

சீடரல்லாத ஒருவர் எல்லையில் நின்று கொண்டு, 'நான் விரும்புவது எதுவாயினும், எனக்கு நம்பிக்கையளிப்பது எதுவாயினும் நான் தெரிவு செய்து கொள்வேன். நான் விரும்பாத ஒன்றை, எனக்குச் சிறிதும் நம்பிக்கையளிக்காத ஒன்றை நான் தெரிவு செய்வதில்லை' என்ற கூறுகிறார்.

நீங்கள் விரும்புவது எதுவாயினும் அது உங்கள் மனதில் மேலும் மேலும் உறுதிப்பட்டு விடுகிறது. உங்களுக்கு எதிலாவது விருப்பமில்லை என்றால் அது எவ்வித மாற்றத்துக்கும் உங்கள் மனதில் இடமளிப்பதில்லை. நீங்கள் அதிக அளவில் அறிந்து கொள்ளக் கூடியவராவீர்கள். என்னிடமிருந்து பலவித விஷயங்களைத் தெரிந்து கொள்வீர்கள். ஆனால் என்னைக் கற்றுணரமாட்டீர்கள்.

உங்களை ஒரு சீடனாக்குவதில் எனக்கு எந்தப் பிரச்சினையும் இல்லை, அது உங்களைப் பொறுத்தது. அதிகம் கிடைக்கக்கூடியதாய்

இருக்கும்போது, நிங்கள் குறைவானதைப் பெறமுடிவு செய்கிறீர்கள்.

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு.

ஒரு மருத்துவர் நகரத்தின் வெவ்வேறு பகுதியைச் சேர்ந்த இருவரைத் தனது நோயாளிகளாய் பெற்றிருந்தார். அவர்களை உறங்க வைப்பதற்காக சில தூக்க மாத்திரைகளை அவர்களுக்குக் கொடுத்திருந்தார் அவர். ஒருவருக்குப் பச்சை நிறமாத்திரைகள், மற்றொருவருக்கு சிவப்பு மாத்திரைகள். ஒரு நாள் அவர்கள் இருவரும் தங்கள் உறக்கமின்மை பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர். பேச்சின் முடிவில் ஒருவர் கோபாவேசமாகி மருத்துவரிடம் விரைந்தார். 'நான் உறங்கச் சென்றதும், எனக்கு வரும் கனவில் நான் லிவர்பூருப் கப்பல் ஒன்றில் சரக்குகளை ஏற்று இறக்கும் பணியாளாய் இருக்கிறேன். ஒரே ஒழுங்கு, எண்ணெய் பிசுபிசுப்பு, அதேசமயம் தன்னுடைய தூக்கமாத்திரையை விழுங்கிய மிஸ்டர். பிரவுன் தான் பெர்முடா கடற்கரையில், அரைகுறை ஆடையணிந்த அழகான பெண்களுடன் படுத்துக்கிடப்பதாகக் கனவு காண்கிறார். அவர்கள் எல்லாரும் அவரைத் தழுவி, முத்தமிட அவருடைய இரவு சொகுசாகக் கழிகிறது. எனக்கு மட்டும் ஏன் இப்படி?' என்று மருத்துவரிடம் குறைப்பட்டார்.

மருத்துவர் சொன்னார் 'கொஞ்சம் அறிவுக்குப் பொருத்தமாய் பேசுங்கள். நீங்கள் அரசு நலக்கழக நோயாளி. அவர், தனிப்பட்ட நோயாளி' என்று.

நான் அந்த மட்டில் தான் உங்களுக்குக் கூற முடியும். அறிவுக்கு ஏற்புடையவராயிருங்கள்!

சூத்திரம்–6 **'தத்ரத்யான ஜமனாசயம்'**

'இயல்பான மனமே மறைந்து கிடக்கும் கர்மாக்களின் பதிவுகளில் இருந்தும், பேராவல்களில் இருந்தும் விடுவித்துக் கொள்ளப் படுகிறது.'

சூத்திரம்–7 **'கர்மா சுக்லா க்ருஷ்ணம் யோகி நஸ்த்ரி விதமித ரேஷாம்'**

'யோகியின் செயல்கள் வெறுத்திருப்பது மில்லை, கறுத்திருப்பதுமில்லை. மற்றவர்களுடைய செயல்களோ வெள்ளை, கறுப்பு, இரண்டும் கலந்து என மூவகைப் படும்.

சூத்திரம்–8 **'ததஸ்தத் விபாகாணு குணானாமே வாபி வ்யக்திர் வாஸனானாம்'**

'இந்த மூவகைக் கர்மாக்களில் (செயல்கள்) இருந்து ஒவ்வொரு நிலையிலும், அந்த நிலைக்குப் பொருத்தமான ஆசை மட்டும் வெளிப்படும்'.

சூத்திரம்–9 **'ஜாதி தேச கால வ்ய வஹிதான மப்யா நந்தர்யம் ஸ்மிருதி ஸம்ஸ்கார யோரேக ரூபத்வாத்'**

'பிறவி, இடம், காலம் இவற்றால் பிரிக்கப்பட்ட போதிலும் நினைவும் சம்ஸ்காரங்களும் ஒத்திருப்பதால் ஆசை களுக்கிடையில் ஒரு தொடர்ச்சி உள்ளது'. (அனுபவங்கள் நுண்ணியவையாகும் போது சம்ஸ்காரங்கள் – பதிவுகள் ஆகின்றன.)

ஸ்

சூத்திரம்–10 **'தாஸா மனாதித்வம் சாசிஷோ நித்யத்வாத்'**

'இன்ப நாட்டம் எப்போதும் இருப்பதால் ஆசைகளுக்கு ஆரம்பம் என்பதே இல்லை.

முதலாவது, பூர்வ மனம் என்பது என்ன? எல்லா யோகங்களுக்கும் அதுவே இலக்காயிருப்பது. பூர்வமனத்துக்கான பாதையைக் கீழை நாடுகள் தொடர்ந்து வந்திருக்கின்றன. பூர்வமனம் என்பது நீங்கள் பிறப்பதற்கு முன் உங்களிடம் இருந்தது, இந்த வாழ்க்கையில் அது இருக்கையில், உலகப்பற்றுகளில் நீங்கள் பிரவேசிப்பதற்கு முன், எண்ணங்களிலும், விருப்பங்களிலும், உள்ளுணர்விலும் நீங்கள் உட்படுத்தப்படுவதற்கு முன் இருந்தது அது. எதனாலும் அசுத்தப்படுத்தப்படாத தனித்தன்மை கொண்டது. அது மேகமூட்டமில்லாத அசலான ஆகாயம்–அதுவே பூர்வமனம்.

அந்தப் பூர்வமனத்தில் அடுக்கடுக்காய் பல மனங்கள் உள்ளன. மனிதன் ஒரு வெங்காயம் மாதிரி, நீங்கள் அதை உரித்துக் கொண்டே போகலாம். ஓர் அடுக்கை உரித்தால் இன்னோர் அடுக்கு தோன்றும். நீங்கள் அந்த அடுக்கை உரித்தால் மற்றோர் அடுக்கு தெரியும். நீங்கள் ஒற்றை மனதைக் கொண்டிருக்கவில்லை. அடுக்கடுக்காய் பல மனங்கள். காரணம் ஒவ்வொரு பிறவியிலும் ஒரு குறிப்பிட்ட மனதை நீங்கள் வளர்த்துக் கொள்கிறீர்கள. இப்படி பிறவிகள் தோறும் மனங்கள். இத்தனை மனங்களுக்கும் பின்னால் அசலான மனம் (பூர்வமனம்) முழுமையாய் தொலைந்து போகிறது. ஆனால், அந்த வெங்காயத்தை உரித்துக் கொண்டே போனால், வெறுமை மட்டுமே ஒரு கணத்தில் உங்கள் கையில் எஞ்சியிருக்கும். வெங்காயம் மறைந்து போகிறது.

மனங்கள் மறைகிறபோது, அந்நிலையில் பூர்வமனம் மேலெழும். உண்மையில் அதை ஒரு மனம் என்று கூறுவது அத்தனை சரியாகாது. மனமற்றிருத்தலே பூர்வமனம். உங்களிடமுள்ள அத்தனை மனங்களும் படிப்படியாய் மறைகிற போது, கைவிடப்படுகிறபோது பூர்வமனம் தன்னுடைய ஆதியான புனிதத்துடன், தூய்மையுடன் காட்சியளிக்கிறது. இந்தப் பூர்வமனம் உங்களிடம் முன்பே இருந்ததுதான். நீங்கள் அதனை மறந்திருக்கக்கூடும். உங்கள்

மனதின் கட்டுப்பாடுகளில் நீங்கள் காணாமல் போயிருக்கலாம், ஆனால் அடியாழத்தில், அத்தனை அடுக்குகளுக்கும் பின்பாக, நீங்கள் இன்னமும் உங்களுடைய பூர்வமனத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள்.

அத்துடன் அரிதாய் சில தருணங்களில் நீங்கள் அதனுள் ஊடுருவிப் பரவவும் செய்கிறீர்கள். ஆழ்ந்த உறக்கத்தில், கனவுகளும் நின்றுவிட்ட நிலையில், கனவற்ற உறக்கத்தில் நீங்கள் அதிக அளவு உற்சாகத்தை உணர முடிவது. ஆனால், இரவு முழுக்க தொடர்ந்து கனவுகள் இருப்பின், அந்நிலையில் நீங்கள் களைப்பாக உணர்வீர்கள். படுக்கச் செல்வதற்கு முன் இருந்ததைவிட களைத்து விட்டிருப்பீர்கள். உங்களுடைய இருதய கங்கையில் நீங்கள் நீராடியிருக்க மாட்டீர்கள். உங்கள் புனித உணர்வுநிலை என்னும் சிற்றாற்றில் (stream) ஆடித் திளைத்திருக்க மாட்டீர்கள். உங்களால் அதனுள் செல்ல முடிவதில்லை, நீராட முடிவதில்லை. காலையில் நீங்கள் சோர்வாக உணர்வீர்கள், கவலை, குழப்பம், இறுக்கம் கொண்டவராய் இருப்பீர்கள். அயர்ந்த உறக்கத்தில் கிடைக்கும் இணக்கம் உங்களுக்குக் கிடைத்திருக்காது. (இங்கே இணக்கம் என்பது உணர்வுகளின் இனஇசை, எண்ணங்களின் ஒற்றுமையைக் குறிக்கிறது). ஆனால், அது அயர்ந்த உறக்கத்தால் விளைவதல்ல. அயர்ந்த உறக்கம் என்பது பூர்வமனதுக்கான பாதை. அதனால்தான் பதஞ்சலி சொல்கிறார், சமாதி என்பது அயர்ந்த உறக்கத்தைப் போன்றது, இரண்டுக்கும் இடையில் ஒரேயொரு வேறுபாடுதான். சமாதியில் நீங்கள் பூர்வ மனத்துள் செல்கிறீர்கள், அது முழு உணர்வோடு சறுக்கி விழுகிறீர்கள். உறக்கத்தில் எங்கே போகிறோம். அந்த வழியில் போகிகிறோம் என்பது தெரிந்திருக்காது' என்று. உங்களுடைய பூர்வ மனத்துடன் விடப்பட்டிருக்கும் ஒரே தொடர்பு அதுதான்.

நோயால் அவதிப்படுகிற ஒருவர் உறக்க மற்றவராயிருப்பின், அவரைக் குணப்படுத்த வழியில்லை என்பதை மருத்துவர்கள் நன்கறிவார்கள். உறக்கம் பிணிதீர்க்கம் வல்லது. நோயாளிக்கு முதலில் தேவைப்படுவது அயர்ந்த உறக்கமும், மிகுதியான ஒய்வுந்தான். அந்த ஒய்வு குணமளிக்கிறது. எப்படியெனில் அந்த நேரத்தில் உங்களுடைய பூர்வ மனதுடன் நீங்கள் இணைக்கப் படுகிறீர்கள், பூர்வமனதில் குணமளிக்கிற மூலம் (soure) இருக்கிறது.

உங்கள் பிராண சக்தியின் பிறப்பிடம் அது, அன்பு. உங்களிடமிருக்கிற அனைத்தும் உங்கள் பூர்வமனத்தில் இருந்து நீங்கள் பெற்றவையே யாகும்.

உண்மையில் அது பல அடுக்குகளைக் கடந்து செல்கிற பொழுது மாசடைந்து, அசுத்தப்பட்டு விடுகிறது. உங்களுடைய உள்ளார்ந்த சுற்றுச் சூழல் இனியும் அசலாக இருக்காது. அது மரத்துப்போன பலவற்றாலும் நிரப்பப்பட்டிருக்கிறது. உணர்ச்சியற்ற பலவற்றாலும் திணிக்கப்பட்டிருக்கிறது. உங்கள் மனங்கள் செயலற்ற அனுபவமன்றி வேறெயென்ன?

பூர்வமனத்தினுள் கவனத்தோடும், உணர்வோடும் நுழைய விரும்புகிறவர் நினைவில் இருந்து எப்படி அகற்றுவது, அனுபவத்தை எப்படி அகற்றுவது என்பதை அறிந்திருக்க வேண்டும். கடந்த காலத்தை எப்படிப் பற்றாமல் இருப்பது என்பது அவருக்குத் தெரிந்திருக்கவேண்டும். ஒரு கணமே வாழ்ந்தாலும் அதுபோதும். அத்தோடு தீர்ந்தது. நீட்டிக்க வேண்டியதில்லை. தொடர்ச்சியற்றவராய் இருங்கள். அது இனியும் உங்களுக்கு உரியதாயிருக்காது. அது முடிவுக்கு வந்துவிடுகிறது எப்போதைக்குமாய். தனது சட்டையை உதறிவிட்டுச் செல்கிற பாம்பு மாதிரி, திரும்பியும் பாராமல் அதை விட்டு வெளியேறிவிடுங்கள். சென்ற கணத்தில் அதன் சட்டை (தோல்) அதனுடைய உடம்பில் ஒரு பகுதியாயிருந்தது. கடந்த காலத்தில் இருந்து தொடர்ந்து வெளியேறியபடி இருங்கள், அப்போது தான் நிகழ்காலத்தில் இருக்க முடிந்தால், பூர்வமனத்தை விட்டு உங்களால் போகமுடியாது. கடந்தகாலத்தையும், வருங்காலத்தையும் பூர்வமனம் அறிவதில்லை.

நீங்கள் மனம் என்று அழைப்பது கடந்த காலத்தையும் வருங்காலத்தையும் தவிர்த்து வேறேயென்ன. உங்கள் மனம் இங்கே – இக்கணத்தில் நிற்பதில்லை. அது கடந்த காலத்துக்கும் வருங்காலத்துக்கும் இடையே, ஓர் ஊசலாய் ஆடிக்கொண்டிருப்பது. கடந்த காலத்தில் இருந்து வெளியேறவும், வருங்காலத்தை உருவாக்காமல் இருக்கவும், இந்தக் கணத்தில் கிடைத்திருக்கும் மெய்ம்மை (reality)யுடன் இருங்கள். உங்களுக்கும் மெய்ம்மைக்கும் இடையில் எந்தவொரு மனமும் இல்லை என்பதைத் திடீரென்று

கண்டு கொள்வீர்கள், காரணம் மனம் நிகழில் (Present) இருப்பதில்லை. நீங்கள் ஒன்றைப் பற்றி எண்ணமிடுகிற பொழுதே அது கடந்த காலமாகிவிடுகிறது. எண்ணமிட அவகாசம் வேண்டும். எனவேதான் சூத்திரம் சொல்கிறது, தியானத்தின் மூலமே ஒருவர் தன்னுடைய பூர்வ மனத்துக்குத் திரும்புகிறார் என்று.

தியானம் என்பது சிந்திப்பதல்ல, சிந்தனையைக் கைவிடுவது.

நான் கேட்டறிந்தது. உணவை யாசித்துக் கொண்டிருந்த நாடோடியிடம், 'நாள் முழுக்க நீ என்ன சொல்கிறாய்?' என்று கேட்டார்கள். அவன் சொன்னான,' நான் சில நேரங்களில் உட்கார்ந்தபடி சிந்திப்பேன், சில நேரங்களில் சும்மா அப்படியே உட்கார்ந்திருப்பேன்' என்று.

'அப்படியே உட்கார்ந்திருத்தல்' – அதுதான் தியானத்துக்கு மிகச்சரியான பொருள். ஜப்பானில் தியானத்தை 'ஸாஜென்' (zazen) என்கிறார்கள். எதையுமே செய்யாமல் சும்மா உட்கார்ந்திருப்பது. எதையும் செய்யாமல் சும்மா இருந்து கொண்டிருப்பது. மனதின் நிறுத்திவைக்கப்பட்ட நிலை. மேகங்கள் இல்லாத தெளிவான வெளியை – வானத்தை நீங்கள் பார்க்க முடிகிறது. அந்த வெளியில் எப்படிச் செல்வது என்று நீங்கள் அறிந்துகொண்டு விட்டால் அது எப்போதுமே அனுகூலமாய் அமையும். நீங்கள் தொடர்ந்து செயல்படவும், விரும்பியபோது உள்ளார்ந்த புனித நீர்நிலையில் நீராடவும் முடியும். உங்கள் வீட்டுக்கு உள்ளேயும், வெளியேயும் சென்றுவருவது போல் அத்தனை எளிதாகவே அது இருக்கும். வாசலைத் தெரிந்து கொண்டுவிட்டால், அதில் பிரச்சினை இருக்காது. நீங்கள் வெப்பத்தை உணர்கிறபோது, வீட்டுக்குள் சென்று குளிர்ச்சியான இடத்தில் இருந்து கொள்கிறீர்கள். கடுங்குளிரால் உறைந்து விடுவோம் என்கிற நிலையில் வெயில் காய்வதற்காக வெளியில் வந்து விடுவீர்கள். உள்ளுக்கும் புறத்துக்கும் இடையே ஒரு நீர்மப் பொருளாய் நீங்கள் பாய்ந்தோடிக் கொண்டிருப்பீர்கள்.

உட்செல்லும் வழியை அடைத்துக் கொண்டிருக்கிறது மனம். நீங்கள் செல்கிற போதெல்லாம் மறுபடியும், மறுபடியும் ஒரு மன அடுக்கைக் கண்டபடி இருப்பீர்கள். ஒரு நினைவுத் துணுக்கு, ஒரு

விருப்பம், ஒரு திட்டம், ஒரு கனவு, வருங்காலத்தைப் பற்றிய ஏதோ ஒன்று, கடந்த காலத்தைப் பற்றிய ஏதோ ஒன்று அதில் இருக்கக் காண்பீர்கள். வருங்காலம் என்பது கடந்த காலத்தின் வெளிப்பாடு என்பதை நினைவில் கொள்ளுங்கள். வருங்காலம் ஒரு சிறிது மாறுபட்ட விதத்தில், கொஞ்சம் மேம்பட்டதாய் கடந்த காலத்தையே வேண்டி நிற்கிறது. கடந்த காலத்தில் உங்களிடம் மகிழ்ச்சியும் மகிழ்ச்சியின்மையும் இருந்தது, உவகையும் வருத்தமும் இருந்தது, முட்களும், பூக்களும் இருந்தன.

உங்கள் வருங்காலம் முட்களற்ற மலர்களன்றி வேறேயென்ன. வலிகள் விடப்பட்டு மகிழ்ச்சிகள் மட்டுமே உள்ளன. உங்கள் கடந்த காலத்தை நீங்கள் வகையினப்படுத்திக் கொண்டேயிருக்கிறீர்கள். எதுவெல்லாம் விரும்பத்தக்கது, நேர்த்தியானது என்று நீங்கள் நினைக்கிறீர்களோ அதுவெல்லாம் உங்கள் வருங்காலத்தில் இடம் பெறுகிறது, உங்களால் வெளிக்காட்டப்படுகிறது.

கடந்த காலத்தில் இருந்து எப்படி வெளிவருகிறது என்பதை நீங்கள் அறிந்து கொண்டு விட்டால் வருங்காலம் தானாகவே மறைந்துவிடும். உள்ளுக்குள் கடந்தகாலம் இருக்காது, அங்கே வருங்காலமும் இருக்க முடியாது. கடந்த காலமன்றோ வருங்காலத்தை முன்னிலைப்படுகிறது. கடந்த காலமே வருங்காலத்தின் தாயாக கருவறையாக இருக்கிறது. கடந்த காலமும் இல்லை வருங்காலமும் இல்லை என்றால் அந்நிலையில் இருப்பது எது? சற்றும் எதிர்பாராத விதமாய் நீங்கள் நிலைத்திருக்கிற – முதலும் முடிவுற்ற ஒரு நிலையை அடைகிறீர்கள்.

இதுவே பூர்வமனம் எண்ணங்களின் 'மினுக்' (அசைவு) இல்லை, கண்களை எதுவும் மறைப்பதில்லை, உங்களைச் சுற்றியிருப்பது புழுதியற்ற, தூய வெளி.

*'தத்ர தியானஜம் அனாசயம்'*

பூர்வமனமே ஆசைகளில் இருந்து விடுபட்டிருக்கிறது.. காரணம் பூர்வமனம் கடந்த காலத்தில் இருந்தும், அனுபவங்களில் இருந்தும் விடுபட்டது. நீங்கள் அனுபவங்களில் இருந்து விடுபட்டிருக்கும் பொழுது உங்களால் எப்படி விரும்ப முடியும்? கடந்த காலம் என்பது இல்லாமல் ஆசை இடம் பெறுவதற்கில்லை. கொஞ்சம், எண்ணிப்

பாருங்கள், உங்களிடம் கடந்தகாலம் என்பது இல்லாவிட்டால் உங்களால் எப்படி ஆசைப்பட முடியும்? நீங்கள் எதை ஆசைப் படுவீர்கள்? ஏதாவதொன்றை விரும்புவதாயின் அனுபவம், திரட்டப்பட்ட அனுபவம் தேவை. உங்களால் விரும்ப முடியாவிட்டால் நீங்கள் ஒரு வெற்றிடத்தில்தான் இருப்பீர்கள் – பெரிய அளவில் ஓர் அழகான வெற்றிடம் அது.

பூர்வமனம் ஆசைகளற்றது, எனவே ஆசைகளுடன் சண்டையிட்டு எதிர்த்து நிற்க வேண்டாம். அந்தச் சண்டை உங்களை எங்கேயும் இட்டுச் செல்லப்போவதில்லை, காரணம் நீங்கள் ஆசையிடம் சண்டையிடுவதென்றால் ஆசைக்கு எதிரானவற்றை வளர்த்துக் கொள்ள வேண்டியிருக்கும். ஆசைகளுடன் போரிடாதீர்கள். உண்மையைக் கண்டு கொள்ளப்பாருங்கள். ஆசைகளுடன் போரிடு வதன் மூலம் அசலான மனதை நீங்கள் கண்டுகொள்ள முடியாது. நீங்கள் ஒரு மேம்பட்ட மனதைக் கண்டு கொள்ளலாம். ஆனால், அது உங்களுடைய பூர்வமனமாயிருக்காது. ஒரு பாவியின் மனதை நீங்கள் பெற்றிருக்கலாம். ஆனால், அதனுடன் நீங்கள் போரிட்டால் ஒரு புனிதரின் மனதை நீங்கள் பெறக்கூடும். பாவியைப் புரட்டிப் போட்டால் புனிதன்.

பாவிகளும் புனிதர்களும் வெவ்வேறு சீசன்களல்ல, அவர்கள் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள். நீங்கள் நாணயத்தை இப்படியும் திருப்பலாம், அப்படியும் திருப்பலாம். ஒரு பாவி எப்போது வேண்டுமானாலும் பரிசுத்தனாகிவிட முடியும். அதேபோன்று, பரிசுத்தமான ஒருவனும் பாவியாகிவிட முடியும். பாவியாயிருப்பவன் புனிதனாகி விடக் கனவு காண்பான். தான் மீண்டும் பாவம் என்கிற சேற்றில் அமிழ்ந்து விடுவோமோ என்று புனிதன் அஞ்சுவான். அவர்கள் தனித்தனியாயில்லை, ஒன்றாகத் தான் இருக்கிறார்கள். உண்மையில் இவ்வுலகில் இருந்து எல்லாப் பாவிகளும் காணா தொழிந்தால், புனிதர்களுக்கான சாத்தியம் இருக்காது. பாவிகள் இல்லாமல் அவர்களால் இருக்க முடியாது.

நான் கேட்டறிந்தது. மதகுரு ஒருவர் தேவாலயத்துக்குப் போய்க் கொண்டிருந்தார். வழியில், சாலையோரத்தில் ஒருவன் குத்துப்பட்ட நிலையில் கிடப்பதை, அவன் செத்துக் கொண்டிருப்பதைக் கண்டார்.

இரத்தம் ஆறாய் ஓடிக் கொண்டிருந்தது. அவர் விரைந்தோடிச் சென்று பார்த்தபோது, அவன் முகத்தைப் பின்னுக்கிழுத்துக் கொண்டான். அந்த முகத்தை அவர் நன்றாக அறிவார். தீய ஆவிகளிலேயே மிகக் கொடுமையான சாத்தானின் முகம் அது. தேவாலயத்தில் அந்தச் சாத்தானின் படத்தை அவர் பார்த்திருக்கிறார். ஆனால், அந்தக் கொடுமையான ஆவி பேசிற்று, 'என் மீது பரிவாயிரும். உம்முடைய தேவாலயத்தில் 'பகைவனிடம் அன்புகாட்ட வேண்டும்' என்று நீர் பலமுறை உபதேசித்ததை மறந்துவிட்டீரா? நான் உம்முடைய பகைவன், என்னை நேசியும்? என்று.

அந்த வாதத்தில் உள்ள முறையான முடிவுகளை சமயகுருவால் மறுக்க முடியவில்லை. ரொம்ப சரி, சாத்தானை விட மோசமான பகைவர் யார்? அவர் உணர்ந்தேயிருந்தார், ஆனாலும், ஒரு சைத்தானுக்கு உதவுமளவு அவர் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டிருக்கவில்லை. அவர் சொன்னார், 'நீ சொல்வது சரிதான். புனிதநூலில் இருந்தும் மேற்கோள்காட்ட ஒரு சைத்தானால் முடியும் என்பதை நான் அறிவேன். நீ என்னை முட்டாளாக்க முடியாது. நீ சாவதே விரும்பத்தக்கது. நீ செத்துபோனால் இந்த உலகம் நன்றாக இருக்கும்' என்று. சாத்தான் சிரித்தது, தேய்த்தனமான சிரிப்பு. 'உமக்குத் தெரியாது. நான் செத்துப் போனால் நீர் இருக்கிற இடம் தெரியாமல் போய்விடுவீர். என்னுடன் நீரும் தான் சாகும்படி ஆகும். நான் தற்போது எந்தப் புனித நூலையும் மேற்கோள் காட்டவிலலை. வியாபாரம் பேசுகிறேன். நான் இல்லை என்றால் நீரும், உம்முடைய தேவாலயமும், கடவுளும் எங்கே இருக்கமுடியும்?' என்றது. அந்தப் பாதிரியார் சட்டென்று புரிந்து கொண்டார். சைத்தானை தமது தோளில் சுமந்து கொண்டு மருத்துவ மனைக்குச சென்றார். அவர் செய்துதான் ஆகவேண்டும், கடவுள்கூட சைத்தான் இல்லாமல் இருக்க முடியாதே! பாவி இல்லாமல் புனிதர் இருப்பதில்லை. அவர்கள் ஒருவருக்கொருவர் தீனியாகிறார்கள், ஒருவரையொருவர் பாதுகாத்துக் கொள்கிறார்கள், ஒருவருக்கொருவர் தற்காப்பர்கிறார்கள். அவர்கள் இருவேறு பொருட்களில்லை. அவர்கள் ஒரே நிகழ்வின் இரண்டு எதிரிடை முனைகள்.

பூர்வமனம் என்பது மனமேயல்ல. அது பாவியின் மனதும் அல்ல? புனிதரின் மனதும் அல்ல. பூர்வமனம் தன்னுள் எந்த

மனதையும் கொண்டிருப்பதில்லை. அதற்கு எல்லை கிடையாது, வரையறை கிடையாது. 'இது புனிதம்' என்று நீங்கள் சொல்லமுடியாத அளவுக்கு அது புனிதமானது, காரணம், ஒன்றைப் புனிதம் என்று சொல்கிற போது மாசு பற்றிய ஒரு கருத்தமைவையும் (concept) நீங்கள் உள்ளே கொண்டுவர வேண்டியிருக்கும். அதுகூட, அதனை அசுத்தப்படுத்துகிற காரியமாகி விடும். அது அத்தனை தூய்மை யானது, அதைத் தூய்மை என்று சொல்வதில் அர்த்தமேயில்லை.

**'தியானத்தில் தோன்றுகிற பூர்வமானம் ஆசைகளில் இருந்து விடுபட்டது'**

தற்போது, தத்ர த்யானஜம்' – 'தியானத்தில் தோன்றியது' என்பது சொல்லுக்குச் சொல் நேர்ச்சரியான மொழிபெயர்ப்பு என்றாலும் ஏதோ ஒன்று தவறவிடப்பட்டிருக்கும். சம்ஸ்கிருதம் மிகவும் கவித்துவமான ஒருமொழி. அது வெறும் மொழியல்ல, வெறும் இலக்கணத்துடன் கூட கட்டமைப்பு அல்ல. அது ரொம்பவும் கவித்துவமானது, செறிவுடையது.

நான் அதனை மொழிபெயர்த்தால் 'தியானத்தில் மறுபடியும் பிறந்தது' என்பேன். அப்படியே அது பிறந்துவிடவில்லை. பூர்வமனம் பிறந்ததல்ல. அது முன்பே இருந்ததுதான், மறுபடியும் பிறந்திருக்கிறது. அது முன்பே இருந்திருக்கிறது, இனங்காணப்பட்டது. அது முன்பே இருந்தது, மறுபடியும் கண்டறியப்பட்டிருக்கிறது. கடவுள் எப்போதுமே மறு கண்டுபிடிப்புதான். உங்கள் இருப்புணர்வு முன்பே இருந்து கொண்டிருக்கிறது. அதை ஒரேயடியாய் அழுத்தி முக்கியத்துவம் கொடுக்க முடியாது. அது முன்பே இருக்கிறது, நீங்கள் அதைத் திருப்பிக் கொடுக்குமாறு கோருகிறீர்கள். புதிதாய் எதுவும் பிறந்துவிடவில்லை, காரணம், மனம் புதிதல்ல, அது சாசுவதமானது எப்போதைக்கும்.

அனாசயம் என்றால் செயல் தூண்டல் உணர்வற்றது, எவ்வித ஆதாரமும், காரணமும், அடிப்படையும் இல்லாமல் இருப்பது என்று பொருள்.

தத்ர த்யானஜம் அனாசயம்

பூர்வமனம் எவ்வித தூண்டலுமின்றி செயல்படுவது. அது காரண, காரியமற்றது. அது எவ்வித ஆதாரமுமின்றி இருப்பது. அதற்கு அடிப்படை ஏதுமில்லை. அது அப்படித்தான் இருக்கவேண்டும், காரணம், இறுதியான (ultimate) ஒன்று எந்த ஆதாரத்தையும் கொண்டிருப்பதில்லை, இறுதியானது என்றாலே அதற்கு மேலும் கூற இயலாதது, முடிவானது என்று பொருள் – அதற்கு வெளியே எதுவும் இல்லை. நீங்கள் நிலத்தின் மீது உட்கார்ந்திருக்கிறீர்கள். அந்த நிலமோ கிரக அமைப்பில் உள்ள சில ஈர்ப்புச் சக்திகளால் தாங்கி நிறுத்தப்படுகிறது, கிரகங்களைத் தாங்கி நிறுத்துவது அவற்றிலும் மேம்பட்ட சூரிய சக்தி ஆகும். ஆனால் பரம்பொருள் எந்த ஆதாரத்தையும் கொண்டிருப்பதில்லை, காரணம், ஆதாரம் எங்கிருந்து வரமுடியும்? முழுமையான பரம்பொருள் தனக்கொரு அடிப்படையைக் கொண்டதல்ல.

நீங்கள் சந்தைக்குச் செல்கிறீர்கள், அதில் ஒரு நோக்கம் இருக்கிறது. பணம் சம்பாதிக்கப்போகிறீர்கள். நீங்கள் வீட்டுக்கு வருகிறீர்கள், குறிப்பிட்ட நோக்கம் இருக்கிறது. ஓய்வெடுத்தல், நீங்கள் பசித்தால் உண்கிறீர்கள். ஆக அதற்கொரு காரணம் இருக்கிறது. நீங்கள் என்னிடம் வருகிறீர்கள் – அதில் ஒரு நோக்கம் இருக்கும், நீங்கள் ஏதோ ஒன்றைத் தேடியலைகிறீர்கள். அது தெளிவற்றதாய். இருக்கலாம், தெளிவாக இருக்கலாம். அறிந்ததாகவோ, அறியாததாகவோ இருக்கலாம். ஆனால் அதில் நோக்கம் இருக்கிறது. ஆனால், முழுமையில் என்ன நோக்கம் இருக்கமுடியும்? அது எவ்வித நோக்கமுமற்றது, அது ஆசையற்றது – காரணம் நோக்கம் என்பது ஏதோ ஒன்றை வெளியில் இருந்து கொண்டு வருவது. அதனால்தான் இந்துக்கள் அதனை லீலை - விளையாட்டு என்கிறார்கள். ஒரு விளையாட்டு உள்ளிருந்து வருவது. நீங்கள் உலவி வருவதற்காகச் செல்கிறீர்கள். அதில் ஆரோக்கியம் உட்பட எவ்வித நோக்கமும் இல்லை. ஆரோக்கியத்தில் ஆர்வம் உடையவர்கள் சும்மா நடந்து செல்வதில் மகிழ்ச்சி அடைவதில்லை. அவர் கணக்குப் போடுவார், 'எத்தனை மைல்கள்' என்று. 'எத்தனை முறை மூச்சு விடுவது?', 'எந்த அளவு வியர்க்கிறது?' இப்படியெல்லாம் அவர் கணக்குப் போட்டுப் பார்ப்பார்.

அவர் காலையில் உலவுவதை ஓர் உடற்பயிற்சியாகவே மேற்கொள்வார். அது விளையாட்டுத்தனமான ஒரு செயலாக இருப்பார்.

ஆங்கில வார்த்தையான 'illusion', 'மாயை' என்கிற கிழக்கத்திய வார்த்தைக்கு மொழிபெயர்ப்பாகப் பயன்படுத்தப்படுகிறது. மாயை என்றால் 'வெறும் தோற்றம்' என்று பொருள். ஆனால் அது உண்மையான பொருளாகாது. 'Illusion' என்ற வார்த்தை 'ludere' என்ற வேர்ச் சொல்லில் இருந்து வந்தது. இலத்தீன் மொழிச் சொல் அது. 'விளையாட்டு' என்பதே அதன் பொருள். 'Illusion' என்கிற ஆங்கில வார்த்தைக்கும் சரி, 'மாயை' என்கிற கிழக்கத்திய வார்த்தைக்கும் சரி விளையாட்டு என்பதே பொருள். மாயை என்பது உருவெளித் தோற்றத்தைக் குறிப்பதல்ல, அது விளையாட்டுத் தனம் என்பதாகும். உண்மையில் கடவுள் தம்மோடுதான் விளையாடிக் கொண்டிருக்கிறார். அவர் தம்மையன்றி வேறு யாராகவும் இருக்க வில்லை. எனவேதான், அவர் தமக்குத்தாமே கண்ணாமூச்சி ஆடிக் கொண்டிருக்கிறார். அவர் ஒரு கையால் மூடி மறைத்துக்கொண்டு, மற்றொரு கையால் கண்டுபிடிக்க முயற்சிக்கிறார். அது எங்கே இருக்கிறது என்பது எப்போதுமே அவருக்குத் தெரிந்துதான் இருக்கிறது.

பூர்வமனம் காரணமற்றது, ஊக்குவிக்கப்படுவதில்லை. மற்ற மனங்கள் – பூர்வத் தன்மையற்ற மனங்கள் ஊக்குவிக்கப்படுகிறவை. செயல் தூண்டல் உணர்வின் காரணமாகவே நாம் அவற்றை வளர்த்துக் கொள்கிறோம். நீங்கள் மருத்துவராக விரும்பினால் ஒரு குறிப்பிட்ட மனத்தை வளர்த்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. நீங்கள் ஒரு பொறியாளராக விரும்பினால் வேறொரு மனதை நீங்கள் வளர்த்துக்கொள்ளும்படி இருக்கும். நீங்கள் ஒரு கவிஞராக விரும்பினால் கணிதவல்லுனருக்குள்ள மனதைப் பெற்றிருக்க முடியாது, கவிஞனுக்குள்ள மனதைப் பெற்றிருக்க வேண்டும். ஆக, உங்களுடைய நோக்கம் எதுவாயினும் அதற்குரிய ஒரு மனதைப் பெற்றிருக்க வேண்டும்.

நான் கேட்டறிந்தது. ஒரு பெண்மணி தன்னுடைய மகனுடன் பேருந்தில் அமர்ந்திருந்தாள். அவள் ஒரேயொரு பயணச்சீட்டுதான் வாங்கியிருந்தாள். நடத்துநர் பையனிடம் கேட்டார். 'தம்பீ, உனக்கு

என்ன வயசு?' என்று. பையன் சொன்னான், 'நாலு வயசு' என்று.

'உனக்கு எப்போது அஞ்சு வயசாகும்?' நடத்துநர் கேட்டார்.

அந்த உரையாடலைத் தன்னுடைய தாய் ஒரு புன்னகையின் மூலம் அங்கீகரிப்பதைப் பார்த்தபடி பையன் சொன்னான், 'நான் பஸ்ஸை விட்டு இறங்கியதும்' என்று.

ஒன்றைக் கூறும்படி அவன் கற்பிக்கப்பட்டிருந்தான். ஆனால் அதன் உட்கருத்தை அவன் அறியமாட்டான். ஒரு பயணச்சீட்டை மிச்சப்படுத்துவதற்காக 'நான்கு வயசு' என்று சொல்லும்படி அவன் கற்பிக்கப்பட்டிருந்தான். ஆனால் அதன் நோக்கம் அவனுக்குத் தெரியாது, எனவேதான் ஒரு கிளிப்பிள்ளையைப் போல் திரும்பத் திரும்ப சொல்லியது.

ஒவ்வொரு குழந்தையும் பெரியவர்களை விட தனது பூர்வ மனத்துக்கு இசைவாகவே இருக்கிறது. குழந்தைகளைப் பாருங்கள், சுற்றிச் சுற்றி ஓடி விளையாடிக் கொண்டிருப்பார்கள். குறிப்பாக எந்த நோக்கமும் அதில் இருக்காது. அவர்கள் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். என்ன விசயம் என்று நீங்கள் கேட்டால் தோள்களை குலுக்கிக் கொள்வார்கள். பெரியவர்களுடன் உரையாடுவது குழந்தை களுக்கு முடியாத காரியம். அவர்களை இணைக்கிற மாதிரி எதுவும் இல்லை. பெரியவர்கள் அற்பத்தனமான கேள்வியைக் கேட்டு வைப்பார்கள். 'எதுக்காக?' பெரியவர்கள் பொருளாதார மனத்துடன் வாழ்பவர்கள். அவர்களுடைய அறிவு பொருளியல் சார்ந்தது.

நீங்கள் பொருளீட்டுவதற்காக ஏதாவதொன்றைச் செய்து கொண்டிருக்கிறீர்கள். இந்த மாறாத நோக்கத்தை குழந்தைகள் அறிந்திருக்க மாட்டார்கள். அவர்கள் ஆசையின் மொழியை அறிந்தவர்களல்லர், அவர்களுக்குத் தெரிந்தது விளையாட்டுத்தன மொழிதான். 'நீங்கள் குழந்தைகளைப் போல் ஆகாவிடில் கடவுளின் ராஜ்யத்தில் நுழையமுடியாது' என்று இயேசு கூறியதன் பொருள் அதுவே. நீங்கள் செயல் நோக்கத்தை விட்டு, விளையாட்டுத் தனமாய் மறுபடியும் ஒரு குழந்தையாய் மாறிவிட வேண்டும். என்கிறார் அவர்... நினைவிருக்கட்டும், வேலை ஒரு போதும், யாரையும் கடவுளிடம் இட்டுச் செல்லாது. தங்கள் பாதையை

கடவுளை நோக்கிச் செயல் படுத்தாதவர்கள் சந்தையில் ஒரு வட்டத்துக்குள்ளாகவே சுற்றிவர வேண்டியதுதான். அவர்கள் ஒருபோதும் அவரை அடைவதில்லை. அவர் விளையாட்டுத் தனமானவர், நீங்களும் விளையாட்டுத் தனமாய் இருந்து விடுங்கள். உடனடியாய் ஒரு தோழமை, உடனடியாய் ஓர் இணைப்புப் பாலம்.

விளையாட்டுத்தனமாகவே தியானியுங்கள், தியானத்தில் தீவிரம் காட்ட வேண்டாம். தியானக் கூடத்துக்குச் சென்றதும் உங்கள் காலணிகளை கழற்றிவிடுகிற இடத்திலேயே உங்களுடைய இறுக்கமான முகங்களையும் விட்டுச் செல்லுங்கள். தியானம் ஒரு வேடிக்கையாக இருக்கட்டும். வேடிக்கை என்பது சமயம் சார்ந்த ஒரு சொல், தீவிரம் என்பது சமயச் சார்பற்ற சொல் ஆகும். நீங்கள் பூர்வமனத்தை அடைய விரும்பினால் தீவிரமற்ற, பாசாங்கில்லாத வாழ்க்கையை வாழுங்கள். உங்கள் வேலைகளை ஒரு விளையாட்டாக மாற்றிவிடுங்கள். கடமை என்பது ஒரு கறைபட்ட (dirty) வார்த்தை.

கடமையை விடுங்கள். அதிக அளவில் அன்பைக் கொண்டு வந்து, செயற்படுத்துங்கள். உங்கள் வேலையை நீங்கள் மகிழத்தக்க விதத்தில், புதிய ஆற்றலுடையதாய் மாற்றுங்கள். வாழ்க்கை வேடிக்கையும், சிரிப்புமாய் இருக்கட்டும், அதேசமயம் அது குறைவான ஆசையும், குறைந்த அளவு நோக்கமும் கொண்டதாயிருக்கட்டும். நீங்கள் எத்தனைக்கு தூண்டப்படுகிறீர்களோ அத்தனைக்கு ஒரு குறிப்பிட்ட மனதைப் பற்றிக் கொண்டுவிடுவீர்கள். நீங்கள் அத்தனை மனப்போக்குகளையும் விட விரும்பினால் விட்டு விடுங்கள். அதன் பிறகே உங்களுடைய உள்ளார்ந்த இயல்பை, புறத்தூண்டுதலின்றி தானே இயங்கும் தன்மை (spontaneity)யை நீங்கள் பெறமுடியும். அது முற்றிலும் வேறான மொழி, ஆசையில் இருந்து வேறுபட்ட மொழி.

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு.

முல்லா நஸ்ருத்தீனுக்கு எதிராய் நீதி மன்றத்தில் ஒரு வழக்கு இருந்தது. வழக்கின் முதற் பகுதி காட்சிகளை விசாரித்த பிறகு, வழக்கின் மிச்சப்பகுதி தனியறையில் (in-camera) விசாரிக்கப்பட வேண்டும் என்று மாவட்ட நீதிமன்றம் அறிவுறுத்தியது. 'தனியறையில்'

என்ற வார்த்தையின் பொருள் தனக்குத் தெரியாது என்று பிரதிவாதியான முல்லா நஸ்ருத்தீன் மறுப்பு தெரிவித்தார். ஆனால், நீதிபதி அவருடைய மறுப்பை நிராகரித்து விட்டார். 'அதன் கருத்தை நான் அறிவேன், அது எதைக் குறிக்கிறது என்பதை எதிர்வழக்காடுபவர் அறிவார், அது எதைக் குறிக்கிறது என்பதை சான்றாயர் (jury) அறிவார். தற்போது நீதிமன்றம் தெளிவாக இருக்கிறது' என்றார் அவர்.

இது முடிந்ததும், பிரதிவாதிக்கான அறிவுரைஞர் (counsel) எழுந்து முல்லா நஸ்ருத்தீனிடம் அன்றிரவு என்ன நடந்தது என்பதை அவருடைய வாயிலேயே நீதி மன்றத்துக்குச் சொல்ல வேண்டும்' என்று கேட்டுக் கொண்டார். முல்லா நஸ்ருத்தீன் பேசத் தொடங்கினார். நான் இந்தப் பெண்ணை ஒரு சந்து வழியாக வீட்டுக்கு அழைத்துச் சென்றேன். நாங்கள் ஒரு வயலின் குறுக்காக நடந்து செல்வதென்று தீர்மானித்தோம். பாதிவழியில் அவள் களைத்துப் போனாள், எனவே நாங்கள் ஓய்வெடுப்பதற்காகத் தரையில் உட்கார்ந்தோம். அது கோடைக்காலத்தின் அருமையான ஓர் இரவு, நான் கொஞ்சம் காதலுணர்வு கொண்டவனாய் அவளை முத்தமிட்டேன், அவளும் என்னை முத்தமிட்டாள், இருவரும் முத்தமிட்டுக் கொண்டோம், பத்து நிமிடங்களுக்குப் பிறகு 'ஹை–டிட்லி–ஹை–டீ' ஆச்சு.

நீதிபதி கேட்டார் 'ஹை – டிட்லி – ஹைடீ' என்றால் என்ன அர்த்தம்?' என்று.

நஸ்ருத்தீன், 'நல்லது, பிரதிவாத வழக்கறிஞர் அதன் பொருளை அறிவார், எதிர்த் தரப்பு வழக்கறிஞரும் அதன் பொருளை அறிவார், சான்றாயரும் அதன் பொருளை அறிவார் – நீங்களும் உங்கள் காமிரா (camera)வுடன் இருந்தால் அது என்னவென்று அறிந்திருப்பீர்கள்' என்று பதிலளித்தார்.

ஆசை தன்னுடைய மொழியைக் கொண்டிருக்கிறது. (கருத்து வெளியிடும்முறை). உள் நோக்கம் அதனுடைய மொழியைக் கொண்டிருக்கிறது. எல்லா மொழிகளுமே ஆசையை நோக்கத்தைக் கொண்டவைதாம். நான் உங்களுக்கு இதனைச் சொல்கிறேன். கிறிஸ்தவம் ஒரு குறிப்பிட்ட விருப்பத்தை வெளியிடுகிற மொழி.

அது ஒரு மதமாகாது. இந்து சமயம் வேறொரு விருப்பத்துக்கான மொழி, அது மதமல்ல.

பூர்வமனம் எந்த மொழியையும் கொண்டிருக்கவில்லை. ஒரு இந்துவாகவோ, கிறிஸ்துவராகவோ, முகமதியராகவோ, சமணரா கவோ, புத்தமத்தவராகவோ இருப்பதன் மூலம் நீங்கள் அதை அடைந்து விட முடியாது. அவை எல்லாமே விருப்பங்கள் தாம் அவற்றின் மூலம் நீங்கள் ஏதோ ஒன்றை அடைய விரும்புகிறீர்கள். அவை உங்களுடைய பேராசையின் வெளிப்பாடு.

எல்லா ஆசைகளையும், எல்லா மொழிகளையும், எல்லா மனங் களையும் நீங்கள் விடுகிறபோது பூர்வமனம் அறியப்பட்டதாகும். சமய நம்பிக்கை உடையவர் தம்முடைய சொந்த அடையாளத்தை, சிந்தனா முறையைக் கைவிட்டு நிர்வாணமாய் நிற்பவர் ஆவார். அவர் எவ்வித ஆடையும் இல்லாமல், மொழி மனம் என்கிற போர்வை இல்லாமல் பிரபஞ்ச இருப்பால் சூழப்பட்டிருப்பவர். முற்றாக உரிக்கப்பட்ட வெங்காயம், எஞ்சியிருப்பது வெறுமை மட்டுமே.

**'தியானத்தில் பிறக்கிற பூர்வமனம் மட்டுமே ஆசைகளற்றது.'**

ஆக, பூர்வமனத்தை எப்படி அடைவது? தற்போது மதத்தின் முக்கியமான பிரச்சினைகளுள் ஒன்று புரிந்து கொள்ளப்பட வேண்டியது. பூர்வமனம் ஆசைகளற்றது, ஆசையற்றிருப்பதே அதை அடையும் வழி. சிந்திக்கும் அறிவு பற்றி ஒரு பிரச்சினை தோன்றுகிறது. எது முக்கியத்துவம் வாய்ந்தது? ஆசைகளை நாம் விட வேண்டுமா? அப்படி விடுவதன் மூலம் நம்மால் பூர்வமனத்தை அடைய முடியுமா? பூர்வமனத்தை அடையும் பொழுது ஆசைகளைவிட வேண்டும். என்றால், எந்த ஆசைகளை எப்படி விடுவது? ஆசைகள் தமது சொந்த இணக்கத்தின் பேரிலேயே அவற்றை விட்டுவிடுமா? ஆசைகள் இன்னும் இருக்கும் போதே பூர்வமனத்தை நாம் அடைவோமா? இப்படியெல்லாம் முரண்பாடுகள் தோன்றும். ஆனால், உங்கள் அறிவின் பல வகைப் பிரிவுகளே அத்தனை முரண்பாடு களுக்கும் காரணம். உண்மையில், பூர்வமனதும் ஆசையற்றிருப்பதும் இருவேறுபட்டவை அல்ல. அவை இரண்டு வகையாய் பேசப்படுகிற ஒரே நடப்புதான். அது ஒரே ஆற்றல்தான். அதை பூர்வ மனம் என்று

அழையுங்கள். அல்லது ஆசையற்றிருத்தல் என்று அழையுங்கள். அவை இரண்டு செய்கைகள் அல்ல. அவை ஏககாலத்தில் நடக்கிறவை.

பூர்வ மனதைப் பெற்றாலன்றி நீங்கள் முற்றிலும் ஆசை யற்றவராக முடியாது, ஆனால் தொண்ணூற்றியொன்பது புள்ளி ஒன்பது சதவிகிதம் ஆசையற்றவராக வழி உண்டு. உங்கள் ஆசைகளை நீங்கள் புரிந்து கொள்ளத் தொடங்குகிறீர்கள். புரிதலின் மூலம் அவற்றில் பலவும் மறைந்துவிடும் காரணம் அவை அறிவற்றவை. அவை ஏமாற்றத்தையன்றி வேறெதிலும் உங்களைக் கொண்டுவிடாது. அதிக வேதனை, அதிக வருத்தம், அதிக வலி தவிர்த்து வேறெதுவும் இல்லை, அவை நரகத்தின் வாசல்களைத் திறந்து வைக்கின்றன. அவற்றை நீங்கள் கூர்ந்து கவனித்தாலே அவை மறைந்துவிடும். முதலாவது, உங்களை ஏமாற்றத்துக்குள்ளாக்கும் ஆசைகள் மறைகின்றன. அதன்பிறகு நீங்கள் மிகவும் கூரிய கண்ணோட்டத்தைப பெறுவீர்கள். அந்நிலையில், இதுவரை மகிழ்ச்சிதரும் என்று நீங்கள் எண்ணிக் கொண்டிருந்த ஆசைகள், மகிழ்ச்சியை நோக்கி உங்களை இட்டுச் செல்லாது என்பதைப் புரிந்து கொள்வீர்கள். காரணம் இனிமையாய் தெரிகிற எதுவும் முடிவில் வெறுக்கத்தக்கதாய், கசப்பதாய் மாறிவிடுகிறது.

ஆக, மகிழ்ச்சி என்பது ஆசையின் தந்திரம் என்றே படுகிறது. உங்களை வேதனைக்குள்ளாக்கும் தந்திரம் அது. முதலில் வேதனை தருவது விடப்பட வேண்டும் அப்போது மகிழ்ச்சி ஒருமாயை, கனவு என்பதை நீங்கள் கண்டு கொள்வீர்கள். தொண்ணூற்று ஒன்பது புள்ளி ஒன்பது சதவிகித ஆசைகள் புரிந்துகொள்ளும் திறனால் மறைந்துவிடும், அதன் பிறகு இறுதியானது நிகழ்கிறது. அது ஒரே சமயத்தில் நிகழ்ந்துவிடுகிறது. நூறு சதவிகித ஆசைகளும் மறைந்து, ஒரு கணத்தில் பூர்வமனம் மேலெழுகிறது, வினைமுதல் (cause) மற்றும் விளைவாக (effect) அல்ல, ஆனால் இரண்டுமே ஏக காலத்தில,

கார்ல் குஸ்டாவ் ஜங்கின் சொற்பாங்கை இங்கே பயன்படுத்துவது சிறப்பாக இருக்கும். சமகாலத்தில் நிகழ்வு (synchronicicity). அவை வினைமுதலும், விளைவுமாய் தொடர்புற்றிருக்க வில்லை. அவை

ஏக காலத்தில் ஒன்றாகக் காட்சியளிக்கின்றன. அவை ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள். நீங்கள் புரிதலின்வழியே. தியானத்தின் வழியே பார்த்தீர்களாயின் அதை பூர்மனம் என்றே அழைப்பீர்கள். நீங்கள் ஆசைகள் மற்றும் கட்டுக்கடங்கும் உணர்ச்சி களின் வழியே பார்த்தால் ஆசையற்றிருத்தல் என்றே கூறுவீர்கள். நீங்கள் ஆசையின்மை என்று அதற்குப் பெயரிடுவது, அதை ஆசையுடன் ஒப்பீடு செய்வதையே அது காட்டுகிறது நீங்கள் அதை பூர்வமனம் என்று அழைக்கிறபோது, எந்திரத்தனமான மனங் களுடன் அதை நீங்கள் ஒப்பிடுவதையே அதுகாட்டுகிறது. ஆனால் நீங்கள் ஒன்றையே, ஒரே மாதிரியானதையே பேசிக் கொண்டி ருக்கிறீர்கள்.

நீங்கள் எங்கிருந்தாலும் எந்திரகதியான ஒரு மனத்துடன் இருக்கிறீர்கள். நீங்கள் யாராயினும் எந்திரத்தனமான ஒருமனதில், அடைப்பட்டவராய் இருக்கிறீர்கள். உங்களுக்காக நீங்கள் வருத்தப் படாதீர்கள். அது இயல்புதான். ஒவ்வொரு குழந்தையும் ஏதாவ தொன்றைக் கற்கவேண்டும், அது அறிவை உருவாக்குகிறது. அத்துடன் ஒவ்வொருகுழந்தையும் இவ்வுலகில் தாக்குப்பிடிப்பதற்கான வழிகளைத் தெரிந்து கொள்ள வேண்டும், அது அறிவை உருவாக்கு கிறது. உங்கள் பெற்றோர்களுக்கு எதிராகவோ, சமூகத்துக்கு எதிராகவோ கோபப்படாதீர்கள். அது உதவாது. அவர்கள் அன்புடன் உங்களுக்கு உதவுகிறார்கள். அது இயல்பானது.

இங்கே தாக்குப்பிடிப்பதற்கான ஒரு மனம் தேவை. ஒவ்வொரு சமூகமும் குழந்தைகளை வலுக்கட்டாயப்படுத்துகிறது, காரணம் எல்லாக் குழந்தைகளும் கட்டுக் கடங்காதவர்களாய் இருக்கின்றனர். அவர்கள் பழக்கப்படுத்தப்பட்டு, ஒரு குறிப்பிட்ட அமைவுக்குள் கொண்டு வரப்பட வேண்டும். அவர்கள் அடிப்படை இல்லாதவர்களாய் இருக்கறார்கள். எங்கே அதிக அளவில் போராட்டங்கள் தொடர் கிறதோ, எங்கோ வாழ்தல் பிரச்சினையாகி இருக்கிறதோ அந் உலகில் தொடர்ந்து வாழ்வது அவர்களுக்குக் கடினமாகிவிடும். தங்களைப் பாதுகாத்துக் கொள்ள குறிப்பிட்ட சில வழிகளில் அவர்கள் ஆற்றல் மிக்கவர்களாக வேண்டும். அவர்கள் மற்றவர்களைப் போல் நடந்துகொள்ளக் கற்பிக்கப்பட வேண்டும். அவர்கள் பார்த்துப் பின்பற்றுவதற்குக் கற்பிக்கப்பட வேண்டும். எந்திரமனம் பாவனையின்

மூலம் உருவாக்கப்படுகிறது. பூர்வமனம் பாவனைகளைவிட்டதன் மூலம் உருவாக்கப்பட்டது.

நான் கேட்டறிந்தது.

மூன்று பேய்கள் சீட்டு விளையாடிக் கொண்டிருந்த பொழுது நான்காவது பேய் உள்ளே நுழைந்தது. அது வந்த வேகத்தில் சீட்டுகள் தரையில் சிதறின. அந்தப்புதிய பேய்க்கு அதிக வயதாகி யிருக்க வில்லை, அனுபவமற்றது அது. பேய்களின் உலகத்துக்கு அது புதிது. பேய்களில் ஒன்று நிமிர்ந்து பார்த்துவிட்டு, சொன்னது. 'மற்றவர்களைப்போல் நீயும் சாவித் துவாரத்தைப் பயன்படுத்தக் கூடாதா?' என்று.

தற்போது பேய்களும் பயிற்றுவிக்கப்பட வேண்டியிருக்கிறது. 'கதவைத் திறக்க வேண்டியதில்லை, எல்லாரும் செய்வதைப்போல் சாவித்துவாரத்தின் வழியே வந்து விடு'.

பெற்றோர்கள் அப்படித்தான் உங்களுக்குக் கற்பித்துக் கொண்டிருக்கிறார்கள் – பாவனையை மேற்கொள்பவர்கள், பார்த்துப் பின்பற்றுபவர்கள் பாராட்டப்படுகிறார்கள். பின்பற்றாத குழந்தை தண்டிக்கப்படுகிறது. கலகக்கார குழந்தை தண்டிக்கப்படுகிறது. கீழ்ப்படிகிற குழந்தை பாராட்டப்படுகிறது. கீழ்ப்படிதல் மிகப்பெரிய தகுதியாகவும், கலகம் தகுதியற்றதாகவும் கருதப்படுகிறது. ஒட்டு மொத்த சமூகமும் உங்களைக் கீழ்ப்படிகிறவராக்க முயல்கிறது, கட்டாயப்படுத்துகிறது. வெகுமதிகள், தண்டனைகள், அச்சம், பாராட்டு, தற்பெருமையை உயர்ந்துதல் என்று பலமுயற்சிகள் அடுத்த வருடைய பாவனைகளை மேற்கொள்ளும்படி உங்களை ஆயிரத்தி யோடு வழிகளில் அது கட்டாயப்படுத்தும், காரணம் ஓர் அடிப்படை அமைப்பை, அடக்கிவைக்கிற ஒழுங்கு முறையை அது உங்களுக்கு வழங்குகிறது. யாரும் அதைத் தவிர்ப்பதற்கில்லை. எனக்குத் தெரிந்து அதைத் தவிர்ப்பதற்கான சாத்தியம் இருந்தாய் தெரிய வில்லை. சற்றேறக்குறைய அது இருந்து கொண்டுதான் இருக்கிறது.

நான் குழந்தைகளுக்குக் கற்பிப்பதாயின் எதைக் கற்றுக் கொடுப்பேன் என்று மக்கள் என்னிடம் கேட்கிறார்கள். நீங்கள் அவர் களுக்குக் கிளர்ச்சி செய்ய கலகம் பண்ணக் கற்றுக் கொடுக்கலாம்.

ஆனால், நீங்கள் அவர்களுக்கு எதைக் கற்றுக் கொடுத்தாலும் அது ஓர் அறிவை அவர்களுக்கு வழங்கும். நீங்கள் அவர்களுக்குக் கலகம் பண்ண கற்றுக் கொடுக்கலாம். ஆனால், அதுவும் ஓர் அறிவை உங்களுக்கு வழங்கும். அவர்கள் கலகக்காரர்களைப் பின்பற்றி நடக்கத் தொடங்குகிறார்கள். மறுபடியும் ஓர் அமைப்புக்குள் அவர்கள் அடைக்கப்படுகிறார்கள்.

குழந்தைகள் பார்த்துப் பின்பற்றுகிறவர்களாகிவிடக் கூடாது என்பதற்காக உலக அளவில் கிருஷ்ணமூர்த்தி பல பள்ளிக் கூடங்களை நடத்தினார். ஆனால் அவர்கள் ஒரே மாதிரி பின்பற்றத் தொடங்கி விட்டார்கள். அந்தப்பிரச்சினை மிகவும் நுட்பமானது. பின்பற்றக் கூடாது என்று நீங்கள் குழந்தைகளுக்குப் போதித்தால் அவர்கள் உங்களைப் பின்பற்றத் தொடங்கிவிடுவார்கள். 'பார்த்துப் பின்பற்றாதீர்கள்' என்று நீங்கள் போதிக்கிறீர்கள், பின்பற்றுவது தகுதியைக் குறைத்துவிடும் என்கிறீர்கள். உண்மையில் அதே உபாயங்களைத்தான் நீங்கள் பயன்படுத்துகிறீர்கள். அவர்கள் பாவனையை மேற்கொண்டால் மற்வர்கள் அவ்ர்களை வெறுக்கிறார்கள், பழித்துரைக்கிறார்கள். அவர்கள் கிளர்ச்சி செய்தால், கலகம் பண்ணினால் பாராட்டுகிறார்கள். வெகுமதி தண்டனை, அச்சம் பேராசை எதுவாயினும் ஒரே இயக்க நுட்பம் (mechanism) தான். அவர்கள் பார்த்துப் பின்பற்றுகிற கலகக்காரர்களாகிறார்கள். ஆனால், ஒரு கலகக்காரர் எப்படி பாவனையை மேற்கொள்பவராய் இருக்க முடியும்?

மனதைத் தவிர்க்க வழியில்லை, ஆனால் அதிலிருந்து வெளியேவர வழி இருக்கிறது. ஒரு சமுதாயத்தில் பிறப்பதை பெற்றோர்களுக்குப் இன்றியமையாத தீமையால் ஏற்றுக் கொண்டுவிட வேண்டும். அது விரும்பத்தகாத தாயினும் சகித்துக் கொள்ளப்பட வேண்டியது. முடிந்த அளவு அதைக் கட்டுத் தளர்ந்ததாய் இருக்க விடுங்கள். அதை முடிந்த அளவு நீர்த்தன்மை உடையதாக்குங்கள். சமூகம் ஒரு மனதை உங்களுக்கு வழங்குகிறது ஆயினும் ஒரு நாள் அந்த மனதை விடவேண்டியிருக்கும் என்று உங்களைக் கவனத்தோடு இருக்கச் செய்கிறது. இது இறுதி மதிப்புடையதாகாது. அது அனுபவிக்கப்பட வேண்டியது. ஆனால், கடந்து செல்லப்பட வேண்டியதும் கூட'. ஒருமனம் கொடுக்கப்பட வேண்டியதுதான்

ஆனால் அந்தமனத்துடன் ஓர் அடையாளத்தையும் கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை. அந்த அடையாளம் கொஞ்சம் தளர்வாக இருந்து விட்டால், மக்கள் வளர்ச்சியுற்ற நிலையில் அதில் இருந்து வெளிவருவது அவர்களுக்கு எளிதாயிருக்கும். அப்போது குறைந்த வலியை, குறைவான துன்பத்தை குறைவான முயற்சியை அவர்கள் பெற்றிருப்பார்கள்.

நீங்கள் பணக்காரர் அல்லது ஏழையாய் இருங்கள், வெள்ளை அல்லது கறுப்பாக இருங்கள், படித்தவராகவோ படிப்பற்றவராகவோ இருங்கள், அது ஒன்றும் வேறுபாட்டை உண்டுபண்ணி விடாது.

நாம் ஒரே படகில் பயணம் செய்து கொண்டிருக்கிறோம், செயற்கைமனம் என்கிற படகு. அதுதான் பிரச்சினை. ஆக, நீங்கள் ஏழையாக இருப்பதில் இருந்து பணக்காரராகி விடமுடியும். அல்லது உங்களுடைய செல்வங்களை உதறிவிட்டு ஒரு பிச்சைக்காரனாகி விடமுடியும். ஒரு புத்த பிட்சுவாய், அல்லது உங்களுடைய செல்வங்களை உதறிவிட்டு ஒரு பிச்சைக்காரனாகி விட முடியும். ஒரு புத்த பிட்சுவாய், துறவியாய் ஆகிவிட முடியும். ஒரு புத்தபிட்சுவாய், துறவியாய் ஆகிவிட முடியும் ஆனால் அது உங்களை மாற்றிவிடாது. நீங்கள் இன்னமும் அதேபடகில்தான் இருப்பீர்கள். உங்கள் பாத்திரங்கள் (roles)தான் மாறும். உங்களுடைய சிறப்பியல்புகளை நீங்கள் மாற்றிக் கொண்டாலும், அடிப்படைச்சாரம் மட்டும் அப்படியே இருக்கும்.

நான் கேட்டறிந்தது:

தம்முடைய தோட்டத்தில் சுற்றிக் கொண்டிருந்த வயசான நாடோடியிடம் கோடீஸ்வரர் சொன்னார், ‘இந்த நிமிசமே நீ இங்கிருந்து வெளியே போய்விட வேண்டும்’ என்று. நாடோடி சொன்னான், ‘இதோபாரும், நீர் உம்முடைய இரண்டாவது கோடியை உருவாக்கிக் கொண்டிருக்கிறீர், நான் இன்னமும் என்னுடைய முதலாவதைப் பெற முயன்று கொண்டிருக்கிறேன். நமக்குள் அதுதான் வித்யாசம் – வேறு பெரியதாய் ஒன்றும் வித்தியாசமில்லை’ என்று.

ஏழை, பணக்காரன், படித்தவன், படிக்காதவன், நாகரிகம் உள்ளவன், நாகரிகமற்றவன், ஆதிவாசி, மேற்கத்தியன், கிழக்கத்தியன்,

கிறிஸ்தவன், இந்து – இதுவெல்லாம் வேறுபாட்டை உண்டு பண்ணிவிடாது. அளவில் வேறுபாடுகள் இக்காலம், தூரத்தில் அல்ல. மதம் முழுவதும் மனதைக் கடப்பதற்கான ஒரு முயற்சியே ஆகும்.

யோகியின் செயல்களில் தூய்மையானது, தூய்மையற்றது என்றில்லை. ஆனால் மற்றவர்களுடையதோ தூய்மையானது, தூய்மையற்றது, இரண்டும் கலந்து என மூன்று தடங்களைக் கொண்டிருக்கும்.

மேற்கில் இதைப்புரிந்து கொள்வது ரொம்பக் கடினம். காரணம் மேற்கில் இரண்டு வகையினங்கள் மட்டுமே உள்ளன. புனிதமானது பாவமானது, தெய்வத்தன்மை உடையது போய்த் தன்மை உடையது, சொர்க்கம் நரகம், வெள்ளை கறுப்பு என்று. அரிஸ்டாட்டிலினுடைய தர்க்க முறை (logiv)யை மேலை நாடுகள் பின்பற்றுகின்றன.

அவற்றுக்கும் அப்பால் கடந்து செல்லக்கூடிய ஒன்று இருப்பதை அது இன்னமும் உணர்ந்தபாடில்லை. ஒரு மேற்கத்திய மனதுக்கு இத்தகைய சூத்திரங்களைப் புரிந்துகொள்வது கடினமாக இருக்கும். அமைப்பு சொல்கிறது, அந்த அமைப்பு சொல்கிறது 'அது எப்படி சாத்தியம் – ஒரு மனிதன் நல்லவனாக அல்லது கெட்டவனாக இருக்கிறான். இரண்டுமல்லாத ஒரு மனிதன் அல்லது மனம் எப்படி சாத்தியப்படும்? – நீங்கள் நல்லவராகவோ அல்லது கெட்டவராகவோ தான் இருக்க வேண்டும். மேற்கத்திய மனங்களுக்கு இரு பகுதிகளாகப் பகுத்தலும் (dichotomy), (இரட்டைக் கோட்பாடு – மனமும், உடலும் வெவ்வேறு எனக் கொள்வது. இரட்டைக் கோட்பாடும் (dualism) எளிதாய் விளங்குகிறது. அதுபாகுபடுத்தல் சார்ந்தது.

சூத்திரம் சொல்கிறது, யோகியின் செயல்கள் தூய்மையானதும் அல்ல, தூய்மையற்றதும் அல்ல காரணம், அவை பூர்வமனத்தில் இருந்து வெளிவருகிறவை. தற்போது பல விசயங்கள் இதில் மறைமுகமாய் குறிப்பிடப்படுகின்றன.

ஒருவர் இறந்து கொண்ருப்பதைப் பார்க்கிறீர்கள். உங்கள் மனம் அரிஸ்டாட்டில் சார்ந்த மனமாயின் இப்படிக் கேள்வி எழுகிறது. கடவுள் நல்லவர் என்றால் மரணம் எதற்காக? கடவுள் விரும்பத்தக்கவர் என்றால் எல்லாமும் விரும்பத்தக்கதாகதானே இருக்க வேண்டும்.

இல்லையேல் சந்தேகம் வந்துவிடுகிறது. அப்போது கடவுள் இருக்க முடியாது. அல்லது, அவர் இருந்தாலும் விரும்பத்தக்கவராய் இருக்கமாட்டார். விரும்பத்தகாத கடவுளுக்கு 'கடவுள்' என்று நீங்கள் எப்படிப்பெயர் சூட்டமுடியும்? கிறிஸ்தவ இறைமையிலில் (theology) பல நூற்றாண்டுகளாகவே இதனை எப்படி விளக்குவது என்கிற பிரச்சினை இருந்து வந்திருக்கிறது. ஆனால் அது சாத்தியமில்லை. காரணம் அரிஸ்டாட்டில் சார்ந்த மனதுக்கு அது சாத்தியமற்றதாகவே இருக்கும். நீங்கள் அதைத் தவிர்க்க முடியும். ஆனால், அதை முற்றாக மறையச் செய்ய உங்களால் முடியாது காரணம் அது பெருமளவு மனதின் அமைவில் (Structure) இருந்தே தோன்றுகிறது.

கிழக்கத்தியர்களாகிய நாம் கடவுளை நல்லவர் என்றோ, கெட்டவர் என்றோ சொல்வதில்லை. எனவே, எது நேரிட்டாலும் அது நிகழ்வாகிறது. அதில் நடைமுறை முக்கியத்துவம் (moral value) எதுவும் இருப்பதில்லை. நீங்கள் அதை நல்லது என்றோ கெட்டது என்றோ கூற முடியாது. நீங்கள் அப்படி அழைப்பதற்குக் காரணம் ஒரு குறிப்பிட்ட மனதை நீங்கள் கொண்டிருப்பதுதான். உங்கள் மனதின் ஒப்பீட்டில் ஒன்று நல்லதாகவும், ஒன்று கெட்டதாகவும் தெரிகிறது.

பாருங்கள்... அடல்ஃப் ஹிட்லர் பிறந்துவிட்டார். தாய் ஹிட்லரைக் கொன்றுவிட்டிருந்தால் அது நல்லதா, கெட்டதா? அந்தத்தாய் ஹிட்லரைக் கொன்று போட்டிருந்தால் உலகத்துக்கு மிகவும் நன்றாயிருந்திருக்குமே என்றுதான் தற்போது நாம் புரிந்து கொள்கிறோம். இலட்சோப லட்சம் பேர் கொல்லப்பட்டார்கள், அதைவிட ஒருவர் கொல்லப்படுவது நல்லதுதானே. ஆனால், அடால்ஃப் ஹிட்லரைக் கொன்று போட்டிருந்தால், அந்தத் தாய் தண்டனைக் குள்ளாகியிருப்பாள். அவளுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டிருக்கும் அல்லது அரசு அவளை சுட்டுத்தள்ளியிருக்கும். நீதிமன்றமும், காவல் துறையும் அவளைப் பெரிய அளவில் தண்டித்திருக்கும். அரசின் செய்கை தவறு என்று யாரும் சொல்ல மாட்டார்கள் காரணம், ஒரு குழந்தையைக் கொல்வது குற்றம். ஆனால், அந்தத் தொடர்பை நீங்கள் கண்டு கொண்டீர்களா? அடால்ஃப் ஹிட்லர் இலட்சோப லட்சம் பேர்களைக் கொன்று

குவித்தார். அவர் உலகத்தை மரணத்தின் விளிம்புக்கே கொண்டு வந்து விட்டார். அதற்குமுன் அப்படியொரு பேராபத்தை எவரும் கொண்டு வந்ததேயில்லை. செங்கிஸ்கான்களும், தமூரலின்களும் அவர்முன் மங்கிப் போய்விடுவார்கள். அவர் எக்காலத்தும் பெரிய கொலைகாரர் ஆவார். ஆனால், என்ன சொல்லட்டும்? அவர் செய்தது நல்லதா, கெட்டதா என்று சொல்வது இன்னமும் கடினமாகவே இருக்கிறது காரணம், வாழ்க்கை ஒரு போதும் பூர்த்தியடைவதில்லை. அது பூர்த்தி அடையவில்லை என்றால் நீங்கள் எப்படி அதை மதிப்பீடு செய்வீர்கள்? அவர் எதைச் செய்திருந்தாலும் அது தகுதியானதாகவே இருக்கக்கூடும். உலகில் உள்ள தவறான நபர்களை அவர் துடைத்தெறிந்திருக்கக் கூடும் தானே? அவர் இல்லாதிருந்தால் உலகம் இன்னும் மோசமாகி விட்டிருக்கலாம்.

நாம் எதைச் சொன்னாலும் குறுகிய மனதுக்கு அது நல்லதாகவே தெரியும். நாம் எதைச் சொன்னாலும் குறுகிய மனதுக்குக் அதுகெட்டதாகவே தெரியும்.

தாவோக்களின் (Taoist) நீதிக் கதை ஒன்று.

ஒரு மனிதனிடம் அழகான குதிரையொன்று இருந்தது. சக்கர வர்த்தியும் பார்த்து பொறாமைப்படுகிற அளவுக்கு மதிப்பு மிக்கதாய் இருந்தது அது. பலமுறை விற்பனை வாய்ப்புகள் வந்தன, மக்கள், அவன் எதிர்பார்க்கிற தொகையைக் கொடுக்கத் தயாராயிருந்தனர். ஆனால், அந்த முதியவனோ சிரித்துக்கொள்வான். 'நான் அந்தக்குதிரையை நேசிக்கிறேன். உங்கள் நேசத்தை எப்படி நீங்கள் விற்பீர்களா? உங்கள் வாய்ப்புக்கு நன்றி, ஆனால், நான் அதை விற்பதாயில்லை' என்று சொல்வான்.

பின்பொருநாள், இரவில் அந்தக்குதிரை திருட்டுப் போயிற்றோ அல்லது என்ன ஆயிற்றோ தெரியவில்லை. காலையில் பார்த்தால் லாயத்தில் (குதிரைத் தொழுவம்) குதிரையைக் காணவில்லை. நகரத்தில் உள்ளவர்கள் திரண்டுவந்து, 'பார்த்தாயா அற்பனே, தற்போது அந்தக்குதிரை காணாமல் போய்விட்டது. நீ பெரியபணக் காரனாகியிருக்க முடியும். இந்த ஊரில் இப்படியொரு பெருந்துன்பம் நேரிட்டதில்லை. நீயோ ஏழை, வயதானவன். நீ அதை விற்றிருக்க வேண்டும், நீ தவறு செய்து விட்டாய்' என்றனர்.

முதியவன் சிரித்தான். 'மதிப்பீடு செய்யாதீர்கள். நல்லது கெட்டது பற்றி எதுவும் பேசாதீர்கள். துன்பம் அல்லது மகிழ்ச்சி பற்றி எதுவும் பேசாதீர்கள். எனக்கு ஒன்று மட்டும் தெரியும். நேற்றிரவு அந்தக்குதிரை லாயத்தில இருந்தது. இன்று காலை அங்கே அது இல்லை, அவ்வளவு தான். ஆனால், நான் அதைப்பற்றி எதுவும் சொல்ல மாட்டேன். நடந்துவிட்டது, நடப்புடன் இருந்துவிட வேண்டும். லாயத்தில் குதிரை இல்லை அவ்வளவுதான். அது நல்லதா கெட்டதா, நடந்திருக்கக் கூடாது, அது துன்பம் என்பதை எல்லாம் மறந்து விடுங்கள்' என்றான்.

மக்கள் அதிர்ச்சியுற்றனர். தாங்கள் அவமதிக்கப்பட்ட உணர்வு அவர்களுக்கு. தங்களுடைய இரக்கத்தைத் தெரிவித்துக் கொள்ள அவர்கள் வந்திருந்தனர், இந்தக் கிழவன் என்னடாவென்றால் தத்துவம் பேசுகிறான்! 'ஆக, இது சரியாகத்தான் படுகிறது. தேவர்கள் எப்போதுமே நியாயமாக நடந்து கொள்கிறவர்கள். இந்த மனிதன் தண்டிக்கப்பட வேண்டியவன்தான்!'

ஆனால், பதினைந்து நாட்களுக்குப் பிறகு குதிரைத் திரும்பி வந்துவிட்டது. அது திருடப்பட வில்லை. காட்டுப்பக்கம் ஓடி விட்டிருந்தது. அதனுடன் பன்னிரண்டு குதிரைகள் வந்திருந்தன, மிகுந்த வலிமையும், அழகும் கொண்டவன விலங்குகள்!

நகரம் முழுவதுமே திரண்டுவந்து, 'இந்த முதியவர் விசயம் தெரிந்தவர்தான். ரொம்பவும் சரியானவர். அது ஒன்றும் பெரிய துன்பம் அல்ல, நாம்தான் தவறாகி விட்டோம்' என்றனர். அவனிடம். 'நாங்கள் வருந்துகிறோம். மொத்த சூழ்நிலையையும் எங்களால் புரிந்துகொள்ள முடியவில்லை, ஆனால், அது பெரிய பாக்கியம். உம்முடைய குதிரை மட்டுமா திரும்பி வந்திருக்கிறது. கூடவே பன்னிரண்டு குதிரைகள்! அத்தகைய அழகும், வலிமையும் மிக்க குதிரைகளை நாங்கள் கண்டதேயில்லை. நீர் பெரிய அளவில் பணம் பண்ணமுடியும்' என்று கூறினர்.

முதியவர் மறுபடியும் சொன்னார், 'அது ஒரு பாக்கியமா, துன்பமா என்பது பற்றிக் கவலைப்படாதீர்கள். யாருக்குத் தெரியும்? வருங்காலம் அறியப்படாதது, வருங்காலத்தைப்பற்றி அறியாத நிலையில் நாம் எதுவும் பேசக்கூடாது. நீங்கள் திரும்பவும் அதே

தவறைச் செய்கிறீர்கள். 'குதிரை திரும்ப வந்து விட்டது, வேறு பன்னிர குதிரைகளுடன் திரும்பியிருக்கிறது' என்று சொல்லுங்கள். அவ்வளவுதான்'. அவர்கள் சொன்னார்கள்', எங்களை முட்டாளாக்க முயலாதீர்கள். நீர்பெரிய அளவில் பணம் சேர்த்து விட்டீர் என்பதை நாங்கள் அறிவோம்' என்று.

ஆனால், ஒருவாரத்திற்குப் பிறகு, அந்த முதியவரின் ஒருமகன் காட்டில் இருந்து வந்த குதிரை யொன்றிற்குப் பயிற்சி அளித்துக் கொண்டிருந்தான், அதைப் பழக்குவதற்கு முயன்றான். குதிரையில் இருந்த அவன் விழுந்தான். உடம்பு முழுக்க முறிவுகள், எலும்பு முறிவுகள். அந்தக்கிழவருக்கு அவன் ஒருவன் தான் ஆதரவா யிருந்தது. மக்கள் சொன்னார்கள், 'இந்தக் கிழவருக்குத் தெரியும்... தற்போது ஏற்பட்டிருப்பது பெரும் துன்பம் என்று. குதிரை வந்ததால் துரதிர்ஷ்டம். வயசான காலத்தில் இவருக்கு உதவ வேண்டிய மகன் செயலற்றுக் கிடக்கிறான். அவன் தான் இவரை ஆதரித்து வந்தான். இனி இவர்தான் மகனுக்குப் பணிவிடை செய்யும்படி இருக்கும், வாழ்நாள் முழுக்க அவன் படுத்த படுக்கையாகவே இருப்பான். அவனுக்கு கல்யாணம் நடப்பதாக இருந்தது. தற்போது, அந்தக் கல்யாணம் நடக்காத காரியம்.

அவர்கள் திரும்பத்திரும்ப வந்து அதையே பேசிக் கொண்டி ருக்கவும், அந்த முதியவர், 'உங்களுக்கு எப்படிச் சொல்வது? நீங்கள் படியும் மறுபடியும் செய்ததையே செய்து கொண்டிருக்கிறீர்கள்.

'என்னுடைய இளம் வயது மகனுக்குப் பல எலும்பு முறிவுகள்' என்கிற மட்டில் சொன்னால் போதும். ஏன் வருங்காலத்துக்குச் செல்கிறீர்கள்? ஏன் வருங்காலத்தை அத்தனை விரைவு கொண்டு அலசி ஆராய்வது? இந்தச் சில நாட்களிலேயே மீண்டும் மீண்டும் உக்கள் வார்த்தைகள் தவறாகிக் கொண்டிருப்பதை நீங்களே பார்த்தீர்கள். ஆனாலும், நிகழ்காலத்தில் இருந்து விலகி, மதிப்பீடு செய்யத் தொடங்குகிறீர்கள்.

ஒருசில நாட்களுக்குப் பிறகு அது நடந்தது, நாடு அண்டை நாட்டுடன் போரில் இறங்கியது. நகரத்தில் உள்ள அத்தனை இளைஞர்களும், படையில் சேர்த்து போரிடும்படி கட்டாயப்படுத்தப் பட்டனர். இந்த முதியவரின் மகனுக்கு எலும்பு முறிவுகள்

இருந்தபடியால் அவன் மட்டும் விடப்பட்டான். அவர்கள் மறுபடியும் சேர்ந்துவந்தனர், அவர்களைப் பேசவிடாமல் முதியவர், 'அமைதியாய் இருங்கள். நீங்கள் எப்போதுதான் இந்த வாழ்க்கையின் சிக்கல்களைப் புரிந்து கொள்ளப் போகிறீர்கள்?' என்றார். இதுதான் கிழக்கத்திய மனோபாவம்.

யோகியானவர் அடிப்படைப் பண்பில், பூர்வமனத்தில் வாழ்கிறார். நடப்பது எதுவாயினும் நடப்பதுதான். அவர் ஒருபோதும் அதை மதிப்பீடு செய்வதில்லை. தன்னுடைய சொந்த இசைவின் பேரில் அவர் எதையும் செய்வதில்லை. பரம்பொருள் அவர் வழியே தங்கு தடையின்றி தொடர்கிறது. அவர் உள்ளீடற்ற ஒரு மூங்கிலாய், புல்லாங்குழலாய் இருக்கிறார். கடவுளிடமிருந்து எது வருகிறதோ அதைத்தன்னிடம் அவர் கொண்டிருக்கிறார். அதனால்தான், அர்ச்சுனனுக்கு கிருஷ்ணர் உபதேசித்ததாக, பகவத் கீதையில் இப்படி வருகிறது. 'கவலைப்படாதே, நீ செய்கிற எதுவும் வன்முறையாகிவிடும், நீ பலரையும் கொல்லப் போகிறாய் என்று எண்ணிக் கொள்ளாதே. கடவுளின் விருப்பம் அதுவானால் அப்படியே ஆகட்டும். அவர் கொல்ல விரும்பினால் கொன்று தீர்ப்பார். அதை உன்மூலமாகவோ அல்லது வேறுயார் மூலமாகவோ அவர் நிறைவேற்றிக் கொள்வார்'. உண்மையில், கிருஷ்ணர் சொல்கிறார் 'அவன் முன்பே கொல்லப்பட்டு விட்டான். நீ அந்த வகையில் ஒரு கருவிதான், எனவே உன்னுடைய செயல்களுடன் உன்னைத் தொடர்புப் படுத்திக் கொள்ளாதே. ஒரு சாட்சியாய் இருந்து விடு' என்று.

**"யோகியின் செயல்கள் தூய்மையானதல்ல,**
**தூய்மையற்றதுமல்ல. ஒழுங்கானது மல்ல,**
**முறைகேடானது மல்ல. மற்றவர்களுடையதோ**
**மூன்று தடங்களைக் கொண்டிருக்கின்றன:**
**தூயது, தூய்மையற்றது, இரண்டும் கலந்தது என்று'**

சாதாரண மனிதர்கள் எதைச் செய்தாலும் – நான் 'சாதாரணம்' என்றதன் மூலம் தங்களுடைய இருப்புணர்வின் மையத்தை அடையாதவர்களை, தங்களுடைய மனங்களால் வாழ்கிறவர்களைக் குறிப்பிடுகிறேன். தங்கள் கருத்துகளுடனும், சிந்தனைகளுடனும், கருத்தியல்களுடனும், புனித நூல்களுடனும், வாழ்பவர்களைக்

குறிப்பிடுகிறேன். அவர்கள் எதைச் செய்தாலும் அவர்களுடைய செயல்கள் தூயதாயினும், தூய்மையற்றதாயினும் அல்லது இரண்டும் கலந்ததாயினும் அவர்கள் சாதாரணர்களே. அவர்களுடைய செயல்கள் தானாக நடப்பதில்லை. அவை இயல்பானவை அல்ல, அது ஆற்றலின் ஒரு பிரவாகமாகாது. அவர்கள் செயல்படுவதில்லை, எதிர்வினை புரிகிறார்கள். அவர்களுடைய பதில் குறிப்பு (response) எதிர்வினையாகும்.

ஜென்குரு லின்சியிடம் யாரோ கேட்டார்கள், 'யாரேனும் வந்து உங்களைத் தாக்கினால் தாங்கள் என்ன செய்வீர்கள்?' அவர் தம்முடைய தோள்களைக் குலுக்கியபடி சொன்னார்,' அவனை வரவிடுங்கள், நான்பார்த்துக் கொள்கிறேன். என்னால் முன்கூட்டியே என்னைத் தயார்ப்படுத்திக் கொள்ளமுடியாது. நான் சிரிக்கலாம் அல்லது அழலாம் அல்லது தாவிக்குதித்து அந்த மனிதனைக் கொன்று போடலாம். என்ன செய்வேன் என்று எனக்குத் தெரியாது. அவனை வரவிடுங்கள். தீர்மானிப்பது அந்தக் கணமேயன்றி நானல்ல. பரம்பொருள் தீர்மானிக்கும், நானல்ல. நான் என்ன செய்வேன் என்பதை என்னால் எப்படிச் சொல்ல முடியும்?' என்று.

ஞானம் பெற்ற ஒருவர் மனத்தின் வழியே வாழ்வதில்லை. தம்மைச்சுற்றி ஓர் அமைப்பை அவர் கொண்டிருப்பதில்லை. அவர் மிகப்பெரிய வெறுமையாயிருப்பார். அந்தக் கணத்தில் கடவுள் எப்படி அவர் மூலம் செயல்படுவார் என்பது யாருக்குத் தெரியும்? அவர் குறுக்கிடமாட்டார், காரணம் குறுக்கீடு செய்யயாரும் இருப்பதில்லை மனம் குறுக்கிடுகிறது. அவர் இனியும் ஒரு மனமாக இருக்கமாட்டார். தாம் சரியானது என்று கருதுகிற ஒன்றைச் செய்வதற்கு அவர் முயல்வதில்லை. தாம் தவறானது என்று கருதுகிற ஒன்றைத் தவிர்ப்ப தற்கும் அவர் முயல்வதில்லை. அவர் எதையும் முயன்று பார்க்க மாட்டார். நடப்பது நடக்கட்டும் என்று கடவுளின் கையில் தம்மை ஒப்படைத்துக் கொண்டுவிடுவார். நல்லதோ கெட்டதோ அதன் பிறகு எது நடந்தாலும் அவர் தலையிடமாட்டார். ஞானம் பெற்ற ஒருவர் பின்னோக்கிப் பார்ப்பதில்லை, ஒருபோதும் மதிப்பீடு செய்வதோ, முன்னோக்கிப் பார்ப்பதோ, திட்டமிடுவதோ இல்லை. அந்தக்கணம் எத்தகைய தாயினும் அதுவே தீர்மானித்துக் கொள்ளட்டும் என்று அவர் விட்டுவிடுவார். அந்தக்கணத்தில் எல்லாமும் ஒருமையத்தில்

சந்தித்துக் கொள்ளும். ஒட்டுமொத்த பிரபஞ்ச இருப்பும் அதில் பங்கேற்கும், யாரும் அதை அறிவதில்லை.

லின்சி கூறினார், 'யாரேனும் என்னதாக்கினால் யாருக்குத் தெரியும்? அந்த யாரோ ஒருவர் கௌதம புத்தராயிருந்து அவர் என்னைத் தாக்கினால், நான் சிரிக்கவே செய்வேன். என்னைத் தாக்குமளவு அவரிடம் இரக்கம் இருந்ததற்காக அவருடைய பாதங் களை நான் வணங்குவேன் என்று அது அந்தக் கணத்தைப் பொறுத்தது. பல செயல்களைப் பொறுத்தவரை ஊகிக்க முடிவதில்லை.

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில், 1990–ஆம் ஆண்டில், மாக்ஸ் ப்ளான்க் என்கிற பெரியவிஞ்ஞானி, மிகப்பெரிய கண்டு பிடிப்புகளில் ஒன்றை நிகழ்த்தினார். பிரபஞ்ச இருப்பு தொடர்ச்சியற்றது என்பதை அவர் கண்டுபிடித்தார். நீங்கள் ஒருபாத்திரத்தில் இருந்து எண்ணெயை மற்றொரு பாத்திரத்துக்கு மாற்றுவதைப் போன்ற தல்ல அது. அந்நிலையில் எண்ணெய் ஒரு தொடர்ச்சியைக் கொண்டிருக்கும். அது ஒரு சிற்றாறு போல் தொடர்ந்து விழுந்தபடி இருக்கும். மாக்ஸ் ப்ளான்க் கூறினார், ஓர் அட்டைப்பெட்டியில் வேர்க்கடலையை கொட்டுகிறபோது அது ஒவ்வொன்றாக தனித்தனியே விழும், தொடர்ச்சியற்றிருக்கும். பிரபஞ்ச இருப்பு(existence)ம் அத்தகையதே என்று. 'ஒட்டுமொத்தவாழ்க்கையும் தொடர்ச்சியற்றதுதான். இந்தத் தொடர்ச்சியற்ற பொருள்களை அவர் 'க்வாண்டா' (quanta) என்றார். இதுவே அவருடைய *இயற்பியல் அலகுக் கோட்பாடு (Quantum therory) ஆகும். (இயற்பியல் அலகுக் கோட்பாடு (Quantum theory) – இயங்குவிதை ஆற்றல், பொருண்மை இவற்றின் மிகச்சிறிய மதிப்பளவு.) 'க்வாண்டா' என்றால் ஒவ்வொன்றும் மற்றொன்றில் இருந்து பிரித்து வேறாக்கப்பட்டது.

தொடர்ச்சியற்றது, இரண்டு பொருள்களுக்கிடையில் ஒரு வெற்றிடம் இருக்கும். தற்போது அந்த வெற்றிடமே எல்லாவற்றையும் பிடித்து இழுத்து வைத்திருக்கிறது, காரணம் இரண்டு பொருள்கள் இணைக்கப்பட்டிருப்பதில்லை. இரண்டு அணுக்கள் ஒன்றாக இணைந்திருக்கவில்லை. அவை நேரடியாகச் சேர்ந்திருக்காது, வெற்றிடமான அண்ட வெளியே எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து

வைக்கிறது. மனவெளியிலும் அப்படித்தான். மனம் குறித்த கோட்பாடு ஒன்று உருவாக்கப்பட வில்லை என்றாலும் அதே நிலைதான்.

இரண்டு எண்ணங்கள் ஒன்றொடொன்று இணைக்கப்பட்டிருக்க வில்லை, அத்துடன் எண்ணங்கள் தொடர்ச்சியற்றதாய் இருக்கின்றன. ஓர் எண்ணம், இன்னோர் எண்ணம், மற்றோர் எண்ணம். இந்த எண்ணங்களுக்கிடையே இடைவெளிகள் உள்ளன. மிகச்சிறிய இடைவெளிகள். அதுவே உங்களுக்குள் இருக்கும் ஆகாயம். அதுவே பூர்வமனம் எனப்படுவது. ஒருமேகம் செல்கிறத. இன்னொரு மேகம் செல்கிறது. இரண்டுக்கும் இடையில் இருக்கிறது ஆகாயம். ஓர் எண்ணம் மாறி இன்னோர் எண்ணம் வருகிறது. அவை இரண்டுக்கும் இடையில் உள்ளது பூர்வமனம். உங்கள் எண்ணங்களுக் கிடையில் தொடர்ச்சி இருப்பதாக நீங்கள் கருதினால் அப்போது உங்களை ஒரு மனமாக நீங்கள் கருதிக் கொள்கிறீர்கள்.

உண்மையில் மனம் என்று எதுவும் இல்லை – எண்ணங்கள் மட்டுமே, தொடர்ச்சியற்ற எண்ணங்கள் உங்களுக்குள் சுற்றிக் கொண்டிருக்கின்றன, அந்த இடைவெளிகளை நீங்கள் பார்க்க முடியாதபடி அவை வேகமாய் செல்கின்றன. இந்த எண்ணங்கள் உங்களுக்குள் இருக்கும் அண்டத்தால் பற்றிக் கொள்ளப்பட்டி ருக்கின்றன. அணுக்கள் வெளியே இருக்கும் ஆகாயத்தால் தாங்கி நிறுத்தப்படுவது போல், எண்ணங்கள் உள்ளிருக்கும் ஆகாயத்தால் தாங்கி நிறுத்தப்படுவதுபோல், எண்ணங்கள் உள்ளிருக்கும் ஆகாயத்தால் தாங்கி நிறுத்தப்படுகின்றன. நீங்கள் பொருள்களைக் கணக்கில் கொண்டால் உடல்சார்ந்தவர், எண்ணங்களைக் கணக்கில் கொண்டால் மனம் சார்ந்தவர். ஆனால் மனமும், பொருளும் தவறானவை. அவை செயல்முறைகள், தொடர்ச்சியற்றவை. இவை யோகாவின் அதிகபட்ச கூட்டுணைவு என்றே நான் கூறுவேன் அதுவெளி, புறவெளி என்று இரண்டில்லை. உங்களுடைய பூர் மனமும், கடவுளின் மனமும் இரண்டாகாது. உங்கள் செயற்கை மனம் கடவுளுடையதில் இருந்து வேறுபட்டது. ஆனால் உங்களுடைய பூர்வமனம் வேறானதல்ல. அது ஒத்திருப்பது.

*சந்தர்ப்ப சூழ்நிலைகள் அவற்றின் நிறைவேற்றத்துக்குச் சாதகமாய் இருக்கும்பொழுது மும்மடிப்புள்ள (three - gold) கர்மாக்களில் இருந்து ஆசைகள் உண்டாகின்றன.*

நீங்கள் ஒரு தூய்மையான, தகுதியான, புனிதமான காரியத்தைச் செய்தால் அந்நிலையில் ஆசைகள் தோன்றும், அவை மேலும் பல நல்ல காரியங்களைச் செய்ய வைக்கும். நீங்கள் ஒரு தூய்மையற்ற காரியத்தைச் செய்தால் அப்போது தோன்றும் ஆசைகள் மேலும்பல தூய்மையற்ற காரியங்களைச் செய்ய வைக்கும், காரணம் நீங்கள் செய்வது எதுவாயினும் அதையே திரும்பத் திரும்பச் செய்யும் ஒரு குறிப்பிட்ட பழக்கத்தை அது உங்களுக்குள் ஏற்படுத்தி விடுகிறது. மக்கள் செய்ததையே திரும்பச் செய்கிறவர்கள். நீங்கள் எதைச் செய்தாலும் அதில் திறமை பெற்று விடுகிறீர்கள். நீங்கள் கலப்பான ஒரு காரியத்தைச் செய்தால், நல்லதும் கெட்டதும் கலந்த ஒரு கலப்பு ஆசை உண்டாகும். ஆனால், எல்லாமே செயற்கை மனங்கள். ஒரு துறவியின் மனமும் இன்னமும் மனமாகவே இருக்கிறது.

நான் கேட்டறிந்தது:

எப்கோஹன், ஒரு சிறந்த தொழிலதிபர். அவர் ஒருயூதர். மரண தண்டனை அளிக்கப்படுவதற்கு முன் தண்டனைக் கைதியாக இருந்தார். அவரைத் தூக்கிவிடும் நாளில் சிறை நிர்வாகி அவரைக் காணவந்தார். அவர் சொன்னர், 'மிஸ்டர், கோஹன், உங்களைத் தூக்கிவிட இந்த அரசுக்கு 100 பவுண்ட்கள் செலவாகும்' என்று. 'மோசமான தொழில்' என்றார் கோஹன், 'என்னிடம் 95 பவுணட் களைக் கொடுங்கள், என்னை நானே சுட்டுக் கொண்டு விடுகிறேன்'.

வியாபாரி எப்போதுமே வியாபாரிதான். அவர் தொழிற்பாங்கில், பணத்தை வரையறையாகக் கொண்டு சிந்திக்கிறார். அது குறித்த திறமை இருந்தது அவரிடம். கவனியுங்கள், நீங்கள் எதைச் செய்து கொண்டிருந்தாலும், அதைத்திரும்பச் செய்கிற மனப்போக்கு உங்களிடம் இருக்கும். மறுபடியும் மறுபடியும் அதைச் செய்வீர்கள், அதுபற்றிய தெரிநிலையோ, உணர்வோ இல்லாமல். ஒன்றைத் திரும்பத் திரும்பச் செய்கிற போது அதுவே ஒரு பழக்கமாய் உங்களைப் பற்றிக்கொண்டு விடுகிறது. ஒரு கட்டத்தில் அந்தப் பழக்கத்தை விடவேண்டும் என்று நீங்கள் விரும்பினாலும் அது முடியாமல் போய்விடுகிறது. நீங்கள் விட விரும்பினாலும் அது

உங்களை விட விரும்பாத அளவுக்கு அந்தப்பழக்கம் வேரூன்றி விடுகிறது.

நான் கேட்டறிந்தது, நடந்தவிசயம்: ஓர் ஆசிரியர், ஏழ்மை காரணமாக, குளிர்காலத்திலும் பருத்தி ஆடைகளையே அணிவார். ஒருசமயம் புயலடித்ததன் காரணமாக மலையில் இருந்த கரடி ஒன்று ஆற்று வெள்ளத்தில் அடித்து வரப்பட்டது. அதன் தலை நீருக்குள் மறைந்திருந்தது. அதன் முதுகுப்பகுதியைக் கண்ட குழந்தைகள், 'டீச்சர், அங்கே பாருங்கள் ஃபர்கோட் (விலங்கின் மென்மயிர்த் தோலாடை) ஒன்று தண்ணீரில் விழுந்துகிடக்கிறது. நீங்களோ குளிரில் சில்லிட்டிருக்கிறீர்கள். உடனே அதை எடுத்துக்கொள்ளுங்கள்' என்றனர். பெரும் தேவையில் இருந்த ஆசியரிரும் அந்த ஃபர் கோட்டை அடைவதற்காக நீரில் குதித்தார். அந்தக் கரடி அவரைப் பற்றிக் கொண்டு, தாக்கியது. பையன்கள் 'டீச்சர், ஒன்று கோட்டைக் கைப்பற்றுங்கள், இல்லையோ அதுபோகட்டும் என்று வந்து விடுங்கள்' என்று கூச்சலிட்டனர், ஆசிரியர் கூவினார், 'நான் ஃபர்கோட்டை விட்டு விட்டேன், ஆனால் அந்த ஃபர்கோட்தான் என்னை விடமாட்டேன் என்கிறது'.

பழக்கங்களிடம் அதுதான் பிரச்சினை. முதலில் நீங்கள் அவற்றை வளர்த்துக் கொள்கிறீர்கள். போகப்போக அவை உங்களுடைய துணை இயல்பாகி விடுகின்றன. பிறகு, நீங்கள் அவற்றை விட விரும்புவீர்கள், ஆனால் அவற்றைவிடுவது அத்தனை எளிதாயிருக்காது. என்ன செய்வது?

நீங்கள் மிகுதியான உணர்வைப் பெற வேண்டியிருக்கும். பழக்க வழக்கங்களை விட முடிவதில்லை. அவற்றை விடுவதற்கு இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று ஒரு பழக்கத்தை விடுவதற்கு மாற்றுப் பழக்கம் ஒன்றை ஏற்படுத்திக் கொள்வது – ஆனால் அது ஒரு பிரச்சினையை மாற்ற இன்னொரு பிரச்சினையை வரவழைத்துக் கொண்ட மாதிரிதான். அது பெரிய அளவில் பயனளிக்காது. ஒரு பழக்கத்தை நீங்கள் தொடர்கிறபோது உணர்வுடன் இருக்க வேண்டும். நீங்கள் அதைத் திரும்பச் செய்தாலும் ஒரு காட்சி பாவத் துடன், கவனத்துடன், விழிப்புடன் இருங்கள். அந்த விழிப்புணர்ச்சி பழக்கத்திலிருந்து உங்களைப் பிரித்து வேறாக்கி விடும். உங்களை யறியாமலே அந்தப்பழக்கத்துக்கு நீங்கள் வழங்கிக் கொண்டிருந்த செயலூக்கம் அதன் பிறகு வழங்கப்படுவதில்லை. மெள்ள மெள்ள அந்தப் பழக்கம் பின்வாங்கி விடும், கால்வாய் அடைபட்டுவிட்டால்

தண்ணீர் அதன் வழியே ஓடிவராது. கொஞ்சம் கொஞ்சமாய் அது மறைந்து விடும்.

ஒரு பழக்கத்தை இன்னொரு பழக்கமாய் மாற்ற ஒரு போதும் முயலாதீர்கள், காரணம் எல்லாப் பழக்கங்களுமே மோசமானவைதாம். நல்ல பழக்கங்கள் கூட கேடு செய்யும், காரணம் அவை பழக்கங்கள். தூய்மையற்ற பழக்கங்களை தூய பழக்கங்களை நல்ல பழக்கங்களாக நீங்கள் மாற்றினால் சமூகத்துக்கு நல்லது. தினமும் பொதுவிடுதி (pub)க்குச் செல்வதைவிட தேவாலயத்துக்குகோ, கோயிலுக்கோ நீங்கள் சென்று வந்தால் அது சமூகத்துக்கு நல்லது. ஆனால், உங்களைப் பொறுத்தவரை அது பெரிய அளவில் துணைபுரியாது. நீங்கள் பழக்கங்களுக்கு அப்பால் செல்ல வேண்டும். அந்நிலையில் அது பயனளிப்பதாயிருக்கும்.

நீங்கள் நெறியோடு வாழவேண்டும் என்று சமூகம் விரும்புகிறது, காரணம், நெறியற்றவரானால் இடர்ப்பாடுகளை உண்டு பண்ணி விடுவீர்கள். சமூகம் அத்தோடு தொலைந்ததுதான். நீங்கள் நெறியோடு வாழ்ந்தாலும் சமூகம் தீர்ந்து போகுந்தான். உங்களுடன் தானும் கவலைக் குள்ளாவது சமூகத்தின் வேலையல்ல. நீங்கள் ஒழுக்கத்தோடு இருந்தால் சமூகம் உங்களுக்கு மாலை அணிவித்து 'நீங்கள் ஒரு நல்லமனிதர்' என்று மகிழ்ச்சியும் ஆரவாரம் செய்யும். சமூகம் ஒருபோதும் உங்களுடன் இடர்ப்பாட்டுக்குள்ளாவதில்லை. ஆனால், நீங்கள் நெடுந்தொலைவு போக வேண்டியிருக்கும். பயணம் இன்னமும் முடிகிறதாயில்லை. தீய பழக்கம் சமூகத்துக்கு எதிரானது, அதே போன்று பழக்கம் உங்களுடைய சொந்த இயல்புக்கு மாறானது.

ஒரு தெள்ளுப்பூச்சி, பொதுவிடுதி யொன்றினுள் மூடப்போகிற நேரத்தில் நுழைந்தது. ஐந்து டபுள்ஸ் காட்ச்சிற்கு 'ஆர்டர்' பண்ணியது. வயிறு முட்டக் குடித்துவிட்டு தெருவில் பாய்ந்தது, எகிறிக்குதித்து, கவிழ்ந்து விழுந்தது. நிதானம் இல்லாமல் எழுந்து, 'நாசமாய்ப்போக. யாரோ என்னுடைய நாயை கொண்டுபோய் விட்டார்கள்' என்று முணகியது.

பல பிறவிகளால், நீங்கள் உணர்விழக்குமளவிற்கு மேலும் மேலும் குடித்துக் கொண்டிருக்கிறீர்கள். எல்லாருமே போதை அடிமைகள்தாம், நீங்கள் மீண்டும் மீண்டும் விழுந்து கொண்டிருக்கிறீர்கள் என்பது உண்மை.

மிகக் கடுமையான பிரச்சினை இது; உணர்வோடு இருப்பது எப்படி? உணர்விழக்காமல் இருப்பது எப்படி? எங்கிருந்து தொடங்குவது? ஆழமாய் வேரூன்றிய பழக்கங்களை எதிர்த்து நிற்காதீர்கள். நீங்கள் தோற்று விடுவீர்கள். ஃபர்கோட்' அத்தனை எளிதாய் உங்களைவிட்டு விடாது. நடுநிலையான பழக்கங்களுடன் தொடருங்கள்.

உதாரணமாக. நீங்கள் உலவச் செல்கிறீர்கள். நீங்கள் உலவிக் கொண்டிருக்கிற உணர்வுடன் இருங்கள். அது நடுநிலை (natural)யான செய்கை. இலாபம் கருதிய முதலீடு அல்ல. நீங்கள் மரங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள், மரத்தை அப்படியே பார்த்தபடி உணர்வுடன் இருங்கள். தெளிவற்ற கண்களுடன் பார்க்காதீர்கள். நட்சத்திரங்களைப் பாருங்கள். நீந்துகிறபோது, நீந்துதலால் உங்கள் உடம்பினுள் என்ன நிகழ்கிறது ஒரு சூரியக் குளியல் எடுக்கிறீர்கள். உள்ளாக எப்படி உணர்கிறிர்கள் என்பதைக் கண்டுபிடியுங்கள். இதமாகவும், அமைதியாகவும் உணர்கிறீர்கள் தானே. நீங்கள் தூங்கும்போது, உள்ளாக எப்படி உணர்கிறீர்கள் என்பதைக் கவனியுங்கள்.

துணிகளின் குளிர்ச்சியை, அறையின் இருளை, வெளிப்புற அமைதியை அல்லது இரைச்சலை உணர முயலுங்கள். திடீரென்று ஒரு நாய் குரைக்கிறது - நடுநிலையான செய்கைகள். உங்கள் உணர்வை முதலில் அவற்றிடம் கொண்டு வாருங்கள். அதன் பிறகு மெள்ளமெள்ள தொடர்ந்து செயல் படுத்துங்கள்.

அடுத்து, உங்கள் நல்ல பழக்கங்கள் உணர்வோடு இருக்க முயலுங்கள். காரணம் கெட்டப் பழக்கங்களைப் போல் நல்ல பழக்கங்கள் அத்தனை ஆழமாய் வேரூன்றுவதில்லை. நல்ல பழக்கங்களுக்காக உங்கள் பங்கில் நிறையவே விட்டுக்கொடுக்கும் படி இருக்கும். எனவேதான் வெகு சிலர் மட்டும் நல்ல பழக்கங்களை வளர்த்துக் கொள்ள முயல்வது. அப்படியே நல்ல பழக்கங்களை வளர்த்துக் கொள்பவர்களும் கூட சில நல்ல பழக்கங்களையே முயன்று பார்க்கிறார்கள், அப்படியே கீழாக பல கெட்ட பழக்கங்கள் இருப்பதும் உண்மை.

முதலில் நடுநிலைமையானவற்றையும், பிறகு நல்லவற்றையும், மெள்ளமெள்ள கெட்டபழக்கங்களையும் அவற்றின் தன்மை, தகுதி உட்பட ஆராய்ந்து பாருங்கள். முடிவாக, ஒவ்வொரு பழக்கமும் உணரப்பட வேண்டியது என்பதை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள்

பழக்கப்படுத்திக் கொண்ட அமைப்பை உணர்ந்து கொண்டுவிட்டால், அதுவே உங்கள் மனமாகும். அந்த நிலைமாற்றம் எப்போது வேண்டுமானாலும் நிகழலாம். திடீரென்று நீங்கள் மனமற்றவராகி விடலாம். உங்கள் வாழ்வில் உள்ள அத்தனை பழக்கங்களும் உணரப்படுகிற பொழுது, நீங்கள் உணர்வற்றநிலையில் அவற்றைச் செய்ய மாட்டீர்கள். செறிவுநிலை வருகிற பொழுது – நூறு டிகிரியில் சற்றும் எதிர்பாராத விதமாய் ஒரு நிலை மாற்றம் ஏற்படும். உங்களை வெறுமையில் (emptiness) நீங்கள் கண்டு கொள்வீர்கள். அதுவே தூய்மையோ, தூய்மையின்மையோ இல்லாத பூர்வமனம்.

> *'அவற்றின் நிறைவேற்றத்துக்கு அனுகூலமான சந்தர்ப்பங்கள் இருக்கும் போது மும்மடிப்புள்ள கர்மாக்களில் இருந்து ஆசைகள் எழுகின்றன?*

நீங்கள் செய்வது எதுவாயினும் ஒரு விதையைப் போல், அது உங்களுக்குள் தங்கிவிடுகிறது. உங்களுக்கு உதவக் கூடிய ஒரு சந்தர்ப்பம் வருகிறபோது அந்த விதை முளைக்கிறது. சில நேரங்களில் பல பிறவிகளுக்கும் அந்த விதையை நாம் சுமந்து செல்கிறோம். சரியான சந்தர்ப்பம், சரியானபருவம் எதிர்ப்படாதிருக்கலாம். ஆனால் அது எப்போது வந்தாலும், அது சிக்கலான பிரச்சினைகளைத் தோற்றுவித்து விடுகிறது. சற்றும் எதிர்பாராத விதமாய் சாலையில் ஒருவரைச் சந்திக்கிறீர்கள், அவரிடம் மிகவே வெறுப்பு கொண்டுவிடுகிறீர்கள். இத்தனைக்கும் அவரை உங்களுக்குத் தெரிந்திருக்காது. அவரைப்பற்றி எண்ணியிருக்கவும் மாட்டீர்கள், கேள்விப்பட்டிருக்க மாட்டீர்கள். முற்றிலும் அந்நியராக இருப்பார் அவர். திடீரென்று அவர்பால் ஈர்க்கப்படுகிறீர்கள், அல்லது அவரிடம் வெறுப்பு கொண்டுவிடுவீர்கள். இந்த மனிதரை இதற்குமுன் எங்கோ சந்தித்த உணர்வு ஏற்படுகிறது. எந்தப்பிறவியிலோ சுமந்திருந்த விதை இப்போது முளைக்கத் தொடங்குகிறது. ஏனோ, எந்தக் காரணமும் இல்லாமல் நீங்கள் துயரத்துக்குள்ளாகி விடுகிறீர்கள். 'நான் எதற்காக மகிழ்ச்சியற்றிருப்பது?' என்று நீங்கள் எண்ணிக் கொள்கிறீர்கள். கண்ணெதிரே காணப்படுகிற உலகில் எந்தக் காரணமும் இருப்பதால் தெரியவில்லை. இந்தத் துன்பத்திற்காகவே நீங்கள் ஒரு விதையைச் சுமந்து வந்திருக்கலாம், உரிய தருணம் வந்து விட்டிருக்கிறது.

ஜூலியா, தலையைத் தொங்கவிட்டபடி தன்னுடைய தந்தையிடம் வந்து, 'அப்பா, அந்தப் பணக்காரன் உல்ஃபை உங்களுக்குத்

தெரிந்திருக்குமே. அவன் என்னை ஏமாற்றி விட்டான். நான் பிள்ளை யாண்டிருக்கிறேன்' என்றாள்.

தந்தை, 'அடக்கடவுளே, அவன் எங்கே இருக்கிறான்? நான் அவனைக் கொன்று போடுவேன். அவனுடைய முகவரியை என்னிடம் கொடு. நான் அவனைத் தீர்த்துக் கட்டிவிடுகிறேன்' என்றார்.

அந்தப் பணக்காரனின் வீட்டுக்குச் சென்று அவனை மடக்கியவர். அவன் என்ன செய்வதாயிருக்கிறான் என்று உரத்த குரலில் கேட்டார். அந்தப் பணக்காரனோ அமைதியாயிருந்தான், 'ரொம்பவே கிளர்ச்சியுற்று விடாதீர். நான் ஒன்றும் ஓடிவிட மாட்டேன். உம்முடைய பெண்ணின் விசயத்தில் நான் நியாயமாய் நடந்துகொள்ள விரும்புகிறேன். அவளுக்கு ஆண்குழந்தை பிறந்தால் 50,000 டாலர்கள் கிடைக்கும், பெண் குழந்தை பிறந்தால் 35,000 டாலர்கள் கிடைக்கும். நேர்மையான ஏற்பாடுதானே?' என்றான்.

பெண்ணின் தந்தை செயலற்றவராய் நின்றார், 'அவருடைய முகத்தில் தெரிந்த கோபக்குறி மாறியது. 'அவளுக்கு கருச்சிதைவு ஏற்பட்டுவிட்டால்... நீ இன்னொரு வாய்ப்பை அவளுக்குக் கொடுப்பாயா?' என்று வேண்டிக் கேட்டார்.

எதிர்பாராதவிதமாய், சந்தர்ப்ப சூழ்நிலைகள் மாறிவிடுகின்றன. தற்போது பேராசை என்கிற விதை முளைவிடுகிறது. அவர் கொலை செய்வதற்காக வந்தார், பணத்தைக் குறிப்பிட்டதும், கொலை செய்யும் நோக்கமே மறந்து விடுகிறது. 'அவளுக்கு இன்னொரு வாய்ப்பு கொடுப்பாயா?' என்று கெஞ்சுகிறார்.

கவனியுங்கள்... தொடர்ந்து உங்களைக் கவனித்திருங்கள், சந்தர்ப்ப சூழ்நிலைகள் மாறுகின்றன. நீங்களும் மாறிவிடுகிறீர்கள். உங்களுக்குள் ஏதோவொன்று முளைக்கத் தொடங்குகிறது, ஏதோவொன்று முடிவுக்குக் கொண்டுவரப்படுகிறது.

பூர்வமனம் உடையவர் அப்படியேதான் இருக்கிறார். எது நடந்தாலும் அதில் கவனமுடன் இருக்கிறார். ஆனால், அதற்கு மேலும் கடந்த காலத்திய ஆசை விதைகள் எதுவும் விட்டு வைக்கப் படுவதில்லை. அவர் தம்முடைய கடந்த காலத்தின் வழியே செயல்படுவதில்லை, எதிர்ச் செயல் புரிவதோடு சரி. எதுமின்மை (nothingness)யில் இருந்து வருகிறது அவருடைய ஏற்புத்தன்மை. சமயத்தில் நீங்களும், வெகு அரிதாகவேணும் அந்த முறையில் நடந்து கொள்கிறீர்கள். நீங்கள் எப்போது அப்படிச் செயல்பட்டாலும்

நீங்கள் பெரிய அளவில் திருப்தியை மனநிறைவை அடைகிறீர்கள். சில நேரங்களில் அப்படி நடக்கிறது.

யாரோ ஒருவர் நீரில் மூழ்கி இறந்து கொண்டிருக்கிறார், நீங்கள் எந்த யோசனையும் இல்லாமல் அப்படியே நீரில் குதித்து விடுகிறீர்கள். அந்தமனிதரை நம்மால் காப்பாற்ற முடியுமா. முடியாதா என்றெல்லாம் எண்ணிப் பார்ப்பதில்லை. அவர் ஒரு இந்துவா, முகம்மதியரா, அல்லது பாவியா புனிதரா அல்லது நீங்கள் ஏன் கவலைப்பட வேண்டும் என்றும் எண்ணுவதில்லை. அவரை காப்பாற்றிக் கரைசேர்த்ததும் ஒரு மனநிறைவு ஏற்படுகிறது உங்களுக்கு. திடீரென்று உங்கள் மனம் ஒரு புறமாய் ஒதுக்கித் தள்ளப்படுகிறது, உங்களுடைய பூர்வமனம் செயல் படத்தொடங்குகிறது. உங்களுக்குள் ஓர் இணக்கம் உண்டாகிறது. நீங்கள் மிகவும் நிறைவாக உணர்கிறீர்கள். உங்களுடைய ஏதுமற்ற நிலை (Nothingness) ஏதோ ஒன்றைத் தோற்று விக்கிற போதெல்லாம் நீங்கள் பரமசுகத்தை உணர்கிறீர்கள்.

ஏதுமற்ற நிலையின் செயல்பாடு பேரின்பம்.

**நினைவுகளும், உளப்பகுதிகளும் ஒரே வடிவத்தைக் கொண்டி ருப்பதால், இனம் இடம் காலம் இவற்றால் வேறுபடுத்தப்பட்டாலும் கூட காரண காரியத்தை தொடர்பு தொடர்கிறது.**

அது தொடர்கிறது... உங்கள் வாழ்க்கை மாறுகிறது. இந்த உடம்பு மறைந்து, நீங்கள் இன்னொரு கருவறையில் பிரவேசம் செய்கிறீர்கள், ஆனால் உங்களுடைய உள்ளார்ந்த வடிவம் உங்களைப் பற்றியிருக்கிறது. நீங்கள் எதைச் செய்தாலும், விரும்பினாலும், அனுபவித்தாலும், குவித்தாலும் ஃபர்கோட் (furcoat) உங்களைக் கெட்டியாய் பிடித்துக் கொண்டுவிடுகிறது. உங்களுடனேயே நீங்கள் அதைச் சுமந்து திரிகிறீர்கள். மரணம், வழக்கமான மரணம். உடலின் அழிவு, மனம் தொடர்கிறது. உண்மையான, இறுதியான மரணம் சமாதி நிலை ஆகும். அதில் அழிவது உடல் மட்டுமல்ல, மனமுந்தான். அதற்குமேலும் பிறப்பென்பது கிடையாது, காரணம், திரும்பிவரும் படியாய் எந்த விதையும் அங்கே விட்டுவைக்கப் படுவதில்லை நிறைவேற்றப்பட வேண்டிய நிலையில் எந்த ஆசையும் இருக்க வில்லை. ஒரு நறுமணத்தைப்போல் எல்லாமும் மறைந்துவிடுகிறது.

**'வாழும் ஆசை சாசுவதமானது, அந்தச் செயல்முறைக்கு தொடக்கம் என்று எதுவும் கிடையாது'**

'இந்த உலகம் எப்போது தொடங்குகியது?' தத்துவ மேதைகள் தொடர்ந்து கேட்டபடி இருக்கிறார்கள். யோகா மிகப்பெரிய விசய மொன்றைச் சொல்கிறது. உலகம் ஒருபோதும் தொடங்கப் படவில்லை. ஆசைக்குத் தொடக்கம் என்பது கிடையாது. காரணம் வாழ்வதற்கான ஆசை சாசுவதமாயிருக்கிறது. ஆசைக்குத் தொடக்கம் இல்லை, ஆனால், முடிவு உண்டு. இது புரிந்துகொள்ளப்பட வேண்டியது. இது ரொம்பவும் முரணானது. ஆனால், நீங்கள் புரிந்து கொண்டால் முக்கியக் கருத்தை உணர முடியும்.

ஆசைக்குத் தொடக்கம் இல்லை, ஆனால் முடிவு உண்டு. ஆசையின்மைக்கோ தொடக்கம் உண்டு, ஆனால் முடிவு கிடையாது. அந்த வட்டம் பூர்த்தியடைகிறது. நீங்கள் உணர்வோடு இருந்தால் முடிவு வந்தடைகிறது, அதன்பிறகு ஆசையின்மை தொடங்கு கிறது.

பற்றின்மைக்கு தொடக்கம் உண்டு, முடிவு இல்லை. 'உலகத் துக்கு தொடக்கம் இல்லை'. கிழக்கத்தியர்களாகிய நாம், 'அது எப்போதும் தொடர்கிறது, ஆனால் அதற்கு முடிவு இல்லை' என்று சொல்லிக் கொண்டிருக்கிறோம். ஒரு புத்தரைப் பொறுத்தவரை, அது முடிந்துவிடுகிறது. அதன்பிறகும் அது இருப்பதில்லை அது ஒரு கனவுமாதிரி தோன்றி, மறைகிறது. ஆனால் நிர்வாணம், கைவல்யம், மோட்சம் இவற்றுக்குத் தொடக்கம் உண்டு. ஆனால், முடிவு கிடையாது. எனவே நாம், 'உலகம் எப்போது தொடங்கியது' என்று நாம் கேட்பதில்லை. நாம் அதைப்பற்றிக் கவலைப்படுவதில்லை, காரணம் அது ஒருபோதும் தொடங்கப்பட்டதில்லை.

கிருஷ்ணர், புத்தர், மகாவீரர் இவர்களுடைய பிறந்த நாள் பற்றி நாம் அதிகக் கவனம் செலுத்துவதில்லை. ஆனால், அவர்கள் ஞானம் பெற்ற நாளில் அதிகக் கவனம் செலுத்துவோம் – காரணம் அது ஒரு போதும் முடிவுறாத ஒன்றின் உண்மையான தொடக்கம் ஆகும். புத்தருக்கு ஞானோதயமான நாள் தனிச்சிறப்பு வாய்ந்தது. நாம் என்றென்றும் அதை நினைவில் கொண்டு, வழிபடுகிறோம். அவர் எப்போது பிறந்தார் என்பது பற்றி யாரும் கவலைப்படுவதில்லை. உண்மையில் அவர் எந்த நாளில் மறைந்தாரோ அதேநாளில் அவதரித்தார் அவருக்கு ஞானம் உண்டானதும். நாம் அவருடைய பிறந்த நாளையும், இறந்த நாளையும் மறந்துவிட்டோம். அவர் ஞானம் பெற்றநாளையே நாம் நினைவில் வைத்திருக்கிறோம். அது – முடிவற்ற ஒன்றின் தொடக்கம்.

ஆசைக்குத் தொடக்கம் இல்லை, அது எப்போதுமே இருந்து கொண்டிருக்கிறது. ஆசையின்மை தொடங்கும் என்றாலும் ஒரு போதும் முடிவதில்லை. ஆசைக்கும் ஆசையின்மைக்கும் இடையில் அந்த வட்டம் பூர்த்தியாயிருக்கிறது. எது ஆசையாய் இருந்ததோ அதுவே ஆசையின்மையானது. அதே ஆற்றல்தான். ஆசையின்மை முடிவதில்லை என்பது உண்மை. ஞானம் பெற்றவர் விடுதலை (முக்தி) அடைகிறார், மீண்டும் வருவதில்லை, காரணம், வளர்ச்சி (evolution) என்பது பின்னோககிச் செல்லாது.

பின்னோக்கிச் செல்ல வழியெதுவும் இல்லை. இறுதிக் குறிக் கோளாய் அமைந்ததை அடையும்வரை நாம் உயர உயரப்போகிறோம். ஆனால், ஆனால், அங்கிருந்து திரும்பவும் வந்து விழுவதில் எந்தப் பொருளும் இல்லை

**'வாழ்வதற்கான ஆசை சாசுவதமானது என்கிற நிலையில், இந்தச் செயல் முறைக்கு தொடக்கம் என்று எதுவும் இல்லை?**

உங்கள் ஆசையை உணர்ந்துகொள்ள முயலுங்கள், காரணம் தற்போது வரை அதுவே உங்களுடைய வாழ்க்கையாய் இருந்தி ருக்கிறது. அதில் அகப்பட்டுக் கொள்ளாதீர்கள். அதைப் புரிந்து கொள்ள முயலுங்கள். எதிர்த்து நிற்க முயலாதீர்கள், அது எப்படி உங்களைப் பற்றிப் பிடிக்கிறது, எப்படி உங்களுக்குள் பிரவேசிக்கிறது, உங்களை முற்றிலும் உணர்விழக்கச் செய்கிறது என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

நான் கேட்டறிந்தது. 'ஏய், என்னிடம் வியக்கத்தக்க ஒரு விலைபேரம் இருக்கிறது. 200 டாலர்களக்கு ஒரு யானையை என்னால் பெற்றுத்தரமுடியும்."

"ஆனால் இஸ்ஸி முட்டாள் தனமாய் பேசாதே. ஒரு யானையை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வது?"

'நீ என்ன முட்டாளா? எத்தனை சாதகமான பேரம் என்பதை எண்ணிப்பார். 200 டாலருக்கு ஒரு யானை எங்கே கிடைக்கும், சொல் பார்க்கலாம்?'

'ஆனால், நான் இருப்பது இரண்டு அறைகள் கொண்ட வீடு, நான் யானையை எங்கே வைத்துக் கொள்வது?

'உண்மையில் இன்னும் நல்ல செய்தியை நான் வைத்திருக்கிறேன். நீ விரும்பினால் 300 டாலர்களுக்கு இரண்டு யானைகளை உனக்குக் கிடைக்கச் செய்வேன்.

'ஆ, இப்ப சொல்றியே அது சரி'

இரண்டு அறைகள் கொண்ட சிறிய வீட்டில் வாழ்கிறதை தற்போது அவன் மறந்துவிட்டான்.

ஆசையைக் கவனியுங்கள். அது உங்களை முட்டாளாக்கி விடுகிறது. அது உங்களை நேர்வழியினின்றும் விலகச் செய்கிறது. அது கனவுகளை நோக்கி உங்களை வழிநடத்துகிறது.

கவனமுடன் இருங்கள்.

ஓர் அடியை எடுத்து வைப்பதற்குமுன், கவனமாய் எச்சரிக்கை யோடு இருங்கள். காலப்போக்கில் ஆசைகள் மறைவதை நீங்கள் காண்பீர்கள், ஆசைகளில் முதலீடு செய்யப்பட்ட ஆற்றல் விடுவிக்கப் பட்டதைக் கண்டு கொள்வீர்கள். ஆசைகள் இலட்சக் கணக்கில், அந்த ஆசைகளில் இருந்து ஆற்றல் விடுவிக்கப்பட்டதும் நீங்கள் ஆற்றலின் மிகப்பெரிய எழுச்சியாகிவிடுவீர்கள். நீங்கள் உயரப்பறக்கத் தொடங்குகிறீர்கள். இயல்பாகவே, ஆற்றல உங்களுக்குள் பொங்கும் ஊற்றாக உள்ளது. ஆற்றலின் அளவு தொடர்ந்து உயர்கிறது, ஒரு நாள் சகஸ்ர தளத்தில் இருந்து பிரவாகமாய் வெளிப்படுத்துகிறது. நீங்கள் ஒரு தாமரையாகிறீர்கள், ஆயிரம் இதழ் விரிக்கும் தாமரையாகி விடுகிறீர்கள்.

முதல் கேள்வி:

**விவேகம், மனதால் அறியும் திறன், ஞானம் பற்றிப் பேசும் போதெல்லாம் 'கிழக்கத்தியர்களாகிய நாம்' என்று அடிக்கடி சொல்கிறீர்கள். தயவு செய்து இந்தச் சொற்றொடரின் பொருளைக் கூறுங்களேன்.**

கிழக்கு என்பது எந்த ஒன்றுடனும் தொடர்புபடுத்தப்படவில்லை. அது அக வெளியின், உள்ளார்ந்த உலகின், உணர்வு நிலையின் குறியீடு, அவ்வளவே. கிழக்கு மதத்தைக் குறிக்கிறது, மேற்கு அறிவியலைக் குறிக்கிறது. ஆக, கீழ்த்திசை நாட்டைச் சேர்ந்த ஒருவர் அறவியல் சார்ந்த மனோபாவத்தைக் கொண்டு விட்டால் அவர் மேற்கத்தியராகி விடுகிறார். அவர் கிழக்கில் வாழலாம், கிழக்கில் பிறந்திருக்கலாம் – அதுவல்ல முக்கியம். அல்லது, மத உணர்வு கொண்ட ஒருவர் மேற்கில் பிறந்திருந்தாலும் அது ஒன்றும் வேறுபாட்டை உண்டுபண்ணிவிடாது, அவர் கிழக்கின் ஒரு பெகுதி யாகி விடுகிறார். இயேசு, ஃப்ரான்சிஸ், எக்காா்ட், விட்கென்ஸ்டின், போயம், ஏன் ஹென்றிதோரு, எமர்சன், ஸ்வீடன் பார்கும்கூட கிழக்கத்தியர்கள்தாம். கிழக்கு ஒரு குறியீட்டுரு (symbolic) என்பதை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள். நான் புவியலில் அக்கறை கொண்டவனல்ல. எனவே நான் 'கிழக்கில் உள்ள நாம்' என்ற சொல்கிறபோதெல்லாம், உள்ளார்ந்த மெய்ம்மை (reality)யை அறிந்தவர்களையே குறிக்கிறேன். 'மேற்கில் உள்ள நீங்கள்' என்று சொல்கிற போதெல்லாம் அறிவியல் சார்ந்த மனத்தையும், தொழில் நுட்பம் சார்ந்த மனத்தையும், அரிஸ்டாட்டில் சார்ந்த மனத்தையும் குறிக்கிறேன். அறிவிற்கு ஏற்புடையதை, கணிதம் சார்ந்ததை குறிக்கிறேன், உள்ளுணர்வு சார்ந்ததை அல்ல.

நீங்கள் அதைப் புரிந்து கொண்டுவிட்டால் பிரச்சினை இருக்காது. மிகப்பெரிய மதங்களெல்லாம் கிழக்கில் தோன்றின. ஒரு மிகப்பெரிய மதத்தை மேற்கு தோற்றுவித்து விடவில்லை.

யூதமதம், கிறிஸ்தவம், இஸ்லாமிய மதம், இந்து மதம், சமணம், புத்தமதம், தாவோ இவை எல்லாமே கிழக்கில் உற்பத்தியானவை. அது பெண்பாலுக்கு உரிய ஒன்றைப் போன்றது, அது அப்படித்தான் இருக்க வேண்டும்,காரணம் ஒவ்வொரு மட்டத்திலும் ஆண் சக்தியும் (Yim) பெண் சக்தியும் (Yang) சந்தித்துக் கொள்கின்றன. ஒரு வட்டம் பகுக்கப்படுகிறது. கிழக்கு பெண்பகுதியாகவும், மேற்கு ஆண் பகுதியாகவும் செயல்படுகிறது.

ஆண் மனம் வலுத்தாக்குதலை மேற்கொள்வது, அறிவியலும் அப்படித்தான். பெண் மனம் வரவேற்கும் பண்புடையது. மதமும் வரவேற்கும் பண்புடையதுதான். அறிவியல் கடுமையாய் முயல்கிறது. இயற்கையை அதன் இரகசியங்களை வெளிப்படுத்தும்படி அது கட்டாயப்படுத்துகிறது. மதமோ காத்திருக்கிறது, பிரார்த்திக்கிறது, வேண்டிக்கொள்கிறது. ஆனால், கட்டாயப்படுத்துவதில்லை. அழைக்கிறது, அழுகிறது, கண்ணீர் விடுகிறது, நயந்து பேசுகிறது, இயற்கையைத் தனது புதிர்களை இரகசியங்களை வெளியிடும்படி கவர்ச்சியான முறையில் தூண்டுகிறது. அது காரணமாகவே தியானம் முயற்சி ஆண்பாலுக்குரியதாயின், வலுத்தாக்குதல் கொண்டதாயின் அது ஒரு ஆய்வுக்கூடம் மாதிரி. இயற்கையை வதை செய்வதற்கான எல்லா வகை உபகரணங்களும் இருக்கும். இயற்கை தனது இரகசியங்களை வெளிப்படுத்தவும், திறவுகோலைக் கையளிக்கவும் கட்டாயப்படுத்தப்படும். ஆண் மனம் தாக்குதல் தொடுப்பது. ஆண் மனம் ஒரு கற்பழிப்பவனின் மனமாகும். அறிவியல் ஒரு கற்பழிப்பு எனலாம். மதம் ஒரு காதலனின் மனம், அது காத்திருக்கும், முடிவின்றிக் காத்திருக்கும்.

ஆக, 'கிழக்கத்தியர்களாகிய நாம்' என்று நான் சொல்கிற போதெல்லாம், எல்லாரையும் – அவர்கள் எங்கே பிறந்திருந்தாலும், எங்கே வளர்க்கப்பட்டிருந்தாலும், நான் கருத்தில் கொள்கிறேன். அவர்கள் உலகெங்கும் பரவியிருக்கிறார்கள், மேற்கு உலகெங்கும் பரவியிருக்கிற மாதிரி. தம்முடைய அறிவியல் கண்டுபிடிப்புக்காக ஓர் இந்தியர் நோபல் பரிசு பெறுகிறபொழுது அவர் மேற்கத்திய அறிவு உடையவர் ஆவார். அவர் அதற்குமேலும் கிழக்கின் ஒரு பகுதியாயிருப்பதில்லை, கிழக்கத்திய பண்பாட்டின் அங்கமாகவும் அவர் இருப்பதில்லை. அவர் தம்முடைய வீட்டை, முகவரியை

மாற்றிக் கொண்டுவிட்டார். அரிஸ்டாட்டிலின் வரிசையில் அவரும் இடம் பெற்று விடுகிறார்.

உங்களுக்குள் கிழக்கு இருக்கிறது, நாம் அதை கிழக்கு என்று அழைப்பதற்குக் காரணம், கிழக்கு என்பது உதய சூரியனன்றி வேறேயென்ன: விழிப்புணர்ச்சி, உணர்ச்சி நிலை, கவனத்தோடு இருத்தல்.

ஆக, நான் 'கிழக்கத்தியர்களாகிய நாம்' என்று குறிப்பிடுகிற போதெல்லாம் குழம்பிவிடாதீர்கள். கீழ்த்திசை நாடுகளை நான் குறிகிக்கவில்லை. கிழக்கத்திய உணர்வு நிலையையே குறிப்பிடு கிறேன். 'இந்தியா' என்ற வார்த்தையைப் பயன்படுத்துகிறபோது நான் இந்தியாவைக் குறிக்கவில்லை. என்னைப் பொறுத்தவரை அதுமிகப் பெரிய விசயம். மற்ற நாடுகளைப்போல் அது வரைபடத்தில் இல்லை. அக ஆராய்ச்சியில் இந்தியா முன்வைத்திருக்கும் மிகப் பெரிய ஆற்றலின் குறியீட்டுருவே அது. ஆக நீங்கள் எங்கு பிறந்தி ருந்தாலும், நீங்கள் கடவுளை நோக்கிச் செல்லத் தொடங்கி விட்டால் நீங்கள் இந்தியராகி விடுகிறீர்கள். சற்றும் எதிர்பாராத விதமாய் உங்களுடைய இந்திய புனிதப்பயணம் தொடங்குகிறது. நீங்கள் இந்தியாவுக்கு வரலாம் அல்லது நீங்கள் வராமல் இருக்கலாம் அது முக்கியக் கருத்தல்ல. ஆனால், உங்களுடைய பயணம் தொடங்கி விட்டது. நீங்கள் அதைத் தெளிவாகப் புரிந்து கொள்கிற நாளில் நீங்களும் கவுதம புத்தர், மகாவீரர், உபநிஷதகால முனிவர்கள், வேத கால ரிஷிகள், கிருஷ்ணர், பதஞ்சலி இவர்களின் ஒரு பகுதியாகி விடுகிறீர்கள். தர்க்கம்சார்ந்த, தொழில்நுட்பம் சார்ந்த அறிவல்ல உங்களுடையது. அது தர்க்கத்திலும் மேம்பட்டதாகிவிடுகிறது.

## இரண்டாவது கேள்வி:

**'இயேசு கிறிஸ்து, புத்தர், மகாவீரர், லாவோட்சு இவர் களெல்லாம் ஞானம் பெற்றவர்கள், உலகெங்கும் சமய அறிவுரை வழங்கிப் பெயர் பெற்றார்கள். நீங்கள் ஏன் அதைச் செய்யவில்லை?'**

நான் அதையே சற்று மாறுபட்ட வழியில் செய்கிறேன். உலகத்தை என்னைச் சுற்றிவரும்படி செய்கிறேன். இதுதான்

என்னுடைய செயல்முறை. புத்தர் தன்னுடைய செயலை மேற்கொண்டார். நான் என்னுடைய செயலை மேற்கொள்கிறேன்.

**மூன்றாவது கேள்வி:**

**இது பிரேம் மாதுரியிடமிருந்து.**

**'தங்களால் அடிக்கடி பேசப்படுகிற முதலைகளில் நானும் ஒருத்தி, போதி சிறந்த தத்துவ மேதைகளில் ஒருவராகி விடுவது நிச்சயம். அது நல்ல விசயந்தான். ஆனால், இந்தப் பரிதாபத்துக்குரிய முதலையின் உணர்வு நிலை பற்றி என்ன கூறுவீர்கள்?'**

பெண்ணின் துயரம் நெடியது காரணம் பெண்பாலுக்குரிய மனம் நீண்ட காலமாகவே துயருற்றிருக்கிறது. பெண் நீண்டகாலமாகவே கொடுமைப்படுத்தப் பட்டிருக்கிறாா் காரணம் அவளுடைய மனம் நீண்ட காலமாய் அடக்கி ஒடுக்கப்பட்டிருந்தது. பல நூற்றாண்டு களாகவே அவள் கொடுமைக்குள்ளானாள், சுரண்டப்பட்டாள், அடக்கி வைக்கப்பட்டாள், அவளுக்கெதிராய் அதிக அளவில் வன்முறை பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. இயற்கையிலேயே அவள் தந்திரசாலி, ஆண்களை வதைக்கும் நுட்பமான முறைகளைத் திட்டமிடுகிற சாமர்த்தியம் அவளிடம் இருக்கிறது. அது இயல்புதான், பலவீனர்களின் வழி அது. எப்போதும் குறைகூறுவது, ஆண்களைப் பால் வகையில் ஈர்ப்பது –அதுவே பலவீனரின் வழியாகும். நீங்கள் அதைப்புரிந்து கொள்ளாவிடில் உங்களால் அதைவிட முடியாது.

பெண்கள் எதற்காக எப்போதும் ஆண்களைக் குறைகூறிக் கொண்டிருக்கிறார்கள்? அவர்களை வதைப்பதற்கான வழிமுறை களைத் தொடர்ந்து கண்டுபிடித்தபடி இருக்கிறாா்களே அது ஏன்? அது தெரிந்தே செய்யப்படுவதலல. நூற்றாண்டுகளாய் அடுக்கி வைக்கப்பட்டு அவர்களுடைய இருப்புணர்வே (being) நச்சுத் தன்மை அடைந்து விட்டது. உண்மையில் அவர்களால் நேரடித்தாக்குதல் தொடுக்க முடியாது.

பல காரணங்ளால் அது சாத்தியப்படாமல் போகிறது. ஒன்று. அவர்கள் ஆண்களை விட எளிதில் நொறுங்கி விடுகிறவர்கள். அவர்கள் கராத்தே, அகிடோ, ஜீடோ என்று கற்றுக் கொண்டாலும்

அது ஒன்றும் பெரிய வேறுபாட்டை உண்டு பண்ணிவிடாது. அவர்களுடைய பலவீனமே அவர்களின் அழகு. அவர்கள் கராத்தே, ஜீடோ, அகிடோ கற்று அதிக தசைகளையும் வலிமையையும் பெறலாம் ஆனாலும் ஏதோ ஒன்றை இழந்து விடுவார்கள், அதை மீண்டும் அவர்கள் பெறமுடிவதில்லை. தங்கள் பெண் தன்மையை பூப்போன்ற மென்மையை, பண்பு நயத்தை இழந்து விடுவார்கள். அது தகுதியான முயற்சியாய் அமைவதில்லை.

பெண் உடைந்து நொறுங்குகிறவள். அவள் எப்படி இருக்க வேண்டும் என்றுதான் எதிர்பார்க்கப்படுகிறாள். அவள் ஆணைவிட மிகுந்த இணைக்க முடையவளாய் இருக்கிறாள். ஆணைக் காட்டிலும் அதிக இசைத்திறனும், சீர்த்தன்மையும் அவளிடம் காணப்படும். ஒரு விசயம். தன்னுடைய எளிதில் உடைந்துபோகும் இயல்பால் அவள் ஆணைப்போல் வலுத்தாக்குதலில் ஈடுபடுவதில்லை. மற்றொன்று; ஆண் அவளைக் குறிப்பிட்ட வழியில் பழக்கப்படுத்தி இருக்கிறான். தன்னுடைய அடிமைத்தலையில் இருந்து விடுபட இடமளிக்காத ஒரு குறிப்பிட்ட மனதை அவளுக்கு வழங்கி இருக்கிறான். அவன். அது அவளுடைய எலும்புக்குள்ளும் ஊடுருவிப் பரவியிருக்கிறது. அவள் அதனை ஏற்றுக் கொண்டு விட்டிருக்கிறாள். ஆனால், சுதந்திரம் என்பது எது நடந்தாலும் உங்களைச் சுதந்திர உணர்விலேயே ஒரு முகப்படச் செய்வதாகும். விடுபடும் ஆசையை நீங்கள் ஒருபோதும் இழப்பதற்கில்லை, காரணம் அதுவே சமயநம்பிக்கைக்கான ஆசை, கடவுட் தன்மையோடு இருப்பதற்கான ஆசை. எது நடந்தாலும் விடுதலையே குறிக்கோளாய் இருக்கிறது.

ஆக, எதிர்த்துக் கலகம் செய்வதற்கு எந்த வழியும் இல்லை என்கிறபோது என்ன செய்வது? அதை எப்படி எதிர்ப்பது? மதிப்பை எப்படிப் பாதுகாத்துக் கொள்வது? ஆக, பெண் சாமர்த்தியமும், தந்திரமும் உடையவளாகிறாள். நேரடித் தாக்குதலாய் அமையாத செயல்களை அவள் மேற்கொள்ளத் தொடங்குகிறாள். அவள் நுட்பமான முறைகளில் ஆணுடன் போரிடுகிறாள்.

அது கிட்டதட்ட ஒரு முதலையாகவே அவளை ஆக்கிவிட்டது. தன் பழிவாங்கும் சந்தர்ப்பத்துக்காக அவள் தொடர்ந்து காத்திருக்கிறாள். அவள் ஒரு பெண், பெண்ணினத்தைப் பிரதிநித்துவப்

படுத்துகிறவள். மற்றபடி குறிப்பாக எதனுடன் சண்டையிடுகிறோம் என்பது பற்றி அவளுக்குத் தெரியாது. பலநூற்றாண்டு இழிவுகள், அவமதிப்புகள் இருக்கவே செய்கின்றன. உங்களுடைய ஆண் உங்களுக்குத் தவறிழைக்காமல் இருக்கலாம். ஆனால், ஆணினத்தின் பிரதிநிதி அவன். நீங்கள் அதை மறக்க முடியாது. இந்த மனிதனை நீங்கள் நேசிக்கிறீர்கள். ஆனால், ஆண்கள் ஏற்படுத்தி வைத்திருக்கும் அமைப்பை உங்களால் நேசிக்கமுடியாது. நீங்கள் இவரை நேசிக்கிறீர் கள், அதற்காக இவரை உங்களால் மன்னித்து விட முடியாது. இந்த மனிதனை நீங்கள் பார்க்கிற போதெல்லாம் ஆணின் புத்திதான் உங்களுக்குத் தெரிகிறது, நீங்கள் தொடங்கி விடுகிறீர்கள்.

இதுமிகவும் உணர்வற்ற நிலையில் செய்யப்படுகிறகாரியம். இது பெண்களுக்குள் ஓர் உணர்ச்சி மிகைப்பை உண்டுபண்ணிவிடுகிறது. ஆண்களைவிட பெண்கள்தாம் அதிகஅளவில் உணர்ச்சி மிகைப்பு (neurosis)க்கு குள்ளாகிறார்கள். இது ஆண்களுக்காகவே கச்சிதமாக உருவாக்கப்பட்ட சமுதாயம், இதில் வாழ்கிற பெண்கள் இத்தகைய அவலத்திற்கு இரையாவது இயல்புதான் அவர்கள் இந்த அமைப்புக்குள் தான் வாழ்ந்தாக வேண்டியிருக்கிறது. எப்படியாவது இந்த அமைப்பில் தங்களைப் பொருத்திக் கொள்ள வேண்டிய நிலையில் அவர்கள் இருக்கிறார்கள். எந்திரத்தனமான பாத்திரத்தை ஆண்கள் இவர்களுக்கு வழங்கியிருக்கின்றனர். இதில் பொருந்த வேண்டுமே என்பதற்காகத் தங்களுடைய சிறகுகுளையும் அவர்கள் இழக்கின்றனர். அவர்கள் எதிர்த்து நிற்கிறார்கள், போரிடுகிறார்கள்; இந்தத் தொடர்ச்சியான சண்டையில் ஒரு உணர்ச்சி மிகைப்பு கண்டிப்பாக ஏற்பட்டிருக்கிறது.

நான் கேட்டறிந்தது:

இனிமையான பண்புடைய முதியவள் ஒருத்தி செல்லப் பிராணிகள் விற்கும் கடைக்குச் சென்றாள். கடைசியின் காட்சி மாடத்தில் ஒரு அழகான நாய் இருக்கிறது. அவள் கடைக்காரரிடம், அந்த நாய் ரொம்பவும் வசீகரமாய் இருக்கிறது, இல்லையா? என்று கேட்டாள்.

அவன் சொன்னான், ‘ஆமாம், மேடம், அது ஓர் அழகான பொட்டை நாய் தான்’ என்று.

முதியவலுக்குக் கோபம் வந்துவிட்டது. 'நான் இந்தவார்த்தையை இதற்கு முன் கேட்டிருக்கிறேன், ஆனால் அது ஒரு நாயின் பொருட்டுப் பயன்படுத்தப்படவில்லை' என்று சொன்னான்.

(கடைக்காரர் பொட்டைநாய் என்று குறிப்பிடுவதற்காக 'litech' என்ற சொல்லைப்பயன்படுத்தினார். அந்தச் சொல்லிற்கு வேசிமகன் என்றொரு பொருளும் உண்டு).

அன்றொரு நாள் 'Bittching' என்றொரு புத்தகத்தை நான் படித்துக் கொண்டிருந்தேன். பால்வகையில் ஈர்த்தல் பற்றிய அந்தப் புத்தகத்தை ஒரு பெண்தான் எழுதியிருந்தாள்.

ஏதோ ஒன்று ரொம்பரொம்பத் தவறாகிவிட்டிருக்கிறது. அது ஒரு பெண்ணினுடைய பிரச்சினை அல்ல, பெண்பருவப் பிரச்சினை. ஈர்ப்பதும், குற்றம் கண்டுபிடிப்பதும், தொடர்ந்து சண்டையிடுவதும் அதற்குப் பரிகாரமாகி விடாது. அது தீ வினை நீக்கும் வழி முறையாகாது. புரிதல் அவசியம்.

உண்மையிலேயே கேள்வி சரிதான். மாதிரி ஒரு முதலை. அவள் போதியிடம் குற்றம் கண்டுபிடிக்கவும், சண்டையிடவும் செய்கிறாள். போதியின் வளர்ச்சி அதையெல்லாம் மீறித்தான் இருக்கிறது. அவன் நிறையவே மாறிவிட்டிருக்கிறான். அந்தப்பெருமை மாதிரிக்கு உண்டு. எப்போதும் சண்டையிட்டு, குறைபேசிக் கொண்டிருக்கிற பெண்ணுடன் நீங்கள் வாழும்படியாகிறபோது இரண்டே வழிகள் தாம் இருக்கின்றன. ஒன்று, நழுவியோடுவது, இல்லை, தத்துவ மேதையாகிவிடுவது. நீங்கள் தப்பிச் செல்கிறீர்கள். அல்லது, எல்லாம் மாயை கனவு என்று எண்ணத் தொடங்குகிறீர்கள் இந்த மாதிரி ஒரு கனவன்றி வேறேயென்ன? நீங்கள் தொடர்பற்றவராகி விடுகிறீர்கள். அது ஆபத்தில் இருந்து தப்பியோடும் வழியும் ஆகும். அங்கே நீங்கள் தூலவகையில் (physically) இருந்தாலும், ஆன்ம வகையில் தொலை தூரத்துக்கு சென்றுவிடுகிறீர்கள். ஒரு தொலை விடத்தை நீங்கள் தோற்றுவித்துக் கொள்கிறீர்கள். மாதுரியின் கூச்சல் உங்களுக்குக் கேட்கும், ஆனால் ஏதோ வேற்றுக்கிரகத்தில் இருந்து ஒலிக்கிறமாதிரி அது இருக்கும். அவள் சப்தம் போட்டால் போடட்டும், மெள்ளமெள்ள நீங்கள் அதில் இருந்து விடுபட்டு

விடுவீர்கள், அதை அலட்சியப் படுத்திவிடுவீர்கள். போதியைப் பொறுத்த வரை அதுசரியானதே.

தற்போது மாதிரி கேட்கிறாள், போதியைப் பொறுத்தவரை அது ரொம்ப நேர்த்தியான விசயந்தான். ஆனால், பரிதாபகரமான முதலை யின் உணர்வுக்கு மதிப்பே கிடையாதா?' எனறு போதி செய்வது போலவே செய்து கொள்ளலாம். அவன் என்ன செய்கிறான்? அவன் மேலும் மேலும் கண்காணிப்பாக இருந்து கொண்டிருக்கிறான். உன்னுடைய சொல்லிலோ, செயலிலோ அவன் காயப்பட்டு விட வில்லை. நீ அவனைத் தாக்கினால் கூட ஏதோ இயல்பான ஒன்று நிகழ்வது போல, அவன் அதைக் கவனித்திருப்பான். பழுத்த இலைகள் மரத்தில் இருந்து உதிர்கின்றன. என்ன செய்யட்டும்? ஒரு நாய் குரைத்துக் கொண்டிருக்கிறது– என்ன செய்ய? ஒருவர் அதையெல்லாம் ஏற்பதைத் தவிர என்ன செய்வது? எது நடந்தாலும் கவனிப்பது ஏற்புத்தன்மை. போதி உன்னைக் கவனித்திருப்பது போல் நீயும் உன்னிடம் கவனமாயிடு. முதலை உன்னுடைய இயற்கைத் தன்மை ஆகாது. இல்லை, அதுயாருடைய இயற்கைத் தன்மையும் அல்ல. அந்த முதலை உன்னுடைய மனம் சுமக்கும் காயங்களால் வந்தது. போதிக்கும் அதற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. வேறுயாரேனும் அந்த மனப்புண்களை ஏற்படுத்தியிருக்கக் கூடும், அல்லது குறிப்பாகயாராலும் செய்யப்படாமல், இந்தச் சமூகத்தின் செய்கையாய் அது இருக்கலாம்.

உணர்ச்சிமிகை (newrotic) ப்பில் நீங்கள் நடந்து கொள்ளும் முறையைக் கவனியுங்கள்.

போதி உன்னைக் கவனிக்கிற மாதிரி, நீயும் உன்னைக் கவனித்துக்கொள்.

ஒரு தொலைவிடம் தோன்றும், தேவையற்ற இடர்பாடுகளை உன்மனம் உண்டுபண்ணிக் கொண்டிருப்பதை நீயே புரிந்து கொள்வாய். ஒரு விழிப்புணர்வை நீசேகரித்துக் கொள்வாய். செயல் களைத் தொடர்ந்து கவனிப்பதன் மூலம் ஒருவர் மனதில் இருந்து பிரிந்து போகிறார், காரணம் அவர் மனதுக்கும் அப்பால் இருக்கிறார்.

நீ அதனைச் செய்யாவிடில் போதி ரொம்பவும் தத்துவார்த்தமாகி விட்டது போல், நீ ரொம்பவும் இழிந்தவளாகி விடுவாய், காரணம், அரசன் உணர்ச்சியற்ற விதத்தில் நடந்து கொள்வதாக நீ எண்ணு கிறாய், அவன் உன்னைவிட்டு தொலைதூரம் போய்விட்டதாகவும் எண்ணிக் கொள்கிறாய். அதனால் முரட்டுத்தனமாக அவனைத் தாக்கவும், அவனுடன் சண்டையிடவும் தொடங்குகிறாய். அவன் உன்னைவிட்டு எங்கோ செல்வதாகப் புரிந்து கொண்டு மேலும் மேலும் அவனைப் பழிவாங்கத் துடிப்பாய். அப்படியெல்லாம் நிகழ்வதற்கு முன், எச்சரிக்கையாகி விடு

நான் கேட்டறிந்தது, ஒருவன் தன்னுடைய மனைவியின் ஈமச்சடங்குகளுக்கான ஏற்பாடுகளைத் தவணை முறையில் ஏற்பாடு செய்தான். ஆனால் சிலமாதங்களுக்குப் பிறகு, பணத்தட்டுப்பாடு காரணமாக பாக்கித் தொகையைச் செலுத்த முடியாமல் போயிற்று. இறந்தோரைப் புதைக்கும் சடங்குகளை மேற்கொண்டவர் ஒருநாள் தொலைபேசியில் 'இதோ பாருய்யா, ஒண்ணு உங்கிட்டேயிருந்து உடனடியாய் எனக்குப்பணம் கிடைக்குமா, இல்லே அவதான் வந்தாகணுமா?' என்று கேட்டார்.

உங்களை நேசிப்பவரே உங்கள் மரணத்தைப் பற்றி எண்ண மிடுகிற சூழ்நிலையை உருவாக்கி விடாதீர்கள்.

முல்லா நஸ்ருத்தீனுக்கு திரைப்படங்கள் என்றால் ஒரே பித்து. தினந்தோறும் இரவு திரையரங்கிற்கு சென்ற விடுவார். ஒருநாள் அவருடைய மனைவி சொன்னாள், 'நீர் ஒரேயொரு நாள் வீட்டில் இருந்தாலும் நான்சாகத்தயார்' என்றாள். அவர் பெண்ணாட்டியைப் பார்த்து, 'எனக்கு இலஞ்சம் கொடுக்கிற வேலை வேண்டாம்' என்றார்.

ஒரு பொழுது போக்குக் கழகத்தின் மதிக்கத்தக்க, மூத்த உறுப்பினர்களுள் ஒருவரின் மனைவி இறந்து போனாள். அவருடைய சக உறுப்பினர்கள் அவரிடம் இரங்கல் தெரிவித்துக் கொண்டனர். ஒருவர் சொன்னார், 'மனைவியை இழப்பது என்பது ஒருவருக்கு ரொம்பவும் கடினமான காரியம்' என்ற. மற்றொரு உறுப்பினர் தாழ்ந்த குரலில் கசப்புடன் சொன்னார்'. கடினமா? அதற்கு சாத்தியமே இல்லை' என்று.

உங்களையறியாமலே அப்படியொரு அருவருப்பான சூழ்நிலையை நீங்கள் தோற்று வித்துவிடுவீர்கள். சில நேரங்களில் மனக்கிளர்ச்சியற்ற கணவன் மீது மனைவி தாக்குதல் தொடுப்பது உண்டு. அவனுடைய அமைதி அவனுக்கு வெறுப்பூட்டுவதாயிருக்கும், எப்படியாவது அந்த அருவருக்கத் தக்க அமைதியைக் குலைத்து அவனைப் பேசவைக்க வேண்டும் என்று முயல்வாள். 'இவர் கொஞ்சம் கோபித்துக் கொண்டாலும் தேவலை என்று எண்ணுவாள், 'என்னை அடித்துத் துவைத்தாலும் பரவாயில்லை. இவரானால் இப்படி முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு மூலையில் நிற்கிறாரே' என்று எண்ணிக் கொள்வாள். நீங்கள் எந்த அளவு அத்தகைய சூழ்நிலையை உருவாக்குகிறீர்களோ அந்த அளவுக்கு உங்களுடைய கணவர் தம்மைக் காத்துக் கொள்வதிலும், விலகிச் செல்வதிலும் முனைப்பாயிருப்பார். மெள்ளமெள்ள அவர் அண்ட வெளியில் பிரயாணிக்கக் கற்றுக் கொள்வார், அவருடைய உடம்புதான் இங்கிருக்கும், அவரோ தொலைதூர நட்சத்திர மண்டலத்துக்குச் சென்று விடுவார்.

இவை ஒழுக்கத்துக்குப் புறம்பான வட்டங்கள். அவர் உங்களுடன் நெருக்கமாகவும், இதமாகவும் இருந்து, உங்களைத் தழுவிக் கொள்ள வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள், ஆனால் அதற்குச் சாத்தியமே இல்லாத சூழ்நிலையையும் நீங்களே உருவாக்கி விடுகிறீர்கள். நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் என்பதை அப்படியே கவனியுங்கள். இந்த மனிதர் குறிப்பாக எதையும் செய்யவில்லை உங்களுக்கு. அவர் உங்களுக்குக் கேடு செய்து விடவில்லை. இரண்டுபேர் ஒத்துப்போகாத சூழ்நிலைகளை நான் அறிவேன் ஆனால் வளர்ச்சியில் அதுவும் ஒரு பகுதிதான். உங்களுடன் முழுமையாக ஒத்துப்போகிற ஒருவரை நீங்கள் கண்டடைய முடியாது. குறிப்பாக, ஆண்களும் பெண்களும் இணக்கமாயிருப்பதில்லை, காரணம் அவர்களுடைய மனங்கள் வெவ்வேறு மாதிரியானவை, செயல்கள் பற்றிய அவர்களது மனோபாவங்களும் முற்றிலும் மாறுபட்டவைதாம். அவர்கள் வெவ்வேறு மையங்களில் இருந்து கொண்டு செயல்படுகிறவர்கள். ஆக, அவர்களிடையே கருத்தொற்றுமை இல்லாதிருப்பது இயல்புதான், ஆனால், அதில் தவறேதுமில்லை. நீங்கள் ஒருவரை

ஏற்று, நேசிக்கிறபோது அவன் அல்லது அவளுடைய உடன்பாடின்மை (disagreement) யையும் விரும்பவே செய்கிறீர்கள். நீங்கள் எதிர்க்கத் தொடங்குவதில்லை, சூழ்ச்சியுடன் கையாள்வதுமில்லை, அடுத்தவர் நோக்கு முறையைப் புரிந்து கொள்ளவே முயல்வீர்கள். உங்களால் மாறுபட்ட கருத்தை ஏற்க முடியாவிட்டாலும், கருத்து மாறுபட்டிருப்பதை ஏற்க முடியும். நல்லது, நம்முடைய கருத்துகள் ஒத்துப்போகவில்லை தான். ஆனால் அதற்காக நாம் சண்டையிட்டுக் கொள்ள எந்த அவசியமுமில்லை' என்று உடன்பாடு கொள்வதும் ஒருவகையில் இணக்கமானதே. எதிர்த்து நிற்பது உங்களிடையே நெருக்கத்தை ஏற்படுத்தாது. உங்களுடைய சண்டையில் பெருமளவு தொண்ணூற்றி யொன்பது சதவீதமும் அடிப்படையற்றவை தாம். அது பெரும்பாலும் தவறான புரிதலையே கொண்டிருக்கும். நம்முடைய சொந்த அறிவை நம்பி குழப்பமடைவோமே தவிர, தம்முடைய அறிவை வெளிப்படுத்த அடுத்தவருக்கு நாம் வாய்ப்பளிப்பதில்லை.

இதிலும் பெண்கள் அதிகஅளவு அச்சத்துக்குள்ளாகிற நிலை தான். மறுபடியும் ஆண்மனம், பெண்மனம் என்கிற பிரச்னைதான். ஆண் அதிக அளவில் விவாதம் பண்ணுகிறவன். ஆணுடன் தர்க்கம் பண்ணினால் அவன் தான் ஜெயிப்பான், இந்த மட்டில் பெண்களுக்குத் தெரியும். எனவே தான் அவர்கள் விவாதத்தில் ஈடுபடுவதில்லை, மாறாக, எதிர்த்து நிற்பது. தர்க்கத்தின் மூலம் செய்ய முடியாததை கோபத்தின் மூலம் அவர்கள் சாதித்துக் கொள்ளப்பார்க்கிறார்கள். அவர்களுக்குக் கோபம் மாற்றாகத் தெரிகிறது. 'ஒன்றுமில்லாததற்கு ஏன் இத்தனை தொல்லை?' என்று எண்ணிக் கொள்கிற ஆண் அவளுடன் இணக்கமாகி விடுகிறான். அது உடன்பாடாகாது, இருவருக்கிடையில் ஒரு தடை என்றே சொல்லவேண்டும்.

அவனுடைய விவாதத்தைக் கவனியுங்கள். அவனுடைய நேர்மைக்கான சாத்தியங்கள் அதில் இருக்கும். காரணம் புறவுலகம் அறிவு பூர்வமாய் அணுகும்படி இருக்கிறது. ஆக, புறவுலகம் பற்றிய கேள்வி எழும்போதெல்லாம் ஆண் நியாயத்துக்குப் பொருத்தமாகி விடுகிற சாத்தியங்கள் அதிகம். ஆனால், அது அகவுலகம் பற்றிய பிர்ச்னை என்றிக போது பெண் நியாயமானவளாகிவிடுகிற சாத்தியங்கள் அதிகம். காரணம் அங்கே அறிவு தேவைப்படுவதில்லை. எனவே, நீங்கள் ஒரு காரை வாங்க வேண்டுமானால், ஆணின்

பேச்சைக் கேளுங்கள், ஒரு தேவாலயத்தைத் தெரிவு செய்வதெனில் பெண்ணின் பேச்சைக் கேட்டுக் கொள்ளுங்கள். ஆனால், அது கிட்டத்தட்ட சாத்தியமில்லை. உங்களுக்கு மனைவி இருக்கும்போது நீங்கள் சுயமாகக் காரைத் தெரிவு செய்து கொண்டுவிட முடியாது. அவள்தான் அதைத் தெரிவுசெய்வாள். அதுமட்டுமல்ல, பின் இருக்கையில் அமர்ந்து எங்கே போகவேண்டும் என்று உத்தரவு போடுவாள்.

உலகப் பொருள்களையும், செயல்களையும் பொறுத்தவரை ஆண் மிகுந்த உண்மையும், துல்லியமும் கொண்டிருப்பதால் ஆணும் பெண்ணும் ஒரு புரிதலை (understanding) மேற்கொள்ள வேண்டும். அவன் தர்க்கத்தின் வழியே செயல்படுகிறவன். அவன் அறிவியல் பூர்வமானவன், அவனிடம் மேற்கத்திய வாடை அதிகம். பெண் உணர்வு பூர்வமாய் செயல்படுகிறவள், அவள் அதிக சமயப்பற்று உடையவளாய், செயல்படுகிறவள், அவள் அதிக சமயப்பற்று உடையவளாய், கீழ்த்திசைக்குரிய இயல்பினாய் இருக்கிறாள். அவளுடைய உள்ளுணர்வு அவளைச் சரியான வழியில் செலுத்தும் சாத்தியங்கள் அதிகம். எனவே, நீங்கள் தேவாலயத்துக்குச் செல்வதாயின் உங்கள் மனைவி சொல்கிறபடி செல்லுங்கள். அகவுலகம் சார்ந்த செயல்களில் அவள் சரி நுட்ப உணர்வுடைய வளாயிருப்பாள். நீங்கள் ஒருவரை நேசித்தால் மெள்ள மெள்ள இந்தப்புரிதல் வந்துவிடும் உங்களுக்கு. காதலர் இருவர்க்கிடையில், ஒரு கருத்து ஒற்றுமை இப்படித்தான் உருவாகிறது மவுனமாய்.

காதல் எப்போதும் புரிந்து கொள்ளும் திறன் உடையது. இரண்டு இராட்சதர்கள் வேற்றுலகத்தில் இருந்து பூமிக்கு வந்தனர். ஒரு சாலையின் வழியே நடந்த போது ட்ராபிக் சிக்னலைக் கண்டனர். முதலாவது இராட்சதன் சொன்னான், ‘அவளுக்கு உன்னைப் பிடிச்சிருக்கணும். அதான் கண் சிமிட்டறா’ என்று. அப்போது ‘சிக்னல்’ மாறியது. இரண்டாவது இராட்சதன் கிசுகிசுத் தான், அட, நிமிசத்துக்கு நிமிசம் மனசை மாத்திக்கிற பொம்பளை மாதிரியில்ல இருக்கு என்று.

பெண்ணுக்கு முடிவு எப்போது மாறும் என்று சொல்வது கடினம். காரணம், அவளுடைய மனம் ஒரு நிலையாயிருக்காது. அதில்

செயல்முறை (process)யைவிட செறிவு (solidity) குறைவாகத்தான் இருக்கும். அதுதான் அவளுடைய அழகும், பொலிவும். அவள் ஆறு போன்றவள், மாறிக்கொண்டேயிருப்பாள். ஆண் மனத்திட்பம் உடையவன், உறுதியானவன், முடிவெடுக்கும் திறன் உண்டு. ஆக முடிவுகள் அவசியப்படுகிறபோது போதி சொல்வதை மாதிரி கேட்டுக் கொள்ளவேண்டும். முடிவுகள் தேவைப்படாது,

ஆற்றின் போக்கில் மிதந்து செல்லலாம், இழுபடலாம் என்கிற நிலையில் மாதுரி சொல்வதை போதி கேட்டுக் கொள்ளும்படி செய்யலாம்.

ஆண்மனதைப் போலவே பெண்மனமும் பல புதிர்களை விடுவிக்க முடியும். ஆனால் அறிவியலுக்கும், மதத்துக்கும் மோதல் இருப்பது போலவே ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் மோதல் இருக்கிறது. ஆணும் பெண்ணும் மோதிக் கொள்வதற்குப் பதிலாக, ஒருவரையொருவர் பாராட்டிக் கொள்கிற நாள் வரும், அந்த அறிவியலும், மதமும் ஒன்றையொன்று பாராட்டிக் கொள்கிற அதே நாளாக இருக்கும். மதம் என்ன சொல்கிறது என்பதை அறிவியல் கவனமாய் கேட்கும், மதமும் அதேபோன்று அறிவியல் என்ன சொல்கிறது என்பதை புரிதலுடன் கேட்கும். செயலாற்றும் எல்லைப் பகுதிகள் வெவ்வேறு என்பதால் அதில் அத்துமீறல் இருக்காது.

பெண் அதிக அளவில் எண்ணுகிறவளாகவும், ஆண் அதிக அளவில் சிந்திப்பவனாகவும் இருக்கிறார்கள். பெண்ணால் நன்றாக உணரமுடியும். சிந்தனை தேவைப்படும் போது ஆண் சொல்வதைக் கேளுங்கள்.

எண்ணம் அல்லது மன உணர்ச்சி தேவைப்படுகிற பொழுது பெண்ணுக்குக் காது கொடுங்கள். சிந்தனையும், உணர்வம் வாழ்க்கையை முழுமைப்படுத்தும். ஆக நீங்கள் காதலில் இருந்தால் 'யின்' (yin) அல்லது 'யாங்' (yang) குறியீட்டுருவாகி விடுவீர்கள். நீங்கள் சீனர்களின் 'யின்', 'யாங்' குறியீட்டைப் பார்த்ததுண்டா? இரண்டு மீன்கள் ஒன்றையொன்று எதிர்கொண்டு ஐக்கியப்படுவதுடன், தங்கள் ஆழ்ந்த இயக்கத்தின் மூலம் ஆற்றலின் வட்டத்தைப் பூர்த்தி செய்யும். ஆணும் பெண்ணும், பெண்ணும் ஆணும், இரவும் பகலும், வேலையும் ஓய்வும், சிந்தனையும் உணர்வும். இவை ஒன்றுக்

கொன்று பகைமை பாராட்டுபவை அல்ல, நிறைவுண்டாக்குகிறவை. நீங்கள் ஒரு பெண்ணை அல்லது ஆணைக் காதலித்தால் உங்கள் இருவருடைய இருப்புணர்வும் மிகப்பெரிய அளவில் உயரும். நீங்கள் பூர்த்தியடைவீர்கள்.

அதனால்தான் நான் சொல்கிறேன், இந்துக்களின் கடவுள் பற்றிய கருத்தமைவுகள் கிறிஸ்தவர்களுடைய, யூதர்களுடைய இஸ்லாமியர்களுடைய அல்லது சமணர்களுடையதைவிட பூர்த்தியா யிருக்கிறது என்று. மகாவீரர் தனித்து நிற்கிறார். அவரைச் சுற்றி எந்தவொரு பெண்ணும் இல்லை. அது ஓர் ஆண் மனம், தனியே, நிறைவேற்று காணப்படுகிறது. அந்த வட்டத்தில் ஒரேயொரு மீன் மட்டுமே, மற்றொரு மீன் இருக்கவில்லை. அது ஓர் அரைவட்டம், அரைவட்டம் என்பது எவ்வகையிலும் வட்டமல்ல, அதனை வட்ட மென்பது அறிவுக்குப் பொருந்தாது. வட்டம் என்றால் முழுமையாக இருக்கவேண்டும். அப்போதுதான் அது வட்டமாக இருக்க முடியும். இல்லையேல் அது எவ்வகையிலும் வட்டமாகாது.

கிறிஸ்தவர்களின் கடவுள் தனித்திருக்கிறார். பெண் பற்றிய கருத்தாக்கம் அவரைச் சுற்றி இருக்கவில்லை. அதனால்தான் கிறிஸ்தவ அல்லது யூதக்கடவுள் ரொம்பவும் ஆண்மைத்தனத்துடன், பழிவாங்கும் உணர்ச்சியும் கோபமும் கொண்டவராய் காணப்படுகிறார். சின்னச் சின்ன பாவங்களுக்கும் அழிவை எற்படுத்த அவர் தயாராக இருக்கிறார். மக்களை எப்போதைக்குமாய் நரகத்தில் தள்ளவும் அவர் தயார். கொஞ்சமும் இரக்கம் இல்லாத கடினம், பாறையைப் போன்று. இந்துக்களின் கடவுள் பற்றிய பொதுக் கருத்து மெய்ம்மை (reality)க்குப் பக்கமாய் இருக்கிறது, அது ஓர் வட்டம். நீங்கள் பார்க்கிற இராமர் சீதையுடன் இருக்கிறார். சிவனை தேவியுடனும், விஷ்ணுவை லட்சுமியுடனும் நீங்கள் காண்பீர்கள். நிறைவளிக்கக் கூடியது எப்போதுமே அங்கிருக்கிறது. மற்ற கடவுள்களுடன் ஒப்பிடு கையில் இந்துக் கடவுள்கள் ரொம்பவும் மனிதத் தன்மையுடைய தாய் இருக்கின்றன.

இந்துக் கடவுள்கள் உங்களுடைய சொந்த உடைமைகள் மாதிரி. அவை உங்கள் நடுவே இருக்கின்றன, உங்களைப் போலவே இருக்கின்றன. அதிகத் தூய்மையும், முழுமையும் கொண்டவை,

ஆனால் உங்களுடன் இணைந்தே இருப்பவை. அவை பிரித்து வேறாக அறியப்பட்டாலும் உங்கள் வாழ்க்கையுடன் ஒன்று படுத்தப் பட்டிருக்கின்றன.

மனிதன் அடிப்படையில் ஒரு குழந்தை எழுபது வயது அல்லது தொண்ணூறு வயது என்றாலும அவன் குழந்தைதான். ஒரு சின்னப் பெண் கூட அடிப்படையில் ஒரு தாய்தான். அந்த வட்டம் இவ்விதமாய் முழுமையடைகிறது.

கிழக்கில், உபநிடத காலத்தில் ரிஷிகள் புதுமணத் தம்பதிகளை வாழ்த்தும் போது அறிவுக்குப் பொருத்தமாக ஒரு கருத்தைச் சொல்வதுண்டு. 'கடவுள் உனக்குப் பத்து குழந்தைகளைக் கொடுக் கட்டும். இறுதியில் உன் கணவனுக்கும் நீ தாயாக இரு' என்று அவர்கள் சொல்வார்கள். ஆக பதினோரு குழந்தைகள். கணவனிடம் இருந்து பத்து குழந்தைகள், கடைசியாக கணவனும் உன் குழந்தையாகி விட – மொத்தம் பதினோரு குழந்தைகள். கணவனும் தன்னுடைய குழந்தையாவதில் மனைவிக்கும் மனநிலைவுதான்.

ஆண் தன்னுடைய தாயைத் தொடர்ந்து காண விழைகிறான். ஒருவன் பெண்ணொருத்தியுடன் காதல் சொல்கிற போது அவன் மீண்டும்தன் தாயைக் காண முயல்கிறான் என்றே சொல்ல வேண்டும். எப்படியோ அந்தப் பெண் அவனுடைய தாயைப்பற்றிய கருத்துருவை (idea) அவனுக்கு வழங்குகிறாள். அவள் பேசுகிற முறை, அவளுடைய முகம், அவளது கண்களின் நிறம் அல்லது அவளுடைய சப்தம் இவை தாயைப் பற்றிய கருத்துருவை மறுபடியும் வழங்குகிறது. அவளது தேகத்தின் வெதுவெதுப்பு அவனிடம் அவள் காட்டுகிற அக்கறை இவற்றில் தாயை அவன் தேடிப்பெறுகிறான். அது கருவறை பற்றிய தேடல்.

பெண்ணின் உடம்புக்குள் ஆண் நுழைவதில் கருவறையை மறுபடியும் அடைகிற உந்துதல் இருக்கிறது. அது அர்த்தமுடையது. பெண்ணின் உடம்புக்குள் ஆண் ஊடுருவிப் பரவுகிற முயற்சி கருவறையை அடையும் முயற்சியன்றி வேறேயென்ன.

உங்களுடைய ஆற்றலுக்கும் ஓர் ஆணின் ஆற்றலுக்கும் இடையே என்ன நடக்கிறது, உண்மையிலேயே தொடர்வது என்ன

என்பதைக் கவனியுங்கள். மெள்ள மெள்ள அந்த ஆற்றல் ஒரு வட்டத்தில் விழத்தொடங்குகிறது.

ஒருவருக் கொருவர் துணையிருக்கிறோம். ஒருவருக் கொருவர் உதவிக் கொள்கிறோம், மகிழ்ச்சியையும் இன்பத்தையும் அடுத்த வருக்கு வழங்குகிறோம். நிறைவாக கடவுள் நிகழ்வதற்கான வாய்ப்பை ஆண்பெண் சந்திப்பின் மூலம் ஏற்படுத்துகிறோம். சமாதி நிலையை அடைகிறபொழுது அன்பு பூர்த்தியடைகிறது. அது சமாதி நிலை இல்லையென்றால் குறைகாணலும, கோபித்தலும், சண்டையிலும், வசீகரித்தலுந்தான் தொடர்ந்து இருந்து கொண்டிருக்கும். அப்படியிருக்கும் பட்சத்தில் உங்கள் அன்பு ஒருபோதும் இணக்கமான முழுமையை எட்டுவதேயில்லை. கடவுளை ஒருபோதும் நீங்கள் காண்பதற்கில்லை, அது அன்பில் மட்டுமே காணக் கூடியது.

**நான்காவது கேள்வி:**

> ***'ஒருவரையொருவர் சார்ந்திருப்பதென்பது ஒரு நேர்த்தியான கருத்தமைவு. ஆனால் முழுமையான சுயநலத்துடன் இருக்கும் படி தாங்கள் எங்களைத் தூண்டுகிற பொழுது அது எப்படி சாத்தியமாகும்?'***

முதலில் ஒரு விசயம் – ஒருவரையொருவர் சார்ந்திருப்பது நேர்த்தியான ஒன்று அல்ல, அது ஓர் கருத்தமைவும் ஆகாது.

அது எவ்வகையிலும் நேர்த்தியானதல்ல. சார்ந்திருத்தல் கசப்பான உணர்வைத்தரும். ஒருவரையொருவர் சார்ந்திருப்பது கசப்பானதுமல்ல, நேர்த்தியானதுமல்ல. அது சமநிலைப்படுத்துவது. அது எந்தப்பக்கமும் சாய்வதில்லை. அது நடுநிலை அமைதி கொண்டது. அது ஒரு கருத்து அல்ல, நடைமுறை. எப்படி இருக்கிறாரோ அப்படியே இருக்கிறது. வாழ்க்கையைக் கவனித்துப் பாருங்கள், ஒன்றையொன்று சாராமல் இருக்கிற எதையும் நீங்கள் காண்பதற்கில்லை. ஒன்றையொன்று சார்ந்திருத்தல் என்கிற கடலில், இருக்கிற எல்லாமும் இடம் பெற்றிருக்கின்றன. அது ஓர் கருத்து அல்ல, கோட்பாடுமாகாது. எல்லாக் கோடுபாடகளையும், தவறான

ஊகங்களையும் விட்டுவிட்டு வாழ்க்கையைக் கூர்ந்து கவனியுங்கள்.

ஒரு சிறிய மரத்தையோ, ஒரு ரோஜாப்புதரையோ கவனித்துப் பாருங்கள், பிரபஞ்சத்தில் எல்லாமும் ஒரு மையத்தை நாடுவவதக் கண்டு கொள்வீர்கள். மண்ணுடன் அது இணைக்கப்பட்டிருக்கிறது. பூமி இல்லையெனில் அது இருப்பதற்கில்லை. அது காற்றைச் சுவாசிக்கிறது. அது வாயு மண்டலத்துடன் தொடர்புடையதாயிருக்கிறது. அது சூரியனிடமிருந்து சக்தியைத் தொடர்ந்து பெறுகிறது. ரோஜாப்பூ ரோஸ் நிறத்தில் இருப்பதற்குக் காரணம் சூரிய ஒளிதான். இவை எல்லாமே காணக் கூடியவையாய் இருக்கின்றன. கடுமையாய் ஆராய்ந்துப் பார்த்தவர்கள் சொல்கிறார்கள் கண்ணுக்குத் தெரியாத இயற்கைப் பாதிப்புகளும் (influences) இருக்கிறதென்று. சூரியன் ரோஜாவிற்கு சக்தியைத் தருவதோடு அது நின்றுவிடுவதில்லை, வாழ்க்கையில் எதுவும் ஒரு வழிப்பாதையாய் இருக்க முடியாது என்று அவர்கள் கூறுகின்றனர். போக்குவரத்து (traffic) ஒரு வழிப்பாதையில் நடைபெறுவதற்கில்லை. இல்லையேல் அது நியாத்துக்குக் கொஞ்சமும் பொருந்தாத வாழ்க்கையாகிவிடும். ரோஜா எதையும் கொடுக்காமல், தொடர்ந்து பெற்றுக் கொண்டே இருப்பதாகிவிடும். இல்லை, ரோஜாவும் சூரியனுக்கு எதையாவது கொடுத்தேயாக வேண்டும். ரோஜா இல்லை எனில், சூரியனுக்கு எதையோ இழந்து விட்ட உணர்வு இருக்கும். அறிவியல் இன்னமும் அதைக் கண்டுபிடித்த பாடில்லை. ஆனால்.[2] மறைவியலார் (occultists) தருவது பெறுவதுமே வாழ்க்கை என்பதை உணர்ந்திருக்கிறார்கள். ஆம், அது ஒரு வழிப் பாதையாய் இருக்க முடியாது. இல்லையேல் ஒட்டு மொத்தச் சமநிலையும் கெட்டுப்போகும். ரோஜா ஏதோ ஒன்றைக் கொடுத்தாக வேண்டும். அது ஒரு மகிழ்ச்சியாக இருக்கக் கூடும். அது நறுமமணத்தைக் காற்றுக்குக் கொடுத்துக் கொண்டிருப்பது நிச்சயம். உண்மையில் ஒரு படைப்பாற்றலை அது கொண்டிருக்கிறது எனலாம், படைப்பாற்றலுடன் இருக்கும் நிலையை

2 *(மறைவியலார் (occulitists) – உலக அறிவுக்கு அப்பாற்பட்டதை, உணர்த்த முடியாத அறிவை நம்புகிறவர்கள் மறைபொருளாய் ஓர் அறிவு உள்ளது. அதனை மனித ஆற்றலுக்கு உட்படுத்த முடியும் என்று அவர்கள் நம்புகின்றனர்.)*

அது உலகிற்கு வழங்குகிறது என்றும் கொள்ளலாம். பூமிரோஜாவைப் படைத்ததில் நிறைவாக உணர்கிறது. ஒரு திருப்தி, மனநிறைவு கிடைக்கிறது பூமிக்கு.

எல்லாமும் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்கிறது. இங்கே ஒன்றுபடுத்தப்படாமல் எதுவும் இல்லை. ஆக, நான் ஒன்றையொன்று சார்ந்திருப்பதாய் கூறும் போது, அதனை ஒரு கருத்தாகவோ, கோட்பாடாகவோ நான் குறிக்கவில்லை.

எதுவும் சுதந்திரமாய் இருப்பதை யாரும் பார்த்ததில்லை. முற்றிலும் சார்ந்திருத்தல் என்பதும் தவறு, காரணம் முற்றாகச் சார்ந்திருக்கிற ஒன்றை எவரும் கண்டறியவில்லை.

ஒரு குழந்தை பிறக்கிறது. அவன் கையாலாகத்வனாய் எல்லா வற்றுக்கும் தன் தாயையே சார்ந்திருப்பவன் என்றா எண்ணுகிறீர்கள்? அந்தத்தாயும் அவனிடமிருந்து ஏதோ ஒன்றைப் பெறுகிறாள் என்பதை நீங்கள் அறிய வில்லையா? உண்மையில் அந்தக் குழந்தை பிறந்த நாளில் அவளும் தாயாகப் பிறக்கிறாள். அதற்கு முன் அவள் ஒரு பெண்ணாக மட்டுமே இருந்தாள். தற்போது அந்தக்குழந்தை பிறந்ததில் பெரிய அளவில் புதுமையான ஒன்று அவளுக்கு நேர்ந்திருக்கிறது. அவள் தாய்மை அடைந்திருக்கிறாள். குழந்தை தாயைச் சார்ந்திருக்கிறது என்பதோடு, தாயும் குழந்தையைச் சார்ந்திருக்கிறாள். தாய்மையில் ஒரு நிச்சயமான பொலிவு கிடைக்கிறது பெண்ணுக்கு, உண்மையில் தாய் இறந்து விட்டால் குழந்தையால் பிழைத்திருக்க முடியாது. குழந்தை இறந்து போனால் தாய் உயிரோடு இருப்பாள் என்றா நினைக்கிறீர்கள்? இல்லை, அந்தத்தாய் இறந்து விடுவாள். பெண் இருக்கவே செய்வாள், ஆனால் அவளுடைய தாய்மை அந்தக் குழந்தையோடு மறைந்துவிடும். குழந்தையைப் பெறுவதற்கு முன் அவள் இருந்ததை விட, தற்போது இன்னும் இழந்து விட்டிருப்பாள். அவள் தொடர்ந்து ஏதோ ஒன்றை இழந்தமாதிரி காணப்படுவாள். அவளுடைய இருப்புணர்வில் ஒரு பகுதி அந்தக் குழந்தையோடு இழக்கப்பட்டிருக்கும். இழக்கப்பட்ட பகுதி ஆறாதரணமாய் எப்போதுமே இருந்து கொண்டிருக்கும்.

எல்லாமும் ஒன்றையொன்று சார்ந்தேயிருக்கிறது.

பூமியைக் கொண்டு ஜீவிக்கிறது மரம். அது பழத்தை உங்களுக்குக் கொடுத்துக் கொண்டேக்கும். நீங்களும் பழத்தைச் சாப்பிட்டபடி இருப்பீர்கள். பிறகு நீங்கள் இறக்கிறீர்கள், பூமி உங்களைத் தின்னும், மரம் பூமியைத் தின்னும்.

அந்தப்பழம்? – உங்களுடைய பேரக்குழந்தைகள் மரத்தின் மூலம் உங்களைத் தின்று கொண்டிருப்பார்கள். எல்லாமே ஒரு சுழற்சிக் குட்பட்டிருக்கிறது. நீங்கள் ஓர் ஆப்பிளைத் தின்கிறீர்கள், அதில் உங்களுடைய தாத்தாவோ, பாட்டியோ அல்லது உங்களுடைய கொள்ளுப்பாட்டன்களோ இருக்கலாம், யார் கண்டது? நன்றாக மென்று, நன்றாகச் சீரணித்துக் கொள்ளுங்கள். இல்லையேல் அந்த முதியவர் நிறைவாக உணர மாட்டார். அவரை மீண்டும் உங்கள் இருப்புணர்வின் ஒரு பகுதியாக்கிக் கொண்டு விடுங்கள். அவர் ஆப்பிளின் மூலம் உங்களைக் காண முயல்கிறார். அவர் மறுபடியும் வந்தாயிற்று.

எல்லாமும் ஒன்றையொன்று சார்ந்திருக்கிறது. ஆக அது விரும்பத்தக்கதும் அல்ல, வெறுக்கத்தக்கது மல்ல. நீங்கள் அதை மதிப்பிட முடியாது. காரணம் விருப்பவும், வெறுப்பும் நம்முடைய மதிப்பீடுகள், விளக்கங்கள். அது ஒரு கருத்து அல்ல, உண்மை.

'ஆனால், எங்களையெல்லாம் முற்றிலும் தன்னலம் கொண்டவராய் இருக்கும்படி தாங்கள் தூண்டுகிறபொழுது அது எப்படி சாத்தியமாகும்?'

'ஆம், நீங்கள் தன்னலை உணர்வுடன் இருந்தால் மட்டுமே அது சாத்தியமாகும். நீங்கள் முற்றிலும் தன்னலத்தோடு இருந்தால் தான் மற்றவர்களுக்கு மகிழ்ச்சியளிப்பதன் மூலமே நாமும் மகிழ்ச்சியோடு இருக்க முடியும் என்பதைப் புரிந்து கொள்வீர்கள். காரணம் வாழ்க்கை ஒன்றையொன்று சார்ந்திருப்பது. தன்னலத்துடன் இருக்கும்படி நான் சொல்கிறபோது உங்களுடைய மகிழ்ச்சியைப் பற்றிச் சிந்தியுங்கள் என்றே நான் சொல்கிறேன். அந்த மகிழ்ச்சியில் நிறையவே தொடர்புற்றிருக்கிறது. நீங்கள் ஆரோக்கியமாக இருக்க விரும்பினால் ஆரோக்கியமானவர்களுடன் வசிக்க வேண்டும். நீங்கள் தூய்மையாக இருக்க விரும்பினால் உங்களுடைய அக்கம் பக்கமும் தூய்மையாயிருக்க வேண்டும். ஒரு தீவைப்போல் நீங்கள்

வாழ்வதற்கில்லை. நீங்கள் மகிழ்ச்சியோடு இருக்க விரும்பினால் உங்களைச் சுற்றி மகிழ்ச்சியைப் பரவவிட வேண்டும். சுற்றிலும் துயரம் கடலாய் சூழ்ந்திருக்க நீங்கள் மட்டும் சந்தோஷத் தீவாய் நடுவில் இருப்பது சாத்தியமில்லை. மகிழ்ச்சியான உலகில்தான் நீங்கள் மகிழ்ச்சியாயிருக்க முடியும். மகிழ்ச்சியான உறவுகளில் தான் நீங்கள் மகிழ்ச்சியைக் காணமுடியும். அழகானவர்கள் நடுவேதான் நீங்களும் அழகாயிருக்க முடியும். ஆக, நீங்கள் அழகாயிருக்க விரும்பினால் உங்களைச் சுற்றிலும் அழகைத் தோற்றுவித்து கொள்ளுங்கள்.

உண்மையில் தன்னலம் உள்ள ஒருவன் பொதுநலத்தையும் விரும்புகிறவனாக இருப்பான். தன்னலம் சுயத்துக்கும் அப்பாற்பட்டது. தன்னல உணர்வோடு இருப்பது புத்தராகவும், இயேசுவாகவும் மாறு வதற்குத்தான். பேரின்பத்தைக் கருத்தில் கொண்டதன் காரணமாகவே மக்கள் தன்னலமுடையவர்களாயிருப்பது. ஆனால், தங்களுடைய இன்பத்தைக் கருத்தில் கொள்கிறபோது அவர்கள் மற்றவர்களுடைய இன்பத்தையும் கருத்தில் கொள்ள வேண்டும். நான் முற்றான சுயநலத்துடன் இருக்கிறேன். என்னுடைய சொந்த நலனையன்றி வேறு எதையும் நான் கருத்தில் கொள்ளவில்லை. ஆனால் அதில், கொல்லைப்புறமாக எல்லாமும் நுழைந்து விடுகிறகின்றன.

உங்களுடைய மகிழ்ச்சியில், இன்பத்தில் எனக்கு அக்கறை இருக்கிறது. இன்புற்றிருக்கும் ஒரு சமுதாயத்தை உருவாக்குவதில் நான் ஆர்வம் கொண்டிருக்கிறேன். காரணம் நீங்கள் மகிழ்ச்சியும், இன்பமும் கொண்டவராயிருந்தால் நான் பெருமளவில் இன்பமும், மகிழ்சியும் கொண்டவனாகி விடுவேன்.

இன்பம் பகிர்ந்து கொள்வதில் அதிகரிக்கிறது. நீங்கள் இன்பத்தைப் பகிர்ந்து கொள்ளாவிட்டால் அது உணர்ச்சியற்றதாகி விடும். உங்கள் பரவசத்தை நீங்கள் பகிர்ந்து கொள்ளாவிடில் சீக்கிரமே நீங்கள் வெறுங்கையராகி விடுவீர்கள். எனவே, தன்னலத் துடன் இருங்கள் என்று நான் சொல்கிறபோது, இதைத்தான் நான் குறிப்பிடுகிறேன்: உங்களுடைய சுயம் (தற்பண்பு) என்னவென்பதை நீங்கள் பகிர்ந்து கொண்டுவிட்டால் ஒவ்வொருவரும் அதில் மறைமுகமாய் இடம்பெற்றிருப்பதை, உட்பட்டிருப்பதை நீங்கள் புரிந்து

கெள்வீர்கள். உங்களுடைய விருப்பம் மேலும் மேலும் பெரிதாகிறது, சிறந்து விளங்குகிறது. பரம்பொருளே அதில் சம்பந்தப்பட்டிருப்பதை நீங்கள் புரிந்து கொள்கிற ஒரு நேரமும் வரவே செய்யும்.

புத்தரைப் பற்றிய ஓர் அருமையான கதை உண்டு.

அவர் சொர்க்கத்தின் வாயிலைச் சென்றடைகிறார். வாசல் திறந்திருக்கிறது, ஆனால், அவர் உள்ளே நுழையவில்லை. வாயிற் காப்போன் சொல்கிறான், 'எல்லாம் சித்தமாயிருக்கிறது, நாங்கள் இலட்சோப லட்சம் ஆண்டுகளாய் காத்திருந்தோம், தற்போது தாங்கள் வந்து விட்டீர்கள். ஒரு மனிதர் புத்தராவது என்பது அரிதாகவே நிகழ்கிறது. உள்ளே வாருங்கள். தாங்கள் எதற்காக அங்கேயே நின்று கொண்டிருப்பது? தங்கள் முகத்தில் ஏன் இத்தனை துயரம்? புத்தர் சொன்னார், 'நான் எப்படிப் பிரவேசிக்க முடியும்? வழியில் இலட்சோபலட்சம் பேர் இன்னும் போராடிக் கொண்டிருக்கிறார்கள். இலட்சக் கணக்கானவர்கள் இன்னும் துயரத்தில் விழுந்து கிடக்கிறார்கள். எல்லாரும் உள்ளே நுழைந்த பிறகுதான் நானும் உள்ளே நுழைவேன்... அது வரையில் இங்கேயே காத்து, நிற்கிறேன்' என்று.

இந்த நீதிக்கதை பல அர்த்தங்களை உட்கொண்டிருப்பது. பரம்பொருள் பற்றிய தெளிவு பெறாதவரைக்கும், எப்படி ஒருவரை ஞானம் பெற்றவராய் கருதமுடியும்? காரணம் இங்கே ஒவ்வொருவரும் மற்றவரின் பகுதிகளாயிருக்கிறோம், ஒருவரில் ஒருவர் உட்பட்டி ருக்கிறோம். நான் உங்களிலும், நீங்கள் என்னிலுமாய் இருக்கிறபோது நான் எப்படி என்னைப் பிரித்து வேறாகப் பார்க்க முடியும்? அது நடவாத காரியம். இந்தக் கதை தனிச் சிறப்பு வாய்ந்தது, உண்மையானது. பரம்பொருள் அறிந்த தெளியப்பட வேண்டியது.

ஒருவர் குறிப்பிட்ட புரிதலை அடைகிறார், ஆனால் அதில் மற்றவர்களும் உட்பட்டிருப்பதை அந்தப் புரிதல் வெளிப்படுத்துகிறது என்பதும், உணர்வுநிலை ஒன்றே என்பதும் உண்மை. தன்னலம் என்பது முழுமையில் ஒன்றாய் கலந்து, படிப்படியாய் மறைவதற்குத் தான், காரணம் முட்டாள்கள் மட்டுமே தங்களைக் காத்து கொள்ள முயல்வது. தங்களைக் காத்துக் கொள்ளும் முயற்சியில் அவர்கள் தொடர்ந்து தங்களை அழித்துக் கொள்கிறார்கள். இயேசு கூறுகிறார்,

'உங்களைக் காத்துக் கொள்ள முயன்றால் இழந்து விடுவீர்கள்' என்று. தன்னலத்துடன் இருப்பதற்கான சிறந்த உத்திகளில் ஒன்றை அவர் உங்களுக்கு வழங்குகிறார்: உங்களைத் தொலைத்து விடுங்கள், கண்டடைவீர்கள். உங்களை இழப்பதன் மூலம் நீங்கள் பெறுகிறீர்கள். மகிழ்ச்சியைப் பரவச் செய்வதன் மூலம் நீங்கள் மகிழ்ச்சியடைவீர்கள். அமைதியைப் பரவச் செய்வதன் மூலம் நீங்கள் அமைதி காண்பீர்கள்.

'ஆனால், உங்களையெல்லாம் தன்னலத்துடன் இருக்கும்படி தாங்கள் தூண்டுகிறபொழுது அது எப்படி சாத்தியமாகும்?'

நீங்கள் முற்றிலும் தன்னலத்தோடு இருந்தால் மட்டுமே அது சாத்தியம். அப்போதுதான் முக்கியக் கருத்தை நீங்கள் கண்டு கொள்ளமுடியும். நீங்கள் கணவன் அல்லது மனைவியாயிருந்தால், ஒரு குடும்பத்தில் வாழ்ந்து கொண்டிருந்தால், கணவன் மகிழ்ச்சியா யிருப்பது உங்களுக்கு அனுகூலம் என்பதைப் புரிந்து கொள்வீர்கள். அவர் துயரத்தில், சோர்வில், கோபத்தில் இருந்தால் நீங்கள் நெடுநாளைக்கு மகிழ்ச்சியோடு இருக்க முடியாது. அவர் உங்களில் விளைவுகளை ஏற்படுத்துவார். ஒவ்வொன்றும் எளிதில் பிறரை மாற்றக் கூடியதுதான். நீங்கள் மகிழ்ச்சியுடன் இருக்க விரும்பினால் உங்கள் குழந்தைகள் ஆடிக்களிப்பதை விரும்புவீர்கள். காரணம் உங்களுடைய ஆற்றல் களி நடம்புரிய அதுவே வழியாகும். அவர்கள் துயரத்துடன், நலக்குறைவாய் மூலையில் உட்கார்ந்திருந்தால், புரிந்து கொள்வதில் மந்தமாயிருந்தால் உங்களுடைய ஆற்றல் உடனே வீழ்ச்சியடைந்து விடும் கொஞ்சம் கவனித்து பாருங்கள், துயருற்று இருப்பவர்களுடன் நீங்கள் பழகும்போது, உங்கள் ஆற்றல் உடனே தாழ்நிலை அடைந்துவிடும்.

அப்போது கணக்கு ரொம்பவும் எளிதாயிருக்கும். நீங்கள் மகிழ்ச்சியாயிருக்க விரும்பினால் மற்றவர்களையும் மகிழ்ச்சியாய் வைத்திருக்க வேண்டும். நீங்கள் அறிவுத்தெளிவைப் பெற விரும்பினால் மற்றவர்களுக்கும் அறிவூட்டுங்கள். நீங்கள் தியானித் திருக்க விரும்பினால், ஒரு தியான உலகைத் தோற்றுவித்து கொள்ளுங்கள். அதனால்தான் சந்நியாசிகளின் சிறந்த

அமைப்பொன்றை புத்தர் உருவாக்கினார். அது கடல் போன்ற சூழல், மக்கள் அதில் வந்து நீராடும்படியானது.

ஒரு இரவுப் பொழுதில் சந்நியாசி ஒருவர் வந்து, 'சந்நியாசிகள் மத்தியில் இருக்கும் போது நான் சங்கடமாய் உணர்கிறேன், காரணம் ஒரு மந்தையில் நானும் ஒரு பகுதியாகிவிட்ட உணர்வு' என்று கூறினார். இது ரொம்பவும் தற்பெருமைக்குரிய மனோபாவம். எல்லாருமே தனித்திருக்க விரும்புகின்றனர். எல்லாருமே தடை யற்றவராய், ஒரு சிகரத்தைப்போல் இருக்க விரும்புகின்றனர். இது அகந்தையின் தந்திரம். நான் உங்களுக்குத் துவராடையை (ochre robe) வழங்குகிறேன், உங்களுடைய பெயர்களை மாற்றுகிறேன். நீங்கள் தனித்தியங்க முடியாத கடலில் மெள்ள மெள்ள காணாமல் போகிறீர்கள். மற்றவர்களுடன் நீங்கள் இரண்டறக் கலந்துவிடுகிறீர்கள். உண்மையில் தற்பெருமை காயமுற்றதாய், அசவுகர்யமாக உணர நேரிடும். ஆனால் அந்தத் தற்பெருமை ஒரு பிணி, விடப்பட வேண்டியது.

எவ்வித மதிப்பும் அற்ற எளியவராய், கலந்து பழகுகிறவராய், இவர் தனிப்பட்டவர் மற்றவர்களில் இருந்து வேறானவர் என்ற எண்ணமே எவருக்கும் ஏற்படாதபடி நடந்து கொள்வதில் ஒரு மகிழ்ச்சி இருக்கிறது. ஆனால், அகந்தையோ ஒரே ஒரு கருத்தைத் தான் கொண்டிருக்கிறது; எப்படி வேறாவது, மாறுபடுவது என்கிற கருத்து.

நான் அந்த சந்நியாசியிடம் அதைச் சொல்லவில்லை. நான் அவரிடம் சொல்ல விரும்பினேன், ஆனால் அது அவரைக் காயப் படுத்திவிடும் என்று எண்ணிக் கொண்டேன். ஆரஞ்சு நிற உடையில் இருப்பதையே அசவுகரியமாய் எண்ணிக் கொள்ளுமளவு அகந்தை அவரிடம் இருந்தது. மந்தையின் ஒரு பகுதியாகிவிட்ட சங்கடம் அவருக்கு – உம்முடைய தலையில் பாதியை சிரைத்துவிட்டால், உம்முடைய மீசை தாடியில் அரைவாசியை மழித்துக் கொண்டுவிட்டால், போகிற இடத்தில் எல்லாம் நீர் மற்றவர்களில் இருந்து வேறாகக் காட்டிக்கொள்ள முடியும் என்று நான் சொல்லவிரும்பினேன். உம்முடைய நெற்றியில் பச்சைக் குத்திக் கொண்டு, யாரும் செய்யாததை எல்லாம் செய்து கொண்டிருந்தால் தனிப்பட்டவராய்

தெரியலாம். நீர் எப்போதுமே தகுதியாகவும், சவுகரியமாகவும் உணர முடியும். தற்பெருமை அதைத்தானே செய்து கொண்டிருக்கிறது.

ரொம்பவும் பிரபலமாகிவிட வேண்டும், தம்முடைய புகைப்படம் பத்திரிக்கைகளில் வரவேண்டும் என்று விரும்பிய ஒரு மனிதரைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர் தம்முடைய தலைமுடியில் பாதின சிரைத்துக் கொண்டு, தாடி மீசையில் பாதியை மழித்துக் கொண்டு நகரத்து வீதிகளில் நடந்து சென்றார். மூன்று நாட்களிலேயே அவர் ஊரறிந்த நபராகி விட்டார். செய்தித்தாள்கள் அவருடைய புகைப்படத்தை வெளியிட்டன, குழந்தைகள் அவரைச் சுற்றி ஓடியாடிக் கெண்டிருந்தணர், அவருக்குப் பின்னால் இருந்து கூச்சலிட்டனர். அவருக்கு இதெல்லாம் ரொம்பவும் பிடித்திருந்தது. நீரும் அதைப்போல் செய்து கொள்ளலலாம்.

அகந்தை விலகியிருக்க விரும்பும். அதனால்தான் அது தவறானதாய் உண்மைக்கு ஒத்து வராததாய் இருப்பது. ஒன்றாயிருக்க விரும்புவது இயல்பு, அதுவே உண்மை. பிரிவினை – விலகல் எல்லாமே பொய்யானவை, ஏமாற்றி தவறாக நினைக்க வைக்கிறவை (illysory). ஒன்று சேர்ந்திருப்பது தான் உண்மை.

**ஐந்தாவது கேள்வி: தங்களுடைய உரையின்போது, 'மகிழ்ச்சிக்கு முயலுங்கள்' என்கிற சொல்லை தாங்கள் பயன்படுத்துகிறீர்கள். என்னுடைய மனம் தாவிக்குதித்து, 'இன்னும் அதிகமாய் உழைக்க வேண்டும், கடினமாய் உழைக்கவேண்டும்' என்கிறது. ஆனால், சரணாகதியை மேற்கொள்ள நான் எப்படிச் செயல்படுவது? அது ஆர்வக் கோளாறாகத் தெரிகிறது.'**

இது அமிதாவிடமிருந்து.

அவளுடைய மனம் வேலையுடன் பொருந்திக் கொள்கிற சிறப்புடையது. வேலை மதிப்புடையது, விளையாட்டு மதிப்பு இல்லாதது. முயன்று அடையக் கூடியதெல்லாம் உழைப்பின் மூலமே அடையப்படுகிறது. அது அவளுடைய மனதில் ஆழப்பதிந்துவிட்ட ஓர் பழக்கம். ஆனால், இதனை எவருக்கும் கற்பிக்க முடியும். வேலைக்கான நன்நெறிக் கோட்பாடுகளுடன் (work - ethics) உலகம்

வாழ்கிறது. விளையாட்டு சகித்துக் கொள்ளப்படுகிறது. வேலையோ பாராட்டப்படுகிறது.

இங்கே கூட நான் சரணாகதி பற்றிப் பேசும்போது, வரவேற்கும் பண்பு மற்றும் பெண் தன்மை பற்றிப் பேசும் போது உங்கள் மனம் திடீரென எழும்புகிறது. ஏதேனும் ஓர் ஆதாரவைக் கண்டு கொண்டு விட்டால் உடனே அது துள்ளிக் குதித்து 'ஆகா, சரி' என்கிறது. 'முயன்று அடைதல்' என்கிற வார்த்தையே உங்களுக்குள் ஒரு சங்கிலித் தொடராய் எண்ணங்களைத் தொடங்கி விடுகிறது. முயன்று அடைதலா? – உழைப்பு கடின உழைப்பு தேவைப்படும். ஒரு தொடர்ச்சியைத் தரக்கூடிய எந்த ஒன்றுக்காகவும் காத்திருந்து அக்கறையோடு கவனித்துக் கொண்டிருக்கிற மனதுக்கு, 'முயன்று அடைதல்' என்ற வார்த்தை தூண்டு விசையாகி விடுகிறது.

அப்படித்தான் நீங்கள் என்னைச் செவிமடுத்துக் கொண்டிருப்பது. நான் பாரமான (சரக்கு நிறைந்த) வார்த்தைகளை, பல்வேறு வழிகளில் நீங்கள் விளக்கக்கூடிய வார்த்தைகள், பல்வேறு உட்பொருள் கொண்ட வார்த்தைகளை நான் பயன்படுத்துகிறேன். நான் மொழி நடையைப் பயன்படுத்த வேண்டியிருக்கிறது. கருத்தை வெளியிடும் அத்தனை முறைகளுமே ஆபத்தானவைதாம். 'முயன்று அடைதல்' என்கிற வார்த்தையைக் கேட்டவுடனேயே வேலையோடு பொருந்துகிற மனம், உடனே செயல்பாட்டுக்குத் தயாராகிவிடுகிறது. அந்நிலையில், நான் என்ன சொல்கிறேன் என்பதைக் கூட நீங்கள் கவனிக்க மாட்டீர்கள். 'நீங்கள் அடைவதற்கு முயலாமல் இருக்கும்போதுதான் அடைவது சாத்தியம்' என்று நான் கூறுகிறேன். அடைவதற்கான அத்தனை முயற்சிகளையும் நீங்கள் கைவிடுகிற போதே அது சாத்தியம். அடைதற்கான முயற்சி தொடர்ந்து தடைகளைத் தோற்றுவித்தபடி இருக்கும். அவை உங்களுக்கும் மெய்ம்மை (reality)க்கும் இடையிலான தடைகள்.

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு.

ஒரு போலீஸ்காரர், சிறிய கிராமமொன்றில் இருபது ஆண்டுகள் இருந்தும் அங்குள்ளவர்களின் மதிப்பைப் பெற்றிருக்கவில்லை. உள்ளூர் கசாப்புக் கடைக்காரன் அல்லது அஞ்சல் நிலைய ஊழியர் மாதிரி அவரும் அந்த மக்களுள் ஒருவர்தான். ஆனால், ஏதோ

மேற்கத்திய சினிமாவில் வரும் நீதிபதிபோல் தம்மை அவர் பாவித்துக் கொண்டார். சின்னச் சின்ன சட்டமீறல்களும் ஸ்காட்லாந்து யார்டு கவனிக்க வேண்டிய குற்றம் போல் அவருடைய கண்ணுக்குத் தெரியும். கடமையில் தமக்குள்ள ஈடுபாட்டின் காரணமாக அந்த ஊரில் கிட்டத்தட்ட எல்லாருக்குமே 'சம்மன்' (அழைப்பாணை) அனுப்பிய பெருமை அவருக்கு உண்டு, அவருடைய பதவிக் காலம் முடிவடையம் தருணம் நெருங்கிக் கொண்டிருந்தது. அப்போதுதான் வட்டார மதகுரு (vicar)வின் மீது தாம் எந்த வழக்கும் பதியவில்லை என்பது அவருடைய நினைவுக்கு வந்தது. அந்த ஆளை இத்தனை காலமும் எப்படி விட்டு வைக்கப்போயிற்று என்று எண்ணிக் கொண்டார். அவரை நீதி விசாரணைக்குட்படுத்தாமல் தாம் பதவி விலகுவதற்கு அவருடைய கர்வம் இடமளிக்க வில்லை. அவருடைய வேலையில் குற்றம் கண்டு பிடிக்கும் படியாய் எதுவும் இல்லை. ஆனால், அந்த மதகுரு சைக்கிளில் போய்க் கொண்டிருந்தபோது ஒரு அருமையான திட்டம் தோன்றியது இவருக்கு. கிராமத்து மலை அடிவாரத்தில் மதகுருவிற்காக இவர் காத்திருந்தார். அந்த மதகுரு சைக்கிளில் வரும் போது அடிதூரத்தில் அவரைத் தடுத்து நிறுத்துவது, தம்முடைய பாதத்தில் அவர் சைக்கிளை ஏற்றிக் காயம் பண்ணிவிட்டார் சைக்கிளில் ப்ரேக் இல்லை என்ற குற்றம் சாட்டுவது எனத் திட்டமிட்டுக் கொண்டார். மதகுரு அனிச்சை செயலாக (reflex) போலீஸ் காரரின் காலணிகளில் படுவதற்கு எட்டு அங்குலம் முன்பாகத் தம்முடைய சைக்கிளை நிறுத்தி விட்டார். தம்முடைய திட்டம் தோற்றத்தைத் தயக்கத்துடன் ஒப்புக் கொண்ட (மனசுக்குள்ளாகத்தான்) போலீஸ்காரர், குருவே, நீங்க பிடிபட்டிருப்பீர்கள் கன்னு நினைச்சேன் என்றார்.

மதகுரு சொன்னார் 'ஆமாம், ஆனால் என்னோடு கடவுளும் இருக்கிறார்'.

'ஆகா, உம்மை டபுள்ஸ் கேசில் பிடிச்சாச்சு' என்றார் போலீஸ் காரர். மனம் இப்படித்தான் கண்காணித்துக் கொண்டே இருக்கும். அறிவுக்குப் பொருத்தமிருக்கிறதோ இந்த மனம் உடனே தாவக் குதித்து, பழைய அமைப்பிலேயே தொடரப்பார்க்கும். மனதின் தந்திரத்தில் எச்சரிக்கையாயிருங்கள், அது உங்களுக்குப் பின்னால் ஒளிந்து கொண்டு, ஒரு சாக்குப் போக்கிற்காகக் காத்திருக்கும்.

வேலை விரும்பத்தக்கது. ஆனால் வேலையை ஒரு வேலையாகப் பார்த்தால் அது அருவருப்பூட்டுவதாகவிடும். ஆகவே ஒரு விளையாட்டுபோல் அமைந்து விட்டால் விரும்பத்தக்கதுதான. வேலையின் தகுதி அதன் உள்ளார்ந்த மதிப்பைப் பொறுத்தது. ஓவியம் வரையது உங்களுக்குப் பிடித்திருக்கிறது என்பதால் வரைகிறீர்கள். ஓவியத்தை விற்று, அதனால் பணம் கிடைப்பது இரண்டாம்பட்சம், அது பொருத்தமற்றது, அது அத்தனை முக்கியத்துவம் பெறாது. வரைவில் உள்ள மகிழ்ச்சி தான் முக்கியம். பணம் கிடைக்கிறதா, சரிதான். பணம் கிடைக்காவிட்டாலும் நீங்கள் எதையும் தவறவிடப் போகிறதில்லை காரணம், ஓவியம் வரைவதில் மிகுந்த மகிழ்ச்சி கிடைக்கிறது உங்களுக்கு. அது உங்கள் உழைப்பை விடக்கூடுதலான வெகுமதி. அந்த ஓவியம் விற்கப்பட்டால் அது இன்னொரு வெகுமதி போலத்தான். கடவுள் உங்களிடம் மிகவும் தயவுடையவராயிருக்கிறார். ஆனால், உங்களுடைய வெகுமதியைப் பொறுத்தவரை நீங்கள் முன்பே அதனைப் பெற்று விட்டீர்கள். உங்களுடைய ஓவியத்தை நீங்கள் வரைகிறபோது உங்கள் கவிதையை நீங்கள் எழுதுகிற போது, உங்கள் தோட்டத்தில் வேலை செய்து, வெய்யலில் வியர்வை சிந்துகிறபோது உங்கள் வெகுமதியை நீங்கள் பெற்று விடுகிறீர்கள்.

வேலை விளையாட்டைப் போல், மகிழ்ச்சிதரும் ஒரு அனுபவமாய், ஒரு வழிபாடாய் அமைந்து விட்டால் – அது நேர்த்தியானது தான். பணம் சார்ந்த செயல்முறை என்கிற நிலையில் அந்த வேலை அருவருக்கத்தக்க தாகிவிடும். பிறகு , நீங்கள் சந்தைப் பேட்டையில் ஒரு அங்கமாகி விடுவீர்கள். 'சரி, இதில் இருந்து என்ன கிடைக்கும்' என்கிற அடிப்படையில் தான் நீங்கள் சிந்திக்கத் தொடங்குவீர்கள் அந்நிலையில் உங்கள் பார்வை கிடைக்கக் கூடிய பலன் மீதுதான் இருக்கும், பலனோ வருங்காலத்தில் இருக்கிறது. ஒருபோதும் பலன் சார்ந்தவராய் இருக்காதீர்கள். அது தான் மனித இனத்தின் துன்பத்துக்குக் காரணம். வேலையின் மூலம் உங்கள் இருப்புணர்வை நீங்கள் அடைகிறதில்லை.

நீங்கள் விழிப்புணர்வுடன், நிகழில் (present) இருப்பதன் மூலமே அதனைப் பெறுகிறீர்கள். எனவே, உங்கள் வேலையையும் ஒரு செயலின் நிலை (situation)யாய்க் கொள்ளுங்கள்.

ஆனால், என்ன நடக்கிறது? நீங்கள் காது கொடுத்துக் கேட்கிறீர்கள். நான் சொல்வதையெல்லாம் உங்கள் மனதில் குறித்து வைத்தபடி இருக்கிறீர்கள். நீங்கள் உண்மையிலேயே நான் சொல்வதைக் கவனிப்பதில்லை. நீங்கள் குறிப்புகளை மட்டுமே சேகரிக்கிறீர்கள். புரிதலைச் சேகரிக்க வில்லை. நீங்கள் சேகரிக்கும் குறிப்புகள் பிரச்சினைகளைத் தோற்றுவிக்கிறது.

இன்னொரு சின்னக் கதை:

அந்தக் காலத்தில், ஒரு மருத்துவர் தன்னுடைய உதவி யாளரையும் தன்னுடன் அழைத்துக்கொண்டு நோயாளியின் படுக்கையருகே நோயாளி ஒரு ஐரிஷ்பாதிரி. அவருடைய முகம் சிவந்திருந்தது, அத்துடன் வெப்ப அளவும் அதிகரித்திருந்தது. மருத்துவர் அவரை முதுகில் அறைந்து, 'எழுந்திரும், கொஞ்சம் முட்டைக் கோசும், மாட்டிறைச்சியும் சாப்பிட்டுவைக்கலாம்' என்றார். அடுத்தநாளே அந்த அயர்லாந்துக்காரர் தம்முடைய வேலைக்கு திரும்பிவிட்டார். சிவந்த முகம், உயர் வெப்ப அளவு – முட்டைக்கோசு மற்றும் மாட்டிறைச்சி, குறித்துக் கொண்டார் உதவியாளர்.

கொஞ்ச நாளைக்குப் பிறகு மருத்துவர் இல்லாத நேரத்தில் ஒரு ஜெர்மன் நோயாளியைப் பரிசோதித்து, சிகிச்சையளிக்க அந்த இளைஞர் அழைக்கப்பட்டார். அந்த ஜெர்மானியரின் முகம் சிவப்பாக இருந்ததுடன், அவருடைய வெப்ப அளவும் அதிகமாயிருந்தது. கற்றுக்குட்டி (மருத்துவரின் உதவியாளர்) பரிந்துரைச் சீட்டில் முட்டைக் கோசு – மாட்டிறைச்சி என்று எழுதினார். மறுநாள் அந்த ஜெர்மானியர் செத்துப்போனதை அவர்கள் மருத்துவரின் உதவி யாளருக்குத் தெரியப்படுத்தினர். அவர் தம்முடைய குறிப்பேட்டில் இப்படிக் குறித்துக் கொண்டார். முட்டைக்கோசும் மாட்டிறைச்சியும் ஐரிஷ்காரருக்கு நல்லது செய்தது. ஜெர்மன் காரர்களைக் கொன்று போட்டது'' என்று.

என்னிடம் நீங்கள் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறீர்கள். குறிப்புகளைச் சேகரித்துக்கொண்டு. நான் என்ன கூறுகிறேன் என்பதைப் புரிந்து கொள்ள முயலுங்கள். குறிப்புகளைச் சேகரிக்கிற வேலை வேண்டாம். என்னைக் கவனியுங்கள், நான் இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்பதை. மிகச் சரியாக இந்தக்

கணத்தில் உங்களுக்கும் எனக்கும் இடையே என்ன நடக்கிறது; உங்களுக்கும் எனக்கும் இடையே நிகழும் சக்திப் பரிமாற்றம் எப்படிப்பட்டது. அதைக் கவனியுங்கள். அதை உணருங்கள், அது உங்களுடைய இருப்புணர்வில் கலந்து, படிப்பாய் கரையட்டும். குறிப்பெடுக்காதீர்கள், இல்லையேல் நீங்கள் தொல்லைப்பட நேரும், எப்போதைக்குமாய்.

**கடைசிக்கேள்வி:**

***...கருத்தூன்றிய தாயிருக்கட்டும். தயவு செய்து கேலியாக எடுத்துக் கொள்ள வேண்டும், சித்தானந்தா கேட்டது.***

***'நீங்கள் மட்டுமே உணர்ச்சி மிகைப்புக்கு (neurosis) உள்ளாதவர். உங்களுக்கு ஏன் குழந்தைகள் இல்லை? ஞானம் பெற்றவர்களிலும் குழந்தை பெற்றவர்கள் இருக் கிறார்கள் தானே?'***

நான் ஒரு போதும் அதைப்பற்றி எண்ணியதில்லை. என்னுடைய பதில்களில் இருந்து நீங்கள் எதையுமே தெரிந்துகொள்ளாமல் இருக்கலாம். ஆனால், உங்களுடைய கேள்விகளில் இருந்துதான் கற்றுக் கொள்ளவே செய்கிறேன். ஒரு நல்ல யோசனைதான். ஆனால், உணர்ச்சி மிகைப்பில்லாத ஒரு பெண்ணக் கண்டடைவது சிரமமாயிற்றே.

முதலாவது உணர்ச்சி மிகைப்பில்லாத (non-neurotic) வரைக் கண்டு பிடிப்பது அதிலும் ஒரு பெண்ணைக் கண்டுபிடிப்பது முடியாத காரியம். இடர்ப்பாடு பெருகிவிடும்.

ஒரு குட்டிக் கதை சொல்கிறேன்.

பெரிய செல்வந்தரான நிதியாளர் (தொழில் நடத்தப்பணம் கொடுப்பவர்) ஒருவர், பங்குச் சந்தையில் வியக்கத்தக்க திறமை உடையவராக இருந்தார். ஆனால், கோல்ஃப் மைதானத்தில் படு முட்டாள் என்றே சொல்ல வேண்டும். மோசமான மனநிலையில் தனது பணியாளைத் திட்டுவார் அன்று ஒரு சுற்று ஆடியபின், உலகத்திலேயே உன்னைப் போல் மட்டமானவன் இருக்க முடியாது' என்று சீறிவிழுந்தார். 'ஓ இல்லை ஐயா, என்ன செய்யட்டும் ஒரே

மாதிரி ஆயிருச்சி' என்று பதில் வந்தது. உலகிலேயே ஒரு மோசமான கோல்ஃப் ஆட்டக்காரருக்கு, ஒரு மோசமான பணியாள்?

உணர்ச்சி மிகைப்பில்லாத ஒரு பெண்கைக் கண்டு பிடிப்பது என்பது எதிர்பார்ப்பு (coincidence) ரொம்பவும் அதிகப்படி தான். இதற்குமுன் இப்படியான தில்லை. அது நடக்கும் என்று நான் நினைக்கவில்லை. ஞானிகளுக்குக் குழந்தைகள் இருந்தனவா என்று தெரியவில்லை. ஆமாம், நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள் புத்தருக்கு ஒரு மகன் இருந்தது பற்றி, ஆனால் அவர் ஞானம் பெறுவதற்கு முன்பல்லவா அது நடந்தது.

மகாவீரருக்கு ஒரு பெண் இருந்தாள், ஆனால் அதுவும் அவர் ஞான பெறுவதற்கு முன் நடந்தது. குருட்ஜீவிற்கு (gurdifjieff) பல பெண்கள் மூலம் பல குழந்தைகள் இருந்தன. ஆனால் அது கூட அவர் ஞானம் பெறுவதற்கு முன் நடந்ததுதான். நீங்கள் அந்தக் குழந்தைகளைப் பற்றி தெரிந்து கொண்டிருக்க வேண்டும். புத்தரின் மைந்தன் ராகுல் புத்தருக்கேற்ற மகனாய் தன்னை நிரூபித்துக் கொண்டிருக்கவில்லை. மகாவீரரின் பெண்ணும் தன்னை மகா வீரருக்குச் சமதையான வளாய் நிரூபித்திருக்கவில்லை. அவளும் வழக்கமான மற்ற பெண்களைப் போலவே இருந்தாள். சமணர்களில் ஒரு பிரிவினர் மகாவீரருக்குக் குழந்தைகள் கிடையாது, அவருக்கு ஒரு பெண் இருந்தது கட்டுக் கதை என்றே நம்புகின்றனர். மகாவீரருக்கு திருமணமாகவில்லை என்பது அவர்களுடைய கருத்து. ஒரு ஞானியின் மகன் அல்லது மகள் ஞானம் பெற்றதாய் நீங்கள் எப்போதாவது கேள்விப்பட்டிருக்கிறீர்களா?

முதலாவது:

உணர்ச்சி மிகைப்பில்லாத ஒருவர் உணர்ச்சிமிகைப்பில்லாத ஒரு பெண்ணைக் கண்டுபிடிப்பது. அதன்பிறகு அவர்கள் இருவரும் சேர்ந்து உணர்ச்சி மிகைப்பில்லாத ஒரு குழந்தையை பிறப்பிப்பது. பிரச்னை கொஞ்சம் சிக்கலானதுதான், காரணம் உங்களுடைய உணர்ச்சி மிகைப்பினால் தானே ஒரு பெண்ணை நீங்கள் தேடுவது. உங்களுக்குள் இருக்கும் ஒரு பெண்ணை இன்னமும் நீங்கள் சந்திக்காத காரணத்தால் தானே (வெளியில்) ஒரு பெண்ணை நீங்கள் நாடிச் செல்வது. உங்களுக்குள் இருக்கும் ஆணை நீங்கள்

இன்னமும் சந்திக்காத காரணத்தால் தானே (வெளியில்) ஒரு ஆணைக்காண விழைவது. நீங்கள் உள்ளுக்குள் முழுமையடைய வில்லை, அதனால்தான் வெளியே சொல்கிறீர்கள்.

முதலாவது, நீங்கள் உள்ளுக்குள் முழுமையடையும் கணத்தில், அதுவே புனிதராயிருப்பதன் பொருள், உங்களுக்கு வெளிச் செல்லத் தோன்றாது. அதற்கான அவசியம் இல்லை. நீங்கள் தப்பியோட மாட்டீர்கள். துணைக்கு ஒரு பெண் இருந்தால் நீங்கள் விலகிச் செல்ல மாட்டீர்கள். கூடவே ஒரு பெண் வந்து கொண்டிருக்கிறாள் என்று போலீசில் புகார் செய்ய மாட்டீர்கள் உங்கள் வழி நெடுகவும் ஒரு பெண் வருகிறாளா வரட்டும், நல்லதுதான் அவள் பாதிவழியில் போய் விட்டாளா, போகட்டும், அதுவும் நல்லதே.

நீங்கள் குழந்தைகளைப் பெற்றெடுக்கிறீர்கள் அதுவும் உங்களுடைய உணர்ச்சி மிகைப்பின் விளைவுதான் – காரணம், உங்களுக்கு எதையாவது செய்து கொணடேயிருக்க வேண்டும். ஏதாவதொன்றில் மனதை நிறுத்தாமல் ஆகாது. உங்கள் அடிப்படை வேலை வருங்காலத்தைப் பற்றியது. குழந்தைகள் அந்த வருக்காலத்தை உங்களுக்கு அனுகூலமுடையதாக்குகிறார்கள். அவர்கள் மூலம் உங்களுடைய உயர்ந்த நோக்கங்கள் செயல்பட முடியாது. நீங்கள் சென்ற பிறகு உங்கள் குழந்தைகள் இங்கிருப்பார்கள். நீங்கள் ஒரு பிரதமராக விரும்பியிருந்து, அது முடியாமல் போனால் உங்கள் குழந்தைகள் அந்த நிலையை அடையாளம். நீங்கள் அவர்களைத் தயாரப்படுத்துகிறீர்கள், தொடர்ச்சிக்கு வழி செய்கிறீர்கள்.

ஒருவர் இறக்கிற பொழுது, தனக்குப்பிறகு குழந்தைகள் எதையும் அவர்விட்டுச் செல்லவில்லையெனில், தொடர்ச்சியற்றுப் போய்விடுகிறது. ஆனால், உங்களுக்குப் பின்னால் உங்கள் குழந்தைகளை விட்டுச் செல்கிறபோது ஒரு சாகாத் தன்மை (immortality)யை நீங்கள் உணர்கிறீர்கள். 'ரொம்பசரி. நான் சாகிறேன்தான், அதைப் பற்றிக் கவலைப்பட எதவும் இல்லை. என்னில் ஒருபகுதி என் குழந்தைகள் வழியே வாழும்' மரணத்தின் மீது மக்களுக்குள்ள அச்சமே அவர்களுடைய குழந்தைகள் மீது அக்கறையாய் வெளிப் படுகிறது. உணர்ச்சி மிகைப்பு இல்லாத ஒருவருக்குக் குழந்தைகள் மீது அக்கறை இருக்காது, குழந்தைகள் என்ன, எவ்வகையான

தொடர்ச்சியிலும் அவருக்கு அக்கறை இருக்காது. அவர் சாசுவதமான (eternal) ஒன்றைக் கண்டு கொள்கிறார், சாவைப்பற்றி அவர் கவலைப்படுவதில்லை.

உணர்ச்சி மிகைப்பில்லாத பெண்ணைக் கண்டடைவது சாத்தியமில்லை என்பதற்குச் சில குட்டிக் கதைகள்.

திருமதி கோகனுக்குக் கொஞ்சம் பணம் கிடைத்திருந்தது. அவர் வீட்டின் உட்புறம் அலங்கரிப்பவரை (interior & decorator) அழைத்து வீட்டைப்புது பிக்கச் சொன்னார். திருவாளர் ஜோன்ஸ் கேட்டார்', கண்டிப்பா செஞ்சிரலாம் மிஸஸ் கோகன்.

உங்கள் ரசனை குறத்து தாங்கள் ஏதேனும் யோசனை எதுவும் வழங்க முடியுமா? உங்களுக்கு நவீன முறையில் அலங்கரிப்பது பிடிக்குந்தானே?

'இல்லை?'

'ஸ்விடிஷ் முறை?'

'இல்லை'

'இத்தாலிய முறையாவது?'

'வேண்டாம்.'

'மூரிஷ் அல்லது ஸ்பானிஷ்?'

'வேண்டவே வேண்டாம்'.

'நல்லது மேடம். உங்கள் ரசனை பற்றி ஏதாவது கருத்தை நீங்கள் சொல்லியாக வேண்டும். இல்லையேல், என்னால் வேலையைத் தொடங்க முடியாது. உங்க மனசில் சரியா என்னதான் இருக்கு?'

திருமதி. கோகன் சொன்னார், 'வீட்டுக்கு வருகிற என்னுடைய நண்பர்கள் வீட்டை ஒரு முறை பார்த்ததும் அப்படியே செத்துப் போயிரணும்' என்று.

## இரண்டாவது:

ஒரு இளம் ஜோடி, மிகுந்த பிரியத்துடன் ஒருவரையொருவர் தழுவிக் கொண்டிருந்தபோது, முன்புறக் கதவைதிறக்கும் ஓசை கேட்டது. அந்த இளம் பெண் எச்சரிக்கை உணர்வுடன் விலகிக் கொண்டாள். 'கடவுளே அது என் கணவன்! சீக்கிரம் சன்னல் வழியே குதித்து விடு' என்று கத்தினாள்.

அந்த இளைஞனும் அதேயளவு எச்சரிக்கையுடனிருந்தான், சன்னல்பக்கம் சென்றவன், 'என்னால் முடியாது, நாம் இருப்பது பதின் மூன்றாவது தளமல்லவா' என்று மறுப்பு தெரிவித்தான்.

'கடவுளே, மூட நம்பிக்கைக்கு இதுவா நேரம்?' அந்த இளம் பெண்கோபத்தில் எரிந்து விழுந்தாள்.

## மூன்றாவது:

மனைவி ஒரு புதிய தொப்பி அணிந்து வீட்டுக்கு வந்தாள். 'அந்தத் தொப்பி உனக்கு எப்படி கிடைச்சது?' அவனுடைய கணவன் கேட்டான்.

'கழிவு விற்பனையில்'

'அவர்கள் கழித்துக்கட்டுவதில் ஆச்சரியம் எதுவும் இல்லை. அது உன்னை முட்டாளாக்குகிற வேலை' என்றான் அவன்.

'அது எனக்குத் தெரியும்.'

'பிறகு எதுக்கு அதை வாங்கினே?' அவன் கேட்டான்.

'நான் சொல்றேன். அதைப்போட்டுக் கொண்டு கண்ணாடியில் பார்த்தபோது அந்த 'க்ளார்க்' கிடம் வாதம் பண்ணுவது முட்டாள் தனமாய் பட்டது' என்றாள் அவள்.

## நான்காவது:

முல்லா நஸ்ருத்தீன் என்னிடம் சொன்னார்: திருமணம் என்கிற செயல் முறை உங்கள் மனைவி எத்தகைய ஆணைத் தெரிவு செய்கிறாள் என்பதற்கானது என்று. என் மனைவி இன்று காலையில், 'நீங்கள் உண்மையிலேயே என்னை விரும்பியிருந்தால், வேறு யாரையாவதுதான் கல்யாணம் செய்து கொண்டிருப்பீர்கள், என்றாள். நான் சொன்னேன், 'உன்னைத் திருமணம் செய்து கொண்டதில் எனக்கு மகிழ்ச்சி தான்' என்று. நான் ரிச்சர்டு பர்ட்டனின் இடத்தில் இருந்திருந்தால் அதை நான் செய்திருக்க மாட்டேன்' என்று. அவள் சொன்னாள், 'நீங்கள் அதைச் செய்ய மாட்டீர்கள் என்பது எனக்குத் தெரியும். எனக்கு மகிழ்ச்சியளிக்கும் படியாய் நீங்கள் எதைத்தான் செய்திருக்கிறீர்கள்' என்று.

சூத்திரம்: 11 'ஹேது பலாச்ரயாலம் பனை சங்க்ருதத் வாதே ஷாம பாவே ததபாவ'

காரணம், பலன், ஆதாரம், பற்றுகின்ற பொருள்கள் இவை ஒன்று சேர்ந்து இருப்பதால் இன்பம் தோற்றுவிக்கப்படுகிறது. இவை மறைந்து போனால் இன்பமும் மறைந்து போகும்.

சூத்திரம்: 12 'அதீதானாக கதம் ஸ்வரூப தோஸ்த்யத்வ பேதாத் தர்மாணாம்'

பொருளுக்குள் இருக்கின்றன அதன் கடந்த காலமும் எதிர்காலமும். வடிவமும், வெளிப்படுத்துதலும் காலத்துக் கேற்ப மாறும்.

சூத்திரம்: 13 'தேவியக்த – சூட்சமா குணாத்மான'

குணங்களின் இயற்கையைப் பொறுத்தே பொருள்கள் வெளிப்படையாகவோ, நுட்பமாகவோ அமைகின்றன.

சூத்திரம்: 14 'பரிணாமை கத்வாத் வஸ்து தத்துவம்'

பரிணாமத்தில் உள்ள ஒருமையில் இருந்தே பொருள்களின் ஒருமை உண்டாகிறது.

குணங்கள் மூன்றாக இருந்தாலும் அவற்றின் வேறுபாடுகள் ஒருங்கிணைந்திருப்பதால் எல்லாப் பொருள்களிலும் ஒருமை நிலவுகிறது.

சூத்திரம்: 15 'வாஸ்து சாம்யே: சித்த போதாத் த யோர் விபக்க பந்த்தா'

பொருள் ஒன்று தான் என்றாலும் அதைத் தரும் மனங்களும், வழிகளும் வெவ்வேறாயிருக்கின்றன. ஆக, மனம் பொருளில் இருந்து வேறாயிருக்கிறது..

சூத்திரம்: 16 ந சைக சித்த தந்தரம் வஸ்து ததப்ரமாணகம் ததா கிம்ஸ்யாத்

பொருள் தனி மனிதனின் கண்டுணர்தலைச் சார்ந்திருப்பதாய் சொல்லமுடியாது. அது தான் நிலையொன்றால் மனம் அப்பொருளைக் கண்டுணராத போது பொருள் இல்லை யென்றாகிவிடும்.

சூத்திரம்: 17 'தது பராகா பேட்சித்வாத் சித் தஸ்ய வஸ்து ஞாதா ஞாதம்'

மனதின் உணர்ச்சிகளைப் பொறுத்து ஒருபொருள் அறியப் பட்டதாயும், அறியப்படாததாயும் இருக்கிறது.

## முதல் சூத்திரம்:

**காரணம், பலன், ஆதாரம், பற்றுகின்ற பொருள் இவைஒன்று சேர்ந்து இருப்பதால் இன்பம் தோற்று விக்கப்படுகிறது.**

ஒருவரின் அறியாமைதான் உலகின் அடிப்படை வினை முதலாகிறது. அவருடைய அறியாமை – அவித்யை மறைகிறபோது உலகமும் மறைந்து விடுகிறது. மறைவது பொருள்களின் உலகமல்ல, ஆசைகளின் உலகம், அது புறத்தே இருக்கிற உலகமல்ல, நீங்கள் இடைவிடாமல் வெளிப்படுத்திக் கொண்டிருக்கும் அகவுலகம். உங்களுக்குள் அறியாமை மறைகிற கணத்தில் உங்களுடைய கனவுகள், மாயைகள், மெய்யாகத் தோன்றும் கருத்துகள் (projections) கொண்ட உலகமும் உடனடியாய் மறைந்துவிடும்.

இது புரிந்து கொள்ளப்பட வேண்டியது. அறியாமை என்பது அறிவுக் குறைபாட்டில் வருவதல்ல. நீங்கள் அறிவைச் சேகரித்துக் கொண்டே போனாலும் அறியாமை அவ்விதமாய் மறைவதில்லை. நீங்கள் அறிவுத்திறன் மிக்கவராய் இருக்கக்கூடும் ஆனால் இன்னமும் நீங்கள் அறியாமை நிரம்பியவராகவே இருப்பீர்கள். உண்மையில் அறியாமைக்குப் பாதுகாப்பாகத்தான் அறிவு செயல்படுகிறது. அறிவுன் மூலம் அறியாமை அழிக்கப்படுவதில்லை. மாறாக அதன் மூலம் அது பாதுகாக்கப்படுகிறது. அறிவைத் தேடி, சேகரிப்பதற்கான உந்துதல் ஒருவர் தன்னுடைய அறியாமையை மறைக்க முயலும் செயலன்றி வேறெயென்ன? நீங்கள் எந்த அளவு அறிகிறீர்களோ, அந்த அளவு இனியும் நீங்கள் அறியாமை கொண்டிருக்கவில்லை என்று எண்ணிக் கொள்கிறீர்கள்.

திபெத்தில் ஒரு சொலவடை உண்டு; 'அறியாமை உள்ளவர்கள் பாக்கியவான்கள், தங்களுக்கு எல்லாம் தெரியும் என்கிற எண்ணத்தில் அவர்கள் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள்.'

எல்லாவற்றையும் அறிந்து கொள்ளும் முயற்சி துணைபுரியாது. அது மையக் கருத்தைத் தவறவிட்டு விடும். தன்னடைய சுயத்தை

அறிந்து கொள்ள முயல்வதே போதுமானது. தன்னை அறிந்தாலே சகலத்தையும் அறிந்தாற் போலத்தான், காரணம் நீங்கள் பிரபஞ் சத்துடன் தொடர்புடையவராகிறீர்கள். உங்கள் இயல்பு பிரபஞ் சத்தினுடையது.

நீரின் ஒரு துளியைப் போன்றவர் நீங்கள். நீர்த்துளியை முற்றாக அறிந்து கொண்டால், அத்தனை கடல்களையும், கடந்த நிழல், எதிர் வரும் காலங்களையும் அறிந்து கொண்டவராவீர்கள். ஒட்டு மொத்த கடலின் இயல்பும் ஒரு நீர்த்துளியில் இருக்கிறது.

அறிவைத் துரத்திச் செல்கின்ற ஒருவன் தன்னை மறந்து விடுகிறான், தொடர்ந்து தகவல்களைச் சேகரித்தபடி இருப்பான். அவன் நிறையத் தெரிந்து கொண்டிருக்கலாம். ஆனால், இன்னமும் அறியாமை கொண்டவனாகவே இருப்பான். ஆக, அறியாமை அறிவுக்கு மாறானதல்ல. அறிவு என்பது அறியாமைக்கான நச்சு முறிவு மருந்துமல்ல. அப்படியானால் அறியாமைக்கான நச்சுமுறிவு ஏது? யோகா சொல்கிறது. அறிவல்ல விழிப்புணர்வு என்று. உங்களுடைய கவனத்தை வெளியே செலுத்தாமல் அறியும் திறனில் ஒரு முகப்படுத்துவது என்று.

தாயின் கருவறையில் இருக்கும் குழந்தை முழுமையான உறக்கத்தில் இருக்கும். கருவறையில் இருக்கும் முதல் சில மாதங் களுக்கு ஆழ்ந்த உறக்கந்தான். யோக அதனை[3] 'சூழ்த்தி' நிலை என்கிறது. பிறகு, ஆறு ஏழு மாதங்களானதும் குழந்தை ஓரளவு கனவு காணத் தொடங்குகிறது. உறக்கம் இடையூறுக்குள்ளாகிறது. அதன்பிறகு அது முழுமையாய் இருப்பதில்லை. வெளியில் எது நடந்தாலும், ஒரு இரைச்சல் கேட்டாலும் குழந்தையின் தூக்கம் கெடுகிறது. அதிர்வுகள் அவனை அடைகின்றன, ஆழ்ந்த உறக்கம் கலைகிறது, அவன் கனவுகாணத் தொடங்குகின்றான். உணர்வின் முதல்நிலை கனவற்ற உறக்கம்.

---

3. சுழித்தி – எவ்வித கனவும் இல்லாத உறக்கம்

## இரண்டாவது நிலை:

கனவுடன் கூடிய உறக்கம். இந்த இரண்டாம் நிலையில் உறக்கம் இருக்கிறது ஆனால் ஒரு புதிய மனத்திறன் செயல்படத் தொடங்குகிறது. 'கனவு காண்பதற்கான திறன். பிறகு, குழந்தை பிறந்ததும். மூன்றாவது திறன் உண்டாகிறது. நாம் அதனை விழிப்பு நிலை என்கிறோம். உண்மையில் அது விழிப்பு நிலை அல்ல, ஒரு புதிய மனத்திறன் செயல்படத் தொடங்குகிறது. அது எண்ணத்தினுடையது. குழந்தை எண்ணமிடத் தொடங்குகிறது.

முதல் நிலை கனவற்ற உறக்கம். இரண்டாவது நிலை, கனவுடன் கூடிய உறக்கம். மூன்றாவது நிலை கனவு, சிந்தனை இவற்றுடன் கூடிய உறக்கம், ஆனால் உறக்கம் இன்னமும் அப்படியே இருக்கிறது. உறக்கம் முற்றாக விலகிவிடுவதில்லை. உங்கள் சிந்தனையிலும் கூட நீங்கள் உறங்கிக் கொண்டுதான் இருக்கிறீர்கள். கனவின் இன்னொரு செயல்முறை எண்ணமிடல். உறக்கம் கலைக்கப் படுவதில்லை. இவை வழக்கமான நிலைகள். ஒரு மனிதன் இந்த எண்ணமிடும் மூன்றாவது நிலைக்கும் அப்பால் உயர்ந்து செல்வது அரிதாகவே நிகழ்கிறது.

தூய விழிப்புணர்வைப் பெறுவதே யோகாவின் குறிக்கோள். முதல் நிலையைப் போலவே தூய்மையானது அது. முதல்நிலை முழுமையான உறக்கம். கடைசிநிலை முழுமையான விழிப்பு. தூய விழிப்புணர்வு. உங்களுடைய ஆழ்ந்த உறக்கத்தைப் போலவே உங்கள் விழிப்புணர்வும் தூய்மை அடைய, நீங்கள் ஒரு புத்தராகி விடகிறீர்கள், நீங்கள் வீட்டுக்கு (உங்களுடைய இயற்கையான இடத்துக்கு) வந்து சேர்கிறீர்கள்.

பதஞ்சலி சொல்கிறார்: சமாதி என்பது விழிப்புணர்வின் இறுதிநிலை என்று. அது தூக்கத்தைப் போன்றது. ஒரு வேறுபாடு தான். அது உறக்கத்தைப் போன்றே அமைதியானது, உறக்கத்தைப் போலவே இடர்ப்பாட்டுக்குள்ளாகாது. உறக்கத்தைப் போலவே முழுமையும், பரம சுகமும் உடையது. என்ன, ஒரு வேறுபாடு, அதுமுற்றிலும் விழிப்போடு இருக்கிறது. வளர்ச்சி பற்றிய முக்கியக் கருத்துகள் இவை. சாதாரணமாக நாம் மூன்றாவது நிலையில்தான் இருப்பது. அடியாழத்தில் உறக்கம் தொடர்கிறது. அதன் மேல்பகுதியில்

கனவின் ஒரு அடுக்கு இருக்கிறது, அதற்கும் மேலாய் எண்ணமிடுதல் என்கிற அடுக்கு – ஆனால், உறக்கம் விலகுவதில்லை. நீங்கள் இதைக் கருத்தூன்றிக் கவனிக்க முடியும். அது ஒரு கோட்பாடு அல்ல. அதன் உண்மைத் தன்மையையும் நீங்கள் உணரமுடியும்.

நீங்கள் எந்தக் கணத்தில் கண்களை மூடினாலும், முதலில் எண்ணங்களைப் பார்ப்பீர்கள், ஓர் எண்ண அடுக்கு உங்களைச் சுற்றி. எண்ணங்கள் அதிர்வை ஏற்படுத்துகின்றன. ஒன்று வந்தபடி இன்னொன்று போனபடி ஒரு நெரிசலான போக்குவரத்து. சில கணங்களுக்கு அமைதியாய் இருங்கள், சற்றும் எதிர்பாராத விதமாய் அதற்கு மேலும் சிந்தனையின்றி, கனவுகாணும் நிலை தொடங்குவதை நீங்கள் கண்டு கொள்வீர்கள். ஒரு நாட்டின் அதிபராகிவிட்ட மாதிரியே அல்லது சாலையில் ஒரு தங்கக் கட்டியைக் கண்டெடுத்தாற் போலவோ அல்லது ஓர் அழகான பெண்ணை அல்லது ஆணை கண்டது போலவோ நீங்கள் கனவு காண்கிறீர்கள் திடீரென்று கருத்துருவாக்கத்தில் இறங்கி விடுகிறார்கள், கனவுகள் செயல்படத் தொடங்குகின்றன. நீங்கள் தொடர்ந்து நெடுநேரம் கனவு காண்கிறபோது, அயர்ந்து உறங்குகிற ஒரு கணம் வரும்.

அப்போது எணணமிடல், கனவு காணல், உறக்கம் என்று நிலைகள் அமையும். அடுத்து உறக்கம் கனவு காணல், எண்ணமிடல் என்று நிலைகள் இடம் பெறும். இப்படித்தான் உங்களுடைய ஒட்டு மொத்த வாழ்க்கையும் சுழன்றபடி இருக்கும். உண்மையான விழிப்பு ணர்வு பதஞ்சலி சொல்கிறார் போல அறியாமையை அழித்துவிடும் – அறிவை அல்ல. நம்மையும் மற்றவர்களையும் முட்டாளாக்குவற்குத் தான், நாம் அறிவைச் சேகரித்தபடி இருப்பது.

நான் கேட்டிருக்கிறேன். ஒரு சிறிய பள்ளிக் கூடத்தில் இது நடந்தது. பள்ளி ஆய்வாளர் வகுப்புக்கு வந்து, 'ஜெரிக்கோவின் சுவர்களை இடித்துத் தள்ளியது யார்?' என்று கேட்டார். பில்லிக்ரீன் என்கிற மாணவன் எழுந்து, 'ஐயா, அது நான் அல்ல' என்று சொன்னான். ஆய்வாளர் அவனுடைய அறியாமையைக் கண்டு திகைத்துவிட்டார், போகிறபோது விசயத்தை தலைமை ஆசிரியர் கவனத்துக்கும் கொண்டு சென்றார். 'உங்களுக்குப் புரியுதா, நான் வகுப்பில் கேட்டேன், 'ஜெரிக்கோ சுவர்களை இடித்துத் தள்ளியது

யார் என்று? அது தானல்ல என்று பில்லிக்ரீன் சொல்கிறான்' என்றார். 'தலைமை ஆசிரியர் சொன்னார், 'பில்லிக் ரீன்தானே – அவன் ரொம்ப நேர்மையானவன், நம்பவகமானவன் என்பதை நான் உங்களுக்குச் சொல்லியே ஆக வேண்டும், அது அவனில்லை என்று சொன்னால் அவன்தான் என்று.

ஆய்வாளர் மேற்கொண்டு எந்தக் கருத்தும் தெரிவிக்காமல் அந்தப் பள்ளியை விட்டுச் சென்றார். ஆனால், சற்றும் தாமதிக்காமல் அந்த நிகழ்வு பற்றி கல்வி அமைச்சகத்துக்கு ஓர் அறிக்கையை அனுப்பிவைத்தார். உரிய நேரத்தில் அமைச்சகத்தில் இருந்து அவருக்குப்பதிலும் வந்தது. 'அன்புடையீர். தங்கள் பார்வைக்கு ஜெரிக்கோசுவர்கள் – இது பணிகளுக்கான அமைச்சகம் சம்பந்தப்பட்டது. எனவே, தங்களுடைய கடிதத்தை அவர்களுடைய கவனத்துக்கு அனுப்பியிருக்கிறோம்' என்று.

ஆனால், ஓர் எளிய உண்மையை இனம் காண்பதற்குக் கூட யாரும் விரும்பவதில்லை. ஒவ்வொருவரும் முயல்கிறார்கள், கேள்வி எதுவாயினும் அவர்கள் முயன்று பார்க்கிறார்கள். நீங்கள் முயன்றால் பலமுறை உங்களைக் கையும் களவுமாய் பிடித்துவிட முடியும்.

யாரோ ஒருவர் ஏதோ ஒன்றைக் கேட்கிறார், யாரோ ஒருவர் நீங்கள் அறிந்திராத ஏதோ ஒன்றைப்பற்றிப் பேசுகிறார். ஆனால் நீங்கள் அது தொடர்பாய் கருத்து தெரிவிக்கவும், அறிவுரை கூறவும் தொடங்கிவிடுகிறீர்கள். உங்கள் அறியாமையை மற்றவர்கள் அறிந்து கொண்டுவிடக் கூடாதே என்பதற்காக எதையெதையோ சொல்லி வைக்கிறீர்கள். ஆனால் விழிப்புணர்வின் முதல் செய்கை, உங்கள் அறியாமையை நீங்கள் கண்டு கொண்டதுமே தொடங்கிவிடுகிறது. அறியாமையை அழிக்கமுடியும் ஆனால் அதை இனம் கண்டுகொள்ளாமல் அது நடவாது.

ஜார்ஜ் குருட்ஜீவின் பிரதம சீடரான பி.டி. உஸ்கென்ஸ்கி தமது குருவை முதல் முறையாக் சந்தித்தபோது அவர் முன்பே உலக அளவில் புகழ்பெற்ற வராயிருந்தார். குருட்ஜீவ் அறியப் படாதவராயும், உஸ்பென்ஸ்கி முன்பே அறியப் பட்டவராயும் இருந்தார். இந்த நூற்றாண்டின் மிகச்சிறந்த நூல்களுள் ஒன்றான, 'டெர்ஷியம் ஆர்கானம்' (tertium organum) என்கிற நூலை அவர் முன்பே

எழுதியிருந்தார். அது உண்மையிலேயே ஒரு துணிகரமான முயற்சி ஆகும். உண்மையில் இந்த நூற்றாண்டில் வேறுயாரும் அப்படியொரு துணிச்சலான சிந்தனையைக் கொண்டிருக்கவில்லை. தம்முடைய 'டெர்ஷியம் ஆர்கனம்' நூலை மூன்றாவது சட்டத் தொகுப்பாக வர்ணிக்கிறார் உஸ்பென்ஸகி. முதலாவது தொகுப்பு அரிஸ்டாட்டில் எழுதியது ஆகும். இரண்டாவது பேக்கன் (Bacon) என்பவரால் எழுதப்பட்டது. அவர் மேலும் சொல்கிறார், 'மூன்றாவது சிந்தனைத் தொகுப்பை நான் எழுதியிருக்கிறேன்' என்று. 'இந்த மூன்றாவது தொகுப்புடன் ஒப்பிட்டுப் பார்த்தால் முதல் இரண்டும் ஒன்றுமே இல்லை' என்றும் அவர் கூறுகிறார். உண்மையிலேயே அது ஒரு துணிகர முயற்சி தான், அது தற்பெருமைப்படுவதாகாது. அவருடைய உரிமைக் கோரிக்கையில் உண்மை இருக்கிறது.

உஸ்பென்ஸ்கி குருட்ஜீவிடம் சென்றபோது, குருட்ஜீவ் அவரைக் கூர்ந்து கவனித்தார். அந்த அறிவார்ந்த மனிதர் நிறையவே தெரிந்து வைத்திருப்பதை, அவரிடம் ஒரு நுட்பமான அகந்தை இருப்பதை அவர் கண்டு கொண்டார். குருட்ஜீவ் அவரிடம் ஒரு காகிதத்தைத் தந்து, பக்கத்தில் உள்ள அறையில் உட்கார்ந்து அவருக்கு என்னவெலலாம் தெரியும், என்னவெல்லாம் தெரியாது என்பதை எழுதும்படி சொன்னார்.

காரணம், தனக்குத் தெரிந்தது, தெரியாதது பற்றி அவர் தெளிவாக இருந்தால்தான் அந்தவேலையை அவரால் செய்யமுடியும். குருட்ஜீவ் சொன்னார், 'நினைவிருக்கட்டும், உமக்குத் தெரியும் என்று நீர் எதை எழுதினாலும் நான் ஏற்றுக் கொள்கிறேன். நாம் மறுபடியும் அதைப்பற்றிப் பேசப்போவதில்லை. அத்தோடு தீர்ந்தது, தெரிஞ்சதா. உமக்குத் தெரியாத என்று நீர் எதைக் குறிப்பகிறீரோ நாம் அது தொடர்பான வேலையில் ஈடுபடுவோம்' என்று. குருட்ஜீவ் சொன்ன முதல் விசயம் எது தெரியும் எது தெரியாது என்று தெரிந்து வைத்திருப்பது என்பதுதான்.

உஸ்பென்ஸ்கி அறைக்குள் சென்றார். தம்முடைய வாழ்க்கையில் முதல் முதலாய் தாம் அறிந்து கொண்டது எது என்று அவர் யோசிக்கத் தொடங்கினார். அவரால் ஒன்றைக்கூட காகிதத்தில் எழுத முடியவில்லை. அவர் கடவுள், சுயம், உலகம், மனம், விழிப்புணர்வு

என்று ஒவ்வொன்றாக ஆராய்ந்தார். அவருக்கு என்ன தெரியும்? முதல் முறையாய் ஒரு கேள்வி அதிகாரப்பூர்வமாய் கேட்கப்பட்டிருக்கிறது. கடவுளைப்பற்றியும், ஆன்மாவைப் பற்றியும், விழிப்புணர்வு பற்றியும் அநேக விசயங்கள் அவருக்குத் தெரியும். ஆனால் கடவுளைப் பற்றி ஒரேயொரு உண்மைகூட அவருக்குத் தெரியாது. அவர் அறிந்த எல்லாமே தகவல்தான். அது அவருடைய அனுபவமாகாது. ஒன்று உங்களுடைய அனுபவமாகாத வரை, நீங்கள் எப்படி அதை அறிந்தாய் சொல்ல முடியும்?

உங்களுக்கு அன்பைப்பற்றித் தெரிந்திருக்கலாம் ஆனால், உண்மையிலேயே அறிந்ததாகாது. நீங்கள் அன்பை அறிந்திருக்க வேண்டும். அன்பெனும் தீயின் வழியே புகுந்து சென்றிருக்க வேண்டும். அந்தத் தீயில் இருந்து வெளிவரும் போது நீங்கள் முற்றிலும் வேறானவராகி விட்டிருப்பீர்கள். உங்ளளே புகுந்த ஆசாமி யில் இருந்து மாறுபடுவீர்கள். அன்பு மாற்றுகிறது. தகவல்கள் ஒரு போதும் உங்களை மாற்றுவதில்லை. தகவல் ஒரு சேர்க்கை அவ்வளவுதான். நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அத்துடன் அதையும் சேர்த்துக்கொள்கிறீர்கள். அது ஒரு பொக்கிசத்தைப் போலாகிறது. ஆனால், நீங்கள் அப்படியே இருக்கிறீர்கள். அனுபவம் உங்களை மாற்றுகிறது. உண்மையான அறிவு ஒரு குவித்தல் ஆகாது, அது ஒரு மாற்றம், மாறுதல் – பழசு மறைந்து புதிசாய் ஒன்று தோன்றுவது. அது கடினமானது.

உஸ்பென்ஸ்கி ஒரு சிலவற்றையேனும் கண்டு பிடித்துவிடுவது என்று தம்மால் முடிந்த அளவு முயன்றார். காரணம், எதையுமே எழுதாமல் இருப்பது தம்முடைய தற்பெருமைக்கு எதிராகிவிடும் என்று அவர் கருதியதுதான். ‘என்னை நான் அறிவேன்’ என்று கூட அவரால் எழுதமுடியவில்லை. அடிப்படையான பொருளை நீங்கள் அறிந்திராவிடில் வேறு எதைத்தான் அறிந்து கொண்டிருக்க முடியும்? குளிர்ச்சியான அந்த இரவில் அவர் வியர்ககத் தொடங்கி னார். ஒரு கணத்திற்கு முன்வரை அவர் குளிரால் நடுங்கிக் கொண்டிருந்தார். அவருடைய ஒட்டு மொத்த இருப்புணர்வும் ஆபத்துக்குள்ளாகியிருந்தது. அவருக்குத் தலையைச் சுற்றியது சீக்கிரமே மயக்கத்தில் விழுந்து விடுவார் என்கிற நிலை. நெடுநேரம் சென்றபின், குருட்ஜீவ் கதவைத்தட்டி, ‘நீர் எதையேனும்

செய்திருக்கிறாரா என்ன?' என்று கேட்டார். அந்த மனிதர் மாறிவிட்டார் என்பதை குருட்ஜீப் புரிந்து கொண்டார். வெத் தாளைக் கையில் வைத்துக் கொண்டு அங்கே அவர் அமர்ந்திருந்தார். அது 'ஸாஸென் (zazen) என்கிற ஓர் உயர்வை தியானம். அவர் காகிதத்தை குருட்ஜீவிடம் தந்துவிட்டு, 'எனக்கு எதுவும் தெரியாது. நான் முற்றிலும் அறியாமை உடையவனாய் இருக்கிறேன். என்னைத் தங்களுடைய சீடனாக ஏற்றுக் கொள்ளுங்கள்' என்று சொன்னார். குருட்ஜீவ் அவரிடம், 'அப்படியானால் நீர் தயார்நிலையில் இருக்கிறீர்... ஞானத்தின் முதற்படியே தான் ஏதும் அறிந்திருக்கவில்லை என்பதை ஒருவர் கண்டு கொள்வதுதான்' என்றார்.

'காரணம், பலன், ஆதாரம், பற்றுகின்ற பொருட்கள் இவைஒன்று சேர்ந்து இருப்பதால் இன்பம் தோற்றவிக்கப்படுகிறது. இவை மறைந்து போனால் இன்பமும் மறைந்து போகும்?

பதஞ்சலி சொல்கிறார், 'நீங்கள் நிலைத்திருப்பவர்' என்று, ஆனால், அது ஒரு விளைவு. நீங்கள் கோபத்தை உணர்கிறீர்கள் அது ஒரு விளைவு. காரணத்தைக் கண்டு பிடியுங்கள். தொடர்ந்து விளைவுகளுடன் போரிடுவதால் எந்தப்பயனும் இல்லை. உங்கள் பேராசையை நீங்கள் எதிர்த்து நிற்கிறீர்கள். ஆனால், அது வேறோர் இடத்தில் மறுபடியும் தலைகாட்டவே செய்யும். நீங்கள் விளைவுகளை எதிர்த்து நிற்பதன் மூலம் அவற்றை அழித்துவிட முடியாது. அதனால் தான் யோகா ஓர் ஒழுக்க முறைசார்ந்த அமைவாக இல்லாமல், விழிப்புணர்வுக்கான அமைவாக இருக்கிறது.

உண்மைக் காரணம் கண்டறியப்பட வேண்டும். நீங்கள் ஒரு மரத்தின் இலைகளைத் தொடர்ந்து அகற்றுவதாலோ, சின்னச் சின்ன கிளைகளைத் துண்டிப்பதாலோ அது மரத்தைப் பாதித்து விடாது. புதிய இலைகள் தோன்றும். நீங்கள் மிகச்சரியான காரணத்தை. வேர்களை நாடிச் செல்லவேண்டும். நீங்கள் மரத்தை அழிக்க விரும்பினால் வேர்களை அழித்து விடவேண்டும். வேர்கள் அழிந்ததும் மரமும் அழிந்துவிடும். ஆனால் நீங்கள் கிளைகளை வெட்டிக் கொண்டேயிருப்பதால் மரம் அழிந்துவிடாது. நீங்கள் எந்தவொரு கிளையைவெட்டினாலும் அது வளர்ந்துவிடும், ஒன்றுக்கு மூன்றாக, ஒரு மரத்தின் சின்னச் சின்ன கிளைகளை அகற்றினால்

அதை மேலும் கிளைத்து, அடர்ந்து செழிக்கும். வேர்களை வெட்டுங்கள் அத்தோடு மரத்தின் கதை முடிந்துவிடும்.

யோகா சொல்கிறது; 'ஒழுக்க முறைமை விளைவுகளுடன் தொடர்ந்து போரிட்டுக் கொண்டிருக்கும்' என்று.

நீங்கள் பேராசைக் காரராய் இருந்து கொண்டு, பேராசையற்றவராக முயற்சிக்கிறீர்கள். உங்களுடைய பேராசை பேராசையின்மையாய் மாற்றப்படும் போது மட்டுமே நீங்கள் பேராசையற்றவராக முடியும். நீங்கள் பேராசையற்றவராய் இருந்தால் சொர்க்கத்துக்குச் செல்வீர்கள், பேராசைக்காரராய் இருங்கள். நீங்கள் சொர்க்கத்தை அடைவதுடன் அங்கே காலகாலத்துக்கும் மகிழ்ச்சியாயிருப்பீர்கள்' என்று அவர் சொல்கிறார். தற்போது, பேராசைக்காரரான ஒருவர் தாம் சொர்க்கத்துக்குச் செல்ல வேண்டும் என்பதால் பேராசையை விடுவதற்கான பயிற்சி முறை பற்றிச் சிந்திக்கத் தொடங்குகிறார்.

நீங்கள் அச்சப்படுகிறீர்கள். அச்சத்தில் இருந்து எப்படி விடுபடுவது? நீங்கள் அச்சத்தை அடக்கி வைக்க முற்படுகிற பொழுது அது மேலும் அதிகரித்துவிடக் கூடும். அச்சத்தை அடக்குவதன் மூலம் நீங்கள் அச்சமற்றவராவதில்லை. உங்களுடைய அச்சம் மேலும் அதிகரிக்கவே செய்யும். ஒரு புதிய அச்சம் தோன்றும், அச்சம் பற்றிய அச்சம்.

நீங்கள் கோபப்படுகிறிர்கள். கோபாவேசப்படுவது உங்களுக்கு எளிதாயிருக்கும், அந்த ஈர்ப்பை (temptation) எதிர்த்து நிற்பது கடினம். தற்போது ஏதாவது செய்தே ஆக வேண்டும். நீங்கள் ஏன் கோபவேசமாவது? உங்களுடைய அகந்தைக்கு ஊறு நேரிடுகிற போதெல்லாம் உங்களுக்குக் கோபம் வந்து விடுகிறது. கட்டுப்பாடாக இருப்பவரே சமூகத்தால் மதிக்கப்படுகிறார் என்றும் தற்போது உடங்களுக்குக் கற்பிக்கப்பட்டிருக்கிறது. தன்னுடைய கோபத்தை எளிதில் வெளிக்காட்டாமல் இருப்பவரே உயர்ந்தவர் என்று கருதப் படுகிறது. அந்நிலையில் உங்கள் தற்பெருமை உயர்ந்து விடுகிறது. உங்களுடைய தற்பெருமை நாசமடைவதில்லை, மாறாக, அதுபலப் படுத்தப்பட்டு விடுகிறது. பிணியின் பெயரும் உருவமும் வேண்டு மானால் மாறியிருக்கலாம். ஆனால், பிணி இருந்தபடி இருக்கும். இதனை நினைவில் கொள்ளுங்கள், யோகா என்பது ஒழுக்க

முறைமை சார்ந்த அமைவு அல்ல, காரணம், அது விளைவுகள் பற்றிக் கவலைப்படுவதில்லை. அதனால்தான் பத்து கட்டளைகள் போன்றதாய் எதுவும் அதில் இருக்கவில்லை.

அடிப்படைக் காரணத்தை அறியாமலே மக்கள் ஒருவருக்கொருவர் கற்பித்துக் கொண்டிருக்கிறார்கள். அடிப்படைக்காரணத்தை அறியாமல் எதுவும் செய்ய முடியாது. மனித குணம் அப்படியே தானிருக்கும். அங்கொன்றும் இங்கொன்றுமாய் சிலமாறுதல்கள், நகாசு வேலைகள் செய்யப்படலாம்.

நான் கேட்டறிந்தது; போலந்து நாட்டுக்காரர் ஒருவர் கண்பரி சோதனைக்காக கண்மருத்துவமனைக்குச் சென்றார். மருத்துவர் அவரிடம் பலகையில் எழுதப்பட்டிருந்தவர்களைப் படிக்கச் சொன்னார். 'நீஉஸ்மீஸிநீழ்ஷ்' என்று எழுதப் பட்டிருந்த கடைசிவரியைப் படிக்கும் போது அவர் தயங்கினார். 'கவலை வேண்டாம். உம்மால் அதை வாசிக்க முயாவிட்டால் உம்மால் முடிந்த வரை முயற்சி பண்ணலாம்' என்றார் மருத்துவர். 'வாசிக்கறதா? அந்த ஆளை எனக்கு நேரடியாகவே தெரியும்' என்றார் போலந்துக்காரர்.

உங்களுக்குத் தெரியாது என்று ஒப்புக் கொள்வது கடினமாகத் தான் இருக்கும். நீங்கள் ஏன் தற்பெருமைக் காரராய் இருக்கிறீர்கள். என்பது உங்களுக்குத் தெரியாது. நீங்கள் ஏன் அத்தனை எளிதில் கோபத்துக்குள்ளாகிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரியாது. ஏன் பேராசைப்படுகிறோம் என்பது தெரிந்திருக்காது. சிற்றின்ப வேட்கை எதற்காக, அச்சம் எதற்காக என்பதும் உங்களுக்கு தெரிவதில்லை. காரணத்தை அறியாமலே விளைவுகளை நீங்கள் எதிர்க்கத் தொடங்குகிறீர்கள். பலரும் என்னிடம் வந்து சொல்கிறார்கள், 'நாங்கள் எப்படியாவது கோபத்தை விட்டுவிட விரும்புகிறோம் என்று. நான் அவர்களிடம் கேட்டேன். காரணத்தைத் நீங்கள் அறிவீர்களா?'. அவர்கள் தங்களுடைய தோள்களைக் குலுக்கிக் கொண்டனர். அவர்கள் சொன்னார்கள். 'கோபம் இருக்கு. நான் எளிதில் கோபப்படறேன். அது என்னைத் தொல்லை பண்ணுது. என்னுடைய தொடர்புகளைக் கெடுக்குது. என்னை ரொம்பவும் இறுக்கமடையச் செய்யுது. கவலையை உண்டுபண்ணுது. தவறுக்காக வருந்த

வேண்டியிருக்கு, குற்றமனப்பான்மை ஏற்படுது' என்று. ஆனால், இவையெல்லாம் விளைவுகள்.

ஏன், பட்டுனு கோபம் வருது? – ஆனால், யாருமே அதைப்பற்றிக் கேட்கவில்லை. அதன் நேர்த்தியே இதுதான். நீங்கள் காரணம் கேட்டால், காரணத்தைப் பற்றி விவரித்தால் அதற்கு ஒரே காரணந்தான் என்பதை அறிந்தால் உங்களுக்குத் திகைப்பாகத்தான் இருக்கு. இலட்சோப லட்சம் விளைவுகள், ஆனால், காரணம் ஒன்றுதான். அந்தக்காரணம் – நீங்கள் போதிய விழிப்புடன் இல்லை என்பதே. கோபத்தை உங்களால் கட்டுப்படுத்த முடியும், ஆனால் அது பயன்படாது. அது உங்களுக்குள் இருக்கும் பிணியைக் கட்டுப் படுத்தும், அப்படியே தடுத்து வைத்திருக்கும், அவ்வளவுதான். அது உங்களுக்கு ஆரோக்கியத்தை வழங்கி விடாது. அது உங்கள் ஆரோக்கியத்தை மேலும் மோசமாக்கக் கூடும். நீங்கள் புரிந்து கொள்ளவேண்டும். எளிதில் கோபவசப்படுகிறவரால் எந்த ஆபத்தும் இருப்பதில்லை. அவர் ஒருபோதும் கொலை பண்ணிவிடமாட்டர் என்பதில் நீங்கள் உறுதியாயிருக்கலாம். ஒரு கொலைகாரராகும் அளவிற்கு அவரால் கோபத்தை வளர்த்துக் கொளள முடியாது.

தினமும் தன்னுடைய உணர்ச்சியை அவர் தூய்மைப்படுத்தும்படி இருக்கும். எடுத்தற்கெல்லாம் அவருக்குக் கோபம் வந்துவிடும். ஆனால், அவருக்குள் ஆவிதிரண்டு பெரிதாவதில்லை. அவர் ஒரு கசிவு அமைவு (leak system) வைத்திருக்கிறார். ஆவி அதிகமாகி விடும் போதெல்லாம் அவர் அதை வெளியேற்றி விடுகிறார். எவனொருவன் ரொம்பவும் கட்டுப்படுத்தி வைக்கிறானோ அவன்தான் ஆபத்தானவன். அவன் தொடர்ந்து நீராவியை உள்ளேயே வைத்தி ருப்பவன். அவனுடைய ஆற்றல்கள் அடைத்து வைக்கப்படுவதால் அணைபோடப்பட்டுக்கிடக்கும். என்றாவது ஒருநாள் அவனுடைய கட்டுப்பாட்டையும் மீறி அந்த ஆற்றல்கள் தம்மை நிரூபித்துக்காட்டும். அந்நிலையில் அவன் உண்மையிலேயே பயங்கரமான ஒன்றைச் செய்வான். எளிதில் கோபப்படுகிறவன் எளிதில் நிதானத்துக்கு வந்துவிடுவான்.

நான் கேட்டறிந்தது: 'எழுத்தர் சொன்னார்' வருந்துகிறேன் ஐயா. என்னுடைய வேலையில் இருந்த நான் விலகுவதைத் தெரிவித்துக் கொள்கிறேன்'

'ஆனால் எதற்காக?' அவனுடைய முதலாளி வியப்புடன் கேட்டார்.

'நல்லது ஐயா, உண்மையைச் சொல்வதாயின் உங்களுடைய வெறுப்பூட்டும் அருவருப்பான மனநிலை எனக்குப் பிடிக்க வில்லை'.

'ஓ, அதைச் சொல்கிறீரா. சமயத்தில் எனக்கு அப்படித்தான் கோபம் வந்திடறது. ஆனா அது வந்த வேகத்திலேயே மறைஞ் சிடறதையும் நீர் ஒப்புக்கத்தான் வேணும் என்று கெஞ்சலாய் சொன்னார் முதலாளி.

'அது உண்மைதான் ஐயா, ஆனா, அது போன வேகத்திலேயே திரும்பவும் வந்திடறதே'.

ஆனால் இப்படிப்பட்டவர்கள் ஒருபோதும் கொலைகாரராகி விடுவதில்லை. அந்த அளவு நீராவியை அவர் உள்ளே திரட்டி வைப்பதில்லை. எளிதில் கோபப்படுகிறவர்கள் நல்லவர்களாக இருப்பார்கள். ஒழுக்கம் சார்நத், கண்டிப்பாக இருக்கிற, கட்டுப்பாடான ஒரு மதவாதியுடன் இருப்பதைவிட அவருடன் இருப்பது மேல். அவர் (மதவாதி) ஆபத்தானவர்.

சில நாட்களுக்கு முன் தீர்த்தாவின் பகைமையோடு எதிர்த்து நிற்கும் குழுவில் ஓர் இளைஞன் சேர்ந்தான். அய்க்கிடோவில் பல ஆண்டுகள் பயிற்சி பெற்றவன் அவன். அய்க்கிடோ, ஜீடோ, கராத்தே என்று, ஜுஜிட்சு இவை எல்லாம் தற்காப்புப் போர்க் கலை யின் கிளைகள். இவற்றைக் கற்றவர் ஒரு சிலைபோல் ஆகிவிடுவார், நீங்கள் எவ்விதத்திலும் அவருக்குச் சினமூட்டுவது முடியாது. அத்தனை கட்டுப்பாடு இருக்கும் அவரிடம்.

தாக்குதல் தொடுக்கும் (encounter) குழுவின் கோட்பாடு முற்றிலும் மாறுபட்டது. அது உங்களுக்குள் இருப்பது எதுவாயினும் அதை வெளிக் கொண்டுவருவது. உள்ளுக்குள் எதையும் குவிக்காதீர்கள். அதை வெளியேற்றிவிடுங்கள். அய்க்கிடோவும்,

எதிர்த்து நிற்றலும் ஒன்றுக்கொன்று முற்றாக வேறுபாட்டை. அய்க்கிடோ செல்கிறது' கட்டுப்பாடாக இரு' என்று. அய்க்க டோபயிற்சி போர்வீருக்கானது. ஜப்பானிய பயிற்சிகள் அனைத்தும் உங்களை ஒரு சிறந்த போர்வீரராக்கி விடும். அவை பெரிய அளவில் அபாயகரமானவை. ஜப்பானியர்கள் உருவில் சிறியவர்கள், அதிக உயரமில்லை. தங்களைவிட உருவில் பெரியவர்களுடன் அவர்கள் சண்டையிடும்படி இருக்கும். தங்களைவிட உருவிலும், வலிமையிலும் பெரியவர்களுடன் சண்டையிடும் உபாயங்கள் தேவைப்பட்டது அவர்களுக்கு. அவற்றுள் ஒன்று உங்களுக்குள் இருக்கும் எல்லா ஆற்றல்களையும் கட்டுப்பாட்டில் வைப்பது. ஜப்பானியர்களும், சீனர்களும் அதிக ஒழுக்கத்துடன் கட்டுப்பாட்டுடன் வாழ்கிறவர்கள். அவர்கள் ஆபத்தானவர்கள். உங்களைத் தாக்கத் தொடங்கிவிட்டால் உயிரோடு விடமாட்டார்கள். சாதாரணமாக தாக்குவதில்லை, தாக்கத் தொடங்கி விட்டால் எதிராளியைத் தீர்க்ககாமல் விடுவதில்லை.

அய்க்கிடோவில் கடுமையான பயிற்சி பெற்றிருந்த இந்த இளைஞன் தாக்குதல் தொடுக்கும் பிரிவில் இருந்தான். தீர்த்தா இவனிடம் அபத்தமாய் சொன்னார் உள்ளிருப்பவற்றை வெளியேற்றிவிடு என்று. அவன் அதைச் செய்யவில்லை. அவன் என்னிடம் சொன்னான், 'என்னுடைய ஒட்டுமொத்த பயிற்சியும் கட்டுப்பாட்டை மேற்கொள்வதாகவே இருந்தது' என்று. அந்தப்பிரிவில் இருந்த ஒரு பெண் அவனைத் தாக்கத் தொடங்கினாள்.

அவள் தன்னுடைய கோபத்தை வெளிப்படுத்திக் கொண்டிருந்தாள், அவனோ சிலைபோல் நின்றிருந்தான், காரணம் அவனுடைய பயிற்சி முழுவதும் செயல்படுவதற்கான தல்ல. அவன் ஒரு புத்தரைப் போல் இருந்தான், உண்மையில் ஒரு புத்தரல்ல, காரணம் ஒரு புத்தர் விழிப்புடன் இருப்பவர். மேற்பரப்பில் இருவரும் ஒரேமாதிரி தோற்றமளிக்கலாம். ஆனால், அடியாழத்தில் அவர்கள் முற்றிலும் வேறுபட்டவர்கள்தாம். அவர்களடைய ஆற்றலின் தன்மை வேறாயிருந்தது.

அவன் உள்ளுக்குள் மேலும் மேலும் கோப்பட்டான் அதேசமயம் அதிகக் கட்டுப்பாட்டையும் மேற்கொண்டிருந்தான். காரணம், அவனுடைய பயிற்சி ஆபத்துக்குள்ளாகி விடும் என்கிறநிலை. பிறகு ஒரு தலையணையை எடுத்து அவள் மீது எறிந்தான். அய்க்கிடோவில்

தேர்ந்த ஒருவன் வீசியெறியும் தலையணை கூட ஆபத்தை உண்டுபண்ணக் கூடும். ஒரு நுட்பமான இடத்தில், உரிய ஆற்றலுடன் தாக்கி மரணத்தை உண்டுபண்ணவும். அவனால் முடியும்.

எங்கே இலேசாக ஒரு தட்டுதட்டினாலும் மரணம் ஏற்படும் என்பதை ஜப்பானியர்கள் அறிந்திருந்தனர். எதிரொளியை தோற்கடிக்க ஒரேயொரு விரல் போதும் அவர்களுக்கு எங்கே, எப்போ, எப்படி அடிக்கவேண்டும் என்பதையும், அடிக்க வேண்டிய நுட்பமான இடங்களையும் அவர்கள் கண்டுபிடித்து வைத்தி ருந்தனர்.

ஆனால், அப்போது அவன் அசத்தில் இருந்தான். அந்தப் பெண்ணைக் கொன்று விடுவோமோ என்ற அச்சம். அந்தக் குழுவில் இருந்து தப்பி, எப்படியோ என்னிடம் வந்து 'இத்தகைய குழுவிற்கு ஆசிரமத்தில் இடமளிக்கக் கூடாது. என்றாவது ஒருநாள் யாரேனும் ஒருவர் யாரையேனும் கொன்று விடக்கூடும்' என்றான். அவன் சொல்வது சரிதான். காரணம் அவனுள் அந்தக் கொலைகாரன் இருந்தான். அவன் ஒரு கொலைகாரனாகி விடக்கூடும். உண்மையில் அத்தகைய பயிற்சிகள் ஒரு மனிதனை போர்வீரனாகக் குவதாகவே இருக்கின்றன, கொலைகாரனாக்குவதாகவும்.

நினைவிருக்கட்டும், நீங்கள் அடக்கிவைக்கிற கோபம், பேராசை போன்றவை உங்கள் இருப்புணர்வின் அடித்தளத்தில் குவிந்து கொண்டேயிருக்கும். நீங்கள் ஓர் எரிமலையின் மீதே உட்கார்ந்திருக்கிறீர்கள்.

யோகா எதையும் அடக்கிவைக்கிற வேலையைச் செய்வதில்லை. யோகாவின் நம்பிக்கை விழிப்புணர்வில்.

'காரணம், பலன், ஆதாரம், பற்றுகின்ற பொருள்கள் இவை ஒன்று சேர்ந்து இருப்பதால் இன்பம் தோற்றுவிக்கப்படுகிறது. இவை மறைந்து போனால் இன்பமும் மறைந்து போகும்.'

காரணத்தைக் கண்டுபிடியுங்கள், காரணம் ஒன்றாகவே இருக்கிறது. செயல்கள் எளிதாகிவிடும், காரணம், நீங்கள் பல்வேறு விளைவுகளை எதிர்த்து நிற்கப் போகிறதில்லை. நீங்கள் முக்கியமான வேரை மட்டும் துண்டித்து விடுகிறீர்கள்: ஆயிரத்தியோரு கிளைகள்

கொண்ட மரம் அப்படியே மறைந்து விடுகிறது. மிகுதியான உணர்வோடு இருங்கள்.

உறக்கத்தில் தோன்றுகிறது கனவு நிலை, கனவுகள் மிதக்கத் தொடங்குகின்றன. சில நேரங்களில் உங்கள் கனவில் நீங்கள் விழிப்புடன் இருப்பீர்கள்தானே? சிந்திப்பதிலும் மிகச்சரியாக அதுதான் நிகழ்கிறது என்று நீங்கள் நினைப்பீர்கள். ஆனால் அப்படி யில்லை. எல்லா எண்ணங்களும் மறைகிறபோது தான் உண்மையான விழிப்பு ஏற்படுகிறது – உங்களுக்குள் மேகங்கள் (தெளிவின்மை) இல்லை, ஒற்றைச் சிந்தனையும் மிதக்கவில்லை. அது தூய்மை, கண்டுணர்தலின் தெளிவு! உங்கள் காட்சியில் எந்தவொரு பொருளாலும் இல்லாத காட்சி அது. வெறிச்சோடிக் கிடக்கிற ஆகாயம்! நீங்கள் எந்த வொன்றில் கவனம் செலுத்தினாலும் வார்த்தை எழாது உங்களுக்குள் நீங்கள் ஒரு ரோஜாவைப் பார்க்கிறீர்கள், 'இது ஒரு அழகான பூ' என்கிற அளவில் கூட எதுவும் எழாது உங்களுக்குள். நீங்கள் ரோஜாவைப் பார்க்கிறீர்கள், நீங்கள் இருக்கிறீர்கள், உங்கள் இருவருக்கும் இடையில் சொற்களாலான தெரிவிப்பு எதுவும் இருப்பதில்லை. அந்த அமைதியில், முதல்முறையாக விழிப்பு நிலையை நீங்கள் உணர்கிறீர்கள். அது வேரைத் துண்டிக்கிறது. தற்போது அதனைப் பல முறைகளிலும் ஆராய்ந்து பாருங்கள்.

**ஒரு வழி:** நீங்கள் கோபப்படுகிறபோது உணர்வுடன் இருக்க முயன்று பாருங்கள். ஒன்று கோபப்படுவது அல்லது உணர்வோடு இருப்பது. இரண்டில் ஏதாவதொன்றுதான் முடியும். இரண்டும் ஒன்றாக இருக்க முடியாது. பாலுறவு நாட்டம் எழுகிறபோது உணர்வோடு இருக்க முயன்று பாருங்கள். உடனே நீங்கள் புரிந்து கொள்வீர்கள் ஒன்று பாலுறவு நாட்டம் அல்லது உணர்வோடு இருப்பது இவற்றில் ஏதேனும் ஒன்றுதான் உங்களால் முடியும் என்பதை. விழிப்புணர்வு ஒரு நச்சு முறிவேயன்றி கட்டுப்படுத்துதல் அல்ல என்பதை நீங்கள் புரிந்து கொள்ள அது உதவும். நீங்கள் மேலும் மேலும் உணர்வுடையவரானால் ஆற்றல் முற்றிலும் வேறான பரிமாணத்தில் நகரத் தொடங்கும். அதே ஆற்றல்தான் வேறான பரிமாணத்தில் நகரத் தொடங்கும். அதே ஆற்றல்தான் போகத்திலும், பேராசையிலும், பாலுறவிலும் இயங்கிக் கொண்டிருந்தது.

உங்களுக்குள் ஒளிபிழம்பாய் செயல்படத் தொடங்கியது. மனிதனின் பரிமாண வளர்ச்சியில் விழிப்புணர்வு அடைகிற உயர்நிலை இது. உணர்வோடு இருக்கும் மனிதன் ஒரு கடவுளாகவே மாறிவிடுகிறான். நீங்கள் அதை அடையாவிட்டால் உங்கள் வாழ்க்கை வீணான ஒன்றாகிவிடும். நாம் குடியில் மூழ்கியவரைப்போல் வாழ்கிறோம்.

சில குட்டிக் கதைகளைச் சொல்கிறேன் உங்களுக்கு:

மெக்சிகோ பழம்பதியில் ஓர் இரவைக் கழித்த யாத்ரீகன் முந்தைய இரவு பற்றிய மங்கலான நினைவுடன் கண்விழிக்கிறான். அவனுடைய படுக்கையில் அருவருப்பான தோற்றமுடைய பல்லில்லாத ஒரு சூன்யக் கிழவி (hag) படுத்திருக்கிறாள். குமட்டலும், எரிச்சலுமாய் அவன் குளியலறைக்கு ஓடினான், அங்கே அழகான மெக்சிகோ இளம் பெண் ஒருத்தியின் மீது மோதிக் கொள்கிறான். 'ஏய், நான் என்ன ராத்திரி குடித்திருந்தேனா?' என்று அவளிடம் கேட்கிறான். 'நான் அப்படித்தான் நினைக்கிறேன்' என்று பதில் வந்தது. 'இல்லாவிட்டால் என்னுடைய தாயை எதற்காக நீ மணந்து கொண்டிருக்கிறாய்?' என்று கேட்டாள் அவள்.

இந்த நிமிடம் வரை நீங்கள் எதையெல்லாம் செய்து வந்தாலும், ஒருநாள் திடீரென்று எல்லாமே தவறாகிவிட்டிருக்கிறது என்பதை உணர்வீர்கள். நீங்கள் யாரைத் திருமணம் செய்து கொண்டிருந்தாலும், இதுவரை உங்கள் வாழ்க்கையில் செயல் தூண்டலை ஏற்படுத்தியது எதுவாயினும், இதுவரை நீங்கள் விரும்பியது எதுவாயினும், ஒருநாள் உணர்வீர்கள், எல்லாமே ஏதோ குடிபோதையில் நடந்து விட்டது போன்று.

ஜான்ஸ்மித் கெட்ட பெயரெடுத்த ஒரு குடிகாரன். நகரத்தில் மாலைப் பொழுதைக் கழித்துவிட்ட ஒரு இரவில் இடுகாட்டின் வழியே குறுக்காக நடந்து வந்தான் அவன். அப்போது கல்லறைக் கல் ஒன்றின் மீது தடுக்கி விழுந்தான். அப்படியே குப்புறவிழுந்து கிடந்தவன், காலையில் கண் விழித்தபோது தன்னுடைய தலைக்கு மேல் கல்லறைக் கல் இருப்பதைக் கண்டான். ஜான்ஸ்மித் என்கிற பெயர் பரவலாகப் புழக்கத்தில் உள்ளதுதான். அவன் படுத்திருந்த கல்லறை மீது ஜான்ஸ்மித் என்கிற பெயர்ப் பலகை இருந்தது. அவனுடைய பெயர் கொண்ட இன்னொருவனின் கல்லறை அது.

'ஜான்ஸ்மித்தின் நினைவாக...' என்று அதில் எழுதப்பட்டிருந்ததை அவன் கவனித்தான். 'நல்லது, அது நான்தான். ஆனால், ஈமச்சடங்கு எதுவும் நடந்ததாக எனக்கு நினைவில்லையே' என்று முணுமுணுத்தான்.

ஒருவர் தியானிக்கிற பொழுது, பல பிறவிகளாய் போதையில் விழுந்து கிடந்த நிலையில் இருந்து வெளியே வருகிறார். இதுவரை நடந்த வாழ்க்கை எத்தனை பயங்கரமாய் – கெட்ட கனவாய் இருந்தது என்பது தெரிகிறது. நம்பவே முடிவதில்லை. அதனால்தான் மக்கள் உணர்வோடிருக்கவும் முயல்வதில்லை. காரணம், விழிப்புணர் வின் காட்சி சிதறுகிறது, ஏதோ அர்த்தமிருக்கும் என்று இந்தக் கணம் வரை அவர்கள் எண்ணிக் கொண்டிருந்த ஒட்டுமொத்த வாழ்க்கையும் சர்வநாசமாகிறது. முழுவாழ்க்கையும் அர்த்தமற்றதாய் முக்கியத்துவமற்றதாய் போய்விடுகிறது. விழிப்புணர்வு எங்கே முழு வாழ்க்கையையும் தவறு என்று மெய்ப்பித்து விடுமோ என்கிற அச்சம் உண்டாகிறது. அதனால் தான் துணிவுடையவர்கள் தியானிக்கவும், உணர்வோடிருக்கவும் முயல்வது. இல்லையேல், மக்கள் அதே கனவுகள், அதே சிந்தனைகள், அதே ஆசைகள் என்று பிறவிக்கு வந்து இறக்கிறார்கள் – தொட்டிலில் இருந்து கல்லறைக்கு... என்று ஒரு வட்டத்துக்குள்ளாகவே சுற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

கொஞ்சம் எண்ணிப்பாருங்கள், நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்பது பற்றிச் சிந்தியுங்கள்: உணர்வற்ற ஆசைகளில், ஒருபோதும் உங்களுக்கு பேரின்பத்தைத் தந்திராத ஏதோ ஒன்றில் மூழ்கிவிடு கிறார்கள். எது உங்களைத் தொடர்ந்து ஏமாற்றிக் கொண்டிருக்கிறதோ, அதையே செய்தபடி இருக்கிறீர்கள். அறிதுயிலில் ஆழ்த்தப்பட்டது போல் நடந்து கொள்கிறீர்கள். உண்மையில் அதைத்தான் யோகாவும் சொல்கிறது: நாம் அறிதுயிலில் ஆழ்ந்திருக்கிறோம் என்ற நம்மை யாரும் வசியப்படுத்தவில்லை, நம்முடைய மனங்களே நம்மை வசியப் படுத்தியிருக்கின்றன.

நான் கேட்டறிந்தது:

அந்தக் குடிகாரன் தள்ளாடியபடி வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தான். தான் குடித்திருப்பதைத் தன்னுடைய மனைவியிடம் இருந்து எப்படியாவது மறைத்துவிட வேண்டும் என்று மூளையைக்

கசக்கிக் கொண்டான். கடைசியாக ஒரு யோசனை பளிச்சிட்டது. 'ஒரு குடிகாரன் புத்தகம் படித்துக் கொண்டிருப்பான் என்பதை யாரும் கேள்விப்பட்டிருக்கவே மாட்டார்கள்' என்று அவன் எண்ணிக் கொண்டான். தன்னுடைய திட்டத்தைச் செயல்படுத்தும் எண்ணத்துடன் வீட்டுக்குள் சென்றான். நேராக ஓய்வு கொள்ளும் பொது அறைக்குச் சென்று உட்கார்ந்தான். ஒரு நிமிடத்துக்குப் பிறகு, அறைக்குள் வந்து பார்வையைச் சுழல விட்ட அவனுடைய மனைவி கேட்டாள், 'நீ என்ன செய்யறதா நினைச்சிட்டிருக்கே?' என்று. 'படிச்சிட்டிருக்கேன், கண்ணு' என்றான் அந்தக் குடிகாரன். 'குடிகார முட்டாளே, மறுபடியும் குடிச்சிட்டு வந்திருக்கியா, முதல்ல அந்த சூட்கேஸை மூடிவச்சிட்டு, வந்து படு' என்று திட்டித் தீர்த்தாள்.

உங்களுடைய உணர்வற்ற நிலையில் நீங்கள் எதைச் செய்தாலும் முட்டாள் தனந்தான்.

ஒரு பெண்ணை நீங்கள் காதலிக்கிறீர்கள்: நீங்கள் தெரிநிலை (aware)யில் இருந்தால் அந்தக் காதல் மறைந்தே தீரும், காரணம், உங்களுடைய காதல் ஒரு வசிமாகத்தான் இருந்திருக்க வேண்டும். சாதாரண காதல் அப்படித்தான். தலைநகரத்துக்குச் சென்று ஒரு குடியரசுத் தலைவராகவோ, பிரதமராகவோ ஆகிவிட வேண்டும் என்று நீங்கள் பேராவல் கொண்டிருக்கலாம். ஆனால், அதை உணர்வதற்கே உங்களுக்கு அச்சமாக இருக்கும். காரணம் உணர்கிறபோது அது எத்தனை முட்டாள்தனம் என்பது தெரியவரும்.

அன்றோர் நாள் செனட்டர் ஹம்ப்ரே அழுதுகொண்டிருக்கிற ஒரு படத்தை நான் பார்த்தேன், காரணம், தம்முடைய வாழ்க்கை நெடுகிலும் தாம் எப்படியாவது அமெரிக்கக் குடியரசுத் தலைவராகி விட வேண்டும் என்று அவர் முயன்று வந்திருக்கிறார். அதுதான் அவருடைய காடைசி வாய்ப்பு. எனவேதான் தம்முடைய ஆதரவாளர்கள் முன்பாய் அவர் அழத் தொடங்கிவிட்டது. 'எனக்கு வயதாகிவிட்டது. இதுதான் என்னுடைய கடைசி வாய்ப்பு. மறுபடியும் குடியரசுத் தலைவர் பதவிக்குப் போட்டியிடப் போவதில்லை' என்று கண்களில் நீர் வடிய, அவர் சொல்லிக் கொண்டிருந்தார். ஒரு சின்னக் குழந்தை மாதிரி அழுதுகொண்டு... உங்களுடைய அரசியல்வாதிகளே

இப்படித்தான், குழந்தைகளைப்போல் விளையாடிக் கொண்டு, சண்டையிட்டுக் கொண்டு இருப்பார்கள்.

நீங்கள் தெரிநிலையோடு இருப்பின் உங்கள் முயற்சியின் முழு அபத்தத்தையும் புரிந்து கொள்வீர்கள்.

ஒரு சமயம் இப்படி ஆயிற்று:

மிகப்பெரிய செல்வந்தர் ஒருவர் என்னுடைய உரையைக் கேட்க வந்து கொண்டிருந்தார். திடீரென்று அவர் வருவதை நிறுத்திவிட்டார். நான் அவரிடம், 'நீங்கள் எங்கே இருந்தீர்கள். திடீரென்று காணாமல் போய் விட்டீர்கள்?' என்று கேட்டேன். அவர் சொன்னார், 'திடீரென்று அல்ல. நான் கொஞ்சம் கொஞ்சமாய் பயந்தே போனேன். நான் உங்கள் பேச்சைக் கேட்க வருவேன். ஆனால் இப்போது அல்ல, நான் இளம் வயதுக்காரன், உங்கள் சொற்பொழிவுகளைக் கேட்டு மெள்ள மெள்ள என் ஆசைகள் குறைந்து விட்டன. அது ரொம்ப ஆபத்தானது. என் ஆர்வத்துக்குரியவற்றை நான் முதலில் அடைந்தாக வேண்டும். என்னுடைய பிற்காலத்தில், நான் முதிய வனானதும் தியானத்தில் இறங்குவேன். ஆனால், இப்போதைக்கு அது எனக்குப் பயன்படாது. புதிதாய் ஒன்றை ஆர்வம்தான் என்னை உங்களிடம் வரத் தூண்டியது. ஆனால் காலப்போக்கில் நான் அதில் அகப்பட்டுக் கொண்டேன். நிறுத்திக் கொள்வது கடினந்தான், ஆனால், நான் மனஉறுதி உடையவன்' என்று.

உங்களால் உணர்வு நிலையை அடையமுடியாது. உங்களுடைய முட்டாள்தனத்தில், அறியாமையில், விழிப்புணர்வற்ற நிலையில் நீங்கள் நிறையவே முதலீடு செய்திருக்கிறீர்கள். இந்த உறக்கத்தில் உங்களுடைய வாழ்க்கையையே நீங்கள் முதலீடு செய்திருக்கிறீர்கள். தற்போது விழிப்புணர்வின் முதல் ஒளிக்கீற்று தெரிந்ததுமே உங்கள் வாழ்க்கை முழுதுமே பாழாகி விட்டதாய் எண்ணிக் கொள்கிறீர்கள். நீங்கள் இன்னமும் துணிந்தபாடில்லை. அதனால்தான் மக்கள் தொடர்ந்து விளைவுகளைத் தொடர்ந்து மாற்றிக் கொண்டிருப்பது. காரணம், அதில் ஆபத்து இல்லை. அவர்கள் ஒருபோதும் வேர்களைத் தீண்டுவதில்லை.

ஒரு முறை இப்படி நடந்தது:

நான் முல்லா நஸ்ருத்தீனுடன் பயணம் செய்து கொண்டிருந்தேன். தம்முடைய பயணச்சீட்டு தொலைந்து போனது திடீரென்றுதான் அவருக்குத் தெரியவந்தது. அவர் தம்முடைய எல்லாப் பைகளிலும் தேடிப்பார்த்து விட்டார், சட்டை, பேண்ட், கோட் என்று எல்லாப் பைகளிலும். நான் அவரிடம் சொன்னேன், 'நீங்கள் சூட்கேஸ், பை என்று எல்லாவற்றிலும் தேடிப்பார்க்கிறீர்கள். ஆனால் ஒரு பையை மட்டும் ஏன் பார்க்காமலே இருக்கிறீர்கள்,' என்று. அவர் சொன்னார், 'எனக்குப் பயமா இருக்கு. அங்கேயும் டிக்கட் இல்லேன்னா நான் செத்துப் போய்விடுவேன். வேறு எங்கேயும் இல்லேங்கற போது, அது அங்கே இருக்கும்கற நம்பிக்கை இருக்கு. நான் அந்தப் பையையும் பார்த்துவிட்டு, அது அங்கே இல்லேன்னா செத்திருவேன்' என்று.

எங்கே பார்க்க வேண்டும் என்பது உங்களுக்குத் தெரியும். இருந்தும், மனதை ஏதேனும் ஒன்றில் நிலைப்படுத்திக் கொள்வதற்காக, வேறு இடங்களில் தேடுகிறீர்கள். பணத்திலும், அதிகாரத்திலும், மதிப்பிலும் பார்வையைச் செலுத்துகிறீர்கள். ஆனால், உள்ளுக்குள் உங்கள் இருப்புணர்வில் ஒரு போதும் பார்வையைச் செலுத்துவதில்லை. நீங்கள் அச்சப்படுகிறீர்கள். அங்கே கூர்ந்து கவித்து விட்டு ஏதும் இல்லையென்றால் உயிரற்ற வராகிவிடுவீர்கள். ஆனால், யார் எங்கே பார்வையைச் செலுத்து கிறார்களோ அவர்களெல்லாம் கண்டடைந்திருக்கிறார்கள். ஒருவர் உள்ளே சென்று அங்குள்ள அருநிதியத்தைக் காணாமல் திரும்பினார் என்று சொல்ல, விதிவிலக்காய் ஒன்று கூட இருந்த தில்லை. இப்பிரபஞ்ச உண்மைகளில் இதுவும் ஒன்று. அறிவியல் உண்மைகள் கூட பிரபஞ்சம் சார்ந்திருக்கவில்லை. இந்த உண்மை விதிவிலக்கற்றதாயிருக்கிறது. எந்தக் காலத்திலும், எந்தவொரு நாட்டிலும், எந்தவொரு நூற்றாண்டிலும் ஆணோ பெண்ணோ உள்நோக்கில் பார்வையைச் செலுத்தியவர்கள் அந்த அருநிதியத்தை கண்டு கொண்டிருக்கிறார்கள். ஆனால், பார்வையைச் செலுத்த ஒரு துணிவு வேண்டும், மிகப் பெரிய துணிவு. உங்களுக்கு வெளியேயிருக்கும் உலகை நீங்கள் ஒழுங்கு படுத்திக் கொண்டி ருக்கிறீர்கள். உங்களுடைய காதல், அகிகாரம், பணம், பெயர், புகழ் எல்லாம் உங்களுக்கு வெளியே இருக்கின்றன. உள்ளே செல்ல விரும்புகிற ஒருவர் இவற்றையெல்லாம் விட்டாக வேண்டும்.

தன்னுடைய கண்களை அவர் மூடிக்கொள்ள வேண்டும். அவர் கடைசி எல்லையை – குறிக்கோளைப் பற்றிக் கொண்டுவிடுவார்.

வாழ்க்கை உங்களை ஏமாற்றத்துக்குள்ளாக்குகிறது. அதுவும் ஒரு பாக்கியமே. மறுபடியும் மறுபடியும் இந்த வாழ்க்கை உங்களை ஏமாற்றியபடி இருக்கிறது. 'உள்ளேயோ' என்று வாழ்க்கை சொல்கிறது. நீங்கள் தவறான திக்கில் கவனம் செலுத்துகிறீர்கள். என்பதைச் சுட்டிக்காட்டுகிறவைகள் தாம் அந்த ஏமாற்றங்கள். நிறைவு என்பது சரியான போக்கில் தான் சாத்தியம். வாழ்க்கை உங்களை ஏமாற்றுகிறது, காரணம், வாழ்க்கை ஒரு வரப்பிரசாதம். நீங்கள் புறப்பொருளில் திருப்தியுற்றால் தொலைந்து போவீர்கள் என்றைக்குமாய். பிறகு ஒருபோதும் உள்நோக்கில் பார்வையைச் செலுத்தமாட்டீர்கள். ஆனால், இத்தனை ஏமாற்றங்கள் இருந்தும் நீங்கள் தொடர்ந்து நம்பிக் கொண்டிருக்கிறீர்கள்.

ஒருவரைப் பற்றி நான் கேள்விப்பட்டது; 'நீ கடைசியாகப் பார்த்த வேலையை ஏன் விட்டுவிட்டாய்?' 'நல்லது, முதலாளி சொன்னார், 'உன்னை வேலையில் இருந்து நீக்கியாயிற்று என்று. ஆனால் நான் அதைக் கண்டு கொள்ளவில்லை. அவர் எப்போதுமே அப்படித்தான் சொல்லிக்கொண்டிருப்பார். அதனால், நான் அடுத்தநாளும் போனேன், அலுவலகத்தில் இருந்த என்னுடைய பொருள்கள் துப்புரவாய் அகற்றப்பட்டிருந்தன. நான் அதற்கடுத்த நாளும் போயிருந்தேன். என்னுடைய பெயர்ப்பலகை நீக்கப்பட்டிருந்தது. மறுநாள் போனேன், என்னுடைய இருக்கையில் வேறு யாரோ உட்கார்ந்திருந்தார். 'இருந்தாலும் இது ரொம்ப அதிகம்' என்றுபட்டது. எனவே, நான் வேலையை விட்டு விலகிவிட்டேன்'.

ஆனால், இது கூட அதிகமில்லை உங்களுக்கு, ஒவ்வொருநாளும் நீங்கள் அகற்றப்படுகிறீர்கள், நீக்கப்படுகிறீர்கள், ஒவ்வொருநாளும் ஒவ்வொரு கணத்திலும் ஏமாற்றத்துக்குட்படுத்தப் படுகிறீர்கள். நீங்கள் செய்கிற ஒழுங்கமைவுகள் ஒவ்வொரு கணத்திலும் அழிவுக் குள்ளாகிறது. உங்களுடைய கோரிக்கைகள் தட்டிக் கழிக்கப் படுகின்றன. உங்களுடைய நம்பிக்கைகள் உதவாதவை என்று எளிதாய் மெய்ப்பிக்கப்பட்டு விடுகின்றன. உங்கள் கனவுகள் புழுதியாய், தூசியாய் மாறி, ஒரு கசப்பான சுவையை வாயில் விட்டுச் செல்லும். தொடர்ந்து குமட்டலை உணர்ந்தாலும் நீங்கள் பற்றிக் கொண்டிருப்பீர்கள்.

உங்களுடைய கருத்துருக்களாலான மாய உலகில் நீங்கள் இப்படித்தான் தொங்கிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் எச்சரிக்கையோடு இல்லாவிடில், உங்கள் நம்பிக்கைகளின் நம்பிக்கையற்ற தன்மையைப் புரிந்து கொள்ளாவிடில், உங்களால் உள் நோக்கிச் செல்லமுடியாது என்ற நம்பிக்கையை நீங்கள் கைவிடாவிடில் காரணத்தை – வினைமுதலை உங்களால் அழிக்க முடியாது.

**'பொருளுக்குள் இருக்கின்றன அதன் கடந்த காலமும், எதிர் காலமும். வடிவமும், வெளிப்படுத்தலும் காலத்துக் கேற்ப மாறும்.'**

யோகா முடிவற்ற காலத்தில் (eternity) நம்பிக்கை வைக்கிறது, குறிப்பிட்ட நேரத்தில் அல்ல. கடந்த காலம் இன்னமும் இருக்கிறது, நிகழ்காலத்தில் மறைந்தவாறு. வருங்காலமும் நிகழ்காலத்தில் மறைந்துள்ளது. காரணம், கடந்தகாலம் அப்படியே மறைய முடிவதில்லை. வருங்காலமும் ஏதுமின்மையில் (nothingness) இருந்து அப்படியே தோன்றி விடாது. கடந்தகாலம், நிகழ்காலம், வருங்காலம் என்கிற இவையனைத்தும் இக்கணத்தில் இருக்கின்றன. நம்மால் முழுமையைக்காண இயலாது என்பதால் அவை பிரித்தறியப் படுகின்றன. மெயம்மையை (reality)க் காணமுடியாத அளவு நம்முடைய கட்புலன்கள் மிகச்சிறியவை நாம் பிரித்தறிகிறோம்.

நம் விழிப்புணர்வு தூயதாய் இருந்துவிட்டால் அதில் மேகம் (தெளிவற்றிருத்தல்) இல்லை என்றால் நாம் சாசுவதமானதை (eternity) உள்ளது உள்ளபடி அறிவோம். இருப்பது இந்தக் கணம் மட்டுமே, இது முடிவற்றது.

பொகுஜீ என்கிற ஜென்குரு இருந்து கொண்டிருந்தார். அவருடைய சீடர்கள் சூழ்ந்துநின்றனர். பிரதம சீடர் கேட்டார், 'குருவே, தாங்கள் எங்களை விட்டுச் செல்கிறீர்கள். தாங்கள் விடுத்துச் சென்ற சேதி என்ன என்று மக்கள் எங்களைக் கேட்பார்கள். தாங்கள் தொடர்ந்து பலவற்றை எங்களுக்குப் போதித்திருக்கிறீர்கள், நாங்கள் அறியாமையில் இருந்தோம், தங்களிடம் எவ்வளவோ கற்றுக் கொண்டோம். தங்களுடைய செய்தியைச் சுருக்கிச் சொல்வது எங்களால் இயலாத காரியம். எனவே தயவு செய்து, தாங்கள் இங்கிருந்து புறப்படுவதற்கு முன் தங்கள் செய்தியின் சாரத்தை ஒற்றை வாக்கியத்தில் கூறியருள வேண்டும்' என்று.

பொகுஜீ தம்முடைய கண்களைத் திறந்து 'அதுதான் இது' என்று உரத்தகுரலில் சொன்னார். கண்களை மூடி, இறந்து போனார். அவருக்குப் பிறகு, பல நூற்றாண்டுகள் சென்றபின் அவர் குறிப்பிட்டது பற்றி மக்கள் இன்னமும் கேள்வியெழுப்பிக் கொண்டிருக்கிறார்கள். அதுவா இது? அவர் எல்லாவற்றையும் கூறிவிட்டார்.

அது... தான்... இது.

முழுச் செய்தியையும் அவர் வழங்கிவிட்டார். இந்தக் கணத்தில் இருக்கிறது எல்லாமும். இந்தக் கணத்துடன் தொடர்புடைய தாய் இருக்கின்றன. ஆனால் அதன் முழுமையில் அதை உங்களால் காணமுடியவில்லை. காரணம், உங்களுடைய மனம் அந்த அளவு தெளிவற்றதாயிருக்கிறது. எண்ணங்களும், கனவுகளும், உறக்கமும் அதன்மீது புழுதியாய் படிந்திருக்கின்றன. ஆசை, உள்நோக்கம், அறிதுயில் இவற்றுக்கு அளவேயில்லை. உங்களால் பார்க்க முடியாது. நீங்கள் முழுமையாயில்லை. உங்கள் பார்வை முழுமையாயிருந்தால் கடந்தகாலமும் வருங்காலமும் வெவ்வேறு தளத்தில் அனுபவமாகிறவை என்றாலும் இந்தக் கணத்தில் (நிகழ்காலம்) அவை இடம் பெற்றிருப்பதை அறிவீர்கள்' என்று. கடந்தகாலம் வேறு தளத்தில் நகர்கிறது. அது உங்களுடைய உணர்வற்ற நிலையாகிறது, உங்களுடைய உணர்வற்ற நிலைக்குள் நீங்கள் செல்ல முடியாது. எனவே உங்கள் கடந்த காலத்தை உங்களால் தெரிந்துகொள்ள முடிவதில்லை. வருங்காலம் வேறொரு தளத்தில் இடம் பெற்றிருப்பது. அது உங்களுடைய அதீத உணர்வு நிலை (superconsciousness)யில் இருப்பது. உங்கள் அதீதஉணர்வு நிலையில் நீங்கள் செயல்படமுடியாது என்பதால் வருங்காலத்தை உங்களால் அறிய முடிவதில்லை. உங்களுடைய சிறிய உணர்வுநிலையில் அடைபட்டிருப்பவர் நீங்கள், பனிப்பாறையினின்றும் பிரிந்து வந்து மிதக்கும் பனிக்கட்டியின் முனைப்பகுதி போன்றவர், பெரும்பகுதி ஆழத்தில் மறைந்து கிடக்கிறது. உங்களக்குக் கீழும், மேலுமாய் மெய்ம்மை சூழ்ந்திருக்கிறது. ஆனால் நீங்கள் மிகச்சிறிய உணர்வு நிலையைப் பற்றிக் கொண்டிருக்கிறீர்கள். இந்த உணர்வு நிலையை மிகச்சிறந்ததாய், பெரியதாய் ஆக்கப்பாருங்கள்.

உங்கள் உணர்வு, நிலையை எப்படிப் பெரிதாக்குவது, உங்கள் உணர்வு நிலையை எப்படி முடிவற்றதாக்குவது என்பதைப் பற்றியதே

தியானம். உங்கள் உணர்வு நிலையின் அதே அளவில்தான் மெய்ம்மை (reality)யையும் நீங்கள் அறிந்திருப்பீர்கள். உங்களுடைய உணர்வு நிலை எல்லாவற்றதாயின் எல்லையற்ற ஒன்றை நீங்கள் அறிவீர்கள். அந்த உணர்வுநிலை மிகச்சிறிது நேரமே இருப்பதாயின், தற்காலிகமான ஒன்றையே நீங்கள் அறிவீர்கள். எல்லாமே உங்கள் உணர்வு நிலையைப் பொறுத்தது.

**'குணங்களின் இயற்கையைப் பொறுத்தே பொருள்கள் வெளிப்படையாகவோ நுட்பமாகவோ அமைகின்றன.'**

நாம் மூன்று குணங்கள் பற்றி முன்பு பேசினோம். சத்துவம் என்றால் அசையாமல் நிலைத்திருப்பது, ரஜஸ் என்றால் செயல்படுவது, தமஸ் – சோம்பியிருப்பது. பதஞ்சலி இங்கே கடந்த காலம், நிகழ் காலம், வருங்காலம் இவற்றை அந்த முக்குணங்களோடு இணைக்கிறார். பதஞ்சலியைப் பொறுத்தவரை வாழ்க்கையிலும் பிரபஞ்ச இருப்பிலும் இருக்கிற ஒவ்வொன்றும் ஏதோ ஒருவகையில் முக்குணங்களுடன் சேர்ந்ததாகவே தெரிகிறது. அதுதான் பதஞ் சலியின் மும்மைக் கோட்பாடு. எல்லாமும் மூன்று விசயங்களைக் கொண்டிருக்கின்றன. அசைவற்றிருப்பது – கடந்தகாலம், அது அசையாமல் நிலைத்திருப்பதால் தான் உங்களால் அதை மாற்ற முடிவதில்லை. அது ஏறக்குறைய நிலைத்து விட்டிருக்கிறது. அதை மாற்ற எந்த வழியும் இல்லை. நிகழ் காலம் ரஜஸ் செயல்படுவது. நிகழ்காலம் தொடர்ந்த செயல் முறையைக் கொண்டிருககிறது. நிகழ் காலம் வேகத்தன்மையோடும், வருங்காலம் மந்தத்தன்மையோடும் உள்ளது. அது இன்னமும் விதையாய் இருக்கிறது, ஆழ்ந்த உறக்கத் தில் உள்ளது. விதைக்குள் மரம் உறங்கிக் கொண்டிருக்கிறது.

வருங்காலம் சாத்திய நிலை (botential)யில் இருப்பது. கடந்தகாலம் நடைமுறை (actual)யில் இருப்பது. நிகழ்காலம் சாத்தியத்தின் இயக்கம், உண்மையானதை நோக்கிச் செல்வது. கடந்தகாலம் நடந்து முடிந்தது. நிகழ்காலம் நடக்கவிருப்பது. நிகழ்காலம் இரண்டுக்கும் இடையேயான செல்வழி. வருங்காலம் கடந்தகாலமாவதற்கான வழியாக நிகழ்காலம் உள்ளது. விதை மரமாவதற்கான வழி பரிணாமத்தில் உள்ள ஒருமையில் இருந்தே பொருள்களின் ஒருமை உண்டாகிறது. குணங்கள் மூன்றாக இருந்தாலும் அவற்றின் வேறுபாடுகள் ஒருங்கிணைந்திருப்பதால் எல்லாப் பொருள்களிலும் ஒருமை நிலவுகிறது.

மின்னியக்க அணுக்கள் (electrrion), மின்னியக்கம் இல்லாத சிற்றணு (neutron) மற்றும் அணுவின் கருவில் உள்ள நேர்மின்மம (proton) இவை அடிப்படைத் தனிமங்கள் என்று இயற்பியலார் தெரிவிக்கின்றனர். ஒவ்வொரு பொருளும் இம் மூன்றைக் கொண்டே உருவானதுதான். நேர்மின்னாற்றல் (positive) நடு நிலை இணைவு (neutrial), எதிர் மின்னாற்றல் (negative) என்கிற மூன்று. எல்லாமும் இடம்மூன்றில் உருவானவைதாம். விகிதங்கள் மாறுபடலாம், ஒட்டுமொத்த பிரபஞ்சமும் இம்மூன்றையே கொண்டிருக்கிறது.

எடுத்துக்காட்டாக, நந்தவனத்துக்குள் செல்கிற மரம் வெட்டி ஒருவன் – பூக்களைப்பார்க்க மாட்டான். அங்குள்ள மரங்களைத் தான் பார்ப்பான். பசுமையான காய்களுக்குப் பதிலாக மரங்களையே பார்த்துக் கொண்டிருப்பான். எந்த மரத்தை அழகான மேசையாக்க முடியும், எந்த மரத்தைக் கதவாக்கலாம் என்று கூர்ந்து கவனிப்பான். பர்னிச்சர் வகைகளே அவனுடைய கண்ணுக்குத் தெரியும். அங்கே, ஓர் ஓவியன் வந்தால் எவ்வகையிலும் பர்னீச்சர்கள் பற்றிய எண்ணமே அவனுக்குவராது. அவனுடைய உணர்வில் கணநேரத்துக்குக் கூட பர்னீச்சர் இடம்பெற்றது.

அவன் வண்ணங்களைப் பற்றிச் சிந்திப்பான். பச்சை, சிவப்பு, வெள்ளை என்று சுற்றியிருக்கிற ஆயிரம் வண்ணங்களே அவன் எண்ணத்தில் இடம்பிடிக்கும். இந்த வண்ணங்களைத் தன்னுடைய கேன்வாஸில் (canvbas) எப்படிக் கொண்டுவரலாம் என்றே அவன் எண்ணமிடுவான். கவிஞன் வந்தால் வண்ணங்கள் பற்றிச் சிந்திக்க மாட்டான். அவன் வேறு எதைப்பற்றியோ சிந்திக்கத் தொடங்கி விடுவான். அது மனதைப் பொறுத்தது. மனதின் வழியேதான் பொ்ருள்கள் பார்க்கப்படுகின்றன, மனம் அழகூட்டுகிறது.

சின்னதாய் சில கதைகள் சொல்கிறேன் உங்களுக்கு.

நாடோடி ஒருவன் மிதமாய் குடிக்கிற ஒருவருடைய வீட்டுக்குச் சென்றான். அந்த மனிதர் நாடோடியிடம், ‘உம்மிடம் நான் ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன். நீர் எப்போதாவது மது பானங்கள் பருகியதுண்டா?’ என்றார். நாடோடி சொன்னான், ‘நான் விடையளிப்பதற்குமுன் அது ஒரு விசாரித்தறிதலா அல்லது அழைப்பா என்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன்’ என்று.

கேள்வியைப் பொறுத்தே பதில் அமைகிறது. தன்னுடைய பதிலில் பாதுகாப்பாக இருந்து கொள்ளவே அந்த நாடோடி அது ஓர் விசாரிப்பா அல்லது அழைப்பா என்று அறிய முற்பட்டது. அவனுடைய 'உண்டு' என்பதும், 'இல்லை' என்பதும் அது எத்தகையது என்பதைச் சார்ந்ததே இருக்கிறது. திட்டவட்டமான ஒரு பொருளைப் பார்க்கிறபோது நீங்கள் அவ்விதமாய் அதைப் பார்க்க மாட்டீர்கள்.

இமானுவல் கண்டு சொன்னார், 'ஒரு பொருள் உள்ளே எப்படி இருக்கும் என்பைத அறிவதற்கில்லை' என்று. ஒரு வழியில் அவர் சொல்வது சரிதான். நீங்கள் ஒருபொருளைப் பார்க்கிறபோது உங்கள் மனமும், ஊகமும், பேராசையும், கருத்தாக்கமும், பண்பாடும், மதமும் கூட அதைப் பார்க்கிறது. ஆனால், இமானுவேல் கண்ட்டின் கூற்றை முற்றிலும் சரியானது என்று சொல்லிவிட முடியாது. காரணம், உங்களுடைய மனதை விடுத்து, ஒரு பொருளைப்பார்க்கவும் வழியொன்று இருக்கிறது. ஆனால் தியானம் பற்றிய உணாவு அவரிடம் இருந்திருக்கவில்லை என்றே படுகிறது.

அதுதான் மேற்கத்தியத்துவத்துக்கும், கிழக்கியத்துவத்துக்கும் உள்ள வேறுாடு. மேற்கத்தியத்துவம் மனதின் வழியே சிந்தித்தி ருக்கிறது, கிழக்கின் முயற்சியோ மனதை விட்டுவிட்டு, செயல்களை (பொருள்களை) எப்படிக் காண்பது என்பதாகவே இருக்கிறது. காரணம், அந்நிலையில் செயல்களை (பொருள்கள்) தங்களுடைய சொந்த விளக்கத்துடன் காட்சியளிக்கும், தங்களுடைய இயல்பான தன்மைகளுடன் தோன்றிநிற்கும். அப்போது, நீங்களாக எதையும் வெளிப்படுத்தும்படி இருக்காது.

ஒட்டுமொத்த நகரத்திலும் வடிகட்டின சோம்பேறி அவன். துரதிர்ஷ்ட வசமாக ஒரு மோசமான விபத்து ஏற்பட்டது அவனுக்கு. வீட்டில் தன்னுடைய இருக்கையில் இருந்து அவன் விழுந்துவிட்டான். மருத்துவா் ஒருவர் அவனைப் பரிசோதித்து விட்டு, சொன்னார், 'உங்களுக்கு ஒரு கெட்ட செய்தி வைத்திருக்கிறேன். நீங்கள் மறுபடியும் செயல்பட முடியாது' என்று. 'நன்றி டாக்டர். இப்போது சொல்லுங்கள் கெட்ட சேதி என்ன?'

சோம்பேறிக்கு தான் மீண்டும் செயல்பட முடியாது என்பது கெட்ட செய்தியாக இருக்காது. இது நல்ல செய்தி. நீங்கள் விளங்கிக் கொள்வதைப் பொறுத்தது. ஒன்றை நினைவில்

கொள்ளுங்கள் எல்லா விளக்கங்களுமே உண்மையானதாயிருக்காது. தவறான விளக்கம் என்பது உண்மையை மறுக்கும் நோக்கத்தைக் கொண்டது.

உணர்ச்சி மிகைப்பில் இருந்த ஒருவன் மனநல மருத்துவரிடம் சென்றான். 'எனக்கு, திரும்பத் திரும்ப கெட்ட கனவு வருகிறது' என்றான். 'கனவில் என்னுடைய மாமியார் சாட்டையுடனும், மனிதனைத் தின்னும் முதலைவகை மிருகத்தோடும் என்னைத் துரத்துகிறாள். அது உண்மையிலேயே அச்சுறுத்துவதாயுள்ளது. அந்த மஞ்சள் நிறக்கண்களையும், சொறசொறப்பான செதிள்களுடன் கூடிய தோலையும், கத்தி மாதிரி கூரிய பற்களையும் நான் பார்க்கிறேன்' என்றான். 'அப்பா அந்த வீச்சமடிக்கிற சுவாசம்!'

'அது ரொம்ப அருவருப்பான உணர்வை ஏற்படுத்தியது' என்று ஆமோதித்தார் மனநல மருத்துவர்.

'அதெல்லாம் பெரிசில்லை டாக்டர். அந்த முதலையைப் பற்றிநான் சொல்லும் வரை பொறுத்திருங்களேன்' என்றான் அவன்.

"உங்கள் மனம் தொடர்ந்து எதையேனும் திட்டமிட்டபடி இருக்கும். மெய்ம்மை ஒரு திரையைப்போல் (projcector) இயங்கு கிறீர்கள். உணர்வுடன் இருப்பது எப்படி என்று கற்கிற ஒருவன் தன்னுடைய கருத்துகளை (projections) எப்படி விட்டு விட்டு, உண்மைகளைக் காண்பது என்பதையும் கற்றுக்கொள்வான், உங்கள் மனதை உள்ளே கொண்டுவராதீர்கள் இல்லையேல் மெய்ம்மையை நீங்கள் உணரமுடியாமல் போய்விடும். உங்களுடைய விளக்கங் களிலேயே நீங்கள் அடைபட்டுக் கிடப்பீர்கள்.

**ஒரே பொருள் வெவ்வேறு மனங்களால் வெவ்வேறாய் பார்க்கப்படுகிறது. பொருள் ஒருமனதையே சார்ந்தி ருப்பதில்லை.**

ஆனால், பதஞ்சலி இன்னமும் அதே விசயங்களை பிஷப் பெர்க்லியைப் போல் சொல்லிக் கொண்டிருக்கவில்லை. பெர்க்லி சொல்கிறார், 'உங்கள் அறையைவிட்டு நீங்கள் அகன்றதும் அங்குள்ள எல்லாப் பொருள்களும் மறைந்துவிடும்' என்று. காண்பதற்கு யாரும் இல்லையெனில் பொருள்கள் எப்படி இருக்க முடியும்? ஒருவழியில், அவர் கூறுவது தவறு என நிரூபிப்பதும் கடினம், காரணம், அவர் சொல்கிறார், 'நீங்கள் மறுபடியும் அந்த

அறைக்கு வரும்போது பொருள்கள் காட்சியளிக்கும்' என்று. நீங்கள் வெளியே செல்கிற போது அவை மறைவதற்குக் காரணம், அவற்றைப் புரிந்து கொள்ள ஒருமனம் தேவைப்படுகிறது. பெர்க்லி சொல்கிறார், பொருள்கள் விளக்கங்களாயிருக்கின்றன என்று. ஆக நீங்கள் வெளியே செல்லும்போது உண்மையில் விளக்கங்களும் உங்களுடன் சென்றுவிடுகின்றன. அந்த அறையில் எதுவும் விடப் பட்டிருக்காது. அவருடைய கூற்று தவறு என்று நிரூபிப்பது கடினம், காரணம் அதை நிரூபிப்பதற்காக நீங்கள் மறுபடியும் அறைக்குள் வந்தால் அங்கே பொருகள் காட்சியளிக்கும். இப்படிப்பட்ட சமாசாரங்களை பலரும் ஆராய்ந்திருக்கிறார்கள். ஒருவர் பிஷப் பெர்க்லியே நம்பும் படியாய் சில விசயங்களைக் கண்டுபிடிக்க முயன்றிருக்கிறார்.

நீங்கள் ஓர் இரயிலில் அமர்ந்திருக்கிறீர்கள். இரயில் ஓடிக் கொண்டிருக்கிறது. நீங்கள் சக்கரங்களைப் பார்த்துக் கொண்டி ருக்கவில்லை. ஆனால், அவை இருக்கவே செய்கின்றன. அவை இருப்பதால்தான் இரயில் ஓடுகிறது. யாரும் அதை மறுக்க முடியாது. அது இல்லா விட்டால் நீங்கள் எப்படி அடுத்த இரயில் நிலையத்தை அடையமுடிகிறது? பயணிகள் எல்லாரும் இரயிலுக்குள் இருக்கின்றனர், சக்கரங்களை யாரும் பார்க்கவில்லை. ஆனால் சக்கரங்கள் இருக்கின்றன. அறையில் உள்ள பர்னீச்சர்கள் ஏன் மறையவில்லை என்பதற்குக் காரணம் கடவுள் தான், மனிதர்கள் இல்லாதபோது கடவுளின் மனம் அதைப் பார்த்துக் கொண்டிருப்பதால் அது இருக்கிறது. இல்லையேல் அது மறைந்து விட்டிருக்கும் என்று அவர் தீர்மானித்தார்.

பெர்க்லியின் கோட்பாடு ஒருவழியில் தர்க்கம் சார்ந்ததாகவே இருக்கிறது. அவருக்கு பருப்பொருளில் (matter) நம்பிக்கை இல்லை, மனதில் நம்பிக்கை இருக்கிறது. உங்கள் கனவில் பொருள்கள் இடம் பெறுகிற மாதிரிதான் பருப்பொருள் இருக்கிறது என்கிறார் அவர். உங்கள் கனவில் ஒரு மாளிகையை நீங்கள் காண்கிறீர்கள். அது நிஜத்தில் காண்பதுபோல் இருக்கிறது. காலையில் நீங்கள் கண்விழித்தால் அது போய்விட்டிருக்கும். ஆனால், நீங்கள் மறுபடியும் கனவு காண்கிறபோது அது மறுபடியும் அங்கே இருக்கும். அவர் மாயையை நம்புகிறவராயிருந்தார், உலகம் ஒரு மாயையா யிருக்கிறது.

ஆனால், பதஞ்சலியோ அறிவார்ந்தவர். அவர் சொல்கிறார், 'பொருள் உங்களுடைய விளக்கம் அல்ல' என்று. பொருள் தன்னளவில் இருந்து கொண்டிருக்கிறது. தோட்டத்துக்குள் யாருமே வராதபோது – மரம் வெட்டி, தச்சன், ஓவியர், கவிஞர், தத்துவ மேதை என்று யாருமே வராதபோது பூக்கள் மலர்ந்தபடி இருக்கின்றன. ஆனால் எவ்வித விளக்கமும் தேவைப்படவில்லை. பூக்கள் அழகாயிருக்கின்றன என்று சொல்ல யாரும் இல்லை என்பதால் அவை அழகற்றவையாகி விடாது.

பொருள்கள் தம்மளவில் இருக்கின்றன ஆனால் நம்முடைய மனதை விட்டால்தான் நாம் அவற்றுக்குள் இருப்பவற்றை அறிந்து கொள்ள முடியும். இல்லையேல் நமது மனம் தந்திரங்களில் இறங்கி விடும். நம் விருப்பத்துக்கு உகந்தவற்றையே நாம் பார்த்தபடி இருக்கிறோம். நாம் காணவிரும்புகின்றவர்களை மட்டுமே காண்கிறோம். தினமும் அதுதானே இங்கு நடக்கிறது. 'நான் உங்களிடம் உரையாற்றுகிறேன். நீங்கள் எதைக் கேட்க விரும்புகிறீர்களோ அதைக் கேட்டுக் கொள்கிறீர்கள். எது உங்களுக்குப் பயன்படுமோ அதை, நீங்கள் தெரிவு செய்து கொள்கிறீர்கள். அதன் மூலம் உங்களுடைய மனம் வலுவடைகிறது. உங்களுக்கு மாறாகிவிடுகிற ஒன்றை நான் சொன்னால் அதை நீங்கள் காதில் போட்டுக் கொள்ளாமல் இருந்துவிட சாத்தியம் உண்டு. அல்லது நீங்கள் அதைச் செவிமடுத்தாலும் கூட, அதை உங்கள் மனதுக்கு எரிச்சலூட்டாத விதத்தில் நீங்கள் விளக்கிக் கொள்வீர்கள். நீங்கள் கேட்பது எதுவாயினும் அது உங்களுடைய விளக்கமாகவே இருக்கும். காரணம், நீங்கள் மனதில் இருந்து கேட்டுக்கொள்கிறீர்கள்.

பதஞ்சலி சொல்கிறார், மனம் இல்லாமல் கேட்கப் படுவதே, சரியான கேட்டல் என்று.

> **'மனதின் உணர்ச்சிகளைப் பொறுத்து ஒரு பொருள் அறியப்பட்டதாயும், அறியப்படாததாயும் இருக்கிறது'**

தற்போது இன்னொரு விசயம்:

நீங்கள் ஒரு பொருளைப் பார்க்கிறபோது உங்கள் மனம் பொருளுக்கு சாயம் பூசுகிறது, பொருள் மனதுக்கு சாயம் பூக்கிறது.

அப்படித்தான் ஒரு பொருள் அறியப்படுவதும் அறியப்படாமல் இருப்பதும், ஒரு பூவைப்பார்க்கும் போது நீங்கள் சொல்கிறீர்கள் 'அழகாயிருக்கு' என்று. பூவின்மீது ஒரு கருத்துருவை நீங்கள் செய்கிறீர்கள். பூவும் உங்கள் மனதில் தன்னை வெளிப்படுத்துகிறது. அதன் நிறம், அதன் வடிவம் இப்படி. பூவின் மூலம் உங்கள் மனதுக்கு வண்ணம் பூசப்படுகிறது. ஒரு பொருளை அறிந்து கொள்ள அதுதான் வழி. நீங்கள் அந்த மலரால் நிறமேற்றப்படாவிட்டால், அந்த மலர் அப்படியே இருக்கும், ஆனால் நீங்கள் அதை அறிந்திருக்க மாட்டீர்கள்.

நீங்கள் கவனித்திருக்கிறீர்களோ? நீங்கள் கடைவீதியில் இருக்கிறீர்கள். யாரோ ஒருவர் வந்து 'உங்கள் வீடு தீப்பற்றி எரிகிறது' என்கிறார். நீங்கள் மக்களைத் தள்ளிக்கொண்டு ஓடுகிறீர்கள். ஒருவர் கேட்கிறார், 'ஹலோ, எங்கே தள்ளிக்கொண்டு ஓடுகிறீர்கள்? மற்றொருவர் கேட்கிறார், 'ஹலோ, எங்கே போறீங்க?' என்று, ஆனால், நீங்கள் அதைக் காதில் போட்டுக் கொள்ளமாட்டீர்கள். அதுவே வேறொரு நாளில், வேறொரு சமயமாயிருந்தால் நீங்கள் கவனத்தில் கொண்டிருப்பீர்கள், ஆனால், தற்போது உங்கள் வீடு தீப்பற்றி எரிகிறது. உங்கள் மனம் முற்றிலுமாய் வீட்டை நோக்கிச் செல்லும்படி அறிவுறுத்தப்பட்டிருக்கிறது. தற்போது உங்களுடைய கவனம் இங்கே இல்லை. நீங்கள் நிறமேற்றப்பட வில்லை. ஒரு பூவை நீங்கள் கடந்துபோகக் கூடும். அதன் அழகைப் பற்றி ஏதும் சொல்லாமல். அந்தப் பூ அங்கிருப்பதைக் காணாமல் நீங்கள் போவீர்கள் என்றால் – அது சாத்தியமே.

நான் ஈஸ்வரசந்த்ர வித்யாசாகர் என்கிற மனிதரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவருடைய சேவையை, அறிவை, மேதைமையைப் பாராட்டி கவர்னர் ஜெனரல் அவருக்கு விருது கொடுத்து கவுரவிப்பதாயிருந்தது. ஆனால் அவர் ஓர் ஏழை மனிதர். அவர் கொல்கத்தாவில் வசித்து வந்த ஏழை வங்காளி. விருது வழங்கும் விழாவிற்கு அணிந்து செல்லும்படியான உடை எதுவும் அவரிடம் இருந்திருக்க இல்லை. அவருடைய நண்பர்கள் அவரிடம் 'கவலைப்பட வேண்டாம், உங்களுக்கு நேர்த்தியான உடைகள் தைக்க 'ஆர்டர்' கொடுத்திருக்கிறோம்' என்றனர். ஆனால் அவர் சொல்லிவிட்டார்,' இந்த உடைகளைவிட விலைமிக்க உடைகளை நான் அணிந்ததில்லை. ஒரு விருது வாங்குவதற்காக என்னுடைய

வாழ்க்கை முறை முழுவதையுமே நான் மாற்றிக் கொள்ள வேண்டுமா?' என்று.

ஆனால், அவருடைய நண்பர்கள் அவருக்கு நம்பிக்கையூட்டி, அவரைத் தயார்ப்படுத்தினர். அதே மாலையில் அவர் கடைவீதியில் இருந்து ஒரு முகமதியரின் பின்னே நடந்து வந்து கொண்டிருந்தார். அந்த முகமதியர் ரொம்ப நிதானமாய் நடந்தார். அவர் மிகவும் நேர்த்தியானவராய் தெரிந்தார். வழியில் பணியாள் ஒருவன் ஓடி வந்து, 'ஐயா, தங்கள் வீடு தீப்பற்றிக் கொண்டது' என்று தெரிவித்தான், ஆனால் அந்த முகமதியர் தம்முடைய நடையைத் தொடர்ந்தார். பணியாள் சொன்னான் 'ஐயா நான் சொல்வது தங்கள் காதில் விழவில்லையா. தங்கள் வீடு தீப்பற்றி எரிகிறது. தீயில் எல்லாமும் நாசமாகிக் கொண்டிருக்கின்றன' என்று. அந்த முகமதியர் சொன்னார். 'நீ சொல்வதைக் கேட்டேன், வீடு எரிகிறது என்பதற்காக நான் நடக்கிற முறையை மாற்றிக் கொள்ள முடியாது. நான் வேகமாய் ஓடினால் கூட, அந்த வீட்டைக் காப்பாற்ற முடியாது. பிறகென்ன?' என்று.

அவர் சொல்லியதைக் கேட்ட ஈஸ்வர சந்திரர் 'இந்த மனிதர் என்ன சொல்கிறார்' என்று வியந்து நின்றார். 'ஒரு விருத வாங்கு வதற்காக என்னுடைய உடைகளை மாற்றிக் கொண்டு, இரவல் உடை அணிந்துகொண்டு நான் போவதாய் இருக்கிறேனா' என்று எண்ணினார். தம்முடைய யோசனையை அவர் கைவிட்டார். தம்முடைய வழக்கமான உடைகளிலேயே விருது வாங்கச் சென்றார். அவரிடம் நண்பர்கள் கேட்டபோதும், கவர்னர் ஜெனரல் கேட்டபோதும் நடந்ததைக் கூறினார் அவர்.

அந்த முகமதியரிடத்தில் ஓர் உறுதியான விழிப்புணர்வு இருந்தது. எந்த ஒன்றாலும் மழுங்கடிக்க முடியாத விழிப்புணர்வு, அவருடைய கவனத்தை எதுவும் கலைக்க முடியாது. பொதுவாக, எல்லாமும் உங்களுக்கு நிறமேற்றும், நீங்கள் எல்லா வற்றுக்கும் நிறமேற்றுவீர்கள் (விளக்கமளித்தல்). இந்த நிறமேற்றும் வேலை நிற்கிறபொழுது, பரஸ்பரம் நிறமேற்றுகிற வேலை நின்று விடுகிற பொழுது பொருட்கள் தங்களுடைய உண்மையான இருப்புணர்வுடன் காட்சியளிக்கும். அந்நிலையில் 'மெய்ம்மையை அதன் இயல்பில் காண்பீர்கள் நீங்கள். பிறகு நீங்கள் அறிந்து கொள்வீர்கள் 'அதுதான் இது' என்பதை.

இந்தச் சூத்திரங்கள் எல்லாம் வெறும் சுட்டல்கள் (indicators) மனம்மற்றிருக்கும் நிலையை அடையாமல், அறியாமையை ஒழித்துக் கட்ட முடியாது.

விழிப்புணர்வு அறியாமைகது மாறானது. அறிவு ஒருபோதும் அறியாமையுடன் மாறுபடுவதில்லை. எனவே, சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளைகளாகி விடாதீர்கள். மனப்பாடம் பண்ணாதீர் கள், புரிந்து கொள்ள முயலுங்கள். பொருள்களை (செயல்களை) இருக்கிற படிக்குப் பாருங்கள். வேதங்களும், உபநிஷத்துகளும், குர்–ஆனும், பைபிளும் பெரிய அளவில் துணைபுரியாது. நீங்கள் பெரிய பண்டிதராகலாம் ஆனால் அடியாழத்தில் முட்டாளாகவே இருந்து கொண்டிருப்பீர்கள். அறிவால் அலங்கரிக்கப்பட்ட அறியாமையை ஒருவர் பற்றிக் கொண்டு விடுகிறார். அதை அழிப்ப தற்கு அவர் விரும்புவதில்லை. உண்மையில், தற்பெருமை மகிழ்ச்சியாய் உணர்கிறது.

நீங்கள் தெரிவு செய்யும்படி இருக்கும். நீங்கள் தற்பெருமையைத் தெரிவு செய்தால் அறியாமையில் இருப்பீர்கள். நீங்கள் விழிப்புணர்வை விரும்பினால், தற்பெருமை மேற்கொள்ளும், தந்திரங்களைத் தெரிந்து கொள்வீர்கள்.

இந்தக் காலை நேரத்தில் நீங்கள் எதை அறிந்திருக்கிறீர்கள். அறிந்திருக்கவில்லை என்பதை ஆழ்ந்து சிந்தியுங்கள். முடிந்தவரை சிந்தனையின் அடியாழத்துக்குச் செல்லுங்கள். இதனை அறிந்திருக்கிறோம், இதனை அறிந்திருக்கவில்லை என்பதை நீங்கள் தீர்மானிப்பீர்களாயின் ஒரு சிறந்த நடவடிக்கையை மேற்கொண்டவராவீர்கள். ஒருவர் எடுக்கக் கூடிய நடவடிக்கைகளில் அதுவே மிகவும் குறிப்பிடத்தக்க தாயிருக்கும். காரணம், அதன் பிறகே புனிதயாத்திரை தொடங்குகிறது. மெய்ம்மையை நோக்கிய புனிதயாத்திரை. நமக்கு நிறைய விசயங்கள் தெரியும் என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருந்தால் அது தவறு. உண்மையில் நீங்கள் அவற்றை அறிந்திருக்க மாட்டீர்கள். உங்களை நீங்களே ஏமாற்றிக் கொண்டிருக்கிறீர்கள். உங்களுடைய அறிவே உங்களை அறிதுயிலில் ஆழ்த்திவிடுகிறது. போதை மயக்கத்திலேயே உங்களுடைய மொத்த வாழ்க்கையும் வீணாகிறது. சாதாரணமாக மக்கள் தூக்கத்தில் எழுந்து நடப்பதுண்டு, தூக்கநிலையில் எதையாவது செய்துவைப்பதுண்டு.

குருட்ஜிவ், உஸ்பென்ஸ்கியையும் அவருடைய முப்பது சீடர்களையும் ஒரு தொலைதூர இடத்துக்கு அழைத்துச் சென்று மூன்று மாதங்களுக்கு மவுன விரதத்தைக் கடைப்பிடிக்கும்படி சீடர்களிடம் சொல்கிறார். கண்கள் மூலமோ, சாடைகள் மூலமோ கூட எதையும் பேசக்கூடாது என்கிறார். அந்த முப்பது பேரும் ஒருசிறிய பங்களாவில் தங்கவைக்கப்படுகின்றனர். ஒரே இடத்தில் தங்க வைக்கப் பட்டாலும் ஒவ்வொருவரும் தனியே வாழ்வது போலத்தான். சில நாட்களில் அவர்களில் சிலர் போய்விடுகிறார்கள். காரணம் அது அவர்களுக்குச் சாத்தியமற்றதாய் இருந்தது. குருட்ஜீவ் ரொம்பவும் கண்டிப்பான குரு. யாராவது புன்னகை செய்தாலும் போதும், அவர் பேசிவிட்டார் என்று அங்கிருந்து வெளியேற்றப்படுவார். அந்த நபர் மவுனத்தைக் குலைத்து விட்டார் என்று குற்றம் சாட்டப்படும். அவர் சொன்னார், 'இந்த வீட்டில் நீங்கள் மட்டும் இருப்பதாய் எண்ணிக் கொள்ளுங்கள். இங்கே இருபத்து ஒன்பது பேர் இருந்தாலும், அவர்கள் இல்லை என்பதாகவே கருதிக் கொள்ளுங்கள்' என்று. மூன்று மாதம் முடிகிறபோது அங்கே மூன்றுபேர் மட்டுமே எஞ்சியிருந்தனர். இருபத்து ஏழு பேர் அங்கிருந்து போயாயிற்று. உஸ்பென்ஸ்கியும் அந்த மூன்று பேரில் ஒருவர். அவர்கள் அமைதியாயிருந்தனர். குருட்ஜீவ் அவர்களை பங்களாவுக்கு வெளியே அழைத்துச் சென்றார், சந்தைப்பக்கம் கூட்டிச் சென்றார். உஸ்பென்ஸ்கி தம்முடைய நாட்குறிப்பேட்டில் எழுதுகிறார். 'ஒட்டுமொத்த மனிதகுலமே உறக்கத்தில் நடப்பதை நான் முதல் முறையாய் பார்க்க முடிந்தது. மக்கள் உற்றத்திலேயே பேசிக் கொள்கிறார்கள். கடைக்காரர்கள் பொருள்களை விற்கிறார்கள், வாடிக்கையாளர்கள் பொருள்களை வாங்குகிறார்கள். பெரியகூட்டம் அங்கும் இங்குமாய் போய்க் கொண்டிருக்கிறது. எல்லாரும் அயர்ந்து உறங்குவதை நான் கண்டேன், யாரும் உணர்வுடன் இருக்கவில்லை' என்று. அவர் சொல்கிறார், 'அந்த இடம் பையத்தியக்காரர்தனத்துடன் இருந்தது. எங்களை பங்களாவிற்கே அழைத்துச் செல்லும்படி நாங்கள் குருட்ஜீவிடம் வேண்டிக் கொண்டோம். ஆனால், அவர் சொன்னார், அந்த பங்களா மனித இனத்தின் உண்மைநிலையை உங்களுக்குக் காண்பிப்பதற்கான சோதனைக் கூடம். அங்கே நீங்கள் மவுனமாக இருந்ததால்தான் மக்கள் குடி போதையில் இருப்பதுபோல் உணர்வற்றவர்களாயிருப்பதை நீங்கள் புரிந்துகொள்ள முடிந்தது. ஏன் என்று தெரியாமலும், எதற்கென்று தெரியாமலும் அவர்கள்

போய்க் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் உண்மையிலேயே வாழ்ந்து கொண்டிருக்கவில்லை?

உங்களைக் கவனியுங்கள், அதன் பேரில் ஆழ்ந்து தியானியுங்கள், நீங்கள் உறக்கத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்களா என்பதைப் பாருங்கள். நீங்கள் உறக்கத்தில் இருந்தால் அதில் இருந்து வெளியே வாருங்கள்.

தியானம் என்பது உங்களுடைய சின்னச்சின்ன உணர்வு நிலைகளைத் திரட்டி, அதன் மூலம் உணர்வற்ற நிலையை குறைத்துக் கொள்வது. அந்நிலையில் உணர்வை அதிகரித்துக் கொள்ள அத்தனை வகை முயற்சிகளும் இருக்கும். மெள்ள மெள்ள உணர்வுநிலை மேம்படும். கனவிலாழ்ந்திருப்பது குறையும். உங்களை வந்தடையும் எண்ணங்களும் குறையும். அமைதி மிகப்பெரிய இடைவெளிகளைக் கொண்டிருக்கும். அந்த இடைவெளிகள் வழியே கடவுட் தன்மைக்கான சன்னல்கள் திறக்கும். ஒருநாள், உண்மையிலேயே நீங்கள் திறமையுடையவராகி விடுகிறபோது, 'என்னால் எவ்வித எண்ணமுமின்றி சில நிமிடம் அப்படியே இருக்கமுடியும்' என்று உங்களால் சொல்ல முடியும். முதல் முறையாய் நீங்கள் அறிந்து கொள்கிறீர்கள். நோக்கம் பூர்த்தியாகிறது.

ஆழ்ந்த உறக்கத்தில் இருந்து ஆழ்ந்த விழிப்புணர்ச்சிக்கு நீங்கள் வருகிறீர்கள். ஆழ்ந்த உறக்கமும் ஆழ்ந்த விழிப்புணர்வும் சந்திக்கிறபோது, வட்டம் பூர்த்தியடைகிறது.

அதுதான் சமாதிநிலை என்பது. பதஞ்சலி அதனை கைவல்யம் (விடுதலை) என்கிறார் – தூய உணர்வுநிலையின்றி வேறெதுவும் இருப்பதில்லை இந்தத் தனிமையில் மட்டுமே ஒருவர் பரமசுகத்துடன் (bliss) இருக்கிறார். இணையற்ற இந்தத் தனிமையில் மட்டுமே ஒருவர் உண்மையை அறிந்து கொள்கிறார். உண்மை உங்களுடைய இருப்புணர்வாகிறது. அது இருந்தாலும் நீங்கள் தூக்க நிலையில் இருக்கிறீர்கள்.

விழித்துக் கொள்ளுங்கள்.

அத்தியாயம் – 6

# ‘தேர்வு செய்யாதிருத்தல்’

**முதல் கேள்வி:**

**'பகவானே, நான் ருடால்ப் ஸ்டெய்னரின் போதனைகளை பின்பற்றியவன். அவருடைய கொள்கைகளை என்னால் என்னிடம் இன்னும் உடைக்க முடியவில்லை. இப்போதைய மேற்கத்திய மக்களுக்கு அவர் கூறுவது சரியாக இருப்பதாக எனக்கு தோன்றுகிறது "மாயை"யில் இருந்து நம்மைவிடுவித்துக் கொள்வது நாம் சரியான வழியில் சிந்திக்க கற்று கொள்ளும்போது தான் சாத்தியப்படும். என்று கூறுகிறார் அவர். இதை செய்வதன் மூலமும், தியானிப்பதன் மூலமும் நாம் நம்முடைய அகந்தையை இழந்து 'நான்' என்பதை கண்டுகொள்ள முடியும் என்கிறார் அவர். உங்களுடைய வழி வேறாயிருக்கிறது. ஸ்டெய்னர் காட்டிய வழிக்கும் உங்களுக்கும் இடையே நான் வலிந்து இழுபடுகிறேன்.**

ருடால்ப் ஸ்டெய்னர் சிறந்த அறிவுடையவர். ஆனால், அறிவு மதத்தைப் பொறுத்த வரை எதற்கும் பயன்படாது. அவர் பெரிய திறமைசாலி. உண்மையில் ருடால்ப் ஸ்டெய்னருடன் ஒப்பிடக் கூடிய அறிவை நாம் காண்பது அரிது. அவர்பல போக்குகளிலும் பரிமாணங் களிலும் திறமையானவர். மிகச்சிறந்த தர்க்க சிந்தனையாளர் அவர், சிறந்த தத்துவ மேதை, சிறந்த கட்டடக் கலை நிபுணர், சிறந்த கல்வியாளர் என்பது அவரைப்பற்றிச் சொல்லுக் கொண்டேபோகலாம். அவர் எதைத் தொட்டாலும் அதுபற்றிய புதிய கருத்துகளைக் கொண்டு வந்தார். புதிய சிந்தனை முறைகளை அவர் தோற்றுவித்தார். மிகப்பெரிய அறிவாளி. ஆனால், மதம் தொடர்பாய் அறிவு எதையும் செய்வதற்கில்லை.

மனமற்ற நிலையில் இருந்தே மதம் வெளிப்படுகிறது. மதம் ஒரு திறமை அல்ல. அது உங்கள் இயல்பு. நீங்கள் ஓர் ஓவியராக விரும்பினால் நீங்கள் திறமை உடையவராயிருக்க வேண்டும். நீங்கள் ஒரு கவிஞராக விரும்பினால் உங்களிடம் அதற்கான திறமை

இருக்கவேண்டும். நீங்கள் ஒரு விஞ்ஞானியாக விரும்பினால் உங்களிடம் அதற்கான திறமை இருந்தாக வேண்டும். சிறியவரோ பெரியவரோ மனதை விட விரும்புகிற எவரும் மிக நேர்த்தியான பரிமாணத்துக்குள் நுழைகிறார்.

உண்மையில் மிகத் திறமையானவர்களுக்கு மனதை விடுவது கடினமானதாய் தெரிகிறது. அவர்களுடைய முதலீடு மிகப்பெரியது. திறமை இல்லாத பாமரனுக்கோ மனத்தை விடுவது எளிதாயிருக்கிறது. அவன் எதையும் இழக்கும்படி இருக்காது. இருந்தும் அவன் பற்றிக் கொண்டிருப்பான். உண்மையில், நீங்கள் ஓர் அறிவாளியாகவோ, திறமை சாலியாகவோ இருந்துவிட்டால் இடர்ப்பாடு பலவாய் பெருகிவிடுகிறது. அந்நிலையில் உங்களுடைய தற்பெருமை முழுதும் உங்கள் மனதில் முதலீடு செய்யப்பட்டிருக்கும். நீங்கள் அதை விட முடியாது. இறைஞானத்துக்கு மாறாக மனித இயல் ஆய்வு இயக்கம் ஒன்றைத் தொடங்கினார். தொடக்கத்தில் அவர் ஆத்மரீதியில் தெய்வீக அருளைக் காணமுடியும் என்று நம்புகிற வேதாந்தியாகத்தான் இருந்தார். உலகிலேயே வேதாந்த இயக்கத்தில் அவர் முதல்மை யானவராய் திகழ விரும்பினார். உலக அளவில் அதற்குத் தலைமை தாங்கவேண்டும் என்கிற விருப்பம் அவருக்கு இருந்தது. அது சாத்தியப்படவில்லை காரணம் வேறுபல தற்பெருமைகளும் இருந்தன. ஜே.கிருஷ்ணமூர்த்திதான் அவருக்கு பெரிய பிரச்சினை. ஜே.கே. தற்பெருமை கொண்டவரல்லர். ஆனால், உண்மையில் வேதாந்திகளின் கவனம் என்னவோ ஜே.கிருஷ்ணமூர்த்தியின் பக்கமே திரும்பி யிருந்தது. அவர் கிட்டத்தட்ட இறைதூதராகிக் கொண்டிருந்தார். அது ருடால்ப் ஸ்டெய்னரின் மனதில் கலக்கத்தை உண்டு பண்ணியது. அவர் அந்த இயக்கத்தை விட்டு விலகிறார். வேதாந்துப் பிரிவில் இருந்த ஜெர்மானியர்கள் அவருடன் வெளியே வந்து விட்டனர். அவர் உண்மையிலேயே நம்பிக்கையூட்டும் பேச்சாளராக, எழுத்தாளராக விரும்பினார். மக்களிடம் நம்பிக்கையை ஏற்படுத்தினார் அவர். வேதாந்தத்தை ரொம்ப மோசமாக அழித்துபோட்டார், மாறுபட்ட கருத்துகளைக் கொண்டுவந்தார். அப்போதிருந்து வேதாந்தம் முழுமையையோ, ஆரோக்கியத்தையோ அடைய முடியவில்லை.

ருடால்ப் ஸ்டெய்னர் மேற்கத்திய அறிவை வேண்டுகிறவர், அது தான் அபாயம் – காரணம் மேற்கத்திய மனம் அடிப்படையில் தர்க்கம்

சார்ந்தது, உலகைக் கட்டியாள்வதாகச் சொல்லப்படும் நியதிகளை (logos)க் கொண்டது. 'மேற்கத்திய மனதுக்கான வழி இது' என்கிறார் அவர்.

இல்லை. கிழக்கியத்தியதாயிருந்தாலும், மேற்கத்தியதாயிருந்தாலும் மனம் என்றால் மனம்தான். நீங்கள் கிழக்கத்தியராயிருந்தால் கிழக்கத்திய மனதைவிட வேண்டியிருக்கும். நீங்கள் மேற்கத்தியரா இருந்தால் மேற்கத்திய மனதை விடும்படி இருக்கும். தியானத்தில் நுழைவதற்கு மனத்தை விடவேண்டும். தியானம் கிறிஸ்தவரா, இந்துவா, கிழக்கத்தியரா மேற்கத்தியரா என்பதில் அக்கறை காட்டுவதில்லை.

மனம் என்பது என்ன? மனம் என்பது சமூகத்தால் உங்களுக்கு வழங்கப்படுகிற கட்டுப்பாடு. இயல்பான மனத்தின் (மனமற்றிருத்தல்) மீது அது சுமத்தப்படுகிறது. அப்போதுதான் நீங்கள் குழப்பமடைய மாட்டீர்கள். கடவுள் உங்களுக்குள் பிரவேசிப்பதற்கு பாதை முற்றிலும் வெறுமையை இருக்க வேண்டும். சிந்தித்தல் தியானமல்ல. சரியான சிந்தனையும் தியானமாகாது. சரியோ தவறோ சிந்திப்பது விடப்பட வேண்டும். உங்களுக்குள் எவ்வித சிந்தனையும் இல்லையென்றால் தான் உங்களுடைய தற்பெருமை மறையும். நினைவிருக்குட்டும், தற்பெருமை மறைந்தால் 'நான்' என்பது காணப்படாது. கேள்வி கேட்பவர் தெரிவிக்கிறார், 'தற்பெருமை மறைகிறபோது 'நான்' காணப்படும் என்று ருடால்ப் ஸ்டெய்னர் கூறுவதாக. இல்லை, தற்பெருமை மறைகிறபோது 'நான்' காணப்படுவதில்லை. எதுவும் காணப்படுவதில்லை ஆமாம். உண்மையிலே எதுவும்.. காணப் படுவதில்லை.

அன்றொரு இரவில் 'து–சான்' என்கிற ஜென்குருவைப் பற்றிய கதையை நான் சொல்லிக் கொண்டிருந்தேன். அவர் வெறுமையாய் ஞானம் பெற்றவராய், இருப்புணர் வற்றவராயிருந்தார். புத்தமதத்தினர் அதனை 'மனமற்றிருத்தல்' என்பர். யாரோ ஒருவர் மறுபடியும் ஞானம் பெற்றிருக்கிறார் என்கிற வதந்தி தேவருலகிற்கு எட்டிற்று. உண்மையில் யாரேனும் ஞானம் பெற்றால் தேவர்கள் அவருடைய முகத்தை – அதன் அழகைக் காணவிரும்புவர். அசலான ஒன்றின் அழகை, அதன் தூய்மையை அவர்கள் காணவிரும்புவர். துசான் வசிக்கிற மடாலயத்துக்கு அவர்கள் வந்தனர். அவர்கள் துசானுக்குள்

ஒரு பக்கம் நுழைந்து மறுபக்கமாய் வெளியே வரமுயன்றனர், உள்ளே எவரும் காணப்படவில்லை. அவர்கள் ஏமாற்றமடைந்தனர். அசலான முகத்தை அவர்கள் காணவிரும்பினர். ஆனால், அங்கே எவரும் இல்லை. அவர்கள் பல உபாயங்களை மேற் கொண்டனர்.

அதன் பிறகு ஒரு தந்திரக்கார கடவுள் சொன்னது, 'ஒன்று செய்வோம்' என்று. அந்தக் கடவுள் சமையலறைக்குள் சென்று ஒருகைப்பிடி அரிசியையும், கோதுமையையும் எடுத்து வந்து. துசான் தம்முடைய காலை நடைப்பயிற்சியை முடித்துக் கொண்டு, திரும்பி வந்தார். அவர் வரும்வழியில் அவற்றை வீசி எறிந்தது அந்தக் கடவுள்.

ஜென் மடாலயத்தில் அரிசி, கோதுமை உட்பட எல்லாமும் முழுமையாய் மதிக்கப்படும். ஒருவர் எப்போதும் கவனத்துடன், உணர் வுடன் இருக்கவேண்டியிருக்கும். ஒரேயொரு அரிசி சிந்தியிருப்பதையும் மடாலயத்தில் நீங்கள் காணமுடியாது. நீங்கள் மதிப்புடன் இருக்க வேண்டும், மதிப்பளிக்க வேண்டும். அந்த மதிப்புக்கும் காந்தியப் பொருளாதாரத்துக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. அது பொருளாதாரப் பிரச்சினையல்ல. காந்தியப் பொருளாதாரம் என்பது அறிவுக்கு ஏற்புடையதான கருமித்தனம். உபநிடதங்களில் 'அனம் ப்ரம்மா' என்று சொல்லப்பட்டிருக்கிறது. உணவே கடவுள் – காரணம் உணவுதான் உங்களுக்கு உயிரைத் தருகிறது, உணவே உங்கள் சக்தி. கடவுள் உணவின் மூலம் உங்கள் உடம்புக்குள் வருகிறார், உங்களுடைய இரத்தமாக மாறுகிறார், எலும்புகளாகவும். எனவே, கடவுளை கடவுளாக மதித்து, உபசரிக்க வேண்டும். அந்தக்கடவுளே தம்முடைய பாதையில் அரிசியையும் கோதுமையையும் இறைத்து வைக்கும் என்பதை அவரால் நம்பமுடியவில்லை. 'யார் இதனைச் செய்திருப்பார்? யார் அத்தனை கவனமற்றிருந்தது,' அகத்தில் எழுகிற அந்த ஒற்றைக் கணத்தில் கடவுளால் அவருடைய முகத்தைப் பார்த்துவிட முடியும்.

எது தவறு, எதுசரி என்று நீங்கள் தீர்மானிக்கிற போதெல்லாம், உடனடியாய் நீங்கள் அதில் இருக்கிறீர்கள். தவறுக்கும் நியாயமானதுக்கும் இடையில் நீங்கள் இருக்கிறீர்கள். இரண்டு எண்ணங்களுக்கும் இடையில் இருக்கிறது தற்பெருமை. ஒவ்வொரு எண்ணமும் தன்னோடு நான் என்னும் அகந்தை (ego)யைக்

கொண்டு வருகிறது. து–சானின் உணர்வு நிலையில் ஒரு கணம் தெளிவின்மை தோன்றுகிறது, 'இதனை யார் செய்தது?' – என்பதில் ஒரு இறுக்கநிலை. ஒவ்வோர் எண்ணமும் இறுக்கத்தைக் கொண்டது. சாதாரண எண்ணமும் கூட இறுக்கத்தைத் தந்துவிடுகிறது.

தோட்டம் அழகாயிருப்பதை, சூரியன் உதயமாவதை பறவைகள் பாடுவதை நீங்கள் பார்க்கிறீர்கள். 'ஆ, எத்தனை அழகு!' என்ற எண்ணம் தோன்றுகிறது. அதுகூட ஒரு இறுக்கந்தான். அதனால்தான் யாரேனும் உங்கள் பக்கத்தில் நடந்து வரும்போது, 'பாருங்கள், எத்தனை அழகான காலைப்பொழுது' என்று உடனே அவரிடம் சொல்கிறீர்கள். நீங்கள் என்ன செய்கிறீர்கள்? எண்ணத்தின் வழியே வருகிற இறுக்கத்தை நீங்கள் வெளிப்படுத்துகிறீர்கள். 'அழகான காலைப்பொழுது...' ஓர் எண்ணம் வருகிறது, அதைச் சுற்றி ஓர் இறுக்கமும் தோற்றவித்து கொள்ளப்படுகிறது. உங்கள் இருப்புணர்வு அதற்குமேலும் இறுக்கமற்றதாயிருக்காது. அதை வெளிப்படுத்தியாக வேண்டியிருக்கிறது, அதனால்தான் நீங்கள் அடுத்தவரிடம் அதைப் பற்றிப் பேசுகிறீர்கள். அது அர்த்தமற்றது, காரணம், அவரும் நீங்கள் நிற்கிற அதே இடத்தில் தான் நின்று கொண்டிருக்கிறார். அவரும் அந்தப் பறவைகளுக்குக் காது கொடுத்துக் கேட்கிறார், அவரும் சூரிய உதயத்தைக் காண்கிறார். அந்தப் பூக்களை அவருந்தான் பார்க்கிறார். ஆக, 'இது அழகாயிருக்கிறது' என்று சொல்வதில் ஏதேனும் அர்த்தம் இருக்கிறதா என்ன. நீங்கள் எந்தவொரு செய்தியையும் அவருக்குச் சொல்லவில்லை. உங்களுக்குப் போலவே அவருக்கும் அது தெளிவானதுதான். உண்மையில், நீங்கள் இறுக்கத்தில் இருந்து உங்களை விடுவித்துக் கொள்கிறீர்கள், அவ்வளவே. அதைச் சொல்வதன் மூலம் அந்த எண்ணமானது உலகைச் சுற்றியுள்ள வளிமண்டலத்தில் (atmosphere) பரவுகிறது. நீங்கள் அந்தச் சுமையில் இருந்து விடுபடுகிறீர்கள்.

துசானின் மனதில் ஓர் எண்ணம் தோன்றுகிறது. ஒரு மேகம் (தெளிவின்மை) வந்து சேர்கிறது, அந்த மேகத்தின் வழியே கடவுளரால் அவருடைய முகத்தைக் காணமுடிகிறது, கணநேரத் தோற்றந்தான் அது. மறுபடியும் அந்த மேகம் மறைகிறது. அதற்குப் பிறகும் துசான் இருக்கவில்லை.

நினைவிருக்கட்டும். இது தியானம் எத்தகையது என்பது பற்றியது. உங்களைக் காண கடவுளே வந்தாலும், அவர்களால் உங்களைக் காணமுடியாதபடி செய்து கொள்வது. கண்டடையக் கூடியதாய் உள்ளே எவரும் இல்லை. 'முக்கியத்துவம்' (somebodiness) என்பது ஒருவகை இறுக்கம். 'நாம் யாராகவும் இல்லை நமக்குள் எவரும் இல்லை' என்று யார் நினைத்துக் கொள்கிறாரோ அவர் இறுக்கம் குறைவானவராயிருப்பார். தம்முடைய முக்கியத்துவம் காரணமாகவே ஒருவருக்கு இறுக்கம் ஏற்படுகிறது. தாங்கள் இருப்பதையே மறந்தவர்கள் இறுக்கத்துக்குள்ளாவதில்லை. ஆக, அகந்தை இழக்கப்படுகிறபோது 'நான்' என்பது காணப்படாது. அகந்தை இழக்கப்பட்டபோது எதுவும் காணக்கூடியதாயிருக்காது. அந்த ஏதுமின்மை (nothingness) அந்த ஏதுமற்ற தன்மையின் தூய்மையே உங்கள் இருப்புணர்வு. அதுவே உங்கள் உள்ளார்ந்த மையப் பகுதியாயிருக்கிறது. அதுவே புத்த இயல்பும்; விழிப்புணர்வும் ஆகும் மேகங்களே இல்லாத மிகப்பெரிய ஆகாயம் போன்றது அது.

தற்போது மறுபடியும் கேள்வியைக் கவனிப்போம்.

'ருடால்ப் ஸ்டெய்னரின் போதனைகளில் வளர்ந்தவன் நான்.' ஆம் அவை போதனைகள்தாம். நான் இங்கே எதையும் போதித்துக் கொண்டிருக்கவில்லை. உண்மையில், நேர்மாறாக எல்லா போதனைகளையும் உங்களிடம் இருந்து விலக்கி வைக்கிறேன். நான் ஒரு ஆசான் அல்ல. நான் அறிவை உங்களுக்கு வழங்கவில்லை. உங்களுக்குத் தெரியும் என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருப்பவற்றை அழிப்பதையே நான் முழு முயற்சியாய் கொடுக்கிறேன். உங்கள் நினைவில் உள்ளவற்றை அகற்றுவதற்கு நான் துணை புரிகிறேன்.

'நான் ருடால்ப் ஸ்டெய்னரின் போதனைகளில் பயிற்சி பெற்றிருக்கிறேன், ஆனால் என்னுள் இருக்கும் தடைகளைத் தாண்டி அவரிடம் என்னால் செல்ல முடியவில்லை.'

அகந்தை உடைய எவராலும் தடைகளைத் தாண்டி ஒருவரிடம் செல்ல முடிவதில்லை. உங்களுடைய தடைகளை நீங்கள் உடைப்பது கடினம், காரணம் உங்கள் அகந்தையே அதற்கு எதிராக இருக்கும். உங்கள் ஆசானும் அகந்தையில் சமநிலையை இழப்பவராயிருந்தால்,

உங்களுடைய அகந்தையை நீங்கள் விடுவதென்பது நடவாத காரியம்.

'இருந்தும் மேற்கத்தியர்களுக்கு அவர் காட்டும் வழியில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. சரியான முறையில் சிந்திக்கக் கற்றுக் கொள்வது தான் மாயையில் இருந்து நம்மை விடுவிக்கிற வழியாக இருக்கும்.'

இல்லை. வழி கிழக்கிற்கான தாயினும், மேற்கிற்கானதாயினும் அது சிந்தனையை எப்படி அகற்றுவது, எப்படிச் சிந்திக்காமல் இருப்பது என்பதாகவே இருக்கும். கிழக்கைவிட மேற்கிற்குத்தான் அது ரொம்பவும் அவசியப்படுகிறது. காரணம் மேற்கத்தியர்கள் அரிஸ்டாட்டில் தொடங்கி இரண்டாயிரம் ஆண்டுகளாய் சிந்தனை சிந்தனை என்றே கட்டுப்படுத்தப்பட்டு வந்திருக்கிறார்கள். சிந்தனையே குறிக்ளோய் இருந்திருக்கிறது. சிந்திக்கிற மனம் மேற்கின் குறிக்கோளாய் இருந்தது. 'உங்களுடைய சிந்தனையை மேலும் எப்படித் துல்லியமாக்குவது, எப்படிமேலும் அறிவியல் பூர்வ மாக்குவது என்று. இந்த முயற்சியில் இருந்தே ஒட்டுமொத்த அறிவியல் உலகமும் மேலெழுந்தது காரணம் நீங்கள் விஞ்ஞானியாய் வேலை செய்கிறபோது சிந்திக்க வேண்டும். புறத்தேயுள்ள உலகில் நீங்கள் வேலை செய்வதால் அதிக துல்லியமும், தகுதியும், சரிநுட்பமும் கொண்ட சிந்தனா முறையை நீங்கள் கண்டுபிடிக்க வேண்டியிருக்கும். அறிவியலில் பெரிய வெற்றியைத்தந்த அதே செயல்முறை, நீங்கள் உள்நோக்கிச் செல்லும்போது உதவுவதாயிருக்கும் என்று மக்கள் நினைக்கிறார்கள் என்று ருடால்ப் ஸ்டெய்னர் கருதிக் கொண்டார். அது தவறான கருத்து.

நாம் ஒரு பொருளை ஊடுருவிப்பார்ப்து போலவே, அதே முறையில் உள்நோக்கிச் சென்றுவிடலாம் என்று அவர் நினைக்கிறார். அது உதவாது, காரணம், உள்ளே செல்கிறவர் நேர் எதிரான திசையில் செல்லவேண்டியிருக்கும். பொருளை அறிந்து கொள்ள சிந்திக்கும் முறை உதவும் என்பதற்கில்லை. பொருளை அறிந்து கொள்ள தர்க்கம் உதவுமெனில், 'ஜென்கோன்' மாதிரியான தர்க்க மற்றவைகள் உள்நோக்கிச் செல்வதில் உங்களுக்குத் துணைபுரியும், ஆனால் தர்க்கம் ஒருபோதும் உதவாது. உலகத்தை நன்கு புரிந்து கொள்ள உதவுகிறவையெல்லாம் உள்நோக்கிச் செல்வதில் பயன்

படாது, அவை தடுப்புச் சுவராகி விடும். புற உலகு சார்ந்தவற்றிலும் அதுவே உண்மை. உங்களை அறிய உதவுகிற எதுவும் புறப்பொருளை அறிவதில் உதவாது. அதனால்தான் கிழக்கத்தியர்களால் அறிவியலை வளர்த்துக் கொள்ள முடியவில்லை.

உதாரணமாக, கணிதம் சார்ந்த குறியீடுகள், ஒன்ற முதல் பத்து வரையிலான இலக்கணங்கள் இந்தியாவில் வளர்ச்சியுற்றன. அது கணிதத்தை சாத்தியமுடையதாக்கிற்று. அது மிகப்பெரிய கண்டு பிடிப்பு, ஆனால் அத்தோடு நின்று விட்டது. தொடக்கம் நிகழ்ந்தது. ஆனால், கிழக்கத்தியவர்களால் அந்தப் போக்கில் தொலைதூரத்துக்குப் போகமுடியவில்லை, ஆகவேதான் உலகில் உள்ள அத்தனை மொழி களிலும் கணித எண்களும், எண் சார்ந்தவையும் சம்ஸ்கிருத வேர்களைக் கொண்டிருக்கின்றன.

உதாரணமாக, ஆங்கிலத்தில் 'two' என்பது சம்ஸ்கிருதத்தில் உள்ள 'த்வ' என்பதே ஆகும். 'three' என்பது 'த்ரி' என்றும் 'six' என்பது 'சஷ்டி' என்றும் 'Nine' என்பது 'நவ' என்றும் சம்ஸ் கிருதத்தில் முன்பே இருப்பதுதான். இந்தியக் கண்டுபிடிப்பு அடிப்படையோடு நின்றுவிட்டது.

சீனர்கள் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே போர்க் கருவி களையும், வெடிமருந்துகளையும் கண்டுபிடித்தனர். ஆனால் அவற்றில் இருந்து அணுகுண்டுகளை அவர்கள் கண்டுபிடிக்கவில்லை. வெடிமருந்துகளைக் கொண்டு அவர்களால் தயாரிக்கப்பட்டவை பட்டாசுகள்தாம். அவற்றில் அவர்கள் மகிழச்சி அடைந்தனர். ஒரு விளையாட்டுக் கருவியாகவே அதனைப் பயன்படுத்தினர். அதைக் கொண்டு யாரையும் அவர்கள் கொல்லவில்லை. அதில் வெகுதூரம் அவர்கள் செல்லவில்லை.

கிழக்கில் பல அடிப்படைகளைக் கண்டு பிடித்தார்கள், ஆனால் அவற்றுக்குள் ஆழமாய் போகாமல் இருந்து விட்டார்கள். அவர்களால் போக முடியாது காரணம் ஒட்டுமொத்த முயற்சியும் உள்நோககிச் செல்வதாகவே இருந்தது. அறிவியல் மேற்கத்திய முயற்சி. மதம் கிழக்கத்திய முயற்சி.

மேற்கில் மதமும் அறிவியல் பூர்வமாய் இருக்க முயசிக்கிறது. ருடால்ப் ஸ்டெய்னர் அதைத்தான் செய்து கொண்டிருந்தார். மதம் சார்ந்த அணுகு முறையை மேலும் மேலும் அறிவியல் பூர்வமாக்க

முயன்றார். காரணம் மேற்கில் அறிவியல் முக்கியத்துவம் உடையதாய் இருக்கிறது. மதமும் அறிவியல் பூர்வமானது என்று நீங்கள் நிரூபிக்க முயற்சித்தால். பிறகு, மதமும் மறைமுகமான விதத்தில் மதிப்புடையதா கிறது. எனவே, மேற்கில் அறிவியல் மட்டும் அறிவியலல்ல, மதமும் அறிவியல்தான் என்று மதநம்பிக்கை உடைய ஒருவர் நிரூபிக்க முயன்றபடி இருப்பார். கிழக்கில், நாம் அதைப்பற்றியெல்லாம் கவலைப்படுவதில்லை. இங்கே அறிவியல் சார்ந்த கண்டுபிடிப்பு ஏதேனும் நிகழ்ந்தால், அதை நிகழ்த்துகிறவர் அது மதம்சார்ந்த முக்கியத்துவம் உடையது என்ற நிரூபிக்க வேண்டும்.

'இதனைச் செய்வதன் மூலமும், தியானத்தின் மூலமும் நம்முடைய அகத்தையை விடுத்து, நம்முடைய நானை நாம் கண்டுபிடிக்க முடிகிறது என்கிறார் அவர்.

தியானம் என்றால் என்னவென்று ரூடால்ப்ஸ்டெய்னர் அறிய மாட்டார். அவர் எதைத் தியானம் என்று அழைத்தாரோ அது கவன ஒருமைதான். அவர் முற்றிலும் குழப்பமடைந்தவர். அவர் கவனத்தை ஒரு முனைப்படுத்துவதைத் தியானம் என்கிறார். கவன ஒருமை தியானம் ஆகாது. ஒருமுனைப்பு என்பது அறிவியல் பூர்வமான சிந்தனைக்கு ஓர் உபாயம். அது மனதைச் சுருக்கி, குறிப்பிட்ட ஒன்றில் கவனத்தைக் குவிப்பதாகும்.

தியானம் என்பது ஏதோ ஒன்றில் கவனத்தை ஒருமுனைப் படுத்துவதல்ல. உண்மையில் அது ஒரு தணிவடைதலேயன்றி குறுக்கிக் கொள்வதாகாது. கவனத்தை ஒரு முனைப்படுத்துவதில் புலனாய் அறியும் ஒரு பொருள் இருக்கிறது. தியானத்தில் எவ்வகை யிலும் பொருள் என்பதே இல்லை. நீங்கள் பொருளற்ற உணர்வு நிலையில் காணாமல் போகிறீர்கள். ஒரு முனைப்படுத்திய கவனம் தனிப்பட்டதாய், ஏதோ ஒன்றைத்தவிர மற்றவைகளை ஏற்றாமல் இருக்கிறது. அது ஒன்றைமட்டுமே உட்படுத்தியதாய், மற்றவைகளைத் தவிர்த்து விடுகிறது.

உதாரணமாக: நீங்கள் என்னுடைய உரையைக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள், இரண்டு வழிகளில் அதை நீங்கள் கேட்கக் கூடும், கவனத்தை ஒரு முனைப்படுத்திக் கேட்பது. அந்நிலையில் நீங்கள் உணர்ச்சிகளுக்கும், நரம்புகளுக்கும் கடுமையான சிரமம் கொடுக்கிறீர்கள், நான் சொல்வதிலேயே உங்கள் கவனத்தைக்

குவிக்கிறீர்கள். அப்போது பறவைகள் பாடுவதுண்டு. ஆனால், அவற்றை நீங்கள் கவனத்தில் கொள்ள மாட்டீர்கள். அது கவனத்தைத் திசை திருப்புவதாகவே நீங்கள் எண்ணிக் கொள்வீர்கள்.

ஒருமுனைப்படுத்தும் முயற்சியில் தோன்றுகிறது கவனச்சிதறல். கவனத்தைத் திருப்புதல் என்பது கவன ஒருமையில் ஓர் இடை விளைவுப் பொருள். ஆழ்ந்து எண்ணும் நிலையில் நீங்கள் செவிமடுக்க முடியும். அப்போது நீங்கள் வெளிப்படையாய், எதையும் வரவேற்கிற பண்புடன் இருப்பீர்கள். என்னைக் கவனிப்பதுடன் பறவைகளையும், மரங்களினூடே புகுந்து காற்று உண்டு பண்ணுகிற ஓசையையும் கேட்பீர்கள். நீங்கள் அவற்றையும் கவனிப்பீர்கள். அந்நிலையில் நீங்கள் ஏககாலத்தில் (simulataneously) இங்கிருப்பீர்கள். அப்போது இங்கே எது நடந்தாலும் உங்களுடைய மனமோ, சொந்தத் தேர்வோ இல்லாமல் நீங்கள் அதற்கு அனுகூலமாயிருப்பீர்கள்.

'நான் இதைத்தான் கேட்பேன். அதைக் கேட்க மாட்டேன்' என்று நீங்கள் சொல்வதில்லை. ஒட்டுமொத்த இருப்பின் குரலை நீங்கள் கேட்கிறீர்கள். அந்நிலையில் பறவைகளும், நானும், காற்றும் மூன்று தனித்தனி அம்சங்களாக இருப்பதில்லை. அவை வேறாயிருப்பதில்லை. அவை ஒன்றாக, ஒரே சமயத்தில் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. நீங்கள் பரம்பொருளின் குரலைச் செவிமடுக்கிறீர்கள். அப்போது உங்களுடைய புரிதல் பெருமளவு உயர்கிறது. காரணம் பறவைகளும் அதே விசயத்தைத் தங்கள் வழியில் சொல்கின்றன, காற்றும் தன்னுடைய விழியில் அதே செய்தியைச் சுமந்து செல்கிறது. நானும் அதே விசயத்தைத் தான் மொழிசார்ந்த வகையில் சொல்கிறேன். எனவேதான் நீங்கள் நிறையவே புரிந்து கொள்ள முடிகிறது. ஊடகங்கள் வேறுபட்டாலும் செய்தி அதே செய்திதான் காரணம் கடவுளே செய்தியாக இருக்கிறார்.

ஒரு 'குக்கூ' (cuckoo) பறவைக்குக் கிறுக்குப் பிடிக்கிறபொழுது, கிறுக்கனாகி விடுவார் கடவுள், அவரைத்தள்ளி வைத்துவிடாதீர்கள், எதையும் ஒதுக்கி விடாதீர்கள், உள்ளடக்கியிருங்கள்.

ஒரு முனைப்படுத்துவது என்பது உணர்வு நிலையைக் குறுக்குவது, தியானமோ விரிவு செய்வது. எல்லாக் கதவுகளும் திறந்திருக்கின்றன. எல்லாச் சன்னல்களும் திறந்தேயிருக்கின்றன. நீங்கள் தெரிவு செய்திருக்கவில்லை. நீங்கள் தெரிவு செய்யவில்லை.

என்கிற பொழுது உங்கள் கவனம் திசைதிருப்பப் படுவதில்லை. அதனை ஒரு நெறி முறையாய் கொள்ளுங்கள். தியானிப்பவரின் கவனம் திருப்பப்படாது. அப்படி கவனம் திரும்புமாயின் அது தியான மல்ல ஒருமுனைப்படுதல் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். ஒரு நாய் குரைக்கிறது – தியானிப்பவரின் கவனம் சிதறாது. அவர் அதனையும் கவனித்துக் கொண்டு தியான அனுபவத்தில் இருப்பார். அவர் கூறுவார். 'பார்த்தாயா... கடவுள் நாயக்குள் இருந்து கொண்டு குரைப்பதை. நான் தியானிக்கிறபொழுது குரைப்பதற்கு நன்றி. ஆக, பலவழிகளிலும் உன்னுடைய கவனம் என்மீது இருக்கிறது. அவர் சொல்வதில்லை, 'இந்த நாய் மனிதனுக்கு எதிரானது, என்னுடைய கவனத்தைக் குலைக்க முயல்கிறது. நான் எத்தனை சமயப் பற்றுடையவன்.

எத்தனை தீவிரமாயிருக்கிறேன், இந்த முட்டாள் நாயானால்... அது என்ன செய்து கொண்டிருக்கிறது?' இல்லை, நாய் மீது நீங்கள் கோபம் கொள்வது நியாயமாகாது, பாவம் அந்த நாய் தன்னுடைய காரியத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறது. அது ஒன்றும் உங்களுடைய தியானத்தையோ, ஒரு முனைப்பையோ கெடுக்கிற வேலையைச் செய்து கொண்டிருக்கவில்லை. எவ்வகையிலும் உங்களுடைய மதத்தைப் பற்றியோ, உங்களைப் பற்றியோ அது கவலைப்படவில்லை. அது தன்னுடைய வழியில், தன்னுடைய வாழ்க்கையை அனுபவித்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் செய்கிற முட்டாள்தனத்தை அது உணர்ந்திருக்கவில்லை. அது ஒன்றும் உங்களுடைய விரோதியல்ல.

கவனியுங்கள், ஒரு வீட்டில் ஒருவர் சமயப்பற்றுடையவராய் இருந்தால் வீட்டில் உள்ளவர்களுக்கு அமைதிக் குலைவு ஏற்பட்டு விடுகிறது. காரணம் அந்த மனிதர் எப்போதும் பிரார்த்தனை பண்ணிக்கொண்டிருப்பார், யாரும் சப்தம் போடக்கூடாது. அவர் தியானத்தில் இருக்கிறார், குழந்தைகள் அமைதியாக இருக்க வேண்டும். யாரும் விளையாடக் கூடாது. தேவையற்ற நிபந்தனைகள் எல்லாம் விதிக்கப்படும். உங்களுடைய கவனம் சிதறி நீங்கள் அமைதிக் குறைவுக்குள்ளானால் அதற்கு நீங்கள் தாம் பொறுப்பு. நீங்கள் ட்டுமே குற்றம் சாட்டப்பட வேண்டியவர், மற்றவர்கள் அல்ல.

ருடால்ப்ஸ்டெய்னர் எதைத் தியானம் என்கிறாரோ அது கவனத்தை ஒரு முனைப்படுத்துவதன்றி வேறில்லை, ஒரு முனைப் படுத்தப்பட்ட கவனத்தின் மூலம் நீங்கள் அகந்தையை விடக் கூடும், அத்துடன் 'நான்' என்பதைப் பெறுவீர்கள். அந்த 'நான்' நுட்பமான அகந்தையன்றி வேறெயென்ன? நீங்கள் பக்தியுள்ள தற்பெருமைக்காரர், அவ்வளவே, உங்களுடைய அகந்தை மதம் சார்ந்த முறையில் அலங்கரிக்கப்பட்டுவிடுகிறது, ஆனால் அது இருந்து கொண்டுதான் இருக்கிறது.

தியானம் செய்பவருக்கு எந்தவொரு மைய உருவரும் (venteral figuare) கிடையாது. இருக்கத் தேவையில்லை. ஆனால், கவனத்தை ஒரு முனைப்படுத்துகிறவருக்கு தன் கவனத்தை ஒரு முனைப்படுத்த ஏதாவதொன்று தேவைப்படும். ருடால்ப்டெய்னர் சொல்கிறார் கிறிஸ்து முதன்மை வகிப்பதாக. ஏன் புத்தரோ பதஞ் சலியோ ஒரு மகாவீரரோ மையமாக இருக்கக் கூடாது. அவர்களுக் கெல்லாம் கவனத்தை ஒரு முனைப்படுத்த ஏதோவொன்று தேவைப் படுகிறது. அந்த ஒன்றில் தங்கள் மனதை அவர்கள் குவிக்கிறார்கள். சமய நம்பிக்கை உடைய ஒருவருக்கு எந்தவொரு மைய வடிவமும் கிடையாது. உங்களுடைய மைய அகந்தை மறைகிறபோது, அதைத் தாங்கிநிறுத்த புறத்தே இருந்து வேறோர் அகந்தை தேவைப்படாது. கிறிஸ்து அல்லது புத்தர் ஏதோஒரு வகையில் எங்கோ ஓரிடத்தில் அகந்தையாகி விடுகின்றனர். 'நான் – நீ' என்கிற எதிரெதிர் கொள்கை நிலையை நீங்கள் எருவாக்கிக் கொள்கிறீர்கள். 'கிறிஸ்துவே, தாங்களே என்னுடைய எசமான்' என்று நீங்கள் சொல்கிறீர்கள்; ஆனால், அதைச் சொல்வது யார்? ஒரு 'நான்' தேவைப்படுகிறது அதை வலியுறுத்துவதற்கு. கவனியுங்கள், ஜென்புத்தப் பிரிவினர் சொல்வதைக் கவனமாய் கேளுங்கள். அவர்கள் சொல்கிறார்கள், 'புத்தரை எங்காவது வழியில் கண்டால், உடனே அவரைக் கொன்றுவிடுங்கள்' என்று. இல்லையேல் அவர் உங்களைக் கொன்றுவிடுவார். ஒரேயொரு வாய்ப்பு கிடைத்தாலும் அவர் உங்களைத் தனது ஆளுமைக்குட்படுத்தி விடுவார், உங்களுடைய மையவடிவமாகி விடுவார். உங்கள் மனம் அவரையே சுற்றிக் கொண்டு விடும். நீங்கள் புத்தமனமாகி விடுவீர்கள். நீங்கள் ஒரு கிறிஸ்தவ மனமாகிவிடுவீர்கள். ஒரு குறிப்பிட்ட மனதுக்கு, குறிப்பான ஒரு மையம் தேவைப்படுகிறது.

உண்மையில் அவர் இயேசுவைவிட கிறிஸ்துவுக்கு சாதகமாகவே இருக்கிறார். பக்தியுள்ள அகந்தை அவ்வாறுதான் மேலெழுகிறது. இயேசுவும் நம்மைப் போன்றவர்தான். சரீரத்துடன் கூடிய ஒரு மனிதர், சாதாரண வாழ்க்கை தற்போது, அகந்தை மிக்க ஒருவருக்கு இதுபோது மானதாயிருக்காது. மிகவும் புனிதமான ஒரு வடிவம் தேவைப்படுகிறது அவருக்கு கிறிஸ்துவானவர் புனிதப்படுத்தப்பட்ட இயேசுதான் நீங்கள் பாலில் இருந்து தயிரைத் தயார் பண்ணுகிற மாதிரிதான் இதுவும். அதில் இருந்து வெண்ணெயை எடுத்து நெய்யாக்குகிறீர்கள். அதன்பிறகு அது முக்கியமானதாய் முதன்மை பெற்றுவிடுகிறது. நெய் இறுதியாய் சுத்திகரிக்கப்பட்ட ஒன்று. வெள்ளை பெட்ரோல் மண்ணெண்ணையில் இருந்து தயாரிக்கப்படுகிற மாதிரிதான் இதுவும். தீர்ந்தது அதற்குமேல் எதுவும் இல்லை, அவ்வளவுதான், கிறிஸ்து என்பவர் புனிதமாக்கப்பட்ட இயேசு. ரூடால்ப் ஸ்டெய்னருக்கு இயேசுவை ஏற்றுக் கொள்வது சிரமமாக இருந்திருக்கும், எல்லா தற்பெருமைக் காரர்களுக்குமே அது சிரமந்தான்.

உதாரணமாக: கிறிஸ்தவர்கள் சொல்கிறார்கள், அவர் ஒரு கன்னித் தாய்க்கு மகனாய் பிறந்தவர் என்று. சாதாரண மனிதர்களைப் போலவே அவரும் பிறந்தார் என்பதை ஏற்பதில் அவர்களுக்குத் தயக்கம். அந்நிலையில் அவரும் சாதாரணமாகவே தெரிவார். அவர் விசேஷ மானதாய் இருக்க வேண்டும். நாமெல்லாம் தனிச்சிறப்பு வாய்ந்த ஒரு குருவைப் பின்பற்றுகிறவர்களாக இருக்கவேண்டும். சாதாரணமனிதக் காதலில் புத்தரைப் போல் அவர்பிறந்து விடவில்லை – இயேசு தனிச்சிறப்புடையவர். அவர் ஒருவரே தேவமைந்தர், அவரே கடவுளால் மகுடம் தரிக்கப் பெற்றவர். மற்றவர்களெல்லாம் தூதர்களாக இருக்க முடியும், ஆனால் கிறிஸ்துவின் அதே தளத்தில் அவர்கள் இருப்பதற்கில்லை. நீங்கள் கிறிஸ்துவைவிட இயேசுவை அதிகம் புரிந்து கொள்ள வேண்டும் என்று நான் விரும்புகிறேன் காரணம் இயேசுபுரிந்து கொள்ள பரமசுகமானவர், உங்கள் பாதையில் அவர் பேருதவியாக இருப்பார்.

முதலில் நீங்கள் இயேசு நிலையில் இருந்து, கடந்தாக வேண்டும். அதன்பிறகு என்றேனும் ஒருநாளில் கிறிஸ்து உங்களுக் குள் தோன்றுவார். கிறிஸ்து இருப்புணர்வு நிலை ஆகும். கவுதமர் புத்தரானார் இயேசு கிறிஸ்துவானார். நீங்களும் கிறிஸ்துவாக

முடியும். தற்போது கிறிஸ்து தொலைதூரம் சென்றுவிட்டார். நீங்கள் அதைப்பற்றிச் சிந்திக்க முடியும், தத்துவங்களையும் இறைமையியல் களையும் உருவாக்க முடியும், ஆனால் அதுவெல்லாம் உதவாது. இந்தக் கணத்தில் இயேசுவை அறிந்து கொள்வதே சிறப்பு, காரணம். அங்குதானே நீங்கள் இருக்கிறீர்கள். அங்கிருந்துதானே பயணத்தை நீங்கள் தொடங்க வேண்டியிருக்கிறது. இயேசுவை நேசியுங்கள், இயேசுவை நேசிப்பதன் மூலம் இந்த மனிதகுலத்தையே நீங்கள் நேசித்த வராவீர்கள். இயேசுவை நேசிப்பதன் மூலம் உங்களையே நேசிப்பவராவிர்கள்.

தற்போது, இயேசு பற்றிய முரண்பாட்டை எப்படியாவது விட்டு விட வேண்டும் என்று கிறிஸ்தவர்கள் முயல்கிறார்கள். அதற்காகவே கிறிஸ்து என்கிற கருத்தமைவை (concept) அவர்கள் உருவாக்கிக் கொண்டது. எடுத்துக்காட்டாக, இயேசு கோபவசப்பட்ட தருணங்கள் இருக்கின்றன.

பல தடவைகள் அவர் கோபத்தில் இருந்திருக்கிறார் என்கிற உண்மையை எப்படித் தவிர்ப்பது? அது அவருடைய போதனைக்கு எதிரானதாயிற்றே. அவர் தொடர்ந்து அன்பைப் போதித்துக் கொண்டு, கோபமாகவும் இருந்திருக்கிறார். உங்கள் பகைவர்களை மன்னிக்கும்படி அவர் போதிக்கிறார். அதுமட்டுமா, பகைவர்களை நேசியுங்கள் என்றும் கூறுகிறார். ஜெருசலேத்தில் ஓர் ஆலயத்தில் அவரே ஒரு சாட்டையை எடுத்து லேவாதேவி செய்பவர்களை விளாசுகிறார். அவர்களை ஒன்றை ஆளாகவே நின்று ஆலயத்தை விட்டு துரத்துகிறார். கிட்டதட்ட ஒரு பைத்தியக் காரனின் கோபம், உண்மையான சீற்றம் அவரிடம் இருந்திருக்க வேண்டும். இதனை எப்படி ஏற்றுக்கொள்வது? இதில் சமரசம் காணவே கிறிஸ்து என்கிற கருத்தமைவை (concept) கிறிஸ்தவர்கள் உருவாக்கியது, ருடால்ப் ஸ்டெய்னர் தம்முடைய கருத்தியலை (ideology)த் தோற்றுவித்தது. 'அவர் கோபவேசப்படுகிற போது இயேசுவாக இருக்கிறார்' என்று நீங்கள் சொல்லக் கூடும். சிலுவையில் அறையப்பட்ட நிலையில், 'பரமபிதாவே, இவர்களை மன்னியுங்கள், தாங்கள் இன்னது செய்கிறோம் என்பதை இவர்கள் அறிய மாட்டார்கள்'. என்ற கூறுகிறபோது அவர் கிறிஸ்தவாகிவிடுவாா. ஆக, அந்த முரண்பாடு இவ்விதமாய் சமாளிக்கப்பட்டு விடுகிறது. அவர் பெண்களோடு பழகும்போது இயேசுவாகி விடுகிறார். தம்மைத் தொடாமல்

இருக்கும்படி மக்தலேனாவிடம் சொல்லும் போது அவர் கிறிஸ்துவாக இருக்கிறார். இருண்டு கருத்துக்களும் விசயங்களை குறித்துக்காட்ட உதவுகிறது. ஆனால், இயேசுவின் நேர்த்தியை நீங்கள் சிதைத்து விடுகிறீர்கள். காரணம் ஒட்டமொத்த அழகும் முரண்பாடு போலத் தோன்றும் மெய்யுரை (paradox)யில் இருக்கிறது.

சமரசத்துக்கு அவசியமில்லை காரணம், அடியாழத்தில் இயேசுவின் இருப்புணர்வில் அவர்கள் சமரச முற்றுவிடுகிறார்கள். உண்மையில் அவர் கோபப்படலாம்தான் காரணம் அந்த அளவு நேசமுடைய வராயிருக்கிறார். அவர் பெருமளவில் நேசிப்பதால், கோபம் கொள்ளவும் செய்கிறார். உங்கள் குழந்தைகளிடம் நீங்கள் பிரியமாயிருக்கிறீர்கள், சில நேரங்களில் அவர்களை அடிக்கவும் செய்கிறீர்கள். கோபத்தின் காரணமாய் அடித்தாலும் அதில் அன்பிருக்கும். அது வெறுப்பாகாது. இயேசுவைப்பற்றி நான்புரிந்து கொண்டது இதுதான், அவர் மிகுதியாய் நேசிப்பவர். அவர் கோபத்தைப் பற்றியவைகளை மறந்து, தாமே கோபமாகி விடுகிறார். அவருடைய அன்பு அத்தகையது. அவர் ஒன்றும் உணர்வற்ற மகான் அல்ல, உயிரோட்டமுடைய ஒருவர். அவருடைய அன்பு வெறும் கோட்பாடு அல்ல, அது மெய்ம்மை (reality) உடையது. அன்பு மெய்ம்மையாக முடியும் என்கிறபோது சிலநேரங்களில் அன்பு கோபமாகலாம் தானே.

அவரும் உங்களைப் போல் மனிதர்தான். அத்தோடு அவர் முடிந்து விடவில்லை. அவர் மனிதர்களிலும் பார்க்க மேம்பட்டவர். ஆனால் அடிப்படையிலும், முதன்மையாகவும் அவர் மனிதர், கூடுதலான மனிதர். அவர் மனிதராயிருந்தது தற்செயல், அவர் மனிதர்களைவிட மேம்பட்டவர் என்பதை நிரூபிக்கவே கிறிஸ்தவர்கள் முயல்கிறார்கள். அவர் மனித சரீரம் எடுக்க வேண்டியிருப்பதால் அந்தத் தீமை கட்டாயமாகிவிடுகிறது. அதனால்தான் மனிதர்களைப் போலவே அவருக்கும் கோபம் வருகிறது. இல்லையேல், அவர் பரிசுத்தமாக மட்டுமே இருந்திருப்பார்.

பரிசுத்தம் நிஜமாகவும், நம்பத்தக்கதாகவும் இருந்து விட்டால் அசுத்தத்தை – தூய்மையற்றிருப்பதைக்குறித்து அஞ்ச வேண்டிய தில்லை. அன்பு உண்மையானதாயின் அது உதிர்த்து நிற்க அஞ்சுவ தில்லை. எதிர்த்து நிற்பதால் அது அழிந்துவிடாது, அது தாக்குப்

பிடிக்கும். மனித இனத்தை நேசிப்பதுபற்றி எத்தனையோ மகான்கள் பேசியிருக்கிறார்கள், ஆனால் ஒருவரை நேசிப்பது மட்டும் முடியாத காரியமாய் தெரிகிறது. ஒட்டுமொத்த மனித குலத்தை நேசிப்பது எளிதாய் இருக்கிறது அவர்களுக்கு தனியொருவரை நேசிக்க முடியாதவருக்கு, மனித குலத்தை நேசிப்பது எப்படி எளிதாகும்? அது குலத்தை நேரடியாய் எதிர் கொள்வதில்லை. ஒற்றை ஆளாக ஒருவன் பல இடர்பாடுகளை உண்டு பண்ணி விடுவான். மனித இனம் அப்படியெல்லாம் தொல்லை கொடுக்காது. எனவே மொத்தமாக ஒரு மனித கூட்டத்தை நேசிப்பது உங்களுக்கு எளிதாகி விடுகிறது. நீங்கள் மனித இனத்தை நேசிக்கிறீர்கள். நீங்கள் பரந்த எல்லையாய் இருக்கிறீர்கள், உங்களுடைய அன்பும் விரிந்து, பரந்ததாய் இருக்கிறது. ஆனால், நான் உங்களுக்குச் சொல்கிறேன், ஒரு மனிதனை நேசியுங்கள், மனித குலத்தை நேசிக்க அதுவே அடிப்படையான தயாரிப்பு ஆகும். அது சிரமந்தான். அதில் நெருக்கடி இருக்கும், சவால் இருக்கும். நீங்கள் அதைக் கடக்க முடிந்துவிட்டால், நீங்கள் அன்பைச் சிதைக்க மாட்டீர்கள், அந்த அன்புக்கு வலுவூட்டிவிடுவீர்கள்.

அந்நிலையில், அது எல்லா இடர்ப்பாடுகளையும் எதிர்கொள்ளக் கூடியதாயிருக்கும் – நீங்கள் முழுமையுற்ற வராவீர்கள். கிறிஸ்து மனித உயிர்களை நேசித்தார், பெரிய அளவில் மிகுதியாய் நேசித்தார். அவருடைய அன்பு சிறப்பானது. அது மனித இனத்தையும் கடந்து பிரபஞ்சத்தையே நேசிப்பதாகிறது. அதுவே இறைவனுக்கான அன்பு தெய்வீக அன்பு.

'உங்களுடைய வழிமுறைகள் வித்தியாசமாய் படுகிறது எனக்கு'

வித்தியாசமானது மட்டுமல்ல, எதிரிடையானதும் கூட. முதலாவது, அது எவ்வகையிலும் ஒரு வழி முறையல்ல. அது ஒரு பாதை அல்ல, அல்லது நீங்கள் அந்த வார்த்தையை நேசித்தால் அது வழியல்லாத வழி, வாசலல்லாத வாசல். அது ஓர் வழியாகாது காரணம், உங்களுடைய மெய்ம்மை (reality) வெகுதொலைவில் இருந்தால் தான் ஒரு வழி தேவைப்படும் உங்களுக்கு. ஆனால், உங்களுடைய மெய்ம்மை இப்போதே உங்களுக்குக் கிடைப்பதா யிருக்கிறது. அது அப்படியே உங்களுக்குள் தான் இருக்கிறது.

அதை அடைவதறகாரு வழி தேவைப்படாது என்பதையே நான் அழுத்தமாய் கூறுகிறேன். உண்மையில் நீங்கள் எல்லாப் பாதைகளையும் விடுகிறபோதுதான், நீங்கள் அங்கே நின்றிருப்பதைக் கண்டு கொள்வீர்கள். நீங்கள் எத்தனைக்குப் பாதைகளைப் பின்பற்றுகிறீர்களோ அத்தனைக்கு உங்களிடமிருந்து நீங்கள் விலகிச் சென்று விடுகிறீர்கள். பாதைகள் தவறாக வழிகாட்டும், தவறான வழியில் இட்டுச் செல்லும், காரணம். நீங்கள் எதை நாடிச் செல்கிறீர்களோ அதுவாக முன்பே இருந்து கொண்டிருக்கிறீர்கள், எனவே பாதைகள் தேவையில்லை. ஆனால், நீங்கள் அந்த வரையறையில் (terms) இருந்துகொண்டு சிந்திப்பீர்களாயின் என்னுடைய முறை எதிரிடையானது தான். சரியாகச் சிந்திப்பது பற்றி ஸ்டெய்னர் கூறுகிறார். சரியோ தவறோ எல்லா சிந்தனையுமே தவறானது என்றே நான் கூறுகிறேன்.

'தாங்கள் எனக்கு அறிவுரை வழங்குவீர்களா? நான் ஸ்டெய்னருடைய வழிமுறைக்கும் உங்களுடைய வழிமுறைக்கும் இடையே வலிந்து இழுக்கப்படுகிறேன்.'

இல்லை, இறுக்க நிலையில் சில நாட்களாவது இருந்தாக வேண்டும் நீங்கள். நான் உதவமாட்டேன். அறிவுரை கூற மாட்டேன். காரணம், நான் உதவினாலும், அறிவிரை கூறினாலும் என்னையே சார்ந்திருப்பீர்கள், அது பக்குவமற்ற நிலையாகும்.

நீங்கள் என்னை வந்தடைவதற்கு முன் ஸ்டெய்னருடன் தகுதியான முறையில் சண்டையிட்டு எதிர்த்து நிற்கவேண்டும்; நிச்சயமாக அவரும் உங்களுடன் போரிடுவார். அவர் அத்தனை எளிதில் உங்களை விட்டுவிட மாட்டார். நான் எந்த விதத்திலும் உங்களுக்குத் துணைபுரிய மாட்டேன், என்வே, உங்கள் சொந்தப் பொறுப்பில்தான் நீங்கள் வந்தாக வேண்டும். தன்னுடைய சொந்த இசைவின் பேரிலேயே ஒருபழம் பழுத்து விழுகிறது. நான் ஒரு சின்னக்கல்லைக் கூட அதன்மீது வீசியெறிய மாட்டேன், காரணம் அந்தப்பழம் முழுமையாய் பழுத்து விட்டிருக்கிறது, அது கல்வீச்சின் காரணமாய் விழக்கூடும். அது பேராபத்தில் முடியும். உங்கள் மனம் இழுபட்டதால் உண்டான வலியில் வேதனையில் இருக்கட்டும்.

நீங்கள் முடிவெடுத்தாக வேண்டும், யாரும் காயப்பட்ட மனத்துடன் ரொம்பகாலம் இருந்து விடுவதற்கில்லை. ஒருவர்

தீர்மானத்துக்கு வந்தாக வேண்டிய ஒரு நிலை இருக்கிறது. நான் உங்களுக்கு உதவினால் அது ஸ்டெய்னரை நோக்கிச் செலுத்துவதா யிருக்காது. அவர் செத்துப் போய்விட்டார், அவரால் என்னை எதிர்க்க முடியாது. என்னை நோக்கி உங்களை இழுத்துக் கொள்வது எனக்கு எளிது. தொடர்ந்து போரிடுகிறவராயிருங்கள். நீங்கள் என்னை விடநேரிடலாம். ஆனால் அதுவும் இலாபமாகவே இருக்கும், காரணம் அந்நிலையில் நீங்கள் ருடால்ப்ஸ்டெய்னரை முழுமையாய் பின்பற்றத் தொடங்கி விடுவீர்கள்.

ஆனால், தற்போது அது சாத்தியம் என்று நான் கருதவில்லை. நச்சுத்தன்மை ஏற்பட்டு விட்டது, உங்களுக்குள் அது. தற்போது காலத்தில் பிரச்னையாகி விட்டது.

## இரண்டாவது கேள்வி:

**'நான் செடிகொடிகளுடன், நதிகளுடன், மலைகளுடன், வானத்துடன், மிருகங்களுடன், பறவைகளுடன் இருக்கும் போது வெகு நன்றாக உணர்கிறேன். ஆனால் மனிதர்கள் மத்தியில் இருக்கும் போது ஏதோ பைத்தியக்கார விடுதிக்குள் நுழைந்துவிட்டதுபோல் இருக்கிறது. ஏன் இந்தப் பகுத்தல்,'**

நீங்கள் மரங்களுடன், வானத்துடன், மலைகளுடன், பூக்களுடன் இருக்கும் போது நன்றாக உணர்கிறீர்கள். இதில் நீங்கள் செய்யக் கூடியதாய் எதுவும் இல்லை. மரங்களும் நதிகளும், மலைகளும் நிகழ்த்துகிறது. அவற்றின் அமைதியில் இருந்தே அந்தச் சரியான தன்மை உண்டாகிறது.

நீங்கள் மனிதர்களிடம் நெருங்கியதுமே பித்து நிலையை ஒரு பைத்தியக்கார விடுதியில் இருக்கும் உணர்வைப் பெற்றுவிடுகிறீர்கள் இதற்குக் காரணம் மனிதர்கள் முகம் காட்டும் கண்ணாடிகளாய் இருப்பதுதான். உங்களுடைய பித்துநிலையையே அவர்கள் பிரதிபலிக்கிறார்கள். நீங்கள் பித்துப்பிடித்தவராயிருக்க வேண்டும். அதனால்தான் மக்கள் மத்தியில் இருக்கும்போது ஒரு பைத்தியக்கார விடுதியில் இருப்பதாக நீங்கள் உணர்வது நாள் ஒருபோதும் அப்படி உணர்ந்ததில்லை. உங்களைப் போன்ற பைத்தியக்காரர்களுடன் இருக்கும் போதும் நான் அவ்விதமாய் உணர்ந்ததேயில்லை.

சமய நம்பிக்கை உடையவர்கள் சமயத்தில் இத்தகைய பிரச்னையை எதிர்கொள்ளும் படியாகிறது.

நீங்கள் தனித்திருக்கும்போது எல்லாமே அமைவுற்றிருப்பதாய்படும், காரணம், யாரும் உங்களைத் தொல்லைப்படுத்துவதில்லை. எல்லாமே நிசப்தமாயிருக்கும், அப்போது நீங்களும் அந்த அமைதித் தன்மையை அடைந்திருப்பீர்கள். ஆனால் இந்த அமைதி இயல்பானதுி. அதில் ஆன்மாசாந்ததாய் எதுவும் இல்லை. அது இயற்கைக்கு உரியது. நீங்கள் இமயமலைக்குச் சென்றால். அந்த மலைச்சிகரங்களின் குளிர்ச்சியில், அமைதியில் உங்களையும் அமைதியாக உணர்வீர்கள். ஆனால் அதற்கான பெருமை, புகழ் எல்லாம் இமயமலைக்குத்தான் போய்ச் சேரும், உங்களுக்கல்ல. நீங்கள் அங்கிருந்து திரும்பிவரும் போது, அங்கே போவதற்கு முன்பிருந்த அதே பழைய மனிதனாகவே இருப்பீர்கள். அந்த இமயத்தை உங்களுடன் சுமந்துவர முடியுமா என்ன? எத்தனையோ பேர் அங்கே போகிறார், அங்கே தங்கி இருக் கிறார்கள். அவர்கள் அங்கிருந்து திரும்பிச் சென்றால் தாங்கள் அடைந்திருந்த ஏதோ ஒன்றை இழந்துவிட்ட உணர்வு தான் மிஞ்சும். அவர்கள் எதையும் அடையவில்லை என்றே சொல்ல வேண்டும். காரணம், ஒன்றை நீங்கள் அடைந்துவிட்டால் அது இழக்கப்படாது, உலகம் ஒரு தேர்வாய்வை நடத்துகிறது, அவ்வளவே. ஆக, மனிதர் களில்லாத போது நீங்கள் சரியாக உணர்கிறீர்கள் என்றால், மனிதர்கள் மத்தியில் உங்களுக்குள் இருக்கும் வெறியுணர்வு (mad-ness) செயல்படத் தொடங்குகிறது என அது காட்டுகிறது. எனவே நழுவிச் செல்லப் பார்க்காதீர்கள், சமூகத்தின் மீது குற்றம் சுமத்தாதீர்கள், மனிதர்களைக் குறைகூறாதீர்கள்.

இரண்டு மனநல மருத்துவர்கள் ஒருவரையொருவர் கடந்து சென்று கொண்டிருந்தனர். 'ஹலோ' என்று சொன்னார் ஒருவர். அடுத்தவர் தமக்குள் சொல்லிக் கொள்கிறார், 'அதன்மூலம் அவர் எதைக் குறித்துக் காட்டுகிறார், வியப்பாக இருக்கிறது எனக்கு' என்று.

'ஹலோ...' ஒரு சின்ன விசயம்தான், என்றாலும் ஒரு பிரச்னை தோன்றிவிடுகிறது. 'அதன் மூலம் அவர்கள் எதனைக் கருத்தில் கொண்டிருக்கிறார்கள்.' அது திகைப்பை ஏற்படுத்திவிடுகிறது.

தம்முடைய கண்களுக்கு முன்பாக சில புள்ளிகள் தெரிகிறது என்று நோயாளி தமது மருத்துவரிடம் தெரிவித்தார். அவரிடம் மருத்துவர் சொன்னார், முகத்தில் புள்ளிகள் கொண்ட பெண்களுடன் போய்வருவதை நிறுத்திக் கொள்ள வேண்டும் என்று. 'ஏன்?' நோயாளி கேட்கிறார். 'ஏன்னா, என்னோட நர்ஸை நான் வெறுக்கிறேன்' பதில் வந்தது மருத்துவரிடம் இருந்து.

நோயாளிகளும் மருத்துவர்களும் ஒரே மன ஓட்டத்துடன் தான் இருக்கிறார்கள்.

நீங்கள் மக்கள் நடுவே இருக்கிறீர்கள் என்கிறபோது, உங்களைப் போன்ற மக்கள் நடுவேதான் இருக்கிறீர்கள். சற்றும் எதிர்பாராத விதத்தில் உங்களுக்குள் ஏதோ ஒன்று எதிர்ச் செயல்புரியத் தொடங்குகிறது. அவர்களும் பைத்தியம், நீங்களும் பைத்தியம். நீங்கள் நெருங்கிவிடும் கணத்தில் ஆற்றலின் நுட்பமான உரையாடல் நிகழத் தொடங்குகிறது. உங்களுடைய பித்து அவர்களுடைய பித்தினை வெளிக் கொண்டுவருகிறது. அவர்களுடைய பித்து உங்களுடையதை வெளிக்கொண்டுவரப் பார்க்கிறது. நீங்கள் தனியே வாழ்ந்தால், மகிழ்ச்சியாயிருக்கிறீர்கள்.

முல்லா நஸ்ருத்தீன் என்னிடம் சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள். 'நானம் என்னுடைய மனைவியும் முப்பதாண்டு காலம் மகிழ்ச்சியாய் வாழ்ந்துவிட்டோம்' என்று. நான் கேட்டேன். 'அப்புறம் என்ன ஆச்சு?' அவர் சொன்னார், 'பிறகு நாங்கள் சந்தித்துக் கொண்டோம். மகிழ்ச்சி போயே போயிற்று' என்று.

மகிழ்ச்சிகரமான இரண்டுபேர் நேருக்கு நேர் சந்தித்துக் கொண்டதுமே மகிழ்ச்சியின்மை தோன்றிவிடுகிறது. மகிழ்ச்சி யின்மையின் நுட்பமான விதைகளை நீங்கள் சுமநதிருக்கிறீர்கள். சரியான சந்தர்ப்பம் கிடைத்ததுமே அவை முளைக்கத் தொடங்கு கின்றன ஒரு மனிதன் முளைவிடுவதற்கு அவை முளைக்கத் தொடங்குகின்றன. ஒரு மனிதன் முளைவிடுவதற்கு மனித இனத்துக் குரிய சூழல் தேவைப்படுகிறது. உங்களுடைய சுற்றுச்சூழலை மரம் ஏற்படுத்திவிடாது.

நீங்கள் ஒரு மரத்தடியில் உட்காாந்து, உங்கள் விருப்பம் போல் எதை வேண்டுமானாலும் செய்து கொண்டிருக்க முடியும், ஆனால், அதனுடன் தொடர்பற்றவராகவே இருப்பீர்கள். உங்களுக்கும்

மரத்துக்கும் இடையே எந்தவொரு உரையாடலும், கருத்து வெளியிடும் முறையும் இருக்காது. மரம் தன்னுடைய இருப்புணர்வில் யோசித்தபடி இருக்கும். உங்களுடைய இருப்பாவில் நீங்கள் ஆழ்ந்து யோசித்தபடி இருப்பீர்கள். எவ்வித இணைப்பும் இருக்காது. நதி நதியாக இருக்கும், நீங்கள் நீங்களாக இருப்பிர்கள். உங்களுக்கும் நதிக்கும் இடையில் இணைப்பு வேலை செய்ய எதுவும் இருக்கவில்லை. நீங்கள் ஒரு மனிதரை நெருங்கச் செல்கிறபோது ஏதோ ஒன்று இணைக்கும் ஆதாரமாய் இருப்பதைக் காண்பீர்கள். அந்தப்பாலம் இக்கரையில் இருந்து அக்கரைக்கும், அக்கரையில் இருந்து இக்கரைக்கும் கருத்துக்களை இடம் பெயரச் செய்கிறது.

ஆனால், அடிப்படையில் அது நீங்கள்தான். எனவே சமூகத்தைக் குறை கூறாதீர்கள். மக்கள் மீது பழி சுமத்தாதீர்கள். அப்படியே உங்களைத்தான் அவர்கள் வெளிப்படுத்துகிறார்கள். உங்களிடம் கொஞ்சமாவது புரிதல் இருந்தால், அந்தச் சிறப்பான காரியத்தைச் செய்வதற்காக அவர்களுக்கு நன்றி சொல்வீர்கள் நீங்கள் யார், எங்கிருக்கிறீர்கள், எப்படி இருக்கிறீர்கள் என்பதையே அவர்களுக்கு வெளிக்காட்டுகிறீர்கள். நீங்கள் பித்துப்பிடித்தவராயின் உங்களுடைய பித்து நிலையை அவர்கள் தெரியப்படுத்துகிறார்கள். நீங்கள் ஒரு புத்தராக இருந்தால் உங்களுடைய புத்தத் தன்மையைக் காண்பிக் கிறார்கள். நீங்கள் தனியாக இருந்து கொண்டு, சரியாபர்த்துக் கொள்வதற்கில்லை, தனியாக இருப்பவரை எதைக் கொண்டுயாருடன் ஒப்பிடுவது. தனித்திருப்பவர் தான் யார் என்று அறிதற்கில்லை.

அருமையான, சோகக்கதை யொன்று.

அது ஒன்றும் வழக்கத்துக்கு மாறான சூழ்நிலை அல்ல. பெரிய, வெற்றிகரமான நிறுவனமொன்றின் தலைவர் ஓர் அழகான செயலாளியை நியமித்திருந்தார். தலைவர், நாற்பது வயதுகளில் இருந்தார், கல்யாணமாகியிருக்க வில்லை. அவரிடம் ஒரு பெரிய அழகான கார், ஆடம்பரமான வீடு இருந்தது. பெண்களின் சிநேகத் துக்குப் பஞ்சமில்லை. ஆனால், தன்னுடைய செயலாளினிதான் தனக்குப் பொருத்தமான இணையாக இருப்பாள் என்று நினைத்தார். அவர் தாம் உணவருந்த அவளை அழைத்தபோதெல்லாம், அவள் மரியாதையாக அந்த அழைப்பை மறுத்துவிடுவாள்.

அவர் கொடுக்க முற்பட்ட வெகுமதிகளையும், ஊதிய உயர்வு களையும் கூட அவள் அதே பணிவுடன் ஏற்க மறுத்தாள். அவள் பணியில் அமர்ந்த தொடக்க நாட்களில் பிகு பண்ணுகிறவள் என்று தான் அவர் கருதிக் கொண்டார். அவர் தம்முடைய பற்பசை, சோப், ஆஃப்டர்–ஷேவ் சமாசாரங்களை மாற்றிப் பார்த்தார், பலனேதும் இல்லை. அவள் அழகானவள் என்பதோடு ஆற்றல் மிக்கவள் என்பதையும் அடுத்துவந்த சில மாதங்களில் அவர் புரிந்துகொண்டார். ஆனால், தனிப்பட்ட முறையில் அவளுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள அவர் மேற்கொண்ட முயற்சிகள் பலிக்கவில்லை. எனவே தான், ஒருநாள் காலை தம்முடைய அலுவலகத்துக்குள் அவர் சென்றபோது அந்தச் செயலாளினி அவரது மேசை மீது பூக்களால் வாழ்த்து தெரிவித்ததும் அவரை அதிர்ச்சிக் குள்ளாக்கியது. அவர் தெளிவற்ற குரலில் நன்றி தெரிவித்துக் கொண்டார். அன்றைய பொழுது பிரமிப்பில் கழிந்தது. ஐந்து மணியானபோது, செயலாளினி அவருடைய அறைக்கு வந்து, அலுவலகக் கோப்புகளில் இருந்து அவரது பிறந்த நாளை தான் தெரிந்து கொண்டதாக ஒப்புக்கொண்டாள், அதைக் கருத்தில் கொள்ளக் கூடாது என்றும் கேட்டுக்கொண்டாள். தாம் அதைக் கவனத்தில் கொள்வதில்லை என்று அவர் சொன்னதும் அவள் நிம்மதியானாள். 'சார், இன்றுமாலை ஒன்பதுமணிக்கு, தாங்கள் என்னுடைய ஃப்ளாட்டுக்கு வந்தால் என்னைப் பொறுத்த வரை அது அதிசயமாகவே இருக்கும். நான் உங்களுக்காக ஒரு ஆச்சரியம் வைத்திருக்கிறேன், அது உங்களுக்கு மகிழ்ச்சியளிப்பதாய் இருக்கும். கடைசியில் தம்மிடம் அவளுக்கு ஈர்ப்பு ஏற்பட்டதை அவள் ஒப்புக் கொண்டதற்காக, அவர் தம்மைத்தாமே பாராட்டிக் கொண்டார். சரியாக ஒன்பது மணிக்கு, கையில் ஒரு சாம்பெய்ன் புட்டியுடன் அவளுடைய ஃப்ளாட்டுக்குச் சென்றார். அவள் வனப்புடன் காட்சியளித்தாள். தம்முடைய படபடக்கும் இதய ஒலியை அவள் கேட்டுவிடக் கூடாதே என்ற அவர் நினைத்துக் கொண்டார். ஸ்காட்ச் விஸ்கியை பரிமாறியபடி, 'எவ்வித சங்கடமும் இல்லாமல் வசதியாக இருந்து கொள்ளுங்கள் என்று அவரிடம் கொஞ்சலாய் கூறினாள் அவள். 'ரொம்பப் புழுக்கமாய் இருந்தால் உடைகளைத் தளர்த்தி விட்டுக் கொள்ளலாம் என்றாள். 'நான் உள்ளே சென்று படுக்கையை சீர் படுத்துகிறேன். நான் உங்களை அழைத்ததும் நீங்களும் உள்ளே வரலாம்' என்று சொன்னாள். 'நான் அவளுக்கு

விரும்பத்தக்கவனாக இருக்க வேண்டும்' என்று அற்பமாய் திருப்திப்பட்டுக் கொண்டார் அவர்.

'தாங்கள் இப்போது உள்ளே வரலாம்' அவள் உள்ளிருந்து குரல் கொடுத்தாள். 'ஆனால், விழுந்து விடாமல் கவனமாய் இருக்க வேண்டும். இங்கே, எல்லா விளக்குகளையும் அணைத்தாயிற்று.' நம்முடைய கதாநாயகர் குறிப்புணர்ந்தவராய், தம்முடைய உடைகளைக் கழற்றிவிட்டு இருட்டறைக்குள் நுழைந்தார். அறைக் கதவைத் தாளிட்டார். அவர் அப்படிச் செய்ததும் அந்த அறைக்குள் வெளிச்சம் வெள்ளமாய் பரவியது. அவருடைய அலுவலகப் பணியாளர்கள் அறையின் மையத்தில் கூடிநின்று, ஹாப்பி பர்த்டே டு யூ சர்' என்று பாடுவதைக் கண்டார் அவர்.

உங்களுக்குள் நீங்கள் எதை மறைத்துக் கொண்டிருக்கிறீர்களோ அதைத்தான் மக்கள் வெளிப்படுத்துகிறார்கள். நீங்கள் ஒரு பைத்தியக்கார விடுதியில் இருப்பதாக எண்ணிக் கொண்டால், நீங்கள் பைத்தியமாக இருக்க வேண்டும். மங்களுடன் தோழமை நிலையில் இருங்கள். இன்னும் அதிக ஆண்களின் பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளுங்கள், இன்னும் நிறைய பெண்களுடன் பழகுங்கள். ஒரு மனித சீவனுடன் உங்களால் மகிழ்ச்சியாயிருக்க முடியவில்லை என்றால், ஒரு மரத்துடனும் நதியுடனும் நீங்கள் மகிழ்ச்சியாயிருப்பது சாத்தியமில்லை. உங்களுக்கு நெருக்கமான ஒரு சீவனை உங்களால் புரிந்து கொள்ள முடியாதென்றால், உங்களை நீங்கள் புரிந்து கொள்வது எப்படி, ஒரு மரத்தை, நதியை மலையை எப்படிப்புரிந்து கொள்வீர்கள். உங்களை ஒரு மலையில் இருந்து பிரித்து வேறாக்கியிருக்கிறது இலட்சோப இலட்சம் ஆண்டுகள். இலட்சக்கணக்கான பிறவிகளுக்கு முன் ஒரு மலையாக நீங்கள் இருந்திருக்கக் கூடும். ஆனால், கருத்து வெளியிடும் முறையை நீங்கள் முற்றாக மறந்தாயிற்று. மலை இனிமேல்தான் மனிதனாக வேண்டும். ஒரு நெடிய பரிணாம வளர்ச்சி (படிப்படியான வளர்ச்சி) தேவைப்படுகிறது. மலைக்கு உங்களுக்கும் இடையே ஓர் அகன்ற படுகுழி இருக்கிறது. உங்கள் பக்கத்தில் இருக்கும். நெருங்கியவர்களுடன் உங்களை இணைத்துக் கொள்ள முடியாவிடில், வேறு எதுவுடன் இணைந்து கொள்வதும் உங்களுக்குச் சாத்தியப்படாது.

முதலில், மனிதர்களுடன் உங்களை இணைத்துக் கொள்ளுங்கள். காலப்போக்கில் மனிதர்களைப் புரிந்துகொள்ளும் அளவிற்கு, உள்ளார்ந்த உரையாடலை, இணக்கத்தை, சீர்த்தன்மையை உங்களால் புரிந்து கொள்ள முடியும்.

## மூன்றாவது கேள்வி:

**அன்பார்ந்த பகவானே, தாங்கள் சொல்வதை நான் கேட்கிறேன். தங்கள் வார்த்தைகளுக்குப் பின்னால் உள்ள இரக்கம், சில சமயங்களில் என்னை அசைத்துவிடுகிறது.**

**ஞானத்தின் பரமசுகத்தை அனுபவிக்க முடியாதபடி என்னுடைய பெண் தன்மை தடுப்பதாய் நான் உணர்கிறேன். ஓர் ஆண் என்ற முறையில் உங்களுடைய சொந்த அனுபவங்கள் காரணமாக, தாங்கள் குறிப்பிடுகிற ஞானிகள் எல்லாரும் ஆண்களாகவே இருக்கிறார்கள். அதன்காரணமாக அத்தகைய உணர்வு எனக்கு ஏற்பட்டிருக்கலாம். ஒரு பெண் என்ற முறையில் நான் அடையக்கூடிய ஞானத்தைத் தயவு செய்து என்னுடன் பகிர்ந்து கொள்ளுங்கள்.**

முதலாவது: பெண்ணாக இருப்பது ஒன்றும் புரிந்து கொள்ளும் திறனுக்குத் தடையாகாது. உண்மையில், என்னைப் புரிந்து கொள்ள உங்களுக்குக் கிடைத்திருக்கும் வாய்ப்பை நீங்கள் கண்டுகொள்ள வில்லை. புரிந்து கொள்வது ஓர் ஆணுக்குத்தான் கடினமாயிருக்கும், காரணம் ஆணின் மனம் எப்போதுமே வலுத்தாக்குதலுக்குத் தயாராயிருப்பது. ஆடவன் ஒருவனால் எளிதில் ஒரு விஞ்ஞானியாகி விட முடியும். ஆனால், ஒரு சமயப்பற்றுடையவனாக இருப்பதற்கு பெருமுயற்சி தேவைப்படும். காரணம் மதத்துக்குத் தேவை வரவேற்கும் பண்பும், இணக்கமான உணர்வு நிலையும். பெண் மனம் உண்மையிலேயே புரிந்து கொள்வதற்குத் தகுதியான மனம் ஆகும். ஓர் ஆண் மனம்கூட பெண்மனமாகிவிட வேண்டும். எனவே அதை ஒரு தடையாகக் கொள்ளாதீர்கள்.

இரண்டாவது: உண்மையிலே அது ஒரு பெரிய பிரச்சினைதான் காரணம் நாம் அதைப் புரிந்து கொள்ளவில்லை. பிரச்சினைகள் இருப்பதற்குக் காரணம் நாம் அவற்றைப் புரிந்து கொள்ளாததுதான். மறுபடியும் மறுபடியும் என்னிடம் கேட்கப்படுகிறது, நான் ஞானம்

பெற்ற ஆண்களைப் பற்றி மட்டுமே பேசுகிறேன், ஆனால் பெண்களைப் பற்றிப் பேசுவதில்லை என்று. ஆண்களில் போலவே பெண்களிலும் ஞானம் பெற்றவர் பலர். கவனியுங்கள். உலகில் ஆண்களின் எண்ணிக்கையும் பெண்களின் எண்ணிக்கையும் கிட்டத்தட்ட ஒரே அளவில்தான் இருந்து கொண்டிருக்கிறது. அப்படி இருந்திருக்கக் கூடாது, ஆனால், இயற்கை சமநிலையைக் கடைப் பிடிக்கிறது. ஒருவருக்குத் தொடர்ந்து ஆண் குழந்தைகளே பிறக்கக்கூடும், பத்து ஆண் குழந்தைகள், மற்றொருவருக்கு ஒரேயொரு ஆண்குழந்தை. இன்னொருவருக்கு ஒரேயொரு பெண் குழந்தை. ஆனால், மொத்தத்தில் ஒரு சமநிலையை உலகம் தொடர்ந்து கடைப்பிடித்து வருகிறது. பெண்கள் அளவுக்கு ஆண் பிள்ளைகளும் இருக்கிறார்கள். நூறு பெண்குழந்தைகள் என்றால் நூற்றுப்பதினைந்து ஆண் குழந்தைகள். ஆனால் ஆண்கள் மணப்பருவத்தை எட்டும்போது பதினைந்து பையன்கள் மறைந்துவிடுகிறார்கள். பெண்பிள்ளைகளை விட ஆண்பிள்ளைகள்தாம் அதிகம் மரித்துப் போகிறார்கள். அதுமட்டுமல்ல போர்க்காலங்களிலும் பல ஆண்கள் மடிகிறார்கள்.

முதலாம் உலகப்போர் உளவியல் நிபுணர்களும், உயிரியலா ருக்கும் ஒரு பிரச்சினையைத் தோற்றுவித்தது. என்ன நடந்தது என்பதையே அவர்களால் நம்ப முடியவில்லை. ஒரு சண்டையில் பல ஆண்கள் செத்துபோகிறார்கள். ஆனால், சண்டைக்குப் பிறகு அதிக ஆண் குழந்தைகள் பிறக்கிறார்கள், பெண் குழந்தைகளோ குறைவான எண்ணிக்கையில் பிறக்கிறார்கள். மறுபடியும் சமநிலை பாதுகாக்கப்படுகிறது. முதலாம் உலகப்போரின் போது அப்படி ஆயிற்று. அதற்கான காரணம் எவ்வகையிலும் தெளிவாகவில்லை. அது ஒரு புதிராகவே இருந்தது. இரண்டாம் உலகப்போரின்போதும் அப்படித்தான் நடந்தது. போருக்குப் பிறகு பையன்களின் எண்ணிக்கை பெரிய அளவில் இருந்தது. இறந்த ஆண்களில் எண்ணிக்கையை ஈடுகட்ட நிறைய ஆண் பிள்ளைகள் பிறந்தனர், பெண்பிள்ளைகள் குறைவாகவே பிறந்தனர், காரணம், முன்பே அதிக எண்ணிக்கையில் பெண் பிள்ளைகள் இருந்ததுதான். உலகப்போர் முடிந்ததும் மறுபடியுமம் சமநிலை ஏற்பட்டது. நூறு பெண்களுக்கு நூற்றுப் பதினைந்து பையன்கள் – காரணம் பதினைந்து பையன்கள் சாகப் போகிறவர்கள்.

பையன்கள் பெண் பிள்ளைகளைவிட பலம் குறைந்தவர்களாக இருக்கின்றனர். அதனால்தான் உலகில் கிழவர்களைவிட கிழவிகள் அதிக எண்ணிக்கையில் இருப்பது. மனைவி இறந்ததும் மறுமணம் செய்யாத ஆண்களை (widower)விட விதவைகளின் எண்ணிக்கை அதிகம். பெண்ணின் சராசரி வயது எண்பது என்றால், ஆணின் வயது எழுபத்தியைந்து. ஐந்து ஆண்டுகள் அதிகம். ஆனால் பெண் கள் ஏன் ஆண்களைவிட ஐந்து ஆண்டுகள் மிகுதியாக வாழ்கிறார் கள்? ஆண்களைவிட ஏற்கும் திறன் பெண்களிடம் கூடுதலா யிருக்கிறது. ஆண் முதலில் இறந்தால் பெண் அழுது புலம்பி, துன்புறுகிறாள், ஆனால், உண்மையை அவளால் ஏற்றுக்கொள்ள முடிகிறது. அவள் சமநிலையை மீட்டுப் பெறுகிறாள். ஆனால், பெண் இறந்து விட்டால், தன்னுடைய சமநிலையை ஆண் மீட்டுப்பெற முடிவதில்லை. சமநிலையை மீண்டும் பெறுவதற்கு அவன் அறிந்த ஒரே வழி மறுமணம் செய்து கொள்வதுதான், மற்றொரு பெண்ணைக் கண்டடைவது. அவனால் தனியே வாழமுடியாது. அவன் பெண்ணைவிட மிகவும் வக்கற்றவனாகவே இருக்கிறான்.

பொதுவாக, உலகெங்கிலும் திருமணம் என்பது ஏதோ ஒரு விதத்தில் இயற்கைக்குப் புறம்பாகவே இருக்கிறது. எங்குமே இயற்கைக்குப் புறம்பாக – இயற்கைக்கு எதிராக ஓர் அமைப்பை மனிதன் சுமத்தியிருக்கிறான். பெண்ணின் வயது இருபது என்றால் அவளை மணக்கப் போகிற ஆணின் வயது இருபத்து ஐந்து, இருப்த்து ஆறாக இருக்கவேண்டும் என்றே நாம் நினைக்கிறோம். அது எதிரிடையாகது renerse) இருந்திருக்க வேண்டும். அக்காரணம் பெண்கள் ஐந்து ஆடுகள் கூடுதலாக வாழவிருக்கிறார்கள். எனவே பெண்ணின் மணவயது இருபத்து ஐந்து என்றால் ஆணின் வயது இருபதாக இருக்க வேண்டும். ஒவ்வோர் ஆணும் தன்னைவிட ஐந்து வயது மூத்த பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும். அப்போது சமநிலை குறைவற்றதாயிருக்கும் அப்போது ஓர் ஆறுமாத இடைவெளியில் தான் அவர்களுடைய இறப்பு நிகழும், உலகில் துயருறும் நிலை குறையும்.

ஆனால், அது ஏன் நடக்கவில்லை? காரணம், திருமணம் ஓர் இயல்பான செயல் அல்ல. இல்லையேல் இயற்கை அந்த வழியில் அதைக் கையாண்டிருக்கும். அது மனிதனால் உருவாக்கப்பட்ட அமைப்பு. மேலும் தன்னைவிட வயதிலும், அனுபவத்திலும் அறிவிலும்

மேம்பட்ட பெண்ணை மணந்து கொண்டால் அவன் கொஞ்சம் பலவீனமாகவே உணர்வான். அவன் ஆணுக்கே உரிய அகந்தை வெளியைப் பாதுகாத்துக் கொள்ள விரும்புகிறான். தன்னைவிட உயரமான பெண்ணை மணக்க எந்தவோர் ஆணும் சம்மதிக்க மாட்டான். சுத்த முட்டாள்தனம். அதிலென்ன முக்கியத்துவம்? உங்களைவிட உயரமான பெண்ணை ஏன் மணந்து கொள்ள முடியாது. ஆனால், உயரமான பெண்ணுடன் பழகும்போது ஆணின் அகந்தை ஊறுபட்ட உணர்வை அடைகிறது. பெண்ணின் உடல் இதனை அறிந்திருக்குமோ என்னவோ, அவள் அதிக உயரம் வளர்வதில்லை. தான் கொஞ்சம் உயரக்குறைவாக இல்லாவிட்டால், தனக்கேற்ற ஆண் கிடைக்கமாட்டான் என்பதை அவள் அறிந்திருக்க வேண்டும். தகுதியிருந்தால் மட்டுமே தாக்குப்பிடிக்க முடியும் என்கிற நிலை. அதிக உயரமில்லாமல் இருந்தால்தான் பொருத்தமாயிருக்கும். ரொம்ப உயரமான ஒரு பெண்ணை – ஏழடி உயரம் உள்ள ஒரு பெண்ணைப் பற்றி எண்ணிப் பாருங்கள், அவளால் ஒரு கணவனைக் கண்டடைய முடியாது. அவள் ஒரு கணவனில்லாமல் தான் இருக்கும் படியாகும். அவளுக்குக் குழந்தைகள் இருக்காது, அவள் அவ்விதமாய் மறைந்துவிடுவாள். ஐந்தடி ஐந்து அங்குலம் உயரம் உள்ள ஒரு பெண்ணுக்கு எளிதில் கணவன் கிடைப்பான். அவள் தொடர்ந்து வாழ்வாள், அவளுக்குக் கணவன், குழந்தைகள் எல்லாம் உண்டு. உயரம் அதிகமான பெண்கள் கொஞ்சம் கொஞ்சமாய் தொடர்ந்து வாழும் தகுதியை இழந்து, மறைகிறார்கள் என்பதே உண்மை. அப்படித்தான் அவலட்சணமான பெண்களும் தாக்குப்பிடிக்க முடியாமல் போவதும். தொடர்ந்து வாழமுடிகிறவர்களுக்கே உலகம் துணை புரிகிறது, தொடர்ந்து வாழ முடியாதவர்கள் மறைகிறார்கள். ஆண் உயரமாகவும், வலிமையோடும் இருக்க வேண்டியிருக்கிறது, அவன் ஒவ்வொரு வழியிலும் பெண்ணைவிட மேம்பட்டிருக்க விரும்புகிறான்.

மேற்கில் வாத்ஸ்யாயனிரின் காமசூத்ரம் பற்றிய பரிச்சயம் ஏற்படும் வரை, எந்தப் பெண்ணும் ஆண்மீது இருந்து கலவி புரிந்ததாகக் கேள்விப்பட்டதில்லை. அந்தப் புணர்ச்சி நிலையை மேற்கில் உள்ளவர்கள் அறிந்திருக்கவில்லை. கிழக்கில் பெண்ணின் மீதிருந்து ஆண் புணர்வதை, 'மிஷனரி தோற்றநிலை' (inssionary posture) என்பார்கள். காரணம் கிழக்கில் உள்ளவர்கள் முதல்

முறையாய் கிறிஸ்தவ மிஷனரி மூலம் அதை அறிந்திருந்தார்கள். எல்லா செயல்முறையிலும், கலவி உட்பட ஆணுக்கு மேல் நிலையில் இருந்தாகவேண்டும். அவனுக்கு அளவுக்கு மீறிய உயரம், மிகுதியான ஆயுள், மிகுதியான கல்வி வேண்டும். பி. எச். டி. வாங்கிய ஒரு பெண்ணை நீங்கள் மணப்பதாயிருந்து நீங்கள் பி. எச். டி.யாக இல்லாமல் இருந்தால் கொஞ்சம் அசவுகர்ய உணர்வு ஏற்படும். நீங்கள் குறைந்த பட்சம் ஒரு டி.லிட்டாவது வாங்கியிருக்க வேண்டும். அந்த நிலையில் மட்டுமே உங்களால் ஒரு பி.எச்.டி. பெண்ணை மணக்க முடியும். இல்லையேல், ஒரு பெண் ஆணைவிட ஐந்து வயது மூத்தவளாக இருக்க வேண்டும். இது ஒரு குறையற்ற ஏற்பாடாகவே தெரிகிறது, காரணம், பெண் மிகுந்த அனுபவம் உடையவளாய் இருக்க வேண்டியுள்ளது. அவள் தாயாகப் போகிறாள் தன் குழந்தைகளுக்கு மட்டுமல்ல தன்னுடைய கணவனுக்கும். ஓர் ஆண் குழந்தையாகவே இருக்கிறான். எந்த வயதில் இருந்தாலும் அவன் மறுபடியும் குழந்தையாகவே பெரிதும் விரும்புகிறான். அவன் ஓரளவு இளைஞனாகவே இருக்கிறான்.

தற்போது ஞானம் பெறுவதிலும் அதுவேதான் நடக்கிறது – இயற்கை சரி நுட்ப சமநிலையை வைத்திருக்கிறது. ஆனால், பல ஞானம் பெற்ற பெண்கள் பற்றி நாம் கேள்விப்பட்டதில்லை – அது உண்மை – காரணம் சமூகம் ஆண்களுடையதாயிருக்கிறது. அவர்கள் பெண்களைப் பற்றி அதிகம் பதிவு செய்திருக்கவில்லை. அவர்கள் புத்தரைப் பற்றி அதிகம் பதிவு செய்திருக்கிறார்கள், அவர்கள் சஹஜோ பற்றி மிகுதியான அளவில் பதிவு செய்யவில்லை. அவர்கள் முகமது பற்றி அதிகம் பதிவு செய்திருக்கிறார்கள், ரபியா பற்றி மிகுதியாய் பதிவு செய்யவில்லை. ஆண்கள் ரொம்பவும் முக்கியமானவர்கள் என்ற முறையில் அவர்கள் ஆவணப்படுத்தினர். இந்தியாவில் அது நடந்தது. ஒரு ஜைனத் துறவி, ஜைனமதகுரு ஆணல்ல. மல்லிபாய் என்கிற பெண். ஆனால் ஜைனமத முக்கியஸ்தர்கள் அவளுடைய பெயரை மாற்றிவிட்டனர். அவர்கள் அவளை மல்லிநாத் என்று அழைத்தனர், மல்லிபாய் அல்ல. பாய் என்பது அவள் ஒரு பெண் என்பதைச் சுட்டிக்காட்டுகிறது. 'நாத்' என்பது அவள் ஒரு பெண் என்பதை வெளிக்காட்டுகிறது.

ஸ்வேதாம்பரர்கள், திகம்பரர்கள் என்று ஜைனர்களில் இரண்டு பிரிவுகள். அவள் ஒரு பெண் அல்ல, மல்லிநாத் என்று திகம்பரர்கள்

சொல்கிறார்கள். அவளுடைய பெயரைக்கூட அவர்கள் மாற்றிவிட்டனர். ஒரு பெண் தீர்த்தங்காா் ஆவது – மிகப்பெரிய குருவாய் விளங்குவது ஆணின் அகந்தைக்கு எதிரானதாய் தெரிகிறது. எனவேதான் அவர்கள் பெயரை மாற்றியது.

வரலாறு ஆண்களால் பதிவு செய்யப்பட்டது, பெண்கள் செயல்களைப் பதிவு செய்வதில் அக்கறை காட்டவில்லை. அவர்கள் அனுபவிப்பதிலும், வாழ்வதிலுமே அக்கறை கொண்டிருந்தனர். அது ஒரு விசயம். இரண்டாவது, பெண் வரவேற்கும் பண்புடையவள் என்பதால் ஒரு சீடராவது அவளுக்கு எளிதாயிருந்தது. ஆணுக்கோ சீடராவது கடினம், ஏனெனில் அவன் சரணடைய வேண்டியிருக்கும்; அது தான் தொல்லை. அவனானால் எதிர்த்து நிற்க முடியும், சரணடைய முடியாது. எனவே, சீடப்பருவம் என்று வருகிறபோது பெண்கள் முழுமையானவர்களாய் இருந்தனர். ஆனால், நீங்கள் குருவாக வரவேண்டும் என்கிற போது அதற்கு எதிரிடையானதுதான் நடக்கிறது.

ஓர் ஆண் எளிதில் குருவாகிவிட முடியும். ஒரு பெண் குருவாக வருவதில் சிரமம் இருக்கிறது, காரணம், குருவாக வருவதற்கு உங்களிடம் உண்மையிலேயே போர்க்குணம் இருந்தாகவேண்டும். நீங்கள் வெளியே சென்று, மற்றவர்களுடைய அமைப்புகளை அழிக்க வேண்டியிருக்கும். நீங்கள் கிட்டத்தட்ட வன்முறையில் இறங்கும்படி இருக்கும். சமயத்தில் உங்கள் சீடர்களை நீங்கள் கொல்லும்படி ஆகலாம். அவர்களை நீங்கள் மூளைச்சலவை செய்யவேண்டியிருக்கும். எனவேதான் ஒரு பெண் குருவாவதில் சிரமம் இருக்கிறது. ஆணுக்கு சீடனாவதில் சிரமம் இருக்கும். ஆனால், அங்கேயும் சமநிலை ஏற்படுத்தப்பட்டுவிடுகிறது. பெண்கள் எளிதில் சீடராகி விடுகிறார்கள், சீடர்களாவதன் மூலம் ஞானம் பெற்று விடுகிறார்கள், ஆனால் அவர்கள் குருமார்களாகவதில்லை. ஓர் ஆண் சீடனாவதில் சிரமம் இருகிறது. ஆனால் சீடனாயிருந்து ஞானம் பெற்றதும், குருவாவது அவனுக்கு எளிது, மிக எளிது. அதனால்தான் நீங்கள் ஒருபோதும் கேள்விப்படுவதில்லை... ஆனால் அதைப் பற்றிய கவலை வேண்டாம்.

ஒரு பெண் என்கிற முறையில் உங்களுடைய சொந்த அனுபவங்கள் இருக்கின்றன. இறையானுபவத்துக்கும் ஆணா

பெண்ணா என்பதற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. இறையானுபவம் இரட்டைத் தன்மை (duality) கடந்தது. எனவே, ஞானம் பெற்ற நிலையில் அதற்கு மேலும் ஆண் பெண் என்கிற பாகுபாடு கிடையாது. அந்தக் கணத்தில் அத்தனை இரட்டைத் தன்மைகளையும் நீங்கள் கடந்து விடுகிறீர்கள். நீங்கள் ஒரு முழுமையான வட்டமா கிறீர்கள். பிரிப்பாக எதுவும் இருப்பதில்லை. எனவே நான் உங்களிடம் பேசும் போது, ஓர் ஆண் என்கிற முறையில் ஞானத்தைப் பற்றிப் பேசுவதில்லை. ஓர் ஆண் என்கிற முறையில் யாருமே ஞானத்தைப் பற்றிப் பேச முடியாது காரணம் ஞானம் பாலினம் சார்ந்ததல்ல. இந்தியாவில் இறுதியான பரம்பொருள் ஆணாகவும் இல்லை. பெண்ணாகவும் இல்லை, அது நடுநிலையாயிருக்கிறது.

உங்களுக்கு இடர்ப்பாடாய் தெரியலாம்: கடவுள் மேற்கத்திய அறிவில் ஆணாக இருக்கிறார். அங்கே கடவுளைக் குறிக்க அவள் (she) என்ற சொல்லை யாரும் பயன்படுத்துவதில்லை. நீங்கள் அவர் (he) என்பதையே பயன்படுத்துவீர்கள். எனக்கென்னமோ 'அவள்' என்பதே சிறப்பாக இருக்கும் என்றும் படுகிறது. 'அவர்' என்ற சொல்லை போதும் போதும் என்கிற அளவிற்குப் பயன்படுத்தியாயிற்று, தற்போது 'அவள்' என்பதே சிறப்பாய் தெரிகிறது. 'She' என்ற சொல் 'He' ஐயும் உட்கொண்டது. 'He' என்ற சொல் 'She'ஐ உட்படுத்தி யிருக்கவில்லை. நல்லது? அது கடவுளை சற்றுப் பெரிதாக்குகிறது. 'He' யைவிட 'She' கொஞ்சம் பெரிது.

ஆனால் மேற்கத்திய அறிவில் கடவுள் 'He'யாக இருக்கிறார். மேற்கத்திய மொழிகளில் இரண்டு பாலினங்கள் – ஆண், பெண் என்று மட்டுமே உள்ளன. இந்திய மொழிகளில் குறிப்பாக சம்ஸ் கிருதத்தில் மூன்று பாலினங்கள் உள்ளன. ஆண், பெண், நடுநிலை யானது என்று. கடவுள் நடுநிலையானவர். அவர் ஆணும் அல்ல, பெண்ணும் அல்ல, நடு நிலையானவர். அவர் 'அது'வாக இருக்கிறார். அங்கே தனித்தன்மை மறைகிறது. அது சுட்டிக் காட்டக்கூடிய எந்தத் தன்மையும் அற்றதாய், வெறும் ஆற்றலாயிருக்கிறது. எனவே இதுவா அதுவா என்கிற கவலை வேண்டாம்.

'ஒரு பெண் என்கிற தகுதியில் எனக்கான ஞானத்தை, தங்களால் முடிந்த வகையில் தயவு செய்து என்னுடன் பகிர்ந்து கொள்ளுங்கள்.'

ஒரு 'பெண் என்கிற முறையில் உங்களைப் பற்றிச் சிந்திப்பதை விடுங்கள். இல்லையேல் ஒரு பெண்ணுக்குரிய மனதையே பற்றிக் கொண்டிருப்பீர்கள். எல்லா மனங்களும் விடப்பட வேண்டியது. ஆழ்ந்த தியானத்தில் நீங்கள் இரண்டுமற்றதாய் (neither) இருக்கிறீர்கள், ஆழ்ந்த காதலிலும் அப்படித்தான். நீங்கள் அகைக் கவனித்திருக்கிறீர்களா?

நீங்கள் ஓர் ஆண் அல்லது பெண் என்கிற போது உண்மையிலேயே முழுமையாய், மனக்கிளர்ச்சியூட்டுவதாய் இருக்கிறது. நீங்கள் யார் என்பதே உங்களுக்கு மறந்து விடும். அது மனதை மலரச் செய்யும். ஒரு குறிப்பிட்ட கணத்தில் நிகழும் உச்சகட்டப் பரவசத்தில் ஒருமை (oneness) ஏற்படுகிறது. தந்த்ராவின் ஒட்டுமொத்த முயற்சியும் அதுவேதான். உடலுறவை ஒருமைக்குரிய அனுபவமாக மாற்றுவது – காரணம் அதுவே உங்களுடைய ஒருமைக்கான முதல் அனுபவமா யிருக்கும். ஒருமையின் இறுதி அனுபவம் ஞானம் பெறுதல். உறவு கொள்ளும்போது நீங்கள் மறைந்துவிடுகிறீர்கள். ஆண் பெண்ணைப் போலாகிறாள், பெண் ஆணைப்போலாகிறாள், பல நேரங்களில் தங்களுடைய பாத்திரத்தை (role) அவர்கள் மாற்றிக் கொள்கிறார்கள். இருவருமே ஒருவர் பிடியில் இருந்து ஒருவர் நழுவிச் செல்லும் நேரம் வருகிறது. அப்போது இரண்டுமல்லாத ஒரு சக்தி வட்டம் தோன்றும். அது உங்கள் முதல் அனுபவமாயிருக்கட்டும். ஞானம் பெறுவதில் உடலுறவு அடிப்படை அனுபவம், முதலில் காணும் கணநேரக்காட்சி அது. பிறகு ஒரு நாள் நீங்களும் பரம் பொருளும் உச்சகட்ட பரவசத்துடன் எதிர் கொள்வீர்கள். அது சமாதிநிலை. அந்நிலையில் நீங்கள் ஆணாகவும் இருப்பதில்லை, பெண்ணாகவும் இருப்பதில்லை. எனவே, தொடக்கத்தில் இருந்தே பிரித்தலை (division) விட்டு விடுங்கள்.

மேற்கத்திய பிரக்ஞையில் பிரிப்பு முழுமையாய் இருக்கிறது, காரணம் பெண் எதிர்த்து நிற்க வேண்டிய அளவுக்கு பெண்ணை ஆண் ஒடுக்கி, அடக்கி வைத்திருக்கிறான். தான் பெண் என்கிற பிரக்ஞை கொண்டிருந்தால் தான் அவளால் எதிர்த்து நிற்கமுடியும் என்கிற நிலை. நீங்கள் மேற்கில் இருந்து என்னிடம் வருகிறீர்கள் என்கிறபோது அது உங்களுக்குக் கடினமாகத்தான் இருக்கும். ஆனால், நீங்கள் அதைப் புரிந்துகொண்டு ஆண்/பெண் என்கிற பிரிப்பைக் கைவிட வேண்டும். சீவாத்மாக்களாக இருங்கள்.

உங்களுடைய உண்மையான இருப்புணர்வில் உங்களை இருக்கச் செய்வதே என்னுடைய முழுமையான முயற்சியாய் இருக்கிறது.

**கடைசிக் கேள்வி:**

**உங்களை வந்தடைவதில் நான் எந்தத் தேர்வும் இல்லாமல் இருப்பதாக உணர்கிறேன். நம்முடைய வாழ்க்கையில் நாம் செயல்களைத் தெரிவு செய்யும் நிலை உண்மையிலேயே இருக்கிறதா என்ன?**

சாதாரணமாக இல்லைதான். சாதாரணமாக, ஒரு 'ரோபோ' (robot) வைப்போல் எந்திரகதியில் நீங்கள் இயங்கிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் முழுமையான உணர்வோடு இருந்தாலன்றி உங்களால் தேர்வு செய்ய முடியாது. நீங்கள் தெரிநிலையோடு இருந்தால்தான் தேர்வு செய்யமுடியும். காரணம் – அந்நிலையில் தான் எதைச் செய்யலாம், எதைச் செய்யக்கூடாது என்பதை உங்களால் தீர்மானிக்க முடியும். சாதாரணமாக ஒரு குடிபோதை நிலையிலேயே நீங்கள் இருக்கிறீர்கள். தூக்கத்தில் நடப்பவராக நீங்கள் இருக்கிறீர்கள்.

சின்னதாய் சிலகதைகள் சொல்கிறேன் உங்களுக்கு:

ஒரு மதகுரு திருடுப்போன தம்முடைய சைக்கிள் பற்றித் தமது நண்பரிடம் புலம்பிக் கொண்டிருந்தார்

நண்பர் சொன்னார், 'நல்லது, வருகிற சனிக்கிழமை தேவாலயக் கூட்டத்தில் நீங்கள் ஏன் 'பத்து கட்டளைகள்' பற்றிப் பேசக்கூடாது? 'நீங்கள் திருடக்கூடாது' என்கிற கட்டளையைக் குறிப்பிடுகிறபோது, கூட்டத்தின் பக்கம் நிலைத்த பார்வையாய் பாருங்கள், கூட்டத்தில் திருடன் இருந்தால் அவனுடைய முகமே அவனைக் காட்டிக் கொழுத்து விடும்' என்று.

அதற்கடுத்தவாரம் அதே நண்பர் மதகுரு சைக்கிளில் வருவதைக் கண்டு அவரை நிறுத்தினார், 'உங்களுடைய சைக்கிள் திரும்பக் கிடைச்சிட்டாப்பல இருக்கே. என்னுடைய யோசனை பயன்பட்டதா?' என்று கேட்டார்.

'நல்லது. அவ்வளவு சரியா சொல்றதுக்கில்லை நான் பத்து கட்டளைகள் பற்றிப்பேசத் தொடங்கினேன். ஆனால், 'நீங்கள் பிறன் மனைப்புணர்ச்சி (adultery)யில் ஈடுபடக்கூடாது' என்கிற வாசகத்

தைக் கூறும்போது, நான் சைக்கிளை எங்கே விட்டேன் என்று ஞாபகத்துக்கு வந்தது.'

மற்றொரு கதை.

குறிப்பிடத்தக்க தொழிலதிபர் ஒருவர் மருத்துவரிடம் சென்றார், 'டாக்டர் என்னுடைய மகனைப்பற்றித் தங்களிடம் ஆலோசனை கேட்க விரும்புகிறேன். அவனுக்கு மணல்வாரி அம்மை (measles) வந்திருக்கு என்று நம்புகிறேன்' என்றார்.

'இப்போ எங்கே பார்த்தாலும் அதிகமா இருக்கு. எந்தக் குடும்பமும் அதில் இருந்து பத்திரமா இருக்கறதா தெரியலை' என்று சொன்னார் மருத்துவர்.

'ஆனால் டாக்டர், ஒரு பணிப்பெண்ணை முத்தமிட்டதால் தனக்கு அது வந்து விட்டதாக அவன் சொல்கிறான். எனக்கும் அந்தநோய் அபாயம் ஏற்பட்டிருக்கு மோன்னு பயமா இருக்கு. இதில் மோசம் என்னன்னா ஒவ்வொரு இரவும் என்னுடைய மனைவியை நான் முத்தமிடுகிறேன், அதனால் அவளுக்கும் அந்த ஆபத்து இருக்கக்கூடும்'.

'கடவுளே! என்னை மன்னியுங்கள். நான் உடனேபோய் என்னுடைய தொண்டையைப் பரிசோதித்துக் கொள்ளவேண்டும்'.

புரிந்ததா?

எல்லாருமே ஓர் உணர்வற்ற வட்டத்துக்குள் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள், மக்கள் தங்களுடைய நோய்களை, உணர்வற்ற நிலையை மற்றவர்களுடன் பரிமாறிக் கொள்கிறார்கள்.

சாதாரணமாக ஒரு தூக்க நிலையில்தான் நீங்கள் வாழ்கிறீர்கள். உறக்கத்தில் இருக்கும்போது உங்களால் தீர்மானிக்க முடியாது. எப்படித் தீர்மானிக்க முடியும்?

புத்தரிடம் ஒருவர் வந்து, 'நான் மனிதகுலத்துக்கு சேவை பண்ண விரும்புகிறேன்' என்று சொன்னார். அவர் சிறந்த மனித நேயராக இருக்கவேண்டும். புத்தர் அவரைப் பார்த்தபோது புத்தருடைய கண்களில் நீர்வடிந்ததாகச் சொல்லப்படுகிறது. அது விசித்திரமான ஒன்றுதான். புத்தர் அழுகிறாரா? எதற்காக? அந்த மனிதரும் அசவுகர்ய உணர்வோடு காணப்பட்டார். அவர் கேட்டார். 'தாங்கள் ஏன் அழுகிறீர்கள்? நான் ஏதாவது தவறாக சொல்லிவிட்டேனா?' என்று. 'புத்தர் சொன்னார், 'இல்லை. எதுவும்

தவறாகி விடவில்லை. ஆனால், மனிதகுலத்துக்கு நீங்கள் எப்படி சேவை செய்வீர்கள்? – நீங்கள் இன்னமும் அதற்குத்தயாராக வில்லை. நீங்கள் ஆழ்ந்த உறக்கத்தில் இருப்பதை நான் காண்கிறேன். அதனால்தான் நான் அழுகிறேன். நீங்கள் மனித குலத்துக்கு சேவை செய்ய விரும்புகிறீர்களா? முதலில் நீங்கள் கவனமும், விழிப்புணர்வும் கொள்ள வேண்டும்.' என்று.

அவள் ஒரு அழகான செயலாளினி ஆனால், ஒரு நாள் அவள் வேலைக்குத் தாமதமாக வரவும், அவளுடைய முதலாளி உண்மையிலேயே நிதானத்தை இழந்து விட்டார். 'நீ மறுபடியும் தாமதமாக வந்திருக்கிறாய். உனக்காக நான் வாங்கிக் கொடுத்த அலாரம் கடிகாரத்தை நீ ஏன் பயன்படுத்தக் கூடாது?'

'ஆனா... அதை நான் பயன்படுத்துகிறேனே. ஒவ்வோர் இரவும்' அவள் அழகாக உதட்டைப் பிதுக்கினாள்.

'நல்லது... அது ஒலித்ததும் நீ ஏன் விழித்துக் கொள்ளக் கூடாது? முதலாளி கேட்டார்.

'ஆனா... அது நான் தூங்கிட்டிருக்கும் போதே அடிச்சி ஓய்ஞ்சிருதே' என்றாள் அவள்.

அப்படித்தான் நடக்கிறது. நீங்கள் உறக்கத்தில் இருக்கிறீர்கள். நீங்கள் உறக்கத்தில் இருக்கும் போது அலாரம் கடிகாரம் கூட உங்களுக்கு உதவ முடியாது. சில சமயம் நீங்கள் தூங்கிக் கொண்டி ருக்கும் போது அலாரம் அடிக்கும். நீங்கள் ஏதோ கனவு கண்டபடி இருப்பீர்கள், கனவில் நீங்கள் ஒரு கோயிலில் இருப்பது போலவும் கோயில் மணிகள் ஒலிப்பது போலவும் இருக்கும். ஆனாலும் உங்கள் தூக்கத்தை நீங்கள் தொடர்வீர்கள். அலார ஒலியைத் தவிர்க்கவே அத்தகைய கனவை நீங்கள் கண்டிருக்கக் கூடும். அதுதான் தொடர்ந்து நடக்கிறது. நீங்கள் நான் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால், அதைச் சுற்றி ஒரு கனவை நீங்கள் உருவாக்குகிறீர்கள். நான் சொல்வதை நீங்கள் கேட்பதாயின், நீங்கள் விழித்திருக்க வேண்டுமே. பிரச்சினை இதுதான், நான் சொல்வதை நீங்கள் கவனமாய் கேட்கிறீர்களா? நான் சொல்வதை வைத்து ஏதோ ஒரு கனவை உருவாக்கிக் கொண்டிருக்கிறீர்களா?

நீங்கள் கனவை உருவாக்குகிறீர்கள். ஞானம் பெறுதல் தொடர்பாகவும் ஒரு கனவை நீங்கள் உருவாக்கிக் கொள்ள முடியும். நீங்கள் என்னைத் தவறவிட்டீர்கள். மக்கள் தொடர்ந்து தவற விடுகிறார்கள். செய்தியை உங்களுக்கேற்றவாறு நீங்கள் விளக்கிக் கொள்கிறீர்கள், அது தான் தொல்லை.

நான் கேட்டறிந்தது. ஒரு பெரிய நிறுவனத்தின் உரிமையாளர் ஒரு குறிப்பு வாக்கிய அட்டை (sign)யை வாங்கினார். அதில், 'இப்போதே செய்யுங்கள்' என்கிற வாசகம் பொறித்திருந்தது. அதைப்பார்க்கிற பணியாளர்கள் 'விரைவாக செயல்படுவார்கள்' என்ற நம்பிக்கையுடன், அந்ப் பலகையைத் தொங்கிவிட்டார். சில நாட்களுக்குப் பிறகு ஒரு நண்பர் அவரிடம் அந்த அறிவிப்புப் பலன் கொடுத்ததா என்று கேட்டார். 'நல்லது. ஆனா நான் நம்பின மாதிரி அல்ல. காசாளர் 10,000 டாலர் பணத்துடன் காணாமல் போய்விட்டார். இப்போதே செய்யுங்கள் – தலைமைக் கணக்காளர் என்னுடைய செக்ரட்ரியை இழுத்துக் கொண்டு ஓடிவிட்டார். இப்போதே செய்யுங்கள் – மூன்று எழுத்தர்கள் சம்பள உயர்வு கேட்கிறார்கள், 'டைப்' செய்கிற பெண் 'டைப்ரைட்டரை' தூக்கி சன்னல் வழியே எறிந்துவிட்டாள். இப்போதே செய்யுங்கள் – ஆஃபீஸ் பையன் என்னுடைய காபியில்.... இப்போ... ஆ.... என் காபியில் விஷம் கலந்து விட்டான்... ஆ...'

நீங்கள் உறக்க நிலையிலேயே கவனித்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்களுடைய சொந்த வழியில் நீங்கள் அதை விளக்கிக் கொள்ளக் கூடும். எனவே, நான் சொல்வதைக் கேட்பதாயின் பொருளை விளக்கிக் கொண்டிருக்காதீர்கள்.

அன்றொரு நாள் இரவில், புதிதாய் ஓர் இளம் சந்நியாசி வந்தார். நான் அவரிடம் சொன்னேன், 'சில நாட்கள் இங்கே இருங்கள்' என்று. 'ஆனால்... இரண்டு மூணு நாளில் நான் போகும்படி இருக்கும்' என்றார் அவர். நான் சொன்னேன், 'ஆனால்... அது சரியல்ல. நிறைய செய்தாக வேண்டும். நீங்களோ இப்போது தான் வந்திருக்கிறீர்கள். இதுவரை என்னிடம் நீங்கள் தொடர்பு கொண்டதே யில்லை. எனவே, முகாமில் கலந்து கொள்ளும் வரையாவது இங்கே இருங்கள். கூடுதலாய் சில நாட்கள் என்று... அவர் சொன்னார், 'நான் யோசிக்கிறேன்.' அப்போது நான் அவரிடம் சொன்னேன்,

'யோசிக்க எதுவும் இல்லை. நீங்கள் போகலாம். காரணம், நீங்கள் யோசிக்கத் தொடங்கினால் அது தவறாகி விடும். சந்நியாசத்தின் முக்கியக் கருத்தே, நீங்கள் எதையும் யோசிக்காமல் நான் சொல்வதைக் கேட்கவேண்டும் என்பதுதான். நான் முக்கியமான ஒன்றை உங்களுக்குச் சொல்வேன், அது உங்களுடைய சொந்த அறிவைக் காட்டிலும் முக்கியமானதாய் இருக்கும். தற்போது நான் சொல்வதற்கும் உங்களுடைய அறிவுக்கும் இடையே மோதல் நிகழுமானால், நீங்கள் என்னுடைய பேச்சைக் கேட்டுக் கொண்டு, உங்களுடைய அறிவை விடவேண்டியிருக்கும். அதுதான் அபாயம். உங்களுடைய கையை நான் பற்றிக் கொள்ளும்படியாய் என்னிடம் நீங்கள் கொடுக்கவில்லை? என்று.

வழக்கமாக, ஒவ்வொன்றும் தானாகவே உங்களுக்கு நிகழ்கிறது, நீங்கள் எதையும் செய்யவில்லை.

'நான் உங்களுக்குள் வந்து சேர வாய்ப்பில்லை என்றே படுகிறது'.

அது முற்றிலும் உண்மை. நீங்கள் ஏதோ ஒரு வழியில் இழுபட்டு கொண்டிருக்கிறீர்கள். இங்கே வருகிற நண்பர் ஒருவர் உங்களுக்குச் சொல்லியிருப்பார் அல்லது ஒரு புத்தகக் கடையில் என்னுடைய புத்தகத்தை நீங்கள் பார்த்திருப்பீர்கள்.

ஒரு சந்நியாசி வந்தார், நான் அவரிடம் 'நீங்கள் எப்படி இங்கே என்னை பார்க்க வந்தீர்கள்? உங்களுக்கு முதற்கண் ஆர்வம் ஏற்பட்டது எப்படி?' என்று கேட்டேன். அவர் சொன்னார், 'நான் கோவா கடற்கரையில் அமர்ந்திருந்தேன். யாரோ மணலில் விட்டுச் சென்றிருந்த 'சந்நியாசம்' இதழைப் பார்த்தேன். அதைப் படித்தேன். அப்படித்தான் இங்கே வந்தது... தற்செயலாய்..

தற்செயலாகத் தான் நீங்கள் என்னிடம் வந்து சேருகிறீர்கள். ஆனால் என்னோடு கவனமும், விழிப்புணர்வு கொண்டு இருக்கக் கூடிய வாயப்பு உங்களுக்குக் கிடைத்திருக்கிறது. நீங்கள் தற்செயலாக என்னிடம் வந்திருந்தாலும் அது விரும்பத்தக்கதே. ஆனால், தற்செயலாக இங்கே இருக்காதீர்கள். எதிர்பாராத வகையில் இங்கே தங்கிவிட்டதாய் இருக்கக் கூடாது. 'தற்செயல் தன்மை'யை விட்டுவிடுங்கள். தற்போது தங்கள் விழிப்புணர்வுக்குப் பொறுப்பேற்பவராய் இருங்கள். இல்லையேல் யாரேனும் உங்களை

மறுபடியும் தற்செயலாக வேறோர் இடத்துக்குக் கூட்டிச் சென்று விடுவார். நீங்கள் மறுபடியும் இழுபட்டுச் செல்வீர்கள். வலிந்து இழுபட்டு வந்தவர்களை நம்ப முடியாது. யாரோ ஒருவர் நேபாளத்துக்குப் போய்க் கொண்டிருப்பார். 'நாம் ஏன் நேபாளத்துக்குப் போகக்கூடாது?' உங்களுக்கும் அந்த எண்ணம் தோன்றும். அங்கே சந்நியாசத்துக்கு மாறாக ஒரு பெண் சிநேகம் கிடைக்கும். ஆக, என்ன செய்வது? உங்களுடைய சந்நியாசத்தை நீங்கள் விடும்படி ஆகும்.

தற்போது இங்கே இருக்கிற நீங்கள், இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். மக்கள் ரொம்பவும் உணர்வற்ற நிலையிலேயே வாய்ப்புகளைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். அதை உணர்வுடன் பயன்படுத்துங்கள்.

'மாஜிஸ்ட்ரேட்' (நியாயாதிபதி) சொன்னார், 'உன்னுடைய மனைவியை அடிக்க, எது உன்னைத் தூண்டியது?' கணவன் சொன்னான் 'அவள் எனக்கு முதுகு காட்டிக் கொண்டிருந்தாள், 'ஃப்ரைபான்' கைக்கு அடக்கமாயிருந்தது, புழக்கடைக் கதவு திறந்திருந்தது, நான் கொஞ்சம் குடித்திருந்தேன். எனவே இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று நான் நினைத்தேன்.'

மக்கள் தங்கள் வாய்ப்புகளையும் உணர்வற்ற முறையில் பயன்படுத்துகிறார்கள். இந்த வாய்ப்பை உணர்வுடன் பயன்படுத்துங்கள். காரணம், இந்த வாய்ப்பு அத்தகையது. இதனை உணர்வுடன் மட்டுமே பயன்படுத்த வேண்டும்.

சூத்ரம்–18 'ஸதாஜ்ஞாதாச் சித்த வ்ருத்தயஸ்தத் ப்ரபோ
புருஷஸ்யா பரிணாமித் வாத்'

மனதின் தலைவனான ஆத்மன் மாறுபாடு இல்லாதவனாக இருப்பதால் மன அலைகள் எப்போதும் அறியப்பட்டனவா யிருக்கும்.

சூத்ரம்–19 'ந தித் ஸ்வாபாஸம் த்ருச்யத்வாத்'

மனதுக்குப் பொருளைப் புரிந்து கொள்ளும் திறன் இருந்தா லும் அது சுய ஒளி உடையதல்ல.

சூத்ரம்–20 'ஏக ஸமயே சோபயானவதாரணம்'

ஒரே சமயத்தில் இரண்டையும் அறிந்து கொள்ள மனதால் முடியாது என்பதால் அது சுய ஒளியற்றதாகும்.

சூத்ரம்–21 'சித்தாந்த த்ருச்யே புத்தி
புத்தே ரதி ப்ரஸங்க
ஸ்மிருதி ஸங்கரச்ச'

ஒரு சித்தத்தை அறிவதற்கு மற்றொரு சித்தம் வேண்டும் என்றால், இரண்டாவதை அறிய இன்னொரு சித்தம் வேண்டும். இப்படியே போனால் அதற்கொரு முடிவிருக்காது. நினைவில் குழப்பம்தான் மிஞ்சும்.

சூத்ரம்–18 'சிதேரப்ரதி ஸங்க்ரமாயாஸ் ததாகாரா பத்தௌ
ஸ்வ புத்தி ஸம்வேதனம்'

அறிவின் சாரமாகிய புருஷன் மாறுபாடு இல்லாதவன். சித்தம் புருஷனுடைய வடிவத்தை ஏற்கும்போது அது அறிவுமயமாய் விளங்கும்.

சூத்ரம்–23 'த்ருஷ்ட் த்ருச்யோ பரக்தம் சித்தம் ஸர்வார்த்தம்'

காண்பவனோடும், காணப்படும் பொருளோடும் கூடி யிருப்பதால் அனைத்தையும் அறியும் தன்மை சித்தத்துக்கு வருகிறது.

சூத்ரம்–24 'தத ஸங்க்யேய வாஸனாபிஸ்சித்ரமபி பரார்த்தம்
ஸம்ஹத்ய காரித்வாத்'

சித்தம் எண்ணற்ற ஆசையால் பலதரப்பட்டதாயிருப்பின் அது வேறொன்றிற்காகவே (ஆத்மன்) செயல்படுகிறது. அது கூட்டுப்பொருள் என்பதால் சுயமாகவோ, தன் பொருட்டோ செயல்பட முடியாது.

முதல் சூத்திரம்:

**மனதின் தலைவனான் ஆத்மன் மாறுபாடு இல்லாதவனாக இருப்பதால் மன அலைகள் எப்போதும் அறியப்பட்டனவா யிருக்கும்.**

பதஞ்சலி மனித இருப்பினை, அதன் சிக்கலான முழுபரிமாணங் களை கணக்கில் எடுத்துக் கொள்கிறார் என்பதை முதலில் புரிந்து கொள்ள வேண்டும். இதற்கு முன்போ அல்லது பின்போ ஒரு போதும் யாரும் அவர் மாதிரி முழு நிறைவான கோட்பாடுகளை முறையாகத் தோற்றுவிக்கவில்லை. மனிதன் எளிதான உடலும் உயிரும் கொண்ட வனல்லன். மனித உடல் சிக்கலான பல பாகங்களைக் கொண்டது. மாறாக ஒரு மலையின் அமைப்பு எளிதானது. ஏனெனில் அதன் அடர்வில் ஒரேயோர் அடுக்கை மட்டுமே உள்ளது. அதனை அன்னமயகோசம் என்று பதஞ்சலி அழைக்கிறார். அன்னமய கோசத்தில் அதனுடைய அழுக்குகள் தவிர்த்து வேறு எதுவும் இருக்காது. நீங்கள் ஒரு மரத்தைக் கவனியுங்கள். அதனில் அதனுடைய முதன்மை உடலைத்தவிர மற்ற பாகங்களையும் காண இயலும். அந்த மரம் அதன் உடல் மட்டும் அல்லாது மேலும் பல நுட்பங்கள் கொண்டிருப்பதைக் காணலாம். அது மலையைப் போல் உயிரற்றது அல்ல. அதற்கு உடலோடு உயிரும் உண்டு. நீங்கள் ஒரு மரத்தையும் மலையையும் ஒன்றாகக் கருதிவிட முடியாது. அவ்வாறு கருதினால் நீங்கள் அதனைச் சரியாக மதிக்கவில்லை என்றாகிவிடும். மலைக்கும் மரத்துக்கும் இடையே உள்ள பரிணாம மாற்றத்தை நீங்கள் எடுத்துக் கொள்ளவில்லை என்றாகிவிடும். மரம் மேலான வளர்ச்சி பெற்ற உயிரினம்.

அது மலையைவிட அதிகமாய் பல பாகங்கள் கொண்டது மேலும் ஒரு மிருகத்தினை எடுத்துக் கொள்ளுங்கள். அது இன்னும் அதிக சிக்கலான உடலினைக் கொண்டது. இன்னும் கூடுதலாய் ஓர் அடுக்கினை உடையது அது.

மனிதனுக்கு ஐந்து உடல்கள் ஐந்து விதைகள் உள்ளன. மனிதனையும் அவனுடைய மனதையும் நாம் உண்மையில் புரிந்து கொள்ள வேண்டுமெனில் மேலும் பொறுமையாகவும், கவனத்துடனும் இருக்க வேண்டும். நீங்கள் அதில் ஒருபடி தவறினாலும், ஓர் அடி தவறினாலும் அந்த உள்ளக மையத்தை (core) அடைய முடியாது. ஒரு நிலைக் கண்ணாடியில் தெரியும் உங்கள் உருவம், அதன் இருப்பினுடைய உறை போன்றதாகும். இதுவே உடல் என்று பலரும் தவறாகப் புரிந்து கொள்கின்றனர்.

மனோதத்துவத்தில் 'நடத்தை முறை' என்று ஓர் அமைவு உள்ளது. அதன்படி மனிதன் என்பவன் அவனது உடலைத் தவிர வேறு ஒன்றும் இல்லை என்பது. 'ஒன்றும் இல்லை' என்பவரிடம் எச்சரிக்கையாயிருக்க வேண்டும். 'வேறெதுவும் இல்லை' என்கிற போது அதில் அதைவிட அதிகமாய் சிலதும் இருக்கிறது என்பதை உணர வேண்டும்.

'நடத்தை முறை' வல்லுநராகிய திரு. பாவ்ஸாவ்பி. எப். ஸ்கின்னர் போன்றவர்கள் மனிதன் என்பவன் உடல்மட்டுந்தான் என்று கருதுகின்றனர். உங்களுக்கு ஓர் உடல் உள்ளது. நீங்கள் ஓர் உடலில் இருக்கிறீர்கள் என்பதை அவர்கள் ஒத்துக் கொள்ள வில்லை. உடல்மட்டுந்தான் நீங்கள் என்றனர். அவ்வாறாயின் மனிதன் உயிரினங்களில் கடைசி இடத்துக்குத் தள்ளப்படுவான். தங்கள் கூற்றினை அவர்களால் நிரூபிக்க முடியும். ஏனெனில் அது தான் மனிதனின் எளிதில் கிடைக்கும் முழுமையான மொத்த இருப்பு. அறிவியில் ஆய்வுகளுக்கு உட்படுத்தக்கூடியது அது மட்டுமே. மனித உடலில் உள்ள நுண்ணிய அடுக்குகளை எளிதாய் கண்டறிய முடியவில்லை, மாறாக அதனைக் கண்டறியக்கூடிய அளவு கருவிகள் சாதனங்கள் அறிவியலில் இல்லை, அறிவியல் அத்தனை வளர்ச்சி கண்டிருக்கவில்லை எனலாம். தற்போது உள்ள கருவிகளால் மனிதனின் நுட்பப் பகுதிகளைத் தொட முடியவில்லை என்பதே உண்மை.

ஃப்ராய்டும், அட்லரும் மனிதனுக்குள் இன்னும் சற்று ஆழமாய் சென்றனர்.

அதன் பிறகே மனிதன் உடலால் மட்டும் ஆனவன் அல்லன், அவனுக்கும் மேலும் சிலதும் உண்டு என்பது உணரப்பட்டது. அவர்கள் இரண்டாவது உடல் என்று சிலவற்றைத் தொட்டனர். அது பிராணமய கோசமே ஆகும்.

மனிதன் ஆண் பெண் சேர்க்கையில் விளைந்தவன் என்ற அவனது நிலைப்பாட்டினைக் குறைத்தார். அதுவும் மனிதக்கு உரியது என்றாலும் அது மட்டுமே முழுமையைத் தந்துவிடாது. அட்லரோ மனித உடல் இச்சை கொண்டது என்று அதன் நிலையை மேலும் தாழ்த்தினார். மனிதன் மிகப்பெரிய, சிக்கல் நிறைந்த அமைப்பு. ஓர் இசைக்குழு பல இசைக்கருவிகளைக் கொண்டிருப்பது போலத்தான் மனிதனும்.

மிகவும் சிக்கலான உடலினைப்பற்றி முழுதும் அறிந்து கொள்ள முடியாவிட்டாலும், கிடைத்தவரை தெரிந்து கொள்ளலாம். நம் உடலில் கோடிக் கணக்கான உயிரணுக்கள் இணக்கத்துடன், வியக்கத்தக்க முறையில் செயல்படுகின்றன. அம்மாதிரியான ஓர் உயிரணுவில் இருந்து, உங்கள் தாயின் கர்ப்பத்தில் பிரவேசித்தீர்கள். அப்போது மிகச்சிறிய உயிரணுவாய் இருந்தீர்கள். அந்த ஒன்றில் இருந்து மற்றொன்று உருவாயிற்று. அது மேலும் வளர்ந்து இரண்டானது. இரண்டு நாலானது இப்படியே அவை பல்கிப்பெருகி இலட்சோப லட்சம் உயிரணுக்கள். அவை ஆழ்ந்த ஒத்துழைப்புடன் செயல்படுகின்றவை. அவற்றின் அண்டவெளியாய் நீங்கள்.

அந்த உயிரணுக்களில் சிலது உங்கள் கண்களாயிற்று. சில உயிரணுக்கள் காதுகளாயிற்று, சிலதுகள் சேர்ந்து உங்கள் பிறப்புறுப்பு ஆயிற்று. மற்றும் சிலதுகள் எலும்புகளாகவும், சிலதுகள் மூளையாகவும், சிலதுகள் தலைமுடியாகவும் சிலதுகள் நகமாகவும் உருக் கொண்டன. இவை எல்லாமும் ஒரேயோர் உயிரணுவில் இருந்தே வந்தவை. ஒன்று பலவாயினும் கொண்ட தன்மையில் வேறுபாடு இல்லை. எனினும் அவை வெவ்வேறு செயல்களை மேற்கொண்டவை. பார்க்கக்கூடிய கண்களால் கேட்க முடியாது, கேட்கக்கூடிய காதுகளால் வாசனைகளை நுகர முடியாது. அவை ஒன்றுக்கொன்று வேறுபட்டாலும், இணக்கத்துடன் செயல்படுகின்றன. அதில்

நிபுணத்துவம் பெற்றன. தங்கள் செயல்முறை காரணமாகவே அவை சிறப்புத்தன்மை பெற்றுவிட்டிருக்கின்றன.

சில உயிரணுக்கள் கண்களாகவும், வேறுசில காதுகளாகவும், சில மூக்காகவும் ஆகிவிட்டிருப்பது ஏன்? அவை எல்லாமும் ஒரே மாதிரியாக இருந்த அணுக்கள் தாமே. அவை மேற்கொண்ட பயிற்சி என்ன, அவற்றின் ஆற்றல் என்ன என்பது நமக்குப் புலப்படவில்லை. ஆனால் அவை தனித்தனியே உருவாக, செயல்புரிய குறிப்பிட்ட வகைப்பயிற்சியை யாரோ கொடுத்திருக்கக் வேண்டும்.

மேலும், ஒன்றை நீங்கள் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். அவ்வாறு பார்க்கத் தயாராகும் உயிரணுக்கள் இதுவரை எதையும் பார்த்தது இல்லை. குழந்தை கர்ப்பப்பையில் இருக்கும்போது அது பார்க்க இயலாதிருந்தது. அப்போது கண் பார்வை வரவில்லை. வெளிச்சத்தைக்கூட அறிந்திராது. ஏனெனில் கண் மூடியபடியே இருக்கும். இது ஓர் அற்புதம். பார்ப்பதற்கு பயிற்சி கிடையாது. ஆனால், பார்க்கத் தயாராக உள்ளது. இதுவரை எதையும் பார்த்திராத கண் பார்க்கத் தயாராகிவிட்டது. குழந்தை உள்ளே இருக்கும்போது சுவாசித்ததில்லை. அதற்கு சுவாசித்தல் என்பதே தெரியாது. நுரையீரல் மூலம் அது சுவாசித்ததில்லை. உலகிற்கு வந்தவுடன் சுவாசிக்கத் தயாராகிவிடுகிறது. எல்லாமே தயாராக உள்ளது. அது பிறப்பதற்கு முன் மூச்சுகூட விடவில்லை. ஆனால், கருப்பையில் இருந்து வெளிவந்தவுடன் அது அழுகிறது, சுவாசிக்கிறது. உண்மையில் இது ஓர் அமானுஷ்ய சக்தியே. அத்தனை எதிர்கால நிகழ்வுகளையும் அது எதிர்கொள்ள வருகிறது. இந்தக் குழந்தையை இப்படித் தயார்படுத்த பின்னணியில் ஒரு சக்தி இருந்து செயல் பட்டிருக்க வேண்டும். நாம் உடலினைப் பற்றி இன்னும் முழுமையாய் புரிந்து கொள்ளவில்லை. அதனைப்பற்றிய முழு புரிதலும் சிறுசிறு துணுக்குகளானவை. மனிதனைப் பற்றிய அறிவியல் இன்னும் நிறைவாய் அமையவில்லை. ஆனால், பதஞ்சலி யோகம் அதற்கு மிக அருகில் சென்றுள்ளது. அவர் உடம்பை ஐந்து கோசங்களாய் பகுத்திருக்கிறார். உங்களிடம் இருப்பது ஓர் உடல் அல்ல, ஐந்து உடல்கள். அந்த ஐந்து உடல் களுக்குப்பின்பே உங்களது இருப்பு உள்ளது. மனோதத்துவ அறி

வியலில் உள்ள குளறுபடியே மருத்துவ அறிவியலிலும் ஏற்பட்டது. அலோபதி (Allopathy) மருத்துவம் பவுதிக உடலில் மட்டுமே நம்பிக்கை கொண்டது. ஆனால், அது நடத்தை முறைக்கு இணையாக ஒத்த விளைவுகள் கொண்டது.

அலோபதி மருத்துவத்தை மருந்துகளின் மொத்த வடிவம் எனலாம். அது அறிவியலாக வளர்ந்துள்ளது. அறிவியல் கருவி முறையைக் (instrumentation) கொண்டு ஒரு முடிவுக்கு வருவது.

'அங்கு பங்ச்சர்' என்ற சீன ஊசி முனை மருத்துவம் இன்னும் ஓர் அடுக்கில் சென்று பார்க்கிறது. அது ஊடுருவிச் சென்று பார்க்குமிடம் பிராணமய கோசம். அது உடலில் உயிர் இருப்பதற்கான சக்தி உடலில் செயல்படுவது. ஆனால் அம்முறையில், பவுதிக உடலில் தவறாக ஏதாவது இருந்தால் அவ்வுடலில் அந்தச் சிகிச்சை விளைவை ஏற்படுத்தாது. அது உயிர்ச்சக்தி எனும் இரத்த அணுக் களுக்குச் சக்தி ஊட்டுவது. அந்த அளவிற்குச் சென்று குறைபாடு களைச் சரி செய்கிறது. அதனால் பவுதிக உடல் சீரடைந்து, நன்கு செயல் புரியத்தொடங்குகிறது. ஆனால், சக்தி உடலில் கோளாறு ஏற்பட்டால் அலோபதிதான் சரி செய்ய முடியும். அது முழு உடலிலும் செயல்படுவது. அலோபதியைப் பொறுத்தவரை அது மலை ஏறுகிற மாதிரி கடினமான வேலை. அக்குபங்ச்சர்க்கு அதுவே எளிதான வேலையாயிருக்கும் மலையில் இருந்து இறங்குவதைப் போன்று. சக்தி உடலைச் சரி செய்தால் பவுதிக உடல் அதனைப் பின்பற்றிச் சரியாகிவிடும். இதற்குக் காரணம் சக்தி உடலில் பவுதிக உடலின் வரை படம் உள்ளது. சக்தி உடலின் ஆணையை நிறைவேற்றும் கருவி பவுதிக உடல்.

அக்குபங்சர் மருத்துவத்திற்கு இப்போது மவுசு கூடி வருகிறது, இதற்கு முக்கிய காரணம் 'கிர்லியன் போட்டோ கிராபி' என்கிறது நுட்பமான படமெடுக்கும் முறையேயாகும். அதன் மூலம் சீன மருத்து வத்தில் குறிப்பிடப்பட்ட எழுநூறு சக்தி புள்ளி (Vital point) படம் எடுத்து உள்ளனர். ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய இந்த மருத்துவ முறைக்கு அது இருந்ததற்கான ஆதாரம் தற்போது கிடைத்திருக்கிறது. இந்தச்சக்திபுள்ளிகளைக் கண்டறிய எந்தவித உபகரணங்களோ, கருவிகளோ கிடையாது. இருந்தும் அவர்கள்

சோதித்துப் பிழையறியும் முறையில் trial and error method இப்புள்ளி களின் இடங்களை வரையறுத்தனர். இப்போது கிர்லியன் அதே எழுநூறு புள்ளிகளை அறிவியல் கருவிகள் மூலம் கண்டுபிடித்துள்ளனர். இந்த கிர்லியன் புகைப்பட முறை மற்றொரு உண்மையையும் வெளிப் படுத்தியது. உடலில் இருக்கும் உயிர்ச்சக்தியை பருவுடல் மூலம் மாற்றும் முயற்சி மிகவும் தவறானது என்பதை நிரூபணத்துடன் வெளிப்படுத்தியது. அது வேலைக்காரனை மாற்றுவதன் மூலம் எஜமானனை மாற்றுகிற முயற்சி. அது சாத்தியப்படாது காரணம், வேலைக்காரன் சொல்வதை எஜமான் கேட்கமாட்டான். நீங்கள் வேலைக்காரனை மாற்ற விரும்பினால் எஜமானனை மாற்றுங்கள். ஒரு படையில் ஒவ்வொரு சிப்பியாக மாற்றுவதைக் காட்டிலும், தளபதியை மாற்றுவது நல்லது. உடம்பில் இலட்சக்கணக்கான சிப்பாய்கள் (உயிரணுக்கள்) இருக்கின்றனர். ஒரு கட்டளைக்குப் பணிந்து அவை செயல்படுகின்றன. தளபதியை மாற்றுங்கள், உடம்பின் முழு அமைப்பும் மாறும்.

ஹோமியோபதி மருத்துவம் இன்னும் ஆழத்திற்கு செல்கிறது. அது 'மனோமய கோசம்' என்னும் மனதின் உடலில் செயலாற்றுகிறது. அந்த மருத்துவ முறையைக் கண்டுபிடித்த ஹானிமன் அதுவரை கண்டறியப்படாத உண்மையினை, மிகப்பெரிய கண்டுபிடிப்பை அறிவித்தார். மருந்து மிகக் குறைந்த அளவில் இருந்தால், மிகுந்த ஆழத்திற்குச் சென்று விளைவை ஏற்படுத்தும் என்பதுதான் அது. ஹோமியோபதி மருந்தினைச் செய்யும் முறைக்கு 'ஆற்றல் உண்டாக்குதல்' (Potentizing) வீரியப்படுத்துதல் என்று பெயர். அதில் அவர்கள் மருந்தின் அளவைக் குறைத்துக் கொண்டே செல்வார்கள். அதன் செய்யும் முறையும் மாறுபட்டது. ஒரு குறிப்பிட்ட அளவு மருந்தினை எடுத்துக் கொண்டு அதனுடன் பத்து மடங்கு நீரைக் கலப்பார்கள். இதில் பால், சர்க்கரை போன்றவையும் அடங்கும். பின்னர் அந்தக் கலவை மருந்தில் இருந்து ஒரு பங்கு எடுத்துக் கொண்டு அத்துடன் ஒன்பது பங்கு நீர் சேர்த்துக் கொள்வார்கள். இதனால் மருந்தின் அளவு ஒவ்வொரு கலவையிலும் குறைந்து கொண்டே வரும். இந்த முறையைத் தொடர்ந்து செய்து மருந்தின் அளவை மேலும் மேலும் குறைப்பார்கள். அளவு குறையக் குறைய மருந்தின் வீர்யம் அதிகரிக்கும். கிட்டத்தட்ட ஓர் அணு போன்ற

நிலைக்கு அது மாற்றப்படும். ஹோமியோபதி மருந்துகளின் மீது பத்து ஆற்றல், இருபது ஆற்றல், நூறு ஆற்றல், ஆயிரம் ஆற்றல் கொண்டது எனக் குறிப்பிடப்பட்டிருக்கும். ஆற்றல் எண்ணிக்கை கூடும்போது மருந்தின் அளவு அதற்கு நேர்மாறான விகிதத்தில் குறைந்து இருக்கும். பத்தாயிரம் ஆற்றல் உள்ள மருந்தின் அளவு மூல மருந்தில் பத்து லட்சத்தில் ஒரு பங்கேயாகும். கிட்டத்தட்ட மருந்தே இல்லை என்கிற அளவிற்கு அது மறைந்து விட்டிருக்கும். எனினும், அது மிகவும் ஆழமான மனோமய கோசத்தைச் சென்று அடைகிறது. அது உள்ளே மன உடலுக்குள்ளே நுழைகிறது.

அது கிட்டத்தட்ட அணுபோன்ற, அணுவின் பகுப்பினைப் போன்ற நிலையினை அடைகிறது. அது உங்கள் பவுதிக உடலையோ, சக்தி உடலையோ தொடாமல் தானாக உள்ளே நுழைகிறது. அது மிக நுண்ணியதாயிருப்பதால் அதனைத் தடுக்கக்கூடிய தடைகள் ஏதுமில்லை. அது சுலபமாக மனோமயத்தில் நுழைந்துவிடுகிறது. மனம் சார்ந்த உடலை அடைந்ததும், அங்கே செயல்புரியத் தொடங்கு கிறது.

இந்திய முறையான ஆயுர்வேதமோ இம்மூன்றின் கூட்டிணைவா யிருப்பது அதுவே மிகவும் அதிக அ ாவில் கூட்டி அமைக்கப்பட்ட மருந்துகளில் ஒன்றாக விளங்குவது.

'ஹிப்னோ தெரஃபி' என்கிற அறிதுயில் மூலம் நோய் தீர்க்கும் சிகிச்சை முறை மேலும் ஆழத்துக்குச் செல்கிறது. அது விஞ் ஞானமய கோசத்தைத் தொடுகிறது. அதனை நான்காவது உடல் எனலாம். அது உணர்வு உடல் என்றும் கூறத்தக்கதே. இம்முறையில் மருந்துகளை உபயோகிப்பதில்லை. யோசனைகள் மட்டுமே கூறப்படும். யோசனைகளை அது உங்கள் மனதுக்குள் வைக்கிறது. அதனை மிருக காந்தத் தன்மை (Animal magnetism) மெஸ்மரிஸம், ஹிப்னோஸிஸ் என்று எந்தப் பெயரில் வேண்டுமானாலும் அழையுங்கள். சிந்தனா சக்திகளின் மூலம் அது செயல்படுத்தப் படுகிறது. பொருள்களாலல்ல. ஹோமியோ தெரஃபியில்கூட சிறிதளவு மருந்து இடம் பெறும். ஹிப்னோ தெரஃபியில் பொருளின் உபயோகம் சிறிதும் இல்லை.

மனோவசிய மருத்துவமுறை (ஹிப்னோதெரஃபி)க்கு மிகப்பெரிய எதிர்காலம் காத்திருக்கிறது. இனிவரும் காலங்களில் சிறந்த மருத்துவமுறையாக அது திகழும். இந்த முறை உங்கள் மனதை அடிப்படையாக்கி, அதன்பேரில் விளைவை ஏற்படுத்துவது. உங்கள் எண்ணங்களின் அமைப்பை மாற்றினால், உங்களது மனதை மாற்ற முடியும். அவ்வாறு செய்ய முடிந்தால் நஞ்சாகும் மருந்துகளைத் தேட வேண்டியிருக்காது. சிந்தனை ஆற்றலே போதுமானதாயிருக்கும்.

இந்தியாவில் நடக்கும் தீமிதிகள் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள், பார்த்தும் இருப்பீர்கள். தீமிதி என்பது நெருப்பில் வெறும் காலுடன் நடப்பது. ஆனால், மனோவசிய முறையில் சாத்தியப்படுவது. அவ்வாறு நடப்பவர்களுக்கு ஒரு கருத்து புகட்டப்படுகிறது. குறிப்பிட்ட கடவுளை- தேவியரை நினைத்து விரதம் இருந்து- அதற்கான சடங்குகளைக் கடைப்பிடித்து தீயில் நடந்தால் தீங்கு எதுவும் இருக்காது.

தீயில் நடப்பதன் மூலம் தெய்வத்தின் அருளை அவர்கள் பெறுகிறார்கள். அவர்கள் மனதில் அழுந்தப்படுத்திக் கொண்ட கருத்து, உடலை முறைப்படுத்தி அதை நிறைவேற்றும் தன்மையை பெறச் செய்கிறது.

அந்த நிகழ்வுக்கு அவர்கள் தயாராகிறார்கள். தயார் செய்யப் படுகிறார்கள். இருபத்து நான்கு மணிநேரத்துக்கு முன்பிருந்தே அவர்கள் உபவாசம் மேற்கொள்ள வேண்டும். அதாவது எதுவும் சாப்பிடக்கூடாது, உணவருந்தக்கூடாது. அதனால் உங்களுடைய உடம்பு உள்ளும் புறமும் தூய்மை செய்யப்பட்டிருக்கிறது. அவர்கள் மலக்குடலில் கூட கழிவுகள் இருக்காது. ஏனென்றால் அதுதான் உங்களுக்கும், உலகின் ஒட்டு மொத்த பொருள்களுக்கும் இடையே உள்ள பாலம். இருபத்து நான்கு மணி நேரத்துக்கு முன்பிருந்தே அவர்கள் நிர்ணயித்த புனித இடத்தில் –கோவில் அல்லது மசூதி வளாகத்தில் இருக்க வேண்டும். ஆடிப்பாடி இறையுணர்வோடு இருக்க வேண்டும். பின்பு நெருப்பின் மீது நடக்க வேண்டிய நேரம் வரும்போது அவர்கள் இறைவனைப் பற்றிப் பாடிக்கொண்டும், ஆடிக்கொண்டும் வருவார்கள். அவர்கள் வழிபடும் தெய்வத்தின் சக்தி அவர்கள்மீது இறங்கியிருக்கும். அந்தத் தீ தங்களை ஒன்றும்

செய்யாது என்ற நம்பிக்கையோடு அவர்கள் வருவார்கள். அந்த நம்பிக்கையின்றி வேறு எதுவும் அவர்கள் மனதில் இருக்காது, இருக்கக்கூடாது. அந்த நெருப்பு அவர்களைச் சுடுவதில்லை, தீக்காயங்கள் ஏற்படுத்துவதில்லை.

சில சமயங்களில் அதைப் பார்க்கிற சிலர் அந்த நிகழ்ச்சியில் லயிக்கும்போது அவர்களும் அதனால் ஆட்படுத்தப்படுவார்கள். மற்றவர்கள் அந்த நெருப்பின் மீது நடக்கிறபோது, நாமும் நடப்போம் என்கிற எண்ணத்தில், அவர்களும் தீயில் நடப்பார்கள் எந்த மனித சக்தியாலும் அவர்களை அப்போது தடுக்க முடியாது. அந்தக் கணத்தில் அவர்கள் கொண்ட நம்பிக்கையே அதற்குக் காரணம். சில சமயம் நன்கு தயாரப்படுத்தப்பட்டு முறையாக இருந்தவருக்குக் கூட தீக்காயங்கள் ஏற்பட்டுவிடும். அது போன்று திடீரெனக் குதித்து தீயில் நடந்தவர்கள் தீக்காயங்களின்றி வெளிவருவதும் உண்டு. வியத்தற்குரியதுதான். இம்மாதிரி நிகழ்வுக்குக் என்ன காரணம்? ஏன் அம்மாதிரி நடைபெறுகிறது? விரதம் இருந்து தயாரானவருக்கு ஐயப்பாடு இருந்திருக்கலாம். முழு நம்பிக்கை ஏற்பட்டிருக்காது. தங்களால் முடியுமா, இல்லையா என்கிற சந்தேகம். அவர்களுடைய உடலின் விஞ்ஞானமய கோசத்தில் கடுகளவு சந்தேகம் இருந்திருந்தாலும் வெற்றி பெறுவதுபற்றி உறுதியாய் சொல்ல இயலாது.

அரைகுறை நம்பிக்கையால் அவ்வாறு நேர்ந்திருக்கலாம். அவர்களது உயர்ந்த ஆத்மாவிடத்திலிருந்து உடலுக்குச் செய்தி சென்றிருக்காது. அந்தச் சந்தேகம் இடையில் வந்து உடலினை இயல்பாகச் செலுத்தியிருக்கக்கூடும். அதனால் தீக்காயங்கள். அதனால்தான் முழு நம்பிக்கையோடு ஈடுபட வேண்டும் என்று மதங்கள் சொல்கின்றன. அந்த நம்பிக்கைதான் ஹிப்னோ தெரஃபி. நம்பிக்கை இல்லாமல் உங்கள் நுண்குடலுக்குள் நீங்கள் பிரவேசிக்க முடியாது.

உங்களுக்கு மிகச்சிறிய அளவில் சந்தேகம் இருந்தாலும் நீங்கள் அந்த வசிய நிலையில் இருந்து தானாகவே வெளியேறி விடுவீர்கள்.

உங்களுக்கு இருக்கும் சந்தேகம் பற்றி அலோபதி மருத்துவருக்குக் கவலை கிடையாது. அவர் உங்களை அந்த மருந்தில்

நம்பிக்கை வைக்கச் சொல்வதில்லை. அவர் எளிதாக மருந்தினைக் கொடுத்துவிடுவார். ஆனால், ஒரு ஹோமியோபதி மருத்துவர் உங்களிடம் அதில் நம்பிக்கை உள்ளதா எனக் கேட்பார். ஏனெனில் உங்களுக்கு நம்பிக்கை இல்லாவிடில், உங்களுக்குச் சிகிச்சை யளிப்பதில் அவருக்குச் சிரமம் இருக்கும். மனோவசிய நிபுணரோ உங்களுடைய முழு சரணாகதியை எதிர்பார்ப்பார். நீங்கள் சரணடையாவிட்டால் அவரால் எதுவும் செய்ய இயலாது.

மதம் என்பதே சரணாகதி. மதம் ஒரு மனோவசிய முறை. ஆனால், நமது உடலில் ஐந்தாவதாக இன்னும் ஓர் உடம்பு உள்ளது. அதுதான் ஆனந்தமய கோசம். மனோவசியம் நான்கவது உடல் வரைக்கும் செல்கிறது. தியானம் ஐந்தாவது வரை செல்கிறது தியானம் என்ற சொல் மிகவும் அழகானது. 'Meditation' என்கிற ஆங்கிலச் சொல்லும், 'Medicine' என்கிற சொல்லும் ஒரே வேர்ச் சொல்லைக் கொண்டவை. குணப்படுத்துவது, உடலை நலமாக்குவது இவையிரண்டும் சேர்ந்ததுதான் மருந்து. அதுவே ஆழ்நிலையில் தியானமுமாகும்.

தியானம் எவ்வித யோசனையையும் உங்களுக்குத் தருவதில்லை. ஏனெனில் யோசனைகள் எல்லாம் வெளியே இருந்து தரப்படுவது. வேறு ஒருவர் அந்த யோசனையைத் தர வேண்டும். யோசனைகள் என்றாலே நீங்கள் வேறொருவரைச் சார்ந்திருக்கும்படியாகும். உங்களை மற்றவர்களால் முழுமையாகவோ, குறையற்றவராய் உணரச் செய்யவோ முடியாது.

தியானம் உங்களை முழுமையாய் உணரச் செய்வது. ஒருவர் யோசனை தருகிறார் என்றால் அது வெளியில் இருந்து வருவது. எது வெளியில் இருந்து வருகிறதோ அது ஒரு பொருளாய் கருதப் படும். சிந்தனை உள்ளிருந்து வந்தாலும் அதுகூட ஒரு நுண்ணிய பொருளே. ஏன், மனோவசியம் கூட ஒரு வகையில் பொருள் சார்ந்ததே.

தியானம் எல்லா ஊன்று கோல்களையும், முட்டுக் கட்டைகளையும் விட்டுவிடுகிறது. அதனால்தான் தியானம் என்பது உலகில் புரிந்து கொள்ளக் கடினமான விசயமாக உள்ளது. ஒரு தூய்மையான புரிதல்,

சாட்சியாக இருந்தாலன்றி அதில் மிச்சமாய் ஏதுமில்லை. அதைத்தான் இந்த முதல் சூத்திரம் விளக்குகிறது.

**'மனதின் தலைவனான ஆத்மன் மாறுபாடு இல்லாதவனாக இருப்பதனால், மன அலைகள் எப்போதும் அறியப்பட்டனவாக இருக்கும்.'**

உங்களுக்குள் இரண்டு காரியங்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. ஒன்று புயல்போன்றது. அதாவது எண்ணங்கள், உணர்ச்சிப் பெருக்குகள் ஆசைகள் அடங்கிய சுழற்காற்று, சூறாவளி. அது எப்போதும் உங்களைச் சுற்றி வட்டமிடுவது, எப்போதும் மாறிக் கொண்டேயிருப்பது. தொடர்ந்து அதுவே நிலை மாற்றிக் கொண்டும், ஓரிடத்தில் இருந்து மற்றொரு இடத்துக்கு ஓடிக்கொண்டிருப்பதுமானது. இந்தச் செயல்முறையின் பின்னே சாட்சியாய் இருக்கிற உங்களுடைய ஆன்மா– என்றும் இருப்பது, அழிவற்றது, என்றும் நிலையானது, மாறாதது. அது இதுவரை மாறியதில்லை. அது நிலையான ஆகாயம் போன்றது. அங்கு மேகங்கள் வரும் போகும் ஒன்று சேரும், கலைந்து போகும். ஆகாயம் அப்படியே தீண்டப்படாமல் இருப்பது எந்தச் சக்தியாலும் பாதிக்கப்படாமல், எந்தப்பதிவும் இல்லாமல் அது இருக்கிறது. அது தூய்மையாய் மூலத்தில் எவ்விதமாற்றமுமின்றி இருக்கிறது. அதுவே கடவுள், அழியாத ஒன்று, உங்களுள் இருப்பது.

மனம் அப்படியல்ல. அது மாறிக் கொண்டேயிருப்பது. ஒரு மணித்துளிக்கு முன் இருந்த மனம் இப்போது உங்களிடம் இல்லை. இது வேறு ஒன்று. சில நிமிடங்களுக்கு முன் கோபமாக இருந்த நீங்கள் இப்போது சிரித்துக் கொண்டிருக்கிறீர்கள். சில கணங்களுக்கு முன் மகிழ்ச்சியுடன் இருந்தீர்கள், இப்போது சோகமாய் காணப்படுகிறீர்கள். அலைகளால் தொடர்கிறது மாற்றங்கள். நீங்கள் சுழல் ராட்டினமாய் மேலும் கீழும் போய்க்கொண்டிருக்கிறீர்கள்.

ஆனால் உங்களுக்குள் சாசுவதமான (eternal) ஏதோ ஒன்று இருக்கிறது. இந்த விளையாட்டுக்களுக்குச் சாட்சியாக அது உள்ளது. அதுவே கடவுள். நீங்கள் மாற்றங்கள் நிகழும்போது ஒரு சாட்சியாக இருந்து கவனியுங்கள், அந்தக் கடவுளுக்கு மிக அருகில் வருவீர்கள்.

பொருள்களில் சாட்சியாக இருப்பதில் இருந்து தொடங்குங்கள். நீங்கள் ஒரு மரத்தைப்பார்க்கிறீர்கள், ஆனால், அதனைப் பார்க்கிற உணர்வு உங்களிடம் இருக்கவில்லை. அப்படியானால் நீங்கள் அதற்கு சாட்சியாக இல்லை. நீங்கள் ஒரு மரத்தைப் பார்க்கிறீர்கள், பார்க்கிறோம் என்கிற உணர்வுடன் பார்க்கிறீர்கள். அப்போது நீங்கள் சாட்சியாக இருக்கிறீர்கள். உணர்வு இரண்டு அம்புகளால் மாற வேண்டும். ஓர் அம்பு மரத்துக்கும் மற்றொன்று உங்களை ஆட்கொள்வதற்கும்.

அது கடினமானது ஏனெனில் நீங்கள் உங்களைப் பற்றி உணரும்போது மரத்தை மறந்து விடுவீர்கள். மரத்தை உணருபவராக ஆகும் போது உங்களை மறந்துவிடுவீர்கள். ஆனால், தொடர்ந்து முயலும்போது உங்களுக்குள் ஒரு சமநிலை ஏற்படும். இரண்டினையும் உணரும் முறையைக் கற்றுக் கொள்வீர்கள். ஆரம்பத்தில் கடினமாக இருக்கும் கயிற்றில் நடக்கிற மாதிரி. தொடர்ந்து முயற்சி செய்யுங்கள். உங்களுக்குச் சாட்சியாயிருக்க் சந்தர்ப்பம் வரும்போது எல்லாம் தொடர்ந்து முயலுங்கள். சந்தர்ப்பத்தை விட்டுவிடாதீர்கள். ஏனெனில், சாட்சியாயிருப்பது அத்தனை மதிப்பு வாய்ந்தது. நீங்கள் என்ன செய்தாலும் அதற்கு சாட்சியாயிருங்கள். நடக்கும்போது, சாப்பிடும்போது, குளிக்கும்போது கூடவே சாட்சியாயிருங்கள். குளிக்கும்போது உங்களுக்கு மேலிருந்து விழும் நீர்த்துளிகளை உணருங்கள், அதன் குளிர்ச்சியினை உணருங்கள். உங்களுக்குள் விழிப்புடனிருங்கள். என்ன நடக்கிறது என்று பாருங்கள். குளிர்ந்த நீரின் தொடு உணர்வு, நீரில் ஏற்படும் நீர்க்குமிழிகள், உடம்பில் கிளுகிளுப்பூட்டும் உணர்வு, சுற்றியுள்ள நிசப்தம், புத்துணர்வு பெறுதல், நல்லவிதமாய் உணர்தல் என்பனவற்றிற்கு சாட்சியாக இருந்து கொண்டே இருங்கள்.

‘நான் இப்போது மகிழ்ச்சியாயிருக்கிறேன்... நான் சோகத்தில் இருக்கிறேன். எனக்குப் பசி எடுக்கிறது...’ தொடர்ந்து கவனித்தபடி இருங்கள். அந்த மகிழ்ச்சி உங்களைவிட வேறானது, ஏற்படும் துக்கமும் நீங்கள் அல்ல. அது தனியானது எனப் பிரித்துப் பாருங்கள்.

நீங்கள் எதையெல்லாம் சாட்சியாக இருந்து பார்க்கிறீர்களோ அதுவெல்லாம் உங்களில் இருந்து வேறானது, தனியாக இருப்பது.

நீங்கள்தாம் கடவுள், நீங்கள்தாம் இருப்பின் இறுதியான மையம்.

*'மனதுக்குப் பொருளைப் புரிந்துகொள்ளும் திறன் இருந்தாலும், அது சுய ஒளி உடையதல்ல'*

மனம் தன்னையே பார்த்துக்கொள்ளும். அது ஓர் பொருளாக மாறக்கூடியது. அது கண்டுணரக்கூடியதாயிருக்கிறது. எனவே, அது கண்டுணர்பவராகாது. சாதாரணமாக நாம் நினைத்துக் கொள்கிறோம் அந்த மனதே மலரைப் பார்க்கிறது என்று. அது அவ்வாறில்லை. நீங்கள் அந்த மனதுக்கு அப்பாலும் செல்ல முடியும், மலரைப் பாரக்கிற மனதைப் போன்று, நீங்களும் மனதைப் பார்க்க முடியும். நீங்கள் இன்னும் ஆழத்துக்குப் போனால் அதைவிட அதிகமாகவே காண்பீர்கள். அங்கு காண்பவரே காணப்படுவதாகிவிடும். அதனால்தான் சிந்தனையாளர் ஜே. கிருஷ்ணமூர்த்தி; கவனிப்பவர் கவனிக்கப்படுவதாகிறார், கண்டுணர்பவர் கண்டுணரப்படுவதாகிறது; என்று மறுபடியும் மறுபடியும் தொடர்ந்து சொல்லிக் கொண்டிருப்பது. நீங்கள் ஆழத்துக்குச் செல்லும்போது முதலில் மரத்தைப் பார்க்கிறீர்கள், ரோஜாக்களை, நட்சத்திரங்களைப் பார்க்கிறீர்கள். அப்போது மனம் சாட்சியாகப் பார்க்கிறது என்று எண்ணுகிறீர்கள். பின்பு உங்கள் கண்களை மூடி, மனதில் தோன்றும் எண்ணப் பதிவு களைப் பாருங்கள். அந்த மரம் ரோஜா, நட்சத்திரங்கள் பற்றிய பதிவு களை உணருங்கள். இப்போது கண்டுணர்பவர் யார்? கண்டுணர்பவர் இன்னும் கொஞ்சம் ஆழத்துக்குச் சென்று விடுகிறார். மனமே பார்க்கப்படுகிற பொருளாகி விடுகிறது.

இந்த ஐந்து கோசங்கள், இந்த ஐந்து விதைகள் ஐந்து நிலையங் களாக ஆகின்றன. நீங்கள் உங்களுடைய பரு உடலில் இருந்து அன்னமய கோசத்தில் (உணவுஉடல்) இருந்து சக்தி உடலுக்குச் சென்றால், அப்போது சக்தி உடலில் இருந்து கொண்டு பரு உடலைக் காணலாம். அதை ஒரு பொருளாகப் பார்க்கலாம். அது சக்தி உடலுக்கு வெளியே இருக்கும். வீடு உங்களுக்கு வெளியே

இருப்பதைப் போன்று, நீங்கள் சக்தி உடலில் இருக்கும்போது உங்கள் உடலே உங்களைச் சுற்றியுள்ள வெளிச்சுவர்போல் இருக்கும். நீங்கள் மறுபடியும் சக்தி உடலில் இருந்து மனோமய கோசத்திற்குச் சென்றால் (மனம் சார்ந்த உடல்) அது மாதிரியே நடக்கும்.

இப்போது உங்களது சக்தி உடலும் உங்களுக்கு வெளியே உள்ளது. அது உங்களைச் சுற்றியுள்ள வேலி போன்று உணரப்படும். இவ்வாறாக செயல்முறை அமையும். இறுதிநிலை வரை நீங்கள் அவ்வாறே செல்ல முடியும். அந்த இறுதி நிலையில் சாட்சியாய் இருப்பவர் மட்டுமே இருப்பார். ஒரு கட்டத்தில் உங்களையே நீங்கள் பார்க்க இயலாது. அப்போது உங்களைப் பேரின்பமயமாய் நீங்கள் காண்பதில்லை, பேரின்பத்தின் சாட்சியாகவே காண்பீர்கள்.

கடைசி உடல் பேரின்ப உடல். இந்த ஐந்து கோசங்களிலும் அதிகம் பிரித்துக் காணமுடியாதது அது. ஏனெனில் அது கடவுளுக்கு மிக அருகில் இருக்கிறது. அது கடவுளைச் சுற்றி ஒரு சூழலாய் அமைகிறது. ஆனால், அதையும் தெரிந்து கொள்ள வேண்டும். அந்தக் கடைசி இடத்திலும், மெய்ம்மறந்த பேரின்ப நிலையிலும், இறுதி முயற்சியினை செய்ய வேண்டிய கட்டாயம் உள்ளது. வேறு படுத்திப் பார்க்கக் கூடிய அந்தக் கடைசி முயற்சி, அந்தப்பேரின்பம் உங்களில் இருந்து வேறானது என்பதைப் புரிந்து கொள்வதாகும்.

அடுத்து வருவது கைவல்யம் – விடுதலை. அந்நிலையில் நீங்கள் தனியே விடப்படுகிறீர்கள் – சாட்சியாவதைத் தவிர மற்றவை எல்லாம் பார்க்கும் பொருளாகிவிடும். உடல், மனம், சக்தி என்று அத்தனையும் ஏன் பேரின்பமும், பரவசமும், தியானமும்கூட அதற்கு மேலும் அது தியானமாயிருக்காது. தியானிப்பவர் தியானிக்கப்படுகிற பொருளை அடைந்துவிட்டால் அதன்பிறகும் தியானிக்கமாட்டார். அவரால் தியானிக்கவும் முடியாது. ஏனெனில் அப்போது தியானம் நடைப்பயிற்சி, சாப்பிடுவது போன்ற செயல்களாக ஆகிவிடும். எல்லா வற்றிலும் இருந்து தனித்து இருப்பவராய் மாறிவிடுகிறார். அதுதான் தியானத்துக்கும், சமாதிக்கும் உள்ள வேறுபாடு. தியானம் ஐந்தாவது பேரின்ப உடலைச் சேர்ந்தது. இன்னமும் அது ஒரு சிகிச்சையாக, மருந்தாகவே இருக்கிறது. நீங்கள் இன்னமும் கொஞ்சம் நோயுற்றவராகவே இருக்கிறீர்கள். நீங்களல்லாத ஒன்றுடன் உங்களை

அடையாளப்படுத்திக் கொள்வதே நோய்க்குக் காரணம். எல்லா உடல்நலக் குறைவும் ஓர் அடையாளத் தன்மை கொண்டதே. அவ்வாறு அடையாளப்படுத்தாமல் இருப்பதே ஆரோக்கியம். சமாதி என்பது தியானத்தையும் பின்னே விட்டுச் செல்கிறநிலை.

நான் 'எட்வர்டு டி பானோ' எழுதிய புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தேன்.

சீனாவில் நடந்த இது போன்ற சம்பவத்தைப்பற்றி அவர் எழுதியிருந்தார்.

பண்டைய காலத்தில் சீனாவில் பல அடுக்குகள் கொண்ட கோபுரத்துடன் கூடிய ஒரு கோயில் தீக்கு இரையானது. அந்த எரிந்த கோயில் வளாகத்தில் இருந்து ஒரு வித வாசனை வந்து கொண்டிருந்தது. அந்த வாசனை பசியைத் தூண்டுவது போல் இருக்கவே, அந்த வாசனை மூலத்தைத் தேடிக்கண்டனர். தீயில் சிக்கி செத்துப்போன ஒரு பன்றியிடம் இருந்தே அந்த வாசனை வந்தது. அது நன்கு தீயினால் சமைக்கப்பட்ட பக்குவத்தில் இருந்தது. தீயில் வாட்டிய பன்றியிறைச்சி சீனாவில் இன்சுவை உணவாகும். அதற்கு ஏற்பட்ட சுவை அந்தக் கோயிலால் ஏற்பட்டது என்றே அவர்கள் நம்பினர். அதிலிருந்து, பன்றி இறைச்சி சாப்பிட விரும்பிய போதெல்லாம் ஒரு கோயிலைக் கட்டி அதில் பன்றியுடன் எரிப்பதை வழக்கமாய் கொண்டனர். அது அதிக செலவுவைப்பதாயிருந்தாலும், ரொம்பவும் விஞ்ஞான முறையில் தெரிந்தது. நூற்றாண்டுகள் பல சென்ற பின்பே அது முட்டாள்தனம் என்பதை உணர்ந்து கொண்டனர். அடுக்கு கோபுர வழிபாட்டுத்தலம் அதற்கு முக்கியமல்ல என்பது புரியவந்தது.

ஆனால் மனிதமனம் இவ்வாறே செயல்படுகிறது, காரணம் முதலில் உங்கள் உடம்பையும் அதனுடன் தொடர்புடைய அனைத்தையும் பார்க்கிறீர்கள். நீங்கள் நலமாக இருக்கும்போது மகிழ்ச்சியாக உணர்கிறீர்கள். அது உங்கள் உடலால் விளைந்தது என்று எண்ணுகிறீர்கள். காரணம், 'நான் ஆரோக்கியமாய் உணர்கிறேன், எந்த உபாதையும் இல்லை, நோயும் இல்லை' என்று நாம் நினைத்துக் கொள்வது. அப்போதிருந்து உடம்பை இளமையாய் ஆரோக்கியமாய் வைத்துக்கொள்ள முனைகிறோம். அதில் தவறேதும் இல்லை.

ஆனால் நலம் என்பது உங்கள் அடியாழத்தில் வேறு எங்கிருந்தோ வருவது. நல்ல உடல்நலம் தேவை, இல்லையேல் இந்த ஊற்றுக்கள் சுறுசுறுப்பாக இயங்காது. உங்களுடைய உள்ளக மையத்தில் இருந்த நலத்தைக் கொண்டு வருவதில் ஆரோக்கியமான உடம்பு ஒரு சாதனமாய் செயல்படுகிறது.

மனம் எவ்வாறு தர்க்க ரீதியாய் செயல்பட்டு அறிவுக்கு பொருந்தாத, முடிவுக்கு வருகிறது என்று பாா்ப்போம். சின்னதாய் சில கதைகள் சொல்கிறேன் உங்களுக்கு:

முன்பொரு காலத்தில் ஒரு பேராசிரியர் நூறு தெள்ளுப்பூச்சிகளுக்குப் பயிற்சி கொடுத்தார். அவர் சரியான ஆணை பிறப்பித்ததும் அவை குதிக்க வேண்டும். அவைகள் அதைச் சிறப்பாகச் செய்ததும், ஒரு கத்தரியால் அவற்றின் கால்களை வெட்டி விட்டார், ஒரு சோதனைக்காகத்தான். பின்பு அவற்றுக்கு ஆணை கொடுத்தார. அவற்றால் குதிக்க முடியவில்லை. தம்முடைய கண்டுபிடிப்பை அவர் மருத்துவ உலகிற்கு அறிவித்தார். 'கனவான்களே, ஒரு தெள்ளுப்பூச்சியின் காதுகள் அதன் காலில் இருக்கிறது என்பதற்கு என்னிடம் அசைக்க முடியாத ஆதாரம் உள்ளது' என்று.

மனித சிந்தனை வரலாற்றில் இதுபோல் பல நிகழ்வுகள்

தர்க்கம் முடிவில் தர்க்கத்துக்குப் பொருந்தாத முடிவை அடைகிறது. பூச்சியின் காலை வெட்டியதால் குதிக்க முடியவில்லை. ஆணையை அது நிறைவேற்றவில்லை. காதுகள் அதற்குக் காலில் இருந்திருக்க வேண்டும், இப்படி.

உடம்பு பல பகுதிகளைக் கொண்ட மொத்த உரு, எளிதில் அறிந்து கொள்ளக் கூடியது. நீங்கள் அதைப்பற்ற முடியும், பயிற்சியளிக்க முடியும். அதற்கு உணவளித்து, ஊட்டச்சத்தினை வழங்கி அதை மேலும் ஆரோக்கியமுடையதாக்க முடியும். அதைப் பட்டினி போட்டு கொல்லவும் முடியும். உடம்புடன் ஆயிரத்திற்கும் மேலான செயல்களை நீங்கள் மேற்கொள்ளக்கூடும். உடம்புக்கு அப்பால் தொடங்குகிறது. அதன் பிடியில் இருந்து நழுவுகிற நிலை.

அறிவியலாா் இது போல் பிடிபடாத விஷயங்களில் புகுந்து பார்க்க அச்சப்படுவார்கள். காரணம் அவர்களுடைய நெறிமுறைகள்

அந்நிலையில் சரியாகச் செயல்படுவதில்லை. அப்போது எல்லாமும் தெளிவற்றதாய் மங்கிக் கொண்டே போகும். அவர்கள் தெளிவான இடத்தோடு நின்றுவிடுகிறார்கள் என்பதே உண்மை.

ரபியா அல் அடாவியா என்பவளைப்பற்றிய ஒரு புகழ்பெற்ற கதை. ஒரு நாள் அந்திப்பொழுதில் அவர் தெருவில் எதையோ தேடிக் கொண்டிருந்தார். 'நீங்கள் என்ன தேடுகிறீர்கள்–' என்று கேட்க, 'ஊசி தொலைந்து விட்டது' என்றார். அந்த அம்மையார் பலரும் அவருக்கு உதவ முன்வந்தார். 'பாவம், ஏழை மூதாட்டி. ஊசியைத் தொலைத்துவிட்டார்'

நாம் தேடித்தருவோம் என்று பலரும் உதவ முன்வந்தனர். ஊசி மிகவும் சின்னதாயிருப்பதால் அதைத் தேடுவது கடினம் என்று கருதி. 'சரியாக ஊசி எங்கே விழுந்தது?' என்று ஒருவர் கேட்டார். 'அந்த ஊசி என்னுடைய வீட்டுக்குள் தொலைந்தது' என்றார் மூதாட்டி. அதைக் கேட்டதும் அங்கிருந்தவர்களுக்குக் கோபம் வந்து விட்டது. 'வீட்டில் தொலைத்துவிட்டு, ஏன் வீதியில் தேடுகிறாய்?' என்று அவர்கள் கோபத்துடன் கேட்டனர். ரபியா சொன்னார்,' அங்கே வெளிச்சம் இல்லையே, எப்படித் தேடுவது? தெருவில் இன்னும் சூரியன் மறையவில்லை, வெளிச்சம் இருக்கு. அதனால் தேடுகிறேன்' என்று.

ஒரு வகையில் தர்க்க முரணாய் தெரியலாம், மற்றொரு வகையில் அதுவே தர்க்கமாய் தெரியலாம். அதைத்தான் அறிவியல் செய்து கொண்டிருக்கிறது. ஏனெனில், புறத்தே உள்ள உடம்பு நமக்குத் தெளிவான விகிதத்தில் வெளிச்சத்தில் இருக்கிறது, மற்றபடி உள்ளே இருப்பதெல்லாம் இருட்டில் இருப்பது பேல் தெளிவற்று இருக்கிறது. அடியாழத்துக்குச் சென்றால் மேலும் இருட்டு. நீங்கள் ஆழமாய் செல்லச் செல்ல எங்கு போகிறோம் என்பதே தெரியாமல் போய்விடுகிறது. எல்லாமே பெருங்குழப்பம் போல் தோன்றுகிறது. வெளிச்சப் பகுதியில் இருப்பதே சிறப்பு. அங்கிருந்தபடி ஏதாவது செய்ய முடியும். காரணம் உடலை நமக்கு ஏற்றவாறு திறமையாகக் கையாள முடியுமே.

ஆனால், இந்தச் செயல்முறையில் மதிப்புமிக்க ஏதோ ஒன்று இழக்கப்பட்டதாகிறது. மனித இனம் கொஞ்சம் கொஞ்சமாய்

உடம்பின்மீது கவனத்தைக் குவிக்கிறது. ஆனால் இந்த உடம்பு உங்கள் ஆன்மாவைப் போர்த்தியிருக்கும் ஒட்டுப்பகுதியே ஆகும்.

சிறைச்சாலையில் நடந்த ஒன்று: வழிப்பறி செய்து கொண்டு இருந்த ஜோவிற்கு இருபது ஆண்டு சிறைத் தண்டனை வழங்கப்பட்டது. அவர் சிறையில் இருந்த போத தம்முடைய தலையில் இருந்து ஒரு தெள்ளுப் பூச்சியைக் கண்டெடுத்தார். வேறு எதுவும் செய்வதற்கில்லை என்பதால் அந்தப் பூச்சிக்குப் பல தந்திரங்களைக் கற்றுக் கொடுத்தார். உத்தரவிட்டால் குதிக்கும்படி பயிற்சி கொடுத்தார். நாட்கணக்கில், வாரக்கணக்கு தொடர்ந்து வேறு சில தந்திரங்களையும் அந்தப் பூச்சிக்கு அவர் கற்றுத் தந்தார். தாம் விடுதலையாகிற நாள்வரும் போது நம்பவே முடியாத தந்திரங்களை அதற்குப் பயிற்றுவித்திருந்தார். அந்தப் பூச்சியை வைத்து பணம் பண்ணுகிற திட்டம். அவர் விடுதலையானதும் சர்க்கஸ் முதலாளி ஒருவரிடம் சென்று தமது கண்டுபிடிப்பைப் பற்றி தெரிவித்தார். தெள்ளுப்பூச்சியை மேசை மீது வைத்து 'இதனைப் பார்த்தீர்களா?' என்று விவரிக்கத் தொடங்கினார். சர்க்கஸ் கம்பெனி மேலாளர் ஒரு சாம்பல் கிண்ணத்தால் அந்தப் பூச்சியை நசுக்கிவிட்டு, 'இவற்றால் பெரிய உபத்திரவம்' என்றார்.

அந்த மனிதர் பூச்சியைக் கொன்றுவிட்டார். பாவம் ஜோ, அற்புதமான செயல்களை செயுயம்படி ஆண்டுகள் பலவாய் அந்தப் பூச்சியை அவர் பழக்கியிருந்தார். தற்போது எல்லாமே வீணாகி விட்டது.

இது போன்றுதான் மனித வர்க்கத்துக்கு அந்த மொத்த சிந்தனை (Gross thinking) செய்துள்ளது. அது உடம்பினுள் இருக்கும் அற்புதங்களைக் கொன்றுவிட்டது. மனிதர்களை புற உடலில் கவனம் செலுத்தி திசைதிருப்பிவிட்டது. அதனால் அந்த அகவுலகம் பற்றி நிறையபேருக்குத் தெரிய வாய்ப்பில்லை என்பதாயிற்று. புத்தர், இயேசு, கிருஷ்ணர் போன்றவர்கள் மன நலமற்றவர்களைப் போல் காணப்பட்டனர். அவர்களை உணர்ச்சி மிகைப்பு உடையவர்களாய் மேலை நாட்டு நூல்கள் சித்தரித்தன. மனிதனின் அகவுலகம் பற்றித் தெரியாதவர்களுக்கு இயேசு உணர்ச்சி மிகைப்புடையவராகவே

தெரிந்தார். ஏன் எனில் அவர் கடவுளிடம் பேசினார். மேலும் தமக்குக் கடவுளிடம் இருந்து செய்திகள் வந்ததாகவும் அவர் அறிவித்தார். அகவுலகுடன் தொடர்பில்லாத உங்களுக்கு அவர் அப்படித்தான் தெரிவார்.

கெத்ஸ்மேன் தோட்டத்தில் இயேசு பிரார்த்திக் கொண்டு இருந்த போது, இரு கைகளையும் விண்ணை நோக்கி உயர்த்தியபடி, கடவுளிடம் பேசத் தொடங்கினார். அங்கே யாரும் இருந்திருக்கவில்லை. 'இவர் யாரோடு பேசுகிறார்' சுற்றியிருந்த ஆயிரக்கணக்கானவர்களும் திகைப்புற்றனர். இயேசு, 'தந்தையே, இவர்களை மன்னியும். தாங்கள் இன்னது செய்கிறோம் என்பதை இவர்கள் அறிந்திருக்கவில்லை' என்றார். அவர் பைத்தியந்தான். அவர் யாருடன் பேசிக் கொண்டிருந்தார்? தம்முடைய புலன்களை விட்டு அவர் எங்கோ சென்றுவிட்டார். கொஞ்சம் கொஞ்சமாய் உங்கள் அகவுலகத் தொடர்பை நீங்கள் இழந்துவிட்டால் உங்களால் இயேசுவை, கிருஷ்ணரை அல்லது பதஞ்சலியை நம்ப முடியாமல் போய்விடும். அவர்கள் கனவு காண்பதாகவே வைத்துக் கொள்வோம். சமர்த்தரான நீங்கள் என்ன செய்கிறீர்கள், உங்கள் கனவுகளை அறிவியல் சார்ந்த முறையில் பேசிக்கொண்டிருக்கிறீர்கள், அவ்வளவுதான்.

ஒரு மனநலக் காப்பகத்தில் தன்னுடைய உறவினனைப் பார்க்கச் சென்ற ஒருவரைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அதே அறையில் மற்றொருவனும் இருந்தான். அந்த மற்றொருவன் கண்ணியம்மிக்க ஒருவனைப் போல் காணப்பட்டான். அவன் ஒரு செய்தித்தாளைப் படித்தபடி அமர்ந்திருந்தான். இந்தப் பார்வையாளர் அவனுடன் பேசினார். அவன் மிகவும் இயல்பாக இருப்பதைக் கண்டார். உன்னை எதற்காக இங்கே வைத்திருக்கிறார்கள்.?' என்று வியப்புடன் கேட்டார். அவன் சொன்னான், என்னுடைய உறவினர்கள் தாம் இதற்குக் காரணம். அவர்கள் என்னை இங்கே தள்ளிவிட்டு, என்னுடைய பணத்தை அபகரிக்க விரும்பினர். என்னைக் கொல்வது அல்லது ஒரு பைத்தியக்கார விடுதியில் அடைப்பது இரண்டில் ஒன்றைச் செய்யவேண்டும். நானும் அதற்குச் சம்மதித்தேன். இங்கானால் உயிரோடாவது இருக்கிறேன். இல்லையேல், என்னைக்

கொன்றுவிட்டிருப்பார்கள். என்னிடம் அவ்வளவு பணம் இருந்தது' என்று.

அவன் சொன்னதைக்கேட்ட அந்தப் பார்வையாளர், 'நீ கவலையை விடு. எனக்கு இந்த ஊர் ஆளுநரைத் தெரியும். நான் சென்று அவரிடம் எல்லாவற்றையும் தெரிவிக்கிறேன்' என்றார். 'தயவு செய்து உங்களால் முடிந்ததை செய்யுங்கள்' என்ற அந்த பைத்தியக் காரன், சற்றும் எதிர்பாராதவிதத்தில் அவரைத் தாக்கினான். 'ஏய், நீ என்ன செய்யறே?' திகைப்புடன் கேட்டார் அவர். அவன் சொன்னான், 'நீங்கள் ஆளுநரை ஞாபகமாய் பார்க்கப் போகவேண்டும். இப்போது உங்களால் மறக்கமுடியாது அல்லவா?' என்று.

எல்லாமே சரியாக இருப்பது போல்படுகிறது, ஆனால் எப்படி வேறுபடுத்திக் காண்பது? ஒரு பைத்தியக்காரனுக்கும் மறைஞானிக்கும் (mystic) இடையே எப்படி வேறுபடுத்திக் காண்பது? ஒரு மறைஞானி யிடமும் குறிப்பிட்ட எல்லைவரை எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது. ஆனால் திடீரென்று அவன் அதற்குமுன் நீங்கள் அனுபவித்திராதவை களைப் பற்றியெல்லாம் பேசுகிறான்.

'ஒரே சமயத்தில் இரண்டையும் அறிந்துகொள்ள முடியாது என்பதால் அது சுய ஒளியற்றதாகும்'

இந்த சூத்திரங்கள் எல்லாம் சாட்சிபாவம் பற்றியது. இரண்டு செயல்களை ஒரே சமயத்தில் மனதால் செய்ய முடியாது என்பதை படிப்படியாக பதஞ்சலி சொல்கிறார். ஒன்று காண்பவராயிருப்பது, மற்றொன்று காணப்படுவதாயிருப்பது. ஏதாவது ஒன்றைத்தான் செய்ய முடியும். நீங்கள் மனதுக்கு சாட்சியாகிறபோது, மனம் காண்பவரல்ல என்பதை அது நிரூபித்துவிடுகிறது. நீங்கள்தாம் கண்டுணர்கிறவர் (Perceiver) நீங்கள் அப்போது உடல் அல்ல. ஏன், நீங்கள் மனமாகவும் இல்லை. இங்கு வலியுறுத்தப்படுவது; நீங்கள் எதுவாக இல்லை என்பதை வேறுபடுத்தி அறிவதில் உங்களுக்கு எப்படி உதவுவது என்பதைத்தான்.

**ஒரு சித்தத்தை அறிவதற்கு மற்றொரு சித்தம் வேண்டும் என்றால் இரண்டாவதை அறிய இன்னொரு சித்தம்**

**வேண்டும். இப்படியே போனால் அதற்கொரு முடிவு இருக்காது. நினைவில் குழப்பம்தான் மிஞ்சும்.**

ஒரு சாட்சிபாவத்தைக் கொண்டிருப்பது தேவையற்றது என்கிற தத்துவமேதைகளும் இருக்கிறார்கள். எனவே நாம் இன்னொரு மனதைக் கொண்டிருக்க முடியும். முதலாவது மனதை இரண்டாவது மனதின் மூலம் கண்டுணர்வது. உளவியலாரும் அந்தக்கருத்தை ஏற்கிறார்கள், அறிந்திராத ஒன்றை எதற்காகக் கணக்கில் கொள்வது என்பதே காரணம். நுட்ப மனமே (subtleminde) போதும் என்பது அவர்கள் கருத்து.

எந்த ஒன்றுக்குப்பின்னால் ஏதும் இல்லையோ அந்த ஒன்றையே ஒருவர் புரிந்து கொள்ள வேண்டும். இல்லையேல் நினைவுகளில் ஒரு, குழப்பம் ஏற்பட்டுவிடும். உடல், மனம், சாட்சியாயிருப்பவர். சாட்சியே முழுமையானது, நிச்சயமானது. ஆனால் அந்த சாட்சியைக் கண்டுணர்பவர் யார்? சாட்சியை யார் அறிந்தவர்? அதன்பிறகே யோகாவின் அதிமுக்கிய கருத்து (வாதத்தில் தற்காலிகமாய் வைக்கப்படுவது)க்கு வருகிறோம்.

**அறிவின் சாரமாகிய புருஷன் மாறுபாடு இல்லாதவன். சித்தம் புருஷனுடைய வடிவத்தை ஏற்கும்போது அது அறிவுமயமாய் விளங்கும்.**

சாட்சி தானாகப் பிரகாசிப்பது என்பதில் நம்பிக்கை உடையது யோகம். அது ஒரு ஒளி விளக்கு போன்றது எனலாம். உங்கள் அறையில் சிறிய மெழுகுவர்த்தி அறைக்கு ஒளி கொடுக்கிறது. அதில் உள்ள பொருட்கள் அந்த வெளிச்சத்தில் தெரிகின்றன. மெழுகுவரத்திக்கு ஒளியூட்டுவது யார்? மெழுகுவர்த்தியே ஒளி கொடுப்பது. ஒளி கொடுக்க வேறெதுவும் வேண்டாம். அது மற்ற வற்றிற்கும் ஒளி தருகிறது, தனக்கும் ஒளியைத் தந்து கொள்கிறது. அது போன்றே நமக்கு உள்ளே, மிகவும் உள்ளேயிருக்கிற உணர்வு நிலை சுயஒளி உடையது. அது ஒளியின் இயல்பு. சூரியன் எல்லா வற்றுக்கும் வெளிச்சம் தருவது. சூரிய மண்டலத்தில் உள்ள அனைத் துக்கும் அது ஒளி தருகிறது. ஐந்து விதைகளிலும், உலகிலும் உள்ளவைகளை சாட்சியானவர் சாட்சிபாவத்தில் இருந்து கவனிப்ப

தோடு தனக்கும் ஒளியூட்டிக் கொள்கிறார். இது அறிவுக்குப் பொருத்தமாயிருக்கிறது. எப்படியாயினும் நாம் அடிவாரத்துக்கு வந்தேயாக வேண்டும். இல்லையேல் நாம் வழி தெரியாமல் அலைந்த படி இருப்போம். பிரச்சனையும் அப்படியேதான் இருக்கும்.

**அறிவின் சாரமாகிய புருஷன் மாறுபாடு இல்லாதவன். சித்தம் புருஷனுடைய வடிவத்தை ஏற்கும்போது அது அறிவுமயமாய் விளங்கும்.**

உங்களது அகவுணர்வு எப்போது அசைவற்ற தன்மைக்கும் வருகிறதோ அந்தக் கணத்தில், எப்போது மிக ஆழத்தில் மையம் கொண்டு அங்கே இருக்கிறதோ, எப்போது அது சலனமற்றிருக்கிறதோ, எப்போது அது விழிப்புணர்வின் மாறாத சுவாலையாகிறதோ அந்நிலையில் அது சுயமாய் பிரகாசிக்கும்.

**காண்பவனோடும், காணப்படும் பொருளோடும் கூடியிருப்பதால் அனைத்தையும் அறியும் தன்மை சித்தத்துக்கு வருகிறது.**

மனம் உங்களுக்கும் உலகத்துக்கும் இடையே உள்ளது. மனம் சாட்சிக்கும் சாட்சிபாவத்துக்கும் இடையே ஒரு பாலமாய் இருக்கிறது. மனம் பொருளோடும், சாட்சியுடனும்கூடி அதன் தன்மையில் மாற்றம் அடைவதுடன் அனைத்தையும் அறியும் திறனைப் பெறுகிறது.

சாட்சி, தனது சக்திப் பிரவாகத்தை மனத்தில் பாய்ச்சவேண்டும். அப்பொழுதுதான் மனம் பொருட்களை அறிய முடியும்.

உதாரணத்துக்கு: ஒரு விஞ்ஞானி ஆராய்ச்சியில் ஈடுபட்டி ருக்கிறார். அவர் மனித உடலைக் கூறுபோட்டு நுட்பமாகக் கவனித்துக் கொண்டிருந்தார், விஞ்ஞானக் கருவிகளை முடிந்த அளவு பயன்படுத்தி மிகவும் நுட்பமாக ஆராய்ந்தார். அவர் ஆத்மாவைக் கண்டறிய முயன்றார், ஆனால், எந்த ஆன்மாவையும் அவரால் காண முடியவில்லை. இயற்பியல் அல்லது வேதியியல் சம்பந்தப்பட்ட எந்தவொரு பொருளையும் கண்டறிவது அவருக்குச் சாத்தியமாயிருந்திருக்கும். ஆனால், உணர்வு நிலை சம்பந்தப் பட்டதை அவரால் கண்டறிய முடியாது. அவர் ஆய்வுக்கூடத்திலிருந்து வெளிப்பட்டதும் சொல்கிறார், 'உணர்வு நிலை என்பதாய் ஒன்று

இல்லை' தற்போது அவர் ஒன்றைத் தவறவிட்டு விட்டார். அந்த இறந்து போன உடலை ஆராய்ந்து கொண்டிருந்தது யார்? அந்தப் பொருளை கவனித்துக் கொண்டிருந்தது விஞ்ஞானியான அவர்தான், ஆனால் அவர் முற்றிலும் தன்னை மறந்துவிட்டார். விஞ்ஞானி உணர்வு நிலையை வெளியே தேடினார், ஆனால் அவ்வாறு தேடுவதே உணர்வு நிலைதான் என்பது அவருக்கு மறந்து போயிற்று. தேடுபவரே தேடப்படுகிறார். அவர் பொருளில் கவனம் செலுத்தி, ஆய்வுமூலத்தை மறந்தார்.

அறிவியல் பொருள்களில் கவனத்தைக் குவிக்கிறது. ஆனால் மதம் என்று அழைக்கப்படுகிறவை எல்லாம் மக்களைத் தங்கள் கட்டுக்குள் வைத்திருப்பதில் கவனம் செலுத்துகின்றன. ஆனால், யோகா சொல்கிறது, 'சமநிலையற்றுப் போவதில் என்ன இருக்கிறது? உலகம் இருக்கிறது, அதில் நீங்களும் இருக்கிறீர்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள்' என்று உங்கள் நினைவுகூர்தல் முழுமையாக இருக்கட்டும். அது பொருளையும் ஆதாரத்தையும் முற்றாகக் கொண்டிருக்கட்டும். உங்கள் மனதில் உணர்வு நிலையைப் பாய்ச்சும் போது, அத்துடன் புறத்தே உள்ள உலகினையும் செலுத்தினால் அங்கே புரிதல் நிகழ்கிறது.

**பதஞ்சலி சொல்கிறார்:**

> 'காண்பவனோடும் காணப்படும் பொருளோடும் கூடியிருப்பதால் அனைத்தையும் அறியும் தன்மை சித்தத்துக்கு வருகிறது' என்று.

தெரிந்து கொள்ளக்கூடிய எல்லாவற்றையும் அது தெரிந்து கொள்கிறது. மனதுக்குத் தெரியாமல் எதையும் மறைத்து வைக்க முடியாது. மதம் சார்ந்த மனதுடைய ஒருவர் தம்முடைய மதத்தில் மட்டுமே நம்பிக்கை கொண்டு பார்ப்பார். உலகம் ஒரு மாயை கனவு என்றே அவர் சொல்வார். புறப்பொருள்களில் கவனம் செலுத்துகிற விஞ்ஞானி பொருள் சார்ந்த உலகில் நம்பிக்கை கொண்டிருப்பார். அவரைப் பொறுத்தவரை பொருள்தான் உலகம், உணர்ச்சி நிலை வெறும் கவிதை (பொய்த்தோற்றம்). அது கனவு காண்பவர்களின் பேச்சு, கற்பனையன்றி நிஜமல்ல. புறப்பொருளில் அக்கறை மிக்கவர்

(extrovert)க்கு உணர்ச்சி நிலை மாயை. தன் உள்ளத்தைத் தன்பால் திருப்பி ஆய்வு செய்பவர் (introvert)க்கு உலக மாயை.

ஆனால், யோகா மேம்பட்ட அறிவியல். பதஞ்சலி சொல்கிறார், 'இரண்டுமே உண்மை' என்று. வெளிப்பக்கம், உள்பக்கம் என்று இரண்டு பக்கங்கள் உண்டு உண்மைக்கு. உள்பக்கம் என்பது எப்படி ஏற்படுகிறது? எண்ணிப்பாருங்கள் ஒரு வெளிப்பக்கம் இல்லாமல் அது எப்படி இருக்கமுடியும்? உள்பக்கம் மட்டுமே இருக்கிறது. வெளிப்பக்கம் மாயை என்று நீங்கள் கருதிக் கொள்ள முடியுமா? வெளிப்பக்கம் பொய்த்தோற்றம் என்றால் உள்பக்கமும் தானாகவே பொய்த்தோற்றமாகிவிடாதா? உங்கள் வீட்டில் உள்பக்கம் உண்மையாக இருந்து வெளிப்புறம் பொய்த்தோற்றம் எனில் எங்கு அதற்கான எல்லையை வரையறுப்பீர்கள்? எங்கு உண்மை மறைந்து பொய்த்தோற்றம் ஆரம்பமாகிறது? எப்படி பொய்த்தோற்றம் கொண்ட வெளிப்பக்கம் ஓர் உண்மையான உள்பக்கத்தைப் பெற்றிருக்க முடியும்? உடல் உண்மையற்றது என்றால் மனமும் வெறும் தோற்ற மாகத்தானே இருக்கும். மனம் பொய்த்தோற்றம் என்றால் உணர்ச்சி நிலையும் பொய்யானது என்றுதானே ஆகும். உண்மையான உணர்ச்சி நிலைக்கு உண்மையான மனம் தேவைப்படும். உண்மை யான உடலுக்கு ஓர் உண்மையான உலகம் தேவைப்படும்.

யோகா எதையும் மறுக்கவில்லை. யோகா முற்றிலும் அனுபவத்தால் அறியப்படுவது, ஒன்றின்பயன் அது மனிதனுக்குக் கொடுக்கும் நன்மையைப் பொறுத்தது என்னும் கோட்பாடு (pragmatic) உடையது.

மதங்களை விடவும் மிகுந்த நம்பிக்கையும், ஈடுபாடும் கொண்டது காரணம உள்ளிருப்பதையும், வெளியே இருப்பதையும் கொண்டு ஒரு சிறந்த கூட்டிணைப்பை அது உருவாக்குகிறது.

**'சித்தம் எண்ணற்ற ஆசைகளால் பல தரப்பட்டதாயினும் அது வேறொன்றிற்காகவே (ஆத்மன்) செயல்படுகிறது. அது கூட்டுப்பொருள் என்பதால் சுயமாகவோ, தன் பொருட்டோ செயல்படமுடியாது.'**

மனம் தொடர்ந்து செயல்படும் ஆனால் தனக்காக அல்ல. அது ஒரு நிர்வாகியின் பணியைச் செய்வது, நிறுவனத்தலைவர் அதன் பின்னால் மறைந்திருப்பார். அது தலைவருடன் ஒத்துழைக்கும். தற்போது இது மிகவும் உள்ளார்ந்த விதத்தில் புரிந்து கொள்ளப்பட வேண்டியது.

மனம் தலைவனுடன் இணைந்து செயல்பட்டால் நீங்கள் உடல் நலத்துடனும், முழுமையாகவும் இருப்பீர்கள். மனம் தன் விருப்பப்படி செயல்பட்டால் தலைவனுக்கு எதிராக செயல்பட்டால், நீங்கள் ஆரோக்கிய மற்றவராக நேரிடும். வேலைக்காரர் முதலாளி பின்னே அவருடைய நிழல்போல் சென்றால் எல்லாம் சரியாக இருக்கும். முதலாளி இடதுபக்கம் போகச் சொல்லி அவன் வலது பக்கம் சென்றால் அங்கு ஏதோ ஒன்று தவறாகிவிட்டது என்று அர்த்தம். நீங்கள் ஓட விரும்பி, ஓடத் தொடங்கும்போது உடல் ஒத்துழைக்கா விட்டால் நீங்கள் செயலற்றவராகவிட வேண்டியதுதான். நீங்கள் ஒரு செயலைச் செய்ய விரும்பி தொடங்கும்போது உடலும் மனமும் மறுத்தால், உங்கள் விருப்பத்துக்கெதிராக செயல்பட்டால் பெருங் குழப்பமாகிவிடும், ஆனால், மனித இனம் இப்படித்தான் உள்ளது.

உங்கள் மனம் ஆன்மா என்கிற தலைவனின் ஆணைப்படி நடக்க வேண்டும் என்பதே யோகாவின் குறிக்கோள். உங்கள் உடல் உங்களுடைய மனதின் ஏவல்படி நடக்க வேண்டும். உங்களைச் சுற்றி ஒரு இசைவான உலகத்தை நீங்கள் உருவாக்கவேண்டும். எப்போது எல்லாமும் இணைந்து செயல்படுகிறதோ அப்போது அப்போது உணர்வுகளுடன் இணைந்த ஓர் இனிமையான வாழ்க்கை உண்டாகும். தாழ்வான ஒன்று மேலான ஒன்றுடன் கூட்டுறவாக இருக்க வேண்டும். உங்களில் இருக்கும் மேலான ஒன்று உன்னத குறிக்கோளான இறைவனுடன் கூட்டுறவாக இருக்க வேண்டும்.

அந்நிலையில் நீங்கள் ஒரு யோகியாக இருப்பீர்கள். பிறகு நீங்கள் ஒன்றாகிவிடுவீர்கள். ஒன்றுமட்டுமே இருக்கும் என்கிற பொருளில் அல்ல. தற்போது ஒப்புமை (ஒத்திசைவு) என்ற பொருளில் ஒன்றாகிவிடுகிறீர்கள். பல கருவிகளை வாசிக்கும் ஓர் இசைக் குழுவில் ஒருவர் என்று கொள்ளலாம். கருவிகள் பலவாயினும்

அவை ஒருங்கிணைந்து கொடுக்கிறது ஒரே இசையை. பல உடல்கள், இலட்சோபலட்சம் பொருள்கள், விருப்பங்கள், ஆவல்கள், தோல்விகள், வெற்றிகள் மிகப்பல தினுசுகள் ஆனால் எல்லாமும் ஒத்திசைவில் (unison) இணக்கத்தில். ஒவ்வொன்றும்மற்ற ஒவ்வொன்றுடனும் ஒத்துழைக்கும், இறுதியாய் உங்கள் இருப்புணர்வின் மையத்துடன் எல்லாமும் ஒத்துழைக்கின்றன.

அதனால்தான் இந்தியாவில் சந்நியாசிகளை சுவாமிகள் என்கிறோம். சுவாமி என்றால் கடவுள். பதஞ்சலி சொல்கிற இணக்க நிலையை அடைந்ததும் நீங்கள் கடவுளாகி விடுகிறீர்கள். பதஞ்சலி எந்த ஒன்றுக்கும் எதிரானவர் அல்லர். அவர் இணக்கத்தன்மைக்கு அனுகூலமானவர். அவர் முரண்பாட்டுக்கு எதிரானவர். அவர் உலகத்துக்கோ வாழ்க்கைக்கோ எதிரானவர் அல்லர். அவர் எல்லா வற்றையும் ஏற்றுக்கொள்பவர், உள்வாங்கிக் கொள்பவர். இந்த உள் வாங்கிக் கொள்ளலால் தான் மேலான பலவற்றைக் கூட்டி ஒரு முழுமையாக்க முடிந்தது. இறுதியான கூட்டிணைப்பில் எல்லாமும் ஒருங்கிணைந்து செயல்படுகிறது. அந்தக்கூட்டிணைப்பில் ஒரு கரகரப்பான ஒலிகூட இருப்பதில்லை.

நான் கேட்ட ஒரு நிகழ்வினைச் சொல்கிறேன். பாபூன் என்கிற குழந்தைக்கு ஐந்து வயதாகியும் பேச்சுவரவில்லை. பிறந்ததில் இருந்து ஒரு வார்த்தைகூட வெளிவரவில்லை. அதைச்சரிப்படுத்த முடியாது, குழந்தை ஊமைதான் என்று பெற்றோர்கள் முடிவுகட்டி விட்டனர். ஒரு நாள் இரவு குழந்தை வாழைப்பழம் சாப்பிட்டுக் கொண்டிருந்தது. அப்போதுதான் தன் அம்மாவைப் பார்த்து அது தெளிவாகப் பேசத் தொடங்கியது. 'என்னிடம் அழுகிய வாழைப் பழத்தைக் கொடுத்து சாப்பிடச் சொன்னால் என்ன அர்த்தம்' என்று கேட்டது. அம்மாவிற்கு மகிழ்ச்சி. 'இத்தனை நாள் ஏன் பேசாமல் இருந்தாய்?' என்று அம்மாக்காரி கேட்டாள். 'இதுநாள் வரை உணவு நன்றாக இருந்தது' என்று குழந்தை சொல்லிற்று.

நீங்கள் ஒத்திசைவுடன் இருந்தால் உலகைப்பற்றி குறை சொல்ல மாட்டீர்கள். ஏன், எதைப்பற்றியுமே குறை சொல்லமாட்டீர்கள். குறைகூறும் மனது உங்களுக்குள் எதுவும் ஒத்திசைவாயில்லை

என்பதையே காட்டும். எல்லாம் இசைவாக இருந்துவிட்டால் குறைகூறுவது இருக்காது. நீங்கள் அருட்தொண்டர்கள் (saints) என்று அழைப்பவர்களெல்லாம் எப்படி இருக்கிறார்கள். ஒவ்வொருவரும் குறைப்படுகிறவர்களாகவே இருக்கிறார்கள். உலகைப்பற்றி, உடல்பற்றி ஆசைகள்பற்றி, அது இது அப்படி இப்படி என்று குறை சொல்கிறார்கள். எல்லாரும் குறைகூறியபடி வாழ்கிறார்கள். ஏதோ ஒன்று கரகரப்பை உண்டு பண்ணுகிறது. குறை கூறல்களே இல்லாத ஒரு குறையற்ற மனிதன். அவன் கடவுளுக்குப் பிரியமானவன் எல்லாவற்றையும் ஏற்று, உள் வாங்கி, குழப்பநிலை அற்றவனாய் அண்டவெளியாகியிருக்கிறான்.

இன்னொரு கதை கொஞ்சம் வயதான ஆனால் இனிமையான சீமாட்டி ஒருத்தி. அவளிடம் ஒரு பேசும் கிளி இருந்தது. கிளிக்குப் பயிற்சி கொடுத்து அதைப்பேச வைத்திருப்பதில் அவளுக்குப் பெருமை. அந்த ஊர் மத குருவிடம் தன் கிளியைக் காண்பிக்கும் நோக்கில் அவள் எடுத்துச் சென்றாள். அவரிடம் அதைக்காண்பித்து 'இந்தக் கிளியின் இடது காலை இழுத்தால் இறைவனிடம் பிரார்த்தனை செய்யும், வலது காலை இழுத்தால் தோத்திரங்கள் சொல்லும்' என்றாள்.

அந்த மதகுரு அவளிடம், 'இரண்டு கால்களையும் ஒரே நேரத்தில் இழுத்தால் என்ன செய்யும்' என்று கேட்டார்.

'நான் கீழே விழுந்து தரையில் மல்லாக்கக் கிடப்பேன், கிழக்கோட்டானே' என்று கிளி திருப்பிக் கத்தியது.

மனிதனுக்கும் இப்படித்தான் நிகழ்ந்திருக்கிறது. ஒரு காலை இழுத்தால் அது சரி. மற்றொருகாலை இழுத்தால் அதுவும் சரிதான். ஆனால் நீங்கள் இரண்டு கால்களையும் ஒரே நேரத்தில் இழுத்து விட்டால் எல்லாமும் தடுமாறி விழவேண்டியதுதான். அதுதான் மனிதனுக்கு நிகழ்ந்தது. அவனுடைய ஒட்டுமொத்த இருப்புணர்வும் (being) கீழே தள்ளப்பட்டுவிட்டது. மதங்கள் அவனுடைய உடலை இழுக்கமுயல்கின்றன. அவை உடலைப் பற்றிய அச்சமும், குற்ற உணர்வும் கொண்டுவிட்டிருக்கின்றன. அவை தொடர்ந்து உடலுக்கு நஞ்சூட்டி அதை அழிக்க முயல்கின்றன. நீங்கள் உடல் இல்லாமல்

ஆவியாக அலைவதைத்தான் அவை விரும்புகின்றனவோ என்னவோ.

உடம்பானது இயற்கையிலே தவறாகிவிட்டிருக்கிறது, உடம்பு பாவத்தின் வடிவமாக இருக்கிறது என்று அவை கருதுகின்றன. எனவே நீங்கள் ஆவிகளைப் போல், உடல் இல்லாமல், உடலினின்றும் நீக்கப்பட்ட உயிராய் இருந்தாக வேண்டும்.

தற்போது பொருளியல்வாதிகளும், பொதுவுடைமையாளர்களும், விஞ்ஞானிகளும் வேறு வழியில் முயற்சிக்கின்றனர். அவர்கள் உணர்வு நிலை என்பது கிடையாது, ஆத்மா என்று எதுவும் இல்லை உடல் பது பவுதிக, இராசயனக்கூறுகளால் ஆனவை, அதனால் உங்கள் உடம்பு ஒன்றே போதும் என்கிறார்கள். அவர்கள் இருகால் களையும் பிடித்து இழுக்கின்றனர். முழுமனிதனுக்கும் கீழே கிடக்கிறான், துன்பத்தில் கிடக்கிறான், ஒரு நோயாளிபோல் கிடக்கிறான், இரண்டு பகுதிகளாய் கிடக்கிறான்.

'எல்லாவற்றையும் ஏற்றுக்கொள்ளுங்கள், பயன்படுத்துங்கள் எதையும் மறுக்காதீர்கள், எல்லாவற்றையும் உருவாக்குங்கள், என்கிறார் பதஞ்சலி. அவருடைய வழியில் மறுத்தல் இல்லை. ஆனால், வலியுறுத்தல் இருக்கிறது. அதனால்தான் பதஞ்சலி உடம்பு, உணவு, யோகாசனங்கள், பிராணாயாமம் இவற்றின் பேரில் அதிகம் செயல்பட்டது.'

இவை எல்லாம் இணக்கத்தை உண்டாக்கவே உடம்புக்கு சரியான உணவு, உடன்பின் இருப்பு நிலை, சீரான மூச்சுப்பயிற்சி சக்தி உடலுக்கு என்பதனை வரையறை செய்தார். அதிக பிராணன், அதிக சக்தி என்றவை உடம்பு கிரகித்துக் கொள்ள வேண்டும். சக்தி தேவைப்படாமல் எப்பொழுதும் மிகுந்திருக்க வேண்டும் இதற்கான வழிமுறை தந்தவர்.

பிரத்தியாகாரம் எனும் மனதுக்குப் பாலம் அமைத்தார் அதன் மூலம் உடலுக்கு வெளியேயும் செல்லலாம், உள்ளேயும் செல்ல முடியும். நீங்கள் வெளியே சென்றால், பொருள்கள், விருப்பங்கள் உங்களை ஆளுகிறது. நீங்கள் உள்ளே சென்றால், விருப்பமின்மை, அறியும்தன்மை சாட்சியாய் இருத்தல், என்பது உங்களை முன்னிலைப்

படுத்தும். ஆனால் இதற்கு அமைத்த, உபயோகிக்கும் பாலம் ஒன்றே. அந்த பாலத்தை உபயோகிக்க வேண்டும் அதை அழிக்கக்கூடாது. அதை உடைக்கக்கூடாது தூக்கி எறியக்கூடாது. ஏனெனில் அந்தப் பாலம் வழியாகவே நீங்கள் இந்த உலகத்திற்கு வந்தீர்கள். அந்தப் பாலத்தின் வழியாகத்தான் நீங்கள் மறுபடியும் திரும்பப் போகிறீர்கள். நீங்கள் போவது உன் இயற்கைக்கு உள்ளே செல்லவும் வெளியேறவும் துணை செய்வது.

பதஞ்சலி எல்லாவற்றினையும் உபயோகப்படுத்துகிறார் அவருடைய மதம் பயம் அல்ல. ஆனால் அது புரிதலுக்கானது. அவருடைய மதம் கடவுளுக்கானது அல்ல, உலகத்திற்கு எதிரானது அல்ல. அவருடைய மதம் உலகத்தின் மூலம் கடவுளுக்கானது. ஏனெனில் கடவுளும் உலகமும் வேறு வேறு அல்ல. உலகம் கடவுளுடைய படைப்பு. அவருடைய படைப்புத்திறன் அவருடைய சொல்லும் திறமை. உலகமே அவருக்கு கவிதை. பாடலை நீங்கள் நிந்தனை செய்தால் அந்த செய்யுளை நிந்தனை செய்தவராவீர். செய்யுளை நிந்தனை செய்தால் அந்த புலவனுக்கு வேண்டியவனாக நீங்கள் எவ்வாறு இருக்க முடியும். இருந்தும் கவிதை ஓர் அடைய வேண்டிய இறுதிப் பொருள் அல்ல. நீங்கள் அந்த புலனையும் நாட வேண்டும். ஆனால் அந்த போகும் வழியில் கவிதையின் சுவையினை பெற்று மகிழலாம். அதில் தவறு ஒன்றுமில்லை.

ஒரு மெதோடிஸ்ட்(Methodist) மதகுரு விமானத்தில் அமெரிக்காவுக்கு சென்று கொண்டிருந்தார். அங்கிருந்த உணவு தரும் பணிப்பெண் அவருக்கு குடிப்பதற்கு ஏதாவது மதுபானம் வேண்டுமா? எனக் கேட்டாள். அதற்கு அந்த மதகுரு நாம் இப்போது எவ்வளவு உயரத்தில் பறக்கிறோம். எனக் கேட்டார். அதற்கு அவள் முப்பது ஆயிரம் அடி உயரத்தில் இருப்பதாகக் கூறினாள். அவர் மதுபானத்தை மறுத்துவிட்டு சொன்னது,"வேண்டாம்... தலைமையகத்திற்கு அருகில் வேண்டாம் என்றார்."

பயம், தொடர்ந்த பயம். மதம் சார்ந்த மனிதர்கள், தங்களது பயம் என்ற எண்ணத்தில் எப்போதும் ஆட்டுவிக்கிறார்கள். பயம் உங்களுக்கு ஓர் இனிமைப் பண்பினை முகத்தில் காட்டாது. பயம்

மரியாதையை தராது. பயம் உங்களை முடமாக்குகிறது. செயலற்றவனாக ஆக்குகிறது. களங்கப்படுத்துகிறது. பயத்தினாலேயே மதம் சார்ந்தவை நோயாக மாறிவிட்டது. அது உங்களை இயல்புக்கு மாறானவனாக சித்திரிக்கப்படுகிறது. அது உடல நலமுடையவனாய் ஆக்குவதில்லை. அது உங்களை மேலும் மேலும் வாழ்வதற்கு பயம் கொள்ளச் செய்கிறது. அது நரகம் போன்றது. நீங்கள் எது செய்தாலும் ஏதோ தவறானதைச் செய்வது போல் தோன்றும். காதலித்தால் தவறாகிவிடும். மகிழ்ச்சியாய் இருந்தால் அது தவறாகப்படும். குற்றம் உடையவர்களே மகிழ்ச்சியாக இருப்பது போல் மாறுகிறது. தவறான மனிதர்களே சந்தோஷமாய் இருக்கின்றனர். நல்ல மனிதர்கள் எப்போதும் தங்கள் கருத்திலேயே இருப்பவராய் கருதப்படுகிறார்கள், அவர்கள் ஒரு போதும் மகிழ்ச்சியுடன் இருந்ததில்லை. நீங்கள் சொர்க்கத்திற்கு செல்லவேண்டுமானால் கருத்திலேயே கவனம் செலுத்துபவராய் இருக்கவேண்டும் கட்டுப் பாடான ஒழுக்கத்தில் இருக்கவேண்டும். நீங்கள் நரகத்திற்கு செல்ல வேண்டுமெனில் சந்தோஷமாய் இருங்கள், நடனம் ஆடுங்கள். அனுபவியுங்கள். ஆனால் உமார் கயாம் சொல்வது,' எனக்கு எப்பொழுதும் ஒரு விஷயம் கவலை அளிக்கிறது...

இந்த மகிழ்ச்சியற்ற மனிதர்கள் எல்லாம் சொர்க்கத்திற்கு சென்றால் அவர்கள் எங்கு என்ன செய்வார்கள்? அவர்கள் நடனம் ஆடமுடியாது. அவர்கள் பாட முடியாது, அவர்கள் மது அருந்த முடியாது அவர்கள் மகிழ்ச்சியோடு இருக்க முடியாது. ஒருவரையும் காதலிக்க முடியாது. அவர்களுக்கு கிடைத்த சந்தர்ப்பம் வீணாகத் தான் போகும். உண்மையில் இவர்கள் முட்டாள்களே! மகிழ்ச்சியோடு இருப்பவர்கள் எல்லாம் நரகத்திற்கு எறியப்பட்டு விட்டனர். பார்க்கப் போனால் அவர்கள்தான் சொர்க்கத்திற்கு செல்ல வேண்டும். அதுதான் சரியான முடிவாக இருக்கும். "உமார்கயாம் மேலும் சொல்வது," உங்களுக்கு உண்மையில் சொர்க்கத்திற்கு செல்ல வேண்டுமெனில், சொர்க்க வாழ்க்கையை இங்கேயே வாழுங்கள். ஏனெனில் நீங்கள் அதற்கு தயாராய் இருங்கள்.

பதஞ்சலி உங்களை, உயிருடன் ஒளி வீசச் செய்ய விரும்புகிறார். 'தெரியாதனவற்றுடன் அதிர்வுகளை உண்டாக்குங்கள்' என்கிறார். அவர் எதற்கும் எதிரானவர் அல்லர். நீங்கள காதலித்தால், அவர் சொல்வது. "உங்கள் காதலை இன்னும் சிறிது ஆழமாக்குங்கள் இன்னும் அதிக பொக்கிஷங்கள் எல்லாம் நல்லது. மரங்கள், மலர்கள் நல்லது பின் மனிதனும் பெண்ணும். அவர்கள் நல்லவர்கள் அழகான வர்கள் ஏனெனில் எப்படியோ எந்தவிதத்திலே, வெகு தூரத்தில் அழகானவர்கள் ஏனெனில் எப்படி எந்தவிதத்திலே, வெகுதூரத்தில் இருந்தாலும் கடவுள் அவர்கள் மூலமாக உங்களிடம் வருகிறார். பல திரைகள் இருக்கலாம். ஆணையும் பெண்ணையும், நீங்கள் சந்திக்கும்போது, இன்னும் அதிக திரைகளும் படுதாக்களும் இருக்கும். இருந்தாலும் கடவுளே அந்த ஒளியினை, விளக்கினைத் தந்தவர். அதற்கு பல தடைகள் இருந்தாலும், அவற்றைத் தாண்டி வரும்போது, சிதைவுபட்ட ஒளியாக இருக்கலாம். இருந்தும் அந்த ஒளி கடவுளினுடையதே.

பதஞ்சலி சொல்வது,"இந்த உலகத்திற்கு எதிராக இருக்காதீர்கள். அதற்கு பதிலாக, இந்த உலகத்தின் மூலமாகத் தேடுங்கள். வழியை கண்டுபிடியுங்கள். அதன் மூலம் ஒளியின் உண்மை ஆரம்பத்தை தூய்மையான இதுவரை யாரும் பார்த்திராத ஒளியினை அடையலாம்.

உணவுக்காக மட்டுமே வாழும் மக்கள் இருக்கின்றார்கள் கூடவே உணவுக்கு எதிராகவும் சிலர் உள்ளனர். இருவருமே தவறானவர்கள் இயேசு சொல்வது, "மனிதன் ரொட்டியினால் மட்டும் வாழ்பவனல்லன்" உண்மையானது முற்றிலும் உண்மையானது. ஆனால் மனிதன் ரொட்டி இல்லாமல் வாழ முடியுமா? இதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். மனிதன் உணவுக்காக மட்டும் வாழ்வதில்லை என்பது சரி. ஆனால் மனிதன் ரொட்டி இல்லாமல் வாழமுடியாது என்பதே நிதர்சன உண்மை.

நான் படித்த சிறு நிகழ்வு:

ஒரு பெண்மணி வளர்ப்பு பறவைகள் விற்கும் கடைக்குச் சென்று ஒரு பேசும் பறவையை வாங்கினாள். ஆனால் அப்போது

அது பேசவில்லை. பேசும் என்ற உத்தரவாதம் கொடுத்தபிறகு வாங்கிச் சென்றாள். இருவாரம் கழித்து கடைக்கு திரும்பி வந்து அது இன்னும் பேசவில்லை என்று கூறினாள். கடைக்காரர் ஒரு மணியைக் கொடுத்து அதை வாங்கி வைத்தால் அது பேசத்தூண்டும் என்றார். அவள் அதை வாங்கி வீட்டில் அவர் சொன்ன மாதிரியே செய்தாள். மறுபடியும் பலன் அளிக்காததால் கடைக்காரரிடம் ஒரு வாரத்திற்கு பின் வந்து முறையிட்டாள். அதற்கு அவர் ஒரு முகம் பார்க்கும் கண்ணாடியை காண்பித்து அதை வாங்கி அப்பறவை முன் வைத்தால் பாட ஆரம்பிக்கலாம் எனச் சொன்னார். கண்ணாடி பலன் தரும் என அவளுக்கும் பட்டதால் அதனையும் வாங்கிச் சென்று வைத்தாள். அதற்கும் பலன் இல்லாததால் திரும்பவும் ஒருவாரம் கழித்து கடைக்காரரிடம் முறையிட்டாள். இந்த முறை அவர் ஒரு சின்ன பிளாஸ்டிக் பறவை கொடுத்து, பறவை அருகில் வைக்கச் சொன்னார் அதையும் வாங்கிச் சென்று வைத்துப்பார்த்தாள். அடுத்த வாரம் வந்த அவள், அவரிடம் அந்த பறவை இறந்துவிட்டது எனச் சொல்லி செல்ல வந்தாள். கடை வைத்திருப்பவருக்கும் வருத்தம் ஏற்பட்டது.

"அந்த பறவை பேசாமலே இறந்துவிட்டதா?" எனக் கடைக்காரர் கேட்டார்.

"இல்லை,' என பதிலிறுத்து, அந்த பெண்,," இறப்பதற்கு முன் ஒன்று சொல்லியது"என்றாள்.

"அது என்ன சொல்லிற்று" கடைக்காரர்

"சாப்பாடு; உயிரோடு இருப்பதற்காகவாவது எனக்கு உணவு கொடு"

ஒருவர் மிகவும் விழிப்புடன் இருக்க வேண்டும். இல்லாவிடில் நாம் போக வேண்டிய திசைக்கு எதிர் திசையில் போய் கொண்டிருப்போம். மனம் ஒரு தீவிரவாதி. இது எனது கருத்து. உணர்ந்து பார்த்ததனால் வந்தது. உணவுக்காக வாழ்ந்தவர்கள், அவர்களுடைய வாழ்க்கை முறை வெறுத்து போனால், உண்ணாவிரதம் இருக்க ஆரம்பிப்பார்கள். உடன் அவர்கள் அதனை தீவிரமாக கடைபிடிக்க ஆரம்பிப்பார்கள். நான் உண்ணாவிரதம் இருப்பவர்களை

அதிலும் அதில் தீவிரமாய் இருப்பவர்களைக் கவனித்திருக்கிறேன். அவர்கள் ஒரு காலத்தில் சாப்பாட்டுப் பிரியர்களாய், ஏன் சாப்பாட்டு ராமன்களாகவே இருந்தவர்கள். அவர்களே இது மாதிரி உண்ணாவிரதத்திலும் தீவிரமாக உள்ளவர்கள். ஆண் பெண் உறவில் அதிகம் ஈடுபடுவோர்களே பின்னர் ஒரு காலத்தில் பிரம்மச்சரியம் போன்று இருப்பர். மிகவும் கஞ்சனாய் இருப்பவர்கள் கடைசி காலத்தில் ஒவ்வொன்றாக முற்றிலும் துறப்பார்கள். இது போன்றுதான் மனது. ஒரு கோடியிலிருந்து மற்றொரு எதிர் கோடிக்குத் தாவி செல்வது.

பதஞ்சலி உங்களை ஒரு சமநிலை வாழ்வு வாழச் சொல்கிறார். நீங்கள் உணவில் தீவிரமாய் இல்லாமல் இருந்தால், உணவுக்கு எதிரானதிலும் தீவிரமாய் இருக்க மாட்டீர்கள். பாலுறவில் நீங்கள் பயித்தியம் கொள்ளாமலிருந்தால், அதற்கு எதிராய் இருப்பதிலும் பயித்தியம் கொள்ள மாட்டீர்கள். நீங்கள் இருப்பது ஒரு எளிமையான சமநிலை, அமைதி தன்மை.

ஒரு மனநோய் சிகிச்சை அளிப்பவர், நமது நடத்தையில் சிறிது வினோதமாக நாம் இருப்போம் எனச் சொல்கிறார். நாம் எல்லோரும் சிறிது வினோதமான நடத்தை உடையவர்களே. மற்றொரு வகையில் சொல்வதானால் நான் நல்ல விதத்தில் நடப்பவன், நீங்கள் இயல்புக்கு எதிராய் நடப்பவர் அவர் மறையற்றவர். இது எல்லோரும் மற்றவர்களைப் பற்றி நினைப்பது, மனதுக்குள் சொல்லுவது. நினைவில் வையுங்கள் இந்த தற்பெருமை நினைப்பு, மற்றவர்களை தாழ்வாக எண்ணுவது என்பது வளர்ச்சிக்கான சந்தர்ப்பங்களை முழுவதும் அழித்து விடுவது. நீங்கள் உங்களை பற்றினவற்றில் குறிப்பான குறிக்கோளுடன் இருங்கள். நம் ஒவ்வொருவரிடமும் சிலவற்றில் தீவிர முயற்சி எனும் பித்துபிடித்த தன்மை இருக்கிறது. ஏனெனில் மனித வர்க்கமே பல லட்சக்கணக்கான ஆண்டுகளாக பித்துப் பிடித்த தன்மைகளிலேயே இருந்திருக்கிறது. அது போலவே நம் எல்லோரிடமும், நரம்பு சம்பந்தமான தீவிரவாதமும் சிறிது இருந்து கொண்டிருக்கின்றது. ஏனெனில் மனித வளர்ச்சியில் மனிதனின் முழுச்செயல்பாடுகளும் வராத நிலையிலிருந்து கோடிக்கணக்கான

ஆண்டுகளாக தொடர்ந்து வருவது. அதனால் கவனித்து கொண்டு இருங்கள். இந்த கோளாறுபாடுகளால், நீங்கள் அதிகமாய் சாப்பிடலாம். நீங்கள் நேர்மாறாக எதிராக அதாவது நீங்கள் சாப்பிடுவதையே முழுவதும் நிறுத்தலாம். ஆனால் அந்த நரம்பு குறைபாடு அவ்வாறே இருக்கும். ஏனெனில் அது வேறு வழியில் வந்துள்ளது. அது உணவுக்கு எதிராக இருப்பது. அதனால் நீங்கள் ஆன்மீகத்தில் ஈடுபட்டிருப்பதாக பெருமை கொள்ள அங்கு ஏதுமில்லை.

ஒரு சமயத்தில் வீணா ஒரு பையனை என்னிடம் கொண்டு வந்தாள். உண்மையில் அது மாதிரிதான் அவள் என்னையே பிடித்தது. அவள் கொண்டு வந்திருந்த பையனுக்கு நரம்புக் கோளாறு இருந்து. அவன் என்னிடம் கேட்க வந்தது. ஒரு மனிதன் தண்ணீர் மட்டும் அருந்தி வாழ முடியுமா? என்பதையே. அவனுக்கு அது மாதிரி தண்ணீர் மட்டும் குடித்து உயிர் வாழ விருப்பம். அப்போதே மிகவும் ஒல்லியாக, வெளிறி போய் இருந்தான். நான் அவனிடம் “முட்டாள்தனமாக இருக்காதே” என்றதனை அவன் ஏற்கவில்லை. ஆனால் “எனக்கு அது மாதிரி, நான் தண்ணீர்மட்டும் அருந்தி உயிர் வாழ உதவி தேவை அது மாதிரி ஆலோசகர் விலாசம் தாருங்கள்” என்றான். மேலும் சொன்னது. மற்ற எல்லாம் தூய்மையாக இல்லை. ஆதலால் தூய தண்ணீர்மட்டும் அருந்த விரும்புகிறேன்'.

இது மாதிரியான ஆட்களைத்தான் 'மனநிலை பிறழ்ந்தவர் என்கிறோம். இது மாதிரியான நபர்களை இந்தியாவில் எங்கும் காணலாம். ஆசிரமங்களில் மோனாஸ்ட்ரிகளில் என்று பார்க்கலாம். நூறு பேரில், தொண்ணூற்று ஐந்து பேர் இது போன்ற 'மறை கழன்றவர்களாக' ஆக இருப்பர். அவர்களை பயித்தியம் எனச் சொல்ல இயலாது. ஏனெனில் அவர்கள் யோகம் புரிவார்கள் உபவாசம் இருப்பார்கள். பிரார்த்தனை முதலியவை புரிவார்கள். ஆனால் பார்த்தவுடன் அவர்களது 'மறைகழன்ற நிலை' புலப்படும். நான் 'மனநிலை பிறழ்ந்திருத்தல்' என அதைச் சொல்வது, அதாவது 'நியுரோடிக்கின்' தீவிரத்தன்மையை சமநிலைப்படுத்துவது என்பது

உடல் நலமாய் இருப்பது. சமநிலை அற்று இருப்பது 'Neurotic'. உங்களிடம் சமநிலை இல்லாமல் இருப்பதுபோல் தோன்றினால், மற்றவர்களிடம் கண்டால், கவனமாய் இருக்கவும் இல்லாவிடில் நீங்கள் இறுதியான ஒத்திசைவை அடையமுடியாது. தாறுமாறான சமநிலையற்ற தன்மையோடு நீங்கள் ஒரு 'ஆர்க்கெஸ்ட்ரா'வை, உங்களிடம் பதஞ்சலி கொடுப்பது போன்றதை உருவாக்க முடியாது.

மனதில் ஏற்படும் மாறுதல்களை அதன் தலைவனான புருடன் எப்பொழுதும் அறிபவன்; தூய்மையான மனசாட்சிக்கு கட்டுப்பட்ட அவனது ஒரே சீரான தன்மையினால் இது நடைபெறுகிறது.

"சதா ஞ்னே தாச் இந்த வருந்தியாஸ்
தத்–பிரபு
புருஷஸ்ய பரிணாம வித்வத்"

இதில் உள்ள 'தத் பிரபு' என்னும் பதத்தினைப் பார்ப்போம் தலைவனை தேடிக் காண வேண்டும். அவன் உங்களில் மறைந்து இருக்கிறான் அவனைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டும். நீங்கள் என்னவாய் இருந்தாலும் அவன் அங்கே இருக்கிறான். நீங்கள் என்ன வகையானவற்றை செய்தாலும் செய்வது அவனே, நீங்கள் என்னவாகப் பார்த்தாலும் அவனே பார்க்கிறவன். நீங்கள் எதை விரும்பினாலும், அதனை விரும்பியவனும் அவனே. ஒரு வெங்காயத் தினை போன்ற அதனை , அடுக்கு அடுக்காய் நீங்களே உரிக்க வேண்டும். நீங்களே உரிக்கும்போது, அன்புடன் உரியுங்கள் ஆனால் கோபத்திலோ, சீற்றம் கொண்டோ உரிக்க வேண்டாம். நீங்கள் உரிக்கும் போது எச்சரிக்கையாக, கவனத்துடன் செய்யவும். ஏனெனில் நீங்கள் கடவுளை உரிக்கிறீர்கள். மிகுந்த பிரார்த்தனையோடு உரியுங்கள். ஒரு முரட்டுத் தன்மையானவனாய் மாறாதீர்கள். உங்களுக்கும் அதனால் ஒரு துன்பமும் வரக்கூடாது வருத்தப்படுவதை உருவாக்க வேண்டாம் வருத்தப்படுவதில் மகிழ்ச்சியடையவேண்டாம் வருத்தப்படுவதில் மகிழ்ச்சிகொள்ள ஆரம்பித்தால், முரட்டுத்தன்மை யானவராய் மாறிவிடுவீர்கள். அது ஒரு தற்கொலைக்கான வழிபோன்றது. உங்களை நீங்களே அழித்துக் கொள்வீர்கள். ஒருவர்

மிகுந்த மிக்க எச்சரிக்கையுடன் கவனத்துடனும் உருவாக்கும் திறனுடனும் இருக்க வேண்டும். நீங்கள் ஒரு புனித இடத்தில் சென்று கொண்டிருக்கிறீர்கள்.

மோசஸ், மலை உச்சியினை அடைந்தபோது என்ன பார்த்தார்? அங்குதான் அவர் கடவுளை சந்தித்தார். அங்கு அவர் முதலில் பார்த்தது என்ன? அவர், தீயினை, நெருப்பின் ஜுவாலையைப் ஒரு புதரில் கண்டார் பின் ஒரு குரல் பேசியது கேட்டது. 'நீங்கள் உங்கள் காலனியை எடுத்து, அங்கேயே விட்டு விட்டு வாருங்கள், ஏனெனில் இது ஒரு புனிதமான தலம் புனிதமான தரையில் நடக்கிறீர்கள் என்றது. ஆனால் நீங்கள் எங்கு நடந்தாலும் நீங்கள் புனித தரையில் நடக்கிறீர்கள். நீங்கள் உங்கள் உடலைத் தொடும்போது நீங்கள் புனிதமான ஒன்றைத் தொடுகிறீர்கள். நீங்கள் எது சாப்பிட்டாலும் நீங்கள் சாப்பிடுவது ஏதோ ஒரு புனிதமானதை; அன்னம் பிரம்ம உணவு தான் கடவுள். நீங்கள் ஒருவரை நேசிக்கும்போது கடவுளையே நேசிக்கிறீர்கள், ஏனெனில் அவரே சுற்றியுள்ள எல்லா இடத்திலும் இருக்கிறார். கோடிக்கணக்கான உருவில் இருக்கிறார். அவரே எல்லாவற்றையும் விளக்கமாக சொல்கிறவர்.

உங்கள் மனதில் இதை எப்பொழுதும் வைத்திருங்கள். அதனால் உங்களை எந்தவிதமான 'நியுரோசிஸ்'–ம் பற்றிக் கொள்ளாமல் இருக்கும். சம நிலையுடனும் பூரண அமைதியுடனும் இருங்கள். பாதையில் நடுவே நடந்து செல்லுங்கள், நீங்கள் உங்களை ஒரு பொழுதும் தொலைத்துவிட முடியாது. ஒரு பொழுதும் நீங்கள் சமநிலையற்றோ மேலும் கீழுமாகவோ இருக்காதீர்கள்.

யோகமே சமநிலை. யோகம் சமநிலையில் இருக்க வேண்டும் ஏனெனில் அதுவே இறுதியான சேர்க்கைக்கு வழி. இருக்கக்கூடிய எல்லாவற்றினுடைய ஒத்திசைவு.

முதல் கேள்வி:

> உங்களுடைய சொற்பொழிவுகளில் ஏதோ ஒன்று என்னுடைய உணர்வுகளைப் பாதித்தது. அது என்னை நம்புவதற்கும் உங்களை நம்புவதற்கும் இடையேயான முரண்பாடு. என்னுள் ஒரு பகுதி சொல்கிறது, 'என்னுடைய சுயத்தை நான் நம்பு வதுடன் என்னுடைய சுயத்தை நான் பின்பற்றுவேனாயின் அந்நிலையில் நான் சரணடைந்து உங்களை ஏற்றுக் கொள்வேன்.

மனம் தந்திரமாய் ஏமாற்றும் தன்மை உடையது. அதனை மாறாமல் நினைவில் கொள்ள வேண்டும். நான் இதைத்தான் உங்களுக்குச் சொல்லிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் உங்களை நம்பினால் என்னையும் நம்புவீர்கள். அல்லது இப்படிச் சொல்லலாம். நீங்கள் என்னை நம்புவீர்களாயின் உங்களையும் நம்புவீர்கள். முரண் பாடு இடம் பெறாது. மனதின் காரணமாகவே முரண்பாடு ஏற்படு கிறது. நீங்கள் உங்களை நம்பினால் எல்லாரையும் நம்புவீர்கள், காரணம் நீங்கள் வாழ்க்கையை நம்புகிறீர்கள். உங்களை மோசம் பண்ணுபவர்களையும் நீங்கள் நம்புவீர்கள், ஏனெனில் அது உங்களை பொறுத்தது அல்ல. அது அவர்களுடைய பிரச்சினை, அது உங்க ளுடைய பிரச்சினையல்ல. அவர்கள் உங்களை ஏமாற்றுகிறார்களோ அல்லது ஏமாற்றவில்லையோ உங்கள் நம்பிக்கைக்கும் அதற்கும் எந்தத் தொடர்பும் இல்லை.' 'என்னையாரும் ஏமாற்ற முயலவில்லை என்ற நிபந்தனையுடன் என்னுடைய நம்பிக்கை இருக்கிறது' என்று நீங்கள் சொன்னால், அந்நிலையில் உங்கள் நம்பிக்கை இடம் பெறாது, காரணம் ஒவ்வொரு சாத்தியமும் உங்களுக்குள் ஏதோ ஒரு தயக்கத்தை உண்டு பண்ணும்.'

"யார் கண்டது– அந்த ஆள் மோசம் செய்வான் என்று?" எதிர் காலத்தை நீங்கள் எப்படி புரிந்து கொள்ள முடியும்? ஏமாற்றுவேலை எதிர்காலத்தில் நிகழலாம். நிகழாமல் போகலாம். எப்படியாயினும்

அது எதிர்காலம் சார்ந்த நம்பிக்கையே இந்தக் கணத்தில் வைக்கப் படுகிறது.

சில நேரங்களில் ஒரு நல்ல மனிதன்கூட ஏமாற்றலாம். ஒரு புனிதர் எப்போது வேண்டுமானாலும் பாவியாகலாம். சில நேரங்களில் ரொம்பக் கெட்டவன்கூட நம்பிக்கைக்குரியவனாக நடந்துகொள்வான். நம்பிக்கை நிபந்தனையற்றது. அது சொல்கிறது, என்னிடம் நம்புகிற தன்மை இருக்கிறது. தற்போது அதுமதிக்கப்படுகிறதோ இல்லையோ, அது ஏமாற்றப்படுகிறதோ என்னவோ, எவ்வகையிலும் அது முக்கியமில்லை.

நம்பிக்கைக்கும் அதன் இலக்குக்கும் எந்த தொடர்பும் இல்லை. நம்பிக்கை உங்கள் உள்ளார்ந்த தன்மையுடன் தொடர்புடையது. நீங்கள் நம்புகிறீர்களா? உங்களால் நம்ப முடியுமாயின் உண்மையில் முதல் நம்பிக்கை உங்களைப்பற்றியதாகவே இருக்கும் – உங்களை நீங்கள் நம்புகிறீர்கள். உங்கள் இருப்புணர்வின் உள்ளார்ந்த மையத்தில் முதல் செய்கை நிகழ வேண்டும். உங்களை நீங்கள் நம்பாவிட்டால் அந்நிலையில் எல்லாமும் வெகு தொலைவுக்கு விலகிச் சென்றுவிடும். அப்படியானால் நான் உங்களிடமிருந்து வெகு தொலைவில் விலகியிருக்கிறேன். உங்களால் எப்படி என்னை நம்ப முடியும்? உங்களுக்கு நெருக்கமாய் இருக்கும் உங்களையே நீங்கள் நம்பவில்லை. என்னை எப்படி உங்களால் நம்ப முடியும்? உங்களை நீங்கள் நம்பாவிட்டால், நீங்கள் எதைச் செய்தாலும் ஓர் அவநம்பிக்கை மேற்பரப்பிற்கு அடியிலான நீரோட்டமாய் (under current) இருந்து கொண்டிருக்கும். உங்களை நீங்கள் நம்பினால், என்னை மட்டுமல்ல ஒட்டு மொத்த வாழ்க்கையையும் நீங்கள் நம்புகிறீர்கள். நம்பிக்கை என்றால் எல்லாமே உள்ளிட்டதுதான். நம்பிக்கையின் பொருள்– வாழ்க்கையில் நம்பிக்கை, உங்களைச் சுற்றியுள்ள பரம்பொருளில், நீங்கள் எங்கிருந்து வந்தீர்களோ அந்தப்பரம் பொருளில், எந்த ஒன்றில் ஒருநாள் மறைவீர்களோ அந்த பரம்பொருளில் நம்பிக்கை.

சந்தேகத்தால் ஏற்படும் உணர்ச்சி மிகைப்பை, சந்தேகத்தால் வரும் துன்பத்தை, சந்தேகம் உருவாக்கும் நரகத்தை நீங்கள் புரிந்து கொண்டிருக்கிறீர்கள் என்பதையே நம்பிக்கை குறிக்கிறது.

சந்தேகத்தை நீங்கள் அறிந்து கொள்கிறீர்கள். அறிந்து கொண்டதன் மூலம் அதை நீங்கள் நழுவவிடுகிறீர்கள். சந்தேகம் மறைகிறபோது அங்கே நம்பிக்கை இருக்கிறது. அது உங்களுக்குள், உங்கள் மனோ பாவத்துக்குள், அணுகு முறைக்குள், நிகழும் ஒரு மாற்றம் பற்றியது. நம்பிக்கை எவ்வித முரண்பாட்டையும் அறியாது.

கேள்வி கேட்டவர் கேட்கிறார், ‘ உங்களை நம்புவதற்கும் என்னையே நம்புவதற்கும் இடையில் உள்ள முரண்பாடு அது' என்று அதுதான் முரண்பாடாக இருப்பின், அந்நிலையில் உங்களை நம்புங் கள். உங்களால் உங்களை நம்ப முடிந்தால் வேறெதுவும் தேவை யில்லை. அந்நிலையில் உங்களுடைய நம்பிக்கையில் நீங்கள் வேரூன்றி இருக்கிறீர்கள்.

ஒரு மரம் மண்ணில் ஆழமாக வேரூன்றியிருக்கிறபோது, அது வானைத் தொடுமளவு கிளைகளை பரப்பிக் கொண்டே இருக்கும். அது மண்ணில் வேரூன்றியிருக்கும் நிலையில், அது வானை நம்பக் கூடும். அது மண்ணில் வேர் விட்டிராதபட்சத்தில் அது வானை நம்பமுடியாமல் போகும். அப்போது அது அச்சத்தில் இருக்கும். புயல் பற்றிய அச்சம், மழை பற்றிய அச்சம், சூரியன், காற்று என்று எதைப் பற்றியும் அச்சம். வேரில் இருந்து அந்த அச்சம் வருகிறது. தான் சரியாக வேரூன்றாவிட்டால் மரம் அதனை அறிந்திருக்கும். சின்ன விபத்து நேரிட்டாலும் அது தீர்ந்தது தான். வேரற்ற மையமில்லாத வாழ்க்கை எவ்வகையிலும் வாழ்க்கையே அல்ல. அது நீண்ட அவகாசத்தில் நிதானமாய் செய்து கொள்கிற தற்கொலைதான். ஆக, நீங்கள் உங்களை நம்பினால், என்னைப் பற்றிய எல்லாவற்றையும் மறந்துவிடுங்கள். கேள்வி எழுப்பக்கூட அவசியமில்லை. நீங்கள் உங்களை நம்பவில்லை என்பது எனக்கும் தெரியும் உங்களுக்கும் தெரியும்.

மனம் ஒரு தந்திரமான வழியைத் தோற்றுவித்துக் கொள்கிறது. மனம் சொல்கிறது, 'யாரையும் நம்பாதே, உன்னை நம்பு' என்று. உங்களை உங்களால் நம்ப முடியவில்லை. அதனால்தான் நீங்கள் இங்கிருக்கிறீர்கள். இல்லையேல் நீங்கள் எதற்காக இங்கிருப்பது? தன்னை நம்புகிற ஒருவர் எங்கும் செல்ல வேண்டியதில்லை; எங்கா னும் சென்று கற்றாக வேண்டும் என்பதில்லை. இலட்சக்கணக்கான

வழிகளில வாழ்க்கை உங்களை வந்தடைகிறது. எங்கும் செல்லத் தேவையில்லை.

நீங்கள் எங்கிருந்தாலும் உண்மை நிகழும் ஆனால் உங்களை நீங்கள் நம்பவில்லை. 'என்னை நம்புங்கள்' என்று நான் சொல்கிற பொழுது, உங்களை நம்பச் செய்வதற்கு அதுவே உபாயமாய் இருக்கிறது. உங்களை நீங்கள் நம்ப முடியாதா? சரி, என்னை நம்புங்கள். என்னை நம்புவது நம்பிக்கை பற்றிய ருசியை உங்களுக்கு வழங்கலாம். அந்நிலையில் உங்களை நீங்கள் நம்ப முடியும்.

குரு என்பவர் உங்களை வந்தடையும் நீண்ட சாலையன்றி வேறேயென்ன? காரணம் குறுக்கு வழியில் உங்களால் வரமுடியாது. கொஞ்சம் நீண்ட வழி என்றாலும் நீங்கள் தொடர்ந்து செல்லத்தான் வேண்டும். ஆனால், குருவின் மூலமாக உங்களை நீங்கள் வந்தடை கிறீர்கள். நீங்கள் என்னையே பற்றிக் கொண்டிருந்தால் அப்போது உங்களுக்கு எதிரியாகிவிடுவேன், அந்நிலையில் நான் உங்களுக்குத் துணைபுரியமாட்டேன்.

அந்நிலையில் நான் உங்களை நேசிக்கமாட்டேன், உங்களிடம் பரிவாக நடந்து கொள்ளமாட்டேன். என்னிடம் உள்ள பரிவு கொஞ் சம் கொஞ்சமாக உங்கள் பக்கம் திருப்புவதற்குத் தான். 'புத்தரை எங்காவது வழியில் கண்டால் உடனே தீர்த்துக்கட்டிவிடுங்கள் என்று நான் சொல்வது அதற்காகத்தான்.' என்னை நீங்கள் பற்றத் தொடங்கியிருந்தால் உடனே என்னை விட்டுவிடுங்கள். என்னைத் தீர்த்துவிடுங்கள், என்னைப்பற்றிய எல்லாவற்றையும் மறந்து விடுங்கள். ஆனால், உங்களுடைய மனம் கூறும், 'பற்றிக்கொண்டு விடுவோம் என்கிற பயம் மிகுதியாக இருந்தால், பயணத்தை தொடங்காமல் இருந்து விடுவதே நல்லது' என்று. அப்போது நீங்கள் அவநம்பிக்கையில் இருப்பீர்கள். நம்பிக்கையின் ருசியை நீங்கள் பெறுவதற்கான ஒரு வாய்ப்பை உங்களுக்கு வழங்குகிறேன்.

குருவைப்பற்றிக் கொண்டிருக்க வேண்டாம் என்று நான் சொல்கிறபொழுது உங்களுடைய அகந்தை தகுதியாய் உணரும். அதுகூறும், 'மிகச் சரியான உண்மை', நான் எதற்காக ஒருவரை நம்ப வேண்டும்? நான் எதற்காக ஒருவரைச் சரணடையவேண்டும்? இதுதான் சரியான செய்கை' என்று ஜே. கிருஷ்ணமூர்த்தியின்

சீடர்களுக்கு அதுதான் நேரிட்டது. நாற்பது ஆண்டுகளாக அவர் கற்பித்துக் கொண்டிருந்தார், அதைக் கேட்பதில் தங்கள் வாழ்க்கை முழுவதையும் செலவிட்டவர்கள் பலர், எதுவும் நடந்துவிடவில்லை காரணம் குருவென்று யாருமில்லை, சீடர்களும் இல்லை என்று அவர் சொல்லிக் கொண்டிருந்தார். அவர் உங்கள்மீது உங்களை வீசியெறிந்தபடி இருந்தார். நம்பிக்கையின் ருசியை நீங்கள் பெறுவதற்கு முன்பே அவர் உங்கள் மீது உங்களை வீசியடித்துக் கொண்டு இருந்தார். தம்மை நெருங்குவதற்கு அவர் உங்களை அனுமதிப்பதில்லை. இது ஓர் உச்சநிலை, நமக்கு யாரும் குருவென்று கிடையாது என்பதில் உங்களுடைய அகந்தை தகுதியாய் உணரும். நீங்கள் யாரிடமும் சரணடையவேண்டியிருக்காதுதானே. அது ஒன்றும் தகுதியானதல்ல, தாழ்வானதேயாகும். ரொம்பவும் பண்பான தற்பெருமைக்காரர்களை நீங்கள் பார்க்க விரும்பினால் கிருஷ்ண மூர்த்தியை சுற்றி அவர்கள் இருக்கிறார்கள். ரொம்பவும் பண்பாடான தற்பெருமைக்காரர்களை நீங்கள் பார்க்க விரும்பினால் கிருஷ்ண மூர்த்தியைச் சுற்றி அவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் ரொம்பவும் பண்பாடானவர்கள், உலகியலுக்கேற்ப நடப்பவர்கள், மிகுதியான அறிவுத்திறனும், தந்திரமும், சாமர்த்தியமும் தர்க்கமும் உடையவர்கள். ஆனால் அவர்களுக்கு எதுவும் நிகழ்ந்துவிடவில்லை.

அவர்களில் பலரும் என்னிடம் வந்து', நாங்கள் அறிதலும் புரிதலும் கொண்டிருக்கிறோம். ஆனால், எங்களுடைய புரிந்து கொள்ளும் திறன் அறிவு சார்ந்தது. எதுவும் நிகழ்ந்துவிடவில்லை. எங்களுக்கு எந்தவித மாற்றமும் ஏற்படவில்லை என்கிறபோது அதில் என்ன இருக்கிறது.? என்றனர். கிருஷ்ணமூர்த்தி சொல்கிறார், தம்மைப்பற்றிக் கொள்ள வேண்டாம் என்று. ஆனால், நீங்கள் உங்களைப் பற்றிக் கொண்டிருக்கிறீர்கள். எதைத் தேர்வு செய்து கொள்வது என்கிற நிலை வருமாயின், உங்களைப் பற்றிக் கொள்வதைவிட கிருஷ்ணமூர்த்தியைப் பற்றிக் கொண்டுவிடுவது நல்லது.

அடுத்து, மற்றோர் உச்சம். தங்களைப்பற்றிக் கொள்ளும்படி உங்களை வற்புறுத்துகிற குருமார்கள் இருக்கிறார்கள். சரணாகதி முடிவாயிருக்கிறது, உபாயமாக அல்ல. அவர்கள் சொல்கிறார்கள். ‘முழுமையாக என்னிடம் இருந்து விடுங்கள். உங்களுடைய

வீட்டுக்கு நீங்கள் திரும்ப வேண்டியதில்லை' என்று. அதுவும் ஆபத்தானதுதான், காரணம் அந்நிலையில் நீங்கள் பாதையில் இருப்பீர்களேயன்றி, குறிக்கோளைச் சென்றடையமாட்டீர்கள்.' காரணம், குறிக்கோளாயிருப்பது நீங்கள்தாம். நான் ஒரு வழியாயிருக்கிறேன். தம்மை ஒரு வழியாக நீங்கள் பயன்படுத்திக்கொள்ள கிருஷ்ணமூர்த்தி அனுமதிக்கமாட்டார். உங்களைக் குறிக்கோளாவதற்கு அனுமதிக்காதவர்களும் இருக்கின்றனர். 'நீங்கள் பயணித்தபடி இருங்கள், தொடர்ந்து பயணியுங்கள்' என்று அவர்கள் சொல்கிறார்கள். நீங்கள் தொடர்ந்து பயணிக்கிறீர்கள் ஆனால் ஒரு போதும் சென்றடைவதில்லை. காரணம் சென்றடையும் இடம் உங்கள் இருப்புணர்வின் உள்ளார்ந்த மையத்தில் அல்லவா இருக்கிறது.

நான் கிருஷ்ணமூர்த்தியுடனோ மற்ற உச்ச நிலையில் உள்ளவர்களுடனோ உடன்பாடு கொண்டிருக்கவில்லை. நான் சொல்கிறேன், என்னை ஒரு பாதையாய் பயன்படுத்திக் கொள்ளுங்கள், ஆனால் ஒரு பாதையாக என்பதை நினைவில் வையுங்கள். நான் ஒரு குறிக்கோளாய் மாறத் தொடங்கினால் என்னை உடனே தீர்த்துக்கட்டி விடுங்கள். காரணம் தற்போது மருந்தே ஒரு பிணியாகிவிட்டது. மருந்தை உபயோகிப்பதோடு மறந்துவிட வேண்டும்.அந்த மருந்து குப்பிகளையும், மருத்துவரின் பரிந்துரைச் சீட்டுகளையும் தொடர்ந்து பத்திரப்படுத்திக் கொண்டிருக்கக்கூடாது.

அது ஓர் உபாயம், கருவி. தற்போது நீங்கள் நலமுடன் இருப்பதால் அதை விட்டுவிடுங்கள். அதைப்பற்றிய எல்லாவற்றையும் மறந்து விடுங்கள். அதனிடம் நன்றி உடையவராயிருக்கலாம், ஆனால் அதைத் தொடர்ந்து சுமந்திருக்கத் தேவையில்லை.

புத்தர் சொல்லியிருக்கிறார்– ஐந்துமுட்டாள்கள் ஒரு ஆற்றைக் கடந்து கொண்டிருந்தனர். அப்போது அவர்கள் சிந்திக்கத் தொடங்கினர்– முட்டாள்கள் தத்துவமேதைகளாக இருப்பார்கள், மறுதலையானதும் (vicerversa) உண்மைதான். அவர்கள் சிந்திக்கத் தொடங்கினர். 'என்ன செய்வது? இந்தப்படகு நமக்குப் பேருதவியாக இருந்தது. இல்லையேல் நாம் அந்தக் கரையிலேயே இருந்து செத்துப் போயிருப்போம். அது காட்டுப் பிரதேசம். இருட்டாகிவிட்டது, அங்கே கொடிய மிருகங்களும், வழிப்பறிக்காரர்களும் உண்டு, எது

வேண்டுமானாலும் நடந்திருக்கும். இந்தப் படகுதானே நம்மைக் காப்பாற்றியது. நாம் இந்த படகிடம் நன்றியுடையவர்களாயிருக்க வேண்டும் எப்போதைக்குமாய்,'என்று. ஒரு முட்டாள் சொன்னான்,' அது ரொம்பசரி. நாம் இப்போது படகைத் தலையில் சுமந்து செல்வோம், இந்தப் படகு வழிபடத்தக்கதாகும்.'என்று. எனவே, தங்கள் தலையில் படகைச் சுமந்து கொண்டு அவர்கள் ஊருக்குள் சென்றனர். வழியில் பலரும் கேட்டார்கள். 'நீங்கள் என்ன செய்கிறீர்கள்? படகில் அமர்ந்து செல்பவர்களை நாங்கள் பார்த்திருக்கிறோம், ஆனால் மனிதர்கள் தலையில் படகு அமர்ந்து செல்வதைப் பார்த்ததில்லை. என்ன ஆயிற்று?', அவர்கள் சொன்னார்கள், 'உங்களுக்குத் தெரியாது. படகு எங்களை காப்பாற்றியது. தற்போது எங்களால் அதை மறக்க முடியவில்லை. எங்கள் வாழ்க்கை முழுதும் நாங்கள் படகை எங்களுடைய தலையில் சுமந்து செல்வதாயிருக்கிறோம்.' தற்போது அந்தப்படகு அவர்களை ஒரேயடியாகக் கொன்று போட்டது. அதைவிட ஆற்றின் அந்தக் கரையிலேயே இருந்திருக்கலாம் படகை எப்போதைக்கும் சுமந்து செல்வதைவிட காட்டில் உள்ள விலங்குகளுக்கு இரையாயிருக்கலாம். இது முடிவுற்றதுன்பம். ஆற்றின் அந்தக் கரையினால் ஒரு நொடியில் முடிந்துவிட்டிருக்கும். தற்போது, சலிப்பூட்டுகிற இந்தச் சுமையை அவர்கள் தங்கள் வாழ்க்கை நெடுகிலும் சுமக்க வேண்டியதிருக்கும். எத்தனைக்குச் அவர்கள் சுமக்கிறார்களோ, அத்தனைக்கு அந்தச்சுமை அவர்களுக்குப் பழக்கமாகிவிடும்.

அந்தச் சுமையில்லாமல் அவர்களால் தகுதியாய் உணர முடியாது. அவர்கள் அசவுகர்யமாக உணரும்படி இருக்கும். தற்போது அவர்கள் எதையும் செய்வதற்கில்லை. தொடர்ந்து படகையே சுமந்திருப்பதால் வேறு எதையும் செய்கிறதிறன் அவர்களுக்கு இல்லாமல் போய்விடும்.

மத நம்பிக்கை உடைய பலருக்கும் அப்படித்தான் ஆகிவிட்டிருக் கிறது. அவர்கள் தங்களுடைய படகைச் சுமந்து கொண்டிருக் கிறார்கள். சமண மடாலயங்களையும் சென்று பாருங்கள். அங்கே என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? போதுமானதாய் இருக்கிறது அவர்களுக்கு. ஒட்டு மொத்த வாழ்க்கையும் அப்படியே கைவிடப்பட்டு விட்டது. அவர்கள் பிரார்த்தனை அல்லது தியானம் பண்ணுவதோடு சரி. அவர்களிடம் படைப்பாற்றல் இல்லை. வாழ்க்கையை அவர்கள்

கொஞ்சமும் வளப்படுத்திக் கொள்ளவில்லை. அவர்களுடைய வாழ்க்கை அழகற்றுப்போக அவர்களே காரணம். ஆனால், பாருங்கள் அவர்கள் எப்போதும் தீவிரமாய் எதையாவது செய்தபடி இருப்பார்கள். இருபத்து நான்கு மணி நேரமும் ஏதாவதொன்றில் ஈடுபட்டிருப்பார்கள். ஒரு படகைத் தங்களுடைய தலையில் அவர்கள் சுமந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய மதச் சடங்குகளே அந்தப்படகு.

நினைவிருக்கட்டும். என்னிடம் வாருங்கள், என்னை நம்புங்கள். நம்பிக்கையென்றால் என்னவென்பதைக் கற்றுக் கொள்ளுங்கள். என்னுடைய தோட்டத்துக்கு வாருங்கள், மரங்களினூடே கடந்து செல்லும் காற்றைக் கவனியுங்கள், வீட்டுக்குத் திரும்பிச் சென்றதும் உங்களுடைய சொந்தத் தோட்டத்தை நீங்கள் உருவாக்குங்கள். இந்த மலர்களையும், பறவைகளின் பாடல்களையும் வந்தடையுங்கள். அவற்றில் இருந்து ஓர் ஆழ்ந்த அனுபவத்தைப் பெறுங்கள், பிறகு திரும்பிச் செல்லுங்கள். அடுத்து உங்களுடைய உங்களுக்கென்று ஓர் உலகினை உருவாக்கிக் கொள்ளுங்கள். என்னுடைய சன்னலின் வழியே ஒரு காட்சியைப் பெறுங்கள். ஒட்டு மொத்த வாழ்க்கையையும் உங்களுக்குத் தெளிவாகும்படியாய் நான் மின்னலைப்போல் ஒளிகாட்டிச் செல்கிறேன் உங்களுக்கு முன்பாய். ஆனால் அதுவோர் கணநேரக்காட்சியாகவே இருக்கும்.

என்னைப் பற்றியிருக்கத் தேவையில்லை. காரணம், எப்போது உங்களுடைய சொந்த வீட்டை உருவாக்கப் போகிறீர்கள்? உங்களுடைய தோட்டத்தை நீங்கள் எப்போது உருவாக்கப் போகிறீர்கள்? உங்களுடைய பூக்கள் எப்போது மலரப் போகின்றன? உங்களுடைய பறவைகள் எப்போது பாடப்போகிறன்றன? இல்லை என்றால் உங்களுக்கு உதவிய படகை நீங்கள் சுமந்து செல்வீர்கள். ஆனால், அப்போது மறுகரை இழக்கப்பட்டு விடுகிறது. நீங்கள்தாம் உங்களுடைய படகைத் தலையில் சுமந்து செல்கிறீர்களே. உங்களால் எப்படி மறுகரையில் ஆட முடியும்? எப்படிக் கொண்டாடுவீர்கள்? இந்தப்படகு ஒரு மாறாத சிறைவாசம் போல.

என்னை நம்பும்படி நான் சொல்கிறபோது, ஒரு குறிப்பிட்ட சூழல் என்னுள் ஏற்பட்டிருக்கிறது, அது பற்றிய ஒரு காட்சியைப் பெறுங்கள். வாருங்கள், அந்தச் சூழல் உங்களையும் சூழ்ந்து கொள்ள விடுங்கள். உங்கள் இதயத்தில் நான் அதிர்வுகளை

ஏற்படுத்துகிறேன். உங்களைச் சுற்றி நான் துடிப்புகளை உண்டு பண்ணுகிறேன். உங்கள் இருப்புணர்வின் உள்ளார்ந்த மையத்தில் என்னுடைய துடிப்பு அசைவுகள் இருக்கும். நான் ஒரு பாடலை இங்கே பாடிக்கொண்டிருக்கிறேன். அது உங்களுக்குள் எதிரொலிக் கட்டும். அப்போதுதான் 'இந்தப்பாடல் சாத்தியமானது' என்பதை நீங்கள் அறிந்து கொள்வீர்கள். புத்தர் போயாயிற்று, இயேசு நாதர் இங்கே இல்லை, அது இயல்பான விசயம். இயேசுவைச் செவிமடுப்பது உங்களுக்குச் சாத்தியமில்லை. உங்களால் பைபிளை படிக்கவும் முடியும். கால வகையில் ஏதோ ஓரிடத்தில் நடந்ததை அது எழுதி வைத்திருக்கிறது, ஆனால், அதை உங்களால் நம்ப முடியாது. அது ஒரு கதையாக, புராணமாக இருக்கலாம். புத்தர் கவித்துமான ஒரு கற்பனையாக இருக்கலாம், கவிஞர்கள் அவரை உருவாக்கியிருக்கலாம். யார் கண்டது? – காரணம் உங்களுடைய வாழ்க்கையில் அத்தகைய மனிதர்களை நீங்கள் எதிர் கொண்டிருக்க மாட்டீர்கள். நீங்கள் மதம் சார்ந்த ஒருவரைச் சந்திக்காவிடில் மதம் எங்கோ ஓரிடத்தில் ஒரு கனவாகிவிட்டிருக்கும்தானே. அது ஒரு போதும் உண்மையாகிவிட்டி ருக்காது. மெய்ம்மையை ருசித்த ஒருவரை, வேறான உலகில் வேறொரு பரிமாணம் கொண்டவரை, கடவுள் யாருக்கு ஒரு கோட் பாடாக இல்லையே அவரை, சுவாசத்தைப் போல் உண்மையாயிருப்ப வரை நம்புங்கள், அவருக்குள் சென்றடையுங்கள். அப்போது தயங்காதீர்கள், துணிவு பெறுங்கள். கொஞ்சம் தைரியமாக இருங்கள்.

அந்நிலையில் கோழையாகிவிடாதீர்கள். வாசலுக்கு வெளியே ஒளிந்து நழுவாதீர்கள், ஆலயத்துக்குள் பிரவேசியுங்கள். உண்மையில் இந்த ஆலயம் உங்களுடைய வசிப்பிடமாய் இருக்கப் போவதில்லை. உங்களுடைய சொந்தக் கோயிலை நீங்கள் உருவாக்கிக் கொண்ட பின்பே கடவுளை நீங்கள் வழிபட முடியும். இறைவனை வழிபட இரவல் கோயில்கள் பயன்படாது. ஆனால், ஒரு கோயிலை எப்படி உருவாக்குவது?

முதலாவது, கோயில்கள் இருந்திருக்கும் என்பதே நம்பிக்கை சாத்தியமற்றதாய் இருக்கிறது. இயேசுவின் இருப்பு ஐயத்திற்கிடமாய் உள்ளது. புத்தர் ஒரு கட்டுக் கதையாய் தெரிகிறார், வரலாறாக அல்ல. கிருஷ்ணர் ஏதோ கனவுலகில் இருப்பது போல் இருக்கிறது. வரலாற்றில் இன்னும்தூரம் சென்று பார்த்தால் மேலும்பல விசயங்கள்

புராணக் கதைகளாகவே இருக்கின்றன. உண்மை என்பதற்கான அறிகுறியே காணப்படவில்லை.

என்னை நம்புங்கள் என்று நான் சொல்கிறபோது வெளியே நிற்காதீர்கள்' என்பதையே நான் குறித்துக் காட்டுகிறேன். நீங்கள் எனக்குப் பக்கமாக வந்திருந்தால், இன்னும் நெருங்கி வரப்பாருங்கள். நீங்கள் வருவதாயின் உள்ளே வந்துவிடுங்கள். அது ஒரு வாழ்வானுப வமாக இருக்கும் உங்களுக்கு என்னுடைய கண்களுக்குள் கூர்ந்து கவனித்தபின், என் இதயத்துக்குள் பிரவேசித்தபின் நீங்கள் இயேசுவை நம்பாமல் இருக்கச் சாத்தயமில்லை. புத்தரை ஒரு கட்டுக்கதை என்று சொல்வதும் உங்களுக்குச் சாத்தியமாயிருக்காது. ஆனாலும் நான் சொல்கிறேன் புத்தரை எங்காவது உங்களுடைய வழியில் பார்த்தால், அவரைக் கொன்று போடுங்கள்.

என் வழியே வாருங்கள், ஆனால் அப்படியேநின்று விடாதீர்கள். அனுபவத்தைப் பெற்றபின் போய்க் கொண்டேயிருங்கள். அந்த அனுபவத்தை நினைவுகளில் இருந்து இழந்துவிட்டாலும், அது மறைந்துவிட்டாலும், அதை மறுபடியும் நீங்கள் பெறுவதற்கு அனுகூலமாய் நான் இங்கே இருக்கிறேன். திரும்பவும் என்னிடம் வாருங்கள். அந்த நிலையில் மட்டுமே நீங்கள் அதை வாழ்ந்து பார்க்க முடியும். உங்களுடைய வழக்கமான வாழ்க்கையில் நான் ஒரு விடுமுறை நாளாக இருக்கிறேன். ஆனால் நானே உங்களுடைய வாழ்க்கையாக முடியாது. உங்களுடைய வாழ்க்கையை நீங்கள் மாற்றிக் கொள்ள வேண்டும்.

மனம் தந்திரமானது. என்னை நம்பும்படி நான் சொல்கிறபோது, மனம் கடினமாகவே உணரும். வேறொருவரை நம்புவது அகந்தையை அழிப்பதாயிருக்கும். உங்களை நம்புங்கள் என்று நான் சொன்னால் அது விரும்பும்படியாயிருக்கும் உங்கள் மனதுக்கு விரும்பத் தக்கவிதத்தில் உணர்வதால் எதுவும் ஆகிவிடாது. உங்களை நம்புங்கள் என்று நான் சொல்கிறேன். அது முடிந்தால் என்னை நீங்கள் நம்ப வேண்டியிருக்காது. அது முடியவில்லை என்றால் வேறொன்றை முயன்றுபாருங்கள். மனம் தன்னை வலுப்படுத்திக் கொள்வதற்காக எதையெதையோ தேடியலைந்தபடி இருக்கும்.

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு: நாட்டுப் புறத்தில் வாழ்ந்து கொண்டிருந்த ஒருவன் பெரிய நகரமொன்றிற்கு

செல்கிறான். ஆறுமாத காலத்துக்கு ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் வெவ்வேறு தேவாலயங்களுக்குச் செல்கிறான். ஒரே மாதிரி உணர்வு கொண்ட கூட்டத்தை காண்பதற்காகவே அவ்வாறு அவன் சென்றது. கடைசியாக ஒரு ஞாயிற்றுக்கிழமை காலையில் சமய குருவுடன் பிரார்த்தனையில் கூட்டம் ஈடுபட்டிருந்த போது ஒரு தேவாலயத்துக்குள் அவன் சென்றான். 'நாங்கள் எதைச் செய்யக்கூடாதோ அதைச் செய்து கொண்டேயிக்கிறோம். எதைச் செய்ய வோண்டுமோ அதைச் செய்யாமலிருக்கிறோம்' என்று அவர்கள் பிரார்த்தித்துக் கொண்டிருந்தனர். அவன் நிம்மதிப் பெருமூச்சுடன் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டான், 'அப்பாடா, ஒரு வழியாகக் கடவுள் வகுத்தளித்த வாழ்க்கை முறையை நான் கண்டு கொண்டுவிட்டேன்.'என்று.

உங்களை அமைதிக் குலைவுக்குள்ளாகாத ஒன்றை நீங்கள் காண முயற்சிக்கிறீர்கள். மாறாக அது உங்களுடைய பழைய அறிவையே வலுப்படுத்துகிது. இருக்கிறபடிக்கே உங்களை அது வலுப்படுத்துகிறது. மனதின் ஒட்டுமொத்த முயற்சியும் தன்னுடைய நிலையைத் தொடர்வதாகவே இருக்கிறது. நீங்கள் அதுபற்றிய கவனத்துடன் இருக்க வேண்டும். மனம் சொன்னதைக் கேட்க விரும்புவதில்லை, தான் விரும்பியதையே அது கேட்கிறது.

ஹாரி தன்னைவிட வயதில் மூத்த, அவலட்சணம் பிடித்த பெண்ணைப் பணத்துக்காக மணந்து கொண்டான். ஆப்பிரிக்கக் காடுகளில் வேட்டைக்குழுவுடன் பயணம் செல்வது உட்பட பணத்தைச் செலவழிக்கப் பல வழிகளை அவன் கண்டுபிடித்து வைத்திருந்தான். சதுப்பு நிலத்துக்கு எப்படியோ வந்துவிட்டிருந்த ஒரு முதலை அவனுடைய மனைவியை தன்னுடைய பற்களுக்கிடையில் கவ்வி, அவளை இழுத்துச் செல்லத் தொடங்கியது. ஹாரி கொஞ்சமும் அசைந்து கொடுக்கவில்லை. 'சீக்கிரம் அதைச் சுடுங்கள். சுட்டுத் தள்ளுங்கள்' என்று அவனுடைய மனைவி கூச்சலிட்டாள். ஹாரி தோள்களைக் குலுக்கிக் கொண்டான், 'டியர், இந்த அருமையான காட்சியை படம் பிடிக்க எனக்கும் ஆசைதான், ஆனால் என்ன செய்வது? என்னுடைய கேமிராவில் பிலிம்ரோல் இல்லையே'' என்றான்.

மனம், தான் கேட்க விரும்பியதையே கேட்கிறது. நான் சொல்வதை நீங்கள கேட்டுக்கொண்டிருப்பதாய் ஒரு போதும் எண்ணிவிடாதீர்கள்.

நீங்கள் அதைப்பலவிதமாய் கையாள்கிறீர்கள். ஏதேனும் ஒன்று உங்கள் மூளைக்குள் நுழைகிற போது நீங்கள் அதை நேரடியாய் கவனித்துக் கொள்வதில்லை. முதலில் உங்கள் சொந்தக் கருத்துடன் அதைக் கலக்கிறீர்கள், இங்கும் அங்குமாய் சில மாற்றங்களைச் செய்கிறீர்கள். சிலவற்றை விடுகிறீர்கள். பிறகு அது உங்களுக்குப் பொருந்துவதாகவிடுகிறது, காலப்போக்கில், அதுதான் உங்களுக்குச் சொல்லப்பட்டது என் உங்களை நீங்கள் நம்ப வைக்கிறீர்கள்.

நாடோடி ஒருவன் லண்டன் நகரத்துத் தெருவொன்றில் விழுந்து கிடந்தான். உடனே அவனைச் சுற்றி கூட்டம் கூடியது. 'பாவம், அவனுக்குக் கொஞ்சம் விஸ்கி கொடுங்கள்' என்றாள் ஒரு முதியவள்.

'காற்றுவரட்டும், வழிவிட்டு நில்லுங்கள்' என்றான் ஒருவன்.

'அவனுக்குக் கொஞ்சம் விஸ்கி கொடுங்கள்' என்றாள் அந்த முதியவள் மறுபடியும்.

அவனை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு செல்லுங்கள் என்றான் மற்றொருவன்.

'அவனுக்கு கொஞ்சம் விஸ்கி கொடுங்கள்' என்று சொன்னாள் முதியவள்.

அந்த நாடோடி எழுந்து, 'நீங்கள் எல்லோரும் பேசுவதை நிறுத்தவிட்டு, மூதாட்டி சொல்வதைக் கேளுங்கள்.' என்றான்.

நீங்கள் உணர்விழந்த நிலையிலும் உங்களுக்கு விருப்பமானதை கேட்கவே விரும்புவீர்கள். நீங்கள் உணர்வு நிலையில் இருந்தாலும் உங்களுக்குச் சொல்லப்பட்டதைக் கேட்பதில்லை.

ஒரு யாசகன் நான் சொல்வதைக் கேட்பதற்காக இங்கே வருகிறான். பிரதான வீதியில் அவன் ஒருவரிடம் 'காபி குடிக்கணும் கொஞ்சம் பைசா கொடுங்கள்' என்று கேட்டிருக்கிறான். அந்த மனிதர் சொன்னார், 'பத்துநிமிடத்துக்கு முன்புதானே நான் உனக்கு எட்டணா கொடுத்தேன்' என்று. அந்த யாசகன் சொல்லியிருக்கிறான். 'சரிதான், கடந்த காலத்தில் வாழ்வதை நிறுத்துங்கள்' என்று கடந்த

காலத்தில் வாழ்வதை நிறுத்துங்கள் என்று நான் தொடர்ந்து உங்களுக்குச் சொல்லிக்கொண்டுதான் இருக்கிறேன்—அது முற்றிலும் உண்மை.

நினைவிருக்கட்டும். உங்கள் மனம் தொடர்ந்து உங்களிடம் தந்திரத்தை மேற்கொள்கிறது.

அங்கே முரண்பாடு இருந்ததில்லை. நீங்கள்தாம் முரண்பாட்டை தோற்றுவித்துக் கொள்கிறீர்கள்.

தற்போது – கேள்வியின் மிச்சத்தையும் நான் வாசித்து விடுகிறேன்— கவனத்தில் கொள்ளும்படி அழுத்தமாய் சொல்லப்பட்டிருப்பதைப் பாருங்கள். 'என்னுடைய சுயத்தை நான் நம்பினால், அதைப் பின்பற்றினால் நான் சரணடைந்து, இணக்கமாக வேண்டியிருக்கும் என்று என்னுள் ஒரு பகுதி செல்கிறது? ஆனால், இது ஒரு பகுதி மட்டுமே, மீதியுள்ளவை என்ன ஆயிற்று? இந்தப் பகுதியை நீங்கள் நம்பினால், எஞ்சியுள்ள மனம் கூறும், இந்தப் பகுதியை நீங்கள் நம்பினால், எஞ்சியுள்ள மனம் கூறும், நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? என்று. அப்படித்தான் ஐயப்பாடு உண்டாகிறது. நீங்கள் எஞ்சியுள்ள பகுதி சொல்வதில் கவனம் வைத்தால், இந்தப்பகுதி சந்தேகங்களைத் தோற்றுவித்தபடி இருக்கும். மனம் இப்படித்தான் இருவேறு பகுதிகளாய் பிரிந்து செல்கிறது. அது தனக்கெதிராகவே தன்னைப் பகுக்கிறது, அது தொடர்ந்து கண்ணாமூச்சி ஆடுகிறது. ஆக நீங்கள் எதைச் செய்தாலும் ஏமாற்றம் உண்டாகிறது. ஆனால் இந்த ஏமாற்றம் வரவேண்டியதுதான். நீங்கள் என்னை நம்புவீர்களாயின், உங்கள் மனதின் ஒரு பகுதி, 'நீ என்ன செய்கிறாய்?' என்று கேட்டபடி இருக்கும். நான் எப்போதுமே சொல்லிக் கொண்டிருக்கிறேன், உங்களை நம்புங்கள் என்று நீங்கள் என்னை நம்பாமல் உங்களை நம்பினால் மனதின் மறுபகுதி தொடர்ந்து உங்களை ஏமாற்றுவதாகவே இருக்கும். அதுகூறும். 'நீ என்ன செய்கிறாய்? அவரை நம்பு, சரணடைவாய்' என்று. மனதின் மாறுபட்ட இருகூறுகளையும் கவனியுங்கள்.

ஒட்டு மொத்தமாய் ஒரு முடிவுக்கு வர இயலாமல் நிலையாகப் பிரிந்திருக்கும் மனதைக் கவனியுங்கள், மெள்ள மெள்ள மாறுபட்ட ஓர் உணர்வு நிலை— முற்றிலுமாய் தீர்மானிக்கக்கூடிய உணர்வுநிலை

உங்களுக்குள் தோன்றும். அது மனதுக்குரியது அல்ல. அதனால்தான் நான் சொல்கிறேன் சரணடைவது மனதினால் முடியாது என்று. நம்பிக்கையும் மனதினுடைய தாகாது. மனதால் நம்ப முடியாது. மனம் நம்பிக்கையற்றதாய், ஐயத்தில் இருந்து கொண்டிருக்கிறது. மனம் அளவுக்கு மீறிய செயல்பாட்டைக் கொண்டது. ஆனால் நீங்கள் நம்புகிறபோது, அந்த மனம் செய்வதற்கு ஒன்றும் இருக்காது. நீங்கள் அதைக் கவனித்திருக்கிறீர்களா? நீங்கள் 'இல்லை' என்று மறுக்கிறபோது, உணர்வு நிலை என்கிற அமைதியான நீர் நிலைக்குள் ஒரு கல்லை வீசியெறிகிறீர்கள். இலட்சோபலட்சம் சிற்றலைகள் எழுகின்றன.

நீங்கள் 'ஆம்' என்று ஏற்கிறபோது நீங்கள் எந்தவொரு கல்லையும் வீசுவதில்லை. பெரும்பாலும் அந்த ஏரியின் மேற்பரப்பில் ஒரு ரோஜா மலரை நீங்கள் மிதக்க விடுகிறீர்கள். அலையேதும் இல்லாமல் அந்த பூ மிதக்கிறது. அதனால்தான் மக்களுக்கு ஏற்பது கடினமாகவும், மறுப்பது எளிதாகவும் இருக்கிறது. 'இல்லை' என்கிற மறுப்பு எப்போதும் தயாராக இருக்கிறது.

நான் ஒரு சமயம் முல்லா நஸ்ருதீனுடன் தங்கியிருந்தேன். 'நஸ்ருதீன், பையன் என்ன பண்றான்னு போய்ப்பாருங்கள். அவனைத் தடுத்து வையுங்கள்' என்று அவருடைய மனைவி சொல்வதைக் கேட்டேன்.

பையன் என்ன செய்து கொண்டிருக்கிறான் என்பது அவளுக்குத் தெரியாது. 'பையன் என்ன பண்றான்னு பாருங்க, அவனைத் தடுத்து வையுங்க' என்றாள் முக்கியக்கருத்து எதைச் செய்கிறான் என்பதல்ல ஆனால் தடுத்து நிறுத்த வேண்டும். மறுத்தல் எளிதாக இருக்கிறது, அது அகந்தையை உயர்த்துகிறது. மறுப்பில் ஊட்டம் பெறுகிறது அகந்தை. மனம் சந்தேகம், அவநம்பிக்கை, ஐயம் இவற்றை உண்டு செழிக்கிறது. மனத்தின் வழியே நீங்கள் என்னை நம்ப முடியாது. மனத்தின் பிரிவினையை நீங்கள் புரிந்திருக்க வேண்டும். மனதுக்குள் மாறாத விவாதம், போராட்டம் நடந்து கொண்டிருக்கிறது. ஒரு பகுதி மற்றொரு பகுதிக்கு எதிராய் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.

மனம் ஒரு முடிவுக்கு வருவதேயில்லை. எப்போதுமே மனதின் மாறுபட்ட கருத்துகள் சில துணுக்குகளாய் இருந்து கொண்டிருக்கும். அவை வாய்ப்புக்காகக் காத்திருந்து உங்களை ஏமாற்றிவிடும்.

அந்நிலையில் எது நம்பிக்கையாகும்? நீங்கள் எப்படி நம்புவீர்கள்? மனதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். மனதை, அதன் இரட்டைத் தன்மையை புரிந்து கொள்வதன் மூலம் நீங்கள் மனதில் இருந்து தனித்து வேறாகிறீர்கள். அந்த விலகலில் உண்டாகிறது நம்பிக்கை. அந்த நம்பிக்கை உங்களுக்கும் எனக்கும் இடையே பிரிப்பை (division) அறிவதில்லை. அது பேசப்படாத நம்பிக்கை, யாரை நோக்கியும் பேசப்படுவதல்ல– காரணம் நீங்கள் என்னை நம்பினால், உடனடியாய் இன்னொருவரிடம் அவநம்பிக்கை கொண்டு விடுகிறீர்கள். உங்களுக்கு குர்–ஆனில் நம்பிக்கை இருந்தால் புத்தரை உங்களால் நம்ப முடியாது. இயேசுவை நீங்கள் நம்பினால் புத்தரில் நம்பிக்கை வைக்க மாட்டீர்கள். இது என்ன மாதிரி நம்பிக்கை? எவ்வித தகுதியும் இருப்பதாய் தெரியவில்லை.

நம்பிக்கை பேசப்படாதது. அது கிறிஸ்துவை நோக்கியோ, புத்தரை நோக்கியோ பேசப்படவில்லை. நீங்கள் நம்புகிறீர்கள். நம்புவதில் மகிழ்ச்சி அடைகிறீர்கள். நீங்கள் வஞ்சிக்கப்பட்டாலும் மகிழவே செய்கிறீர்கள். ஏமாற்றுவதற்கான சாத்தியம் இருந்தும் உங்களால் நம்ப முடிவது குறித்து மகிழ்சி அடைகிறீர்கள். அந்த வஞ்சனையால் உங்கள் நம்பிக்கையை அழிக்க முடியாது என்பதில் மகிழ்ச்சி. உங்களுடைய நம்பிக்கை பெரிதென்றும், ஏமாற்றுக்காரரால் உங்கள் நம்பிக்கையை கெடுக்க முடியாதென்றும் மகிழ்கிறீர்கள். அவர் உங்களுடைய பணத்தைப் பறிக்கலாம், மதிப்பைக் கெடுக்லாம், உங்களை முற்றாக அபகரிக்கலாம். ஆனாலும், நீங்கள் மகிழ்ச்சியோடு இருப்பீர்கள். எதற்கெடுத்தாலும் உங்களுடைய நம்பிக்கையைக் கெடுக்க முடியாது என்கிற மகிழ்ச்சி உங்களுக்கு. நீங்கள் இன்னமும் அவரை நம்புகிறீர்கள். அவர் மறுபடியும் உங்களைக் கொள்ளையடிக்க வந்தால், இன்னமும் அவரை நம்புகிறீர்கள். ஆக, அந்த மனிதர் பொருள் சார்ந்த வகையில் உங்களை முற்றாகத் துடைத்துப் போட்டாலும், உங்களை ஆன்மா சார்ந்த வகையில் அவர் உயர்த்தவே செய்கிறார்.

ஆனால், சாதாரணமாக என்ன நடக்கிறது? ஒருவர் உங்களை ஏமாற்றப்போக ஒட்டு மொத்த மனிதகுலத்தின்மீதும் வெறுப்பு ஏற்படு கிறது. ஒரு கிறிஸ்தவர் உங்களை ஏமாற்றினால் எல்லா கிறிஸ்தவர் களுக்கு எதிராகவும் தீர்ப்பளிக்கிறீர்கள். ஒரு முகமதியர் உங்களிடம் நல்ல முறையில் நடந்து கொள்ளாவிடில் முகமதியர்கள் எல்லாருமே குற்றவாளியாக உங்களுக்கு தெரிவார்கள். இந்து ஒருவர் சரியாக இல்லை என்றால் எல்லா இந்துக்களுமே உங்கள் பார்வையில் தகுதியற்றவராகிவிடுவார்கள். ஒட்டு மொத்த மனித குலத்தின் மீதும் ஒற்றை ஆள் அவநம்பிக்கையைத் தோற்றுவித்துக் கொள்ள முடிகிறது.

நம்பிக்கை உள்ளவர் தொடர்ந்து நம்பிக்கொண்டே இருப்பார். தம்முடைய நம்பிக்கைக்கு எது நேர்ந்தாலும் ஒன்று மட்டும் நேர்வதில்லை. தம்முடைய நம்பிக்கையை யாரும் பாழ்படுத்த யாரையும் அவர் அனுமதிக்கமாட்டார். அவருடைய நம்பிக்கை அதிகரித்துக் கொண்டே இருக்கும். நம்பிக்கையே கடவுள். கடவுளை நம்பும்படி மக்கள் உங்களுக்குச் சொல்லியிருக்கிறார்கள். நான் சொல்கிறேன் நம்பிக்கையே கடவுள். கடவுளைப்பற்றிய எல்லா வற்றையும் மறந்து விடுங்கள். நம்பிக்கையோடு இருங்கள் நீங்கள் இருந்தாலும் கடவுள் உங்களை நாடி வருவார்.

## இரண்டாவது கேள்வி

*ஒரு புத்தாவை எது ஊக்குவிக்கிறது?*

கேள்வியே நகைக்கத்தக்கதாயிருக்கிறது. காரணம் எல்லாத் தூண்டுதல்களையும் விட்டபின்புதான் ஒருவர் புத்தாவாகிறார். தாம் செய்யக்கூடியது எதுவும் இல்லை என்கிற நிலையில்தான் ஒருவர் புத்தாவாகிறார். எங்கும் செல்லாமல், எதையும் அடையாமல் இருப்பவர் அவர். முயன்று அடைகிற மனம் மறைகிறது– அப்போது தான் ஒருவர் புத்தாவாகிறார் ஆக, 'ஒரு புத்தாவை எது தூண்டு கிறது?' என்று நீங்கள் கேட்பீர்களாயின் அது ஓர் அபத்தக் கேள்வியாகவே இருக்கும். அவரை எதுவும் தூண்ட முடியாது. அதனால்தான் அவர் ஒரு புத்தர்.

கவுதம சித்தார்த்தர் ஞானம் பெற்றார். ஓர் அந்தணர் அவருக்குப் பக்கமாய் சென்று கொண்டிருந்ததாய் கதை போகிறது. அப்படியோர்

அழகான மனிதரை அதற்குமுன் மண்ணுலகில் இல்லாத ஏதோ ஒன்று சுற்றியிருந்தது. அவர் பிரகாசமாகவும், பேரமைதியோடும் காணப்பட்டார். அந்தணரால் தொடர்ந்து போகமுடியவில்லை. உண்மையில் அவர் அவசரமாய் எங்கோ போய்க் கொண்டிருந்தவர். ஆனால், புத்தருடைய அமைதி அவரை ஈர்த்தது. தாம் எங்கே போய்க் கொண்டிருக்கிறோம் என்பதையே அவர் மறந்துவிட்டார், தம்முடைய நோக்கத்தை மறந்துவிட்டார். எவ்வித ஆர்வமற்ற நிலையை அடைந்த இந்த மனிதன் பக்கமாய் இருந்து கொண்டிருப்பதில், இவருடைய சூழலில் இழுபடுகின்றவரானார். மணிக்கணக்கில் அந்தக் கவர்ச்சியில் ஈடுபட்டவராய் அவர் அங்கேயே இருந்தார் என்கிறது கதை. சற்றும் எதிர்பாராத விதமாய் அவருக்கு உணர்வு வந்தது. தாம் எங்கோ செல்ல வேண்டியிருப்பதை அவர் அப்போது உணர்ந்தார், ஆனால் எங்கே? அந்நிலையில் அவர் கேட்டுக்கொண்டார் 'நான் யார்?' என்று. அவருடைய ஒட்டுமொத்த அடையாளமும் கடந்த காலமும் எங்கோ மறைந்துவிட்டது. தான் யார் என்பதைத் தன்னுடைய உணர்வு நிலைக்கு அவரால் கொண்டுவர முடியவில்லை. பிறகு அவர் புத்தரை அசைத்து, 'தாங்கள் என்னை என்ன செய்தீர்கள்? நான் எங்கிருந்து வந்தேன், எங்கே செல்கிறேன் என்பதே எனக்கு மறந்துவிட்டது. நான் யார்? யாரிடம் நான் பேசிக் கொண்டிருக்கிறேன்? என்னுடைய கேள்விக்கு விடையளிப்பவர் யார்? நான் இந்தப்பகுதிக்குப் புதியவன். நீங்கள் என்ன செய்தீர்கள் என்பதை எனக்குச் சொல்லுங்கள்' என்று கேட்டார்.

புத்தர் தமது கண்களைத் திறந்து, 'நான் எதையும் செய்யவில்லை நான் செய்வதை நிறுத்திக் கொண்டேன். எனக்கு அருகில் நீர் இருந்ததாலோ என்னவோ... நீர் கவலைப்பட வேண்டாம். என்னை விட்டு வேகமாய் ஓடிப்போய்விடும்' என்றார். அந்தணர் அவரிடம், 'நான் போவதற்கு முன்பு தங்களிடம் ஒன்று கேட்க வேண்டும். நீங்கள் என்ன கடவுளா?' என்று கேட்டார். அவர் கற்றறிந்த அந்தணர். தினமும் வேதபாராயணம் செய்வதைத் தம்முடைய நியதியாய் கொண்டிருந்தார். கிருஷ்ணர், இராமர் பற்றியெல்லாம் அவர் கேள்விப்பட்டிருந்தார். ஆனால், அவர்களெல்லாம் கதைகளா யிருந்தனர். முதல் முறையாக உண்மையிலேயே தெய்வசக்தி பொருந்திய ஒருவரை தூல வடிவில் அவர் பார்க்கிறார். 'நீங்கள்

கடவுளா?' என்று கேட்கிறார். 'இல்லை' என்று பதில் வருகிறது புத்தரிடமிருந்து. 'நீங்கள் என்ன துறவியா, மகானா? இந்துக்களுக்கே உரிய சொற்பாங்கில் அவர் கேட்டார். பிறகு எண்ணிக் கொள்கிறார். 'இந்தியர்களில் இவர் வேறு மரபைச் சேர்ந்தவராயும் இருக்கலாம், கடவுள் நம்பிக்கை இல்லாத பிராமணர்களாகவும் இருக்கலாம்' என்று புத்தர் அவருடைய எல்லாக் கேள்விகளுக்கும் 'இல்லை' என்றார். 'அப்படியானால் தாங்கள் யார்?' அந்தணர் கேட்டார். 'நான் பிரக்ஞை (உணர்வு) யாக இருக்கிறேன்' என்றார் புத்தர். அது இலக்கணம் சார்ந்த பதிலில்லைதான், ஆனால் உண்மை. அவர் சொன்னார், 'நான் பிரக்ஞையாக இருக்கிறேன்'என்று. தாம் கடவுளல்ல என்பதை, தம்முடைய விழிப்புணர்வை, இருப்புணர்வின் தன்மையை அவர் சுட்டிக் காட்டினார். காரணம், நீங்கள் 'கடவுள்' என்கிறபோது ஏதோ காட்டினார். காரணம், நீங்கள் 'கடவுள்' என்கிறபோது ஏதோ இயங்காத ஒன்றாய் படுகிறது. 'புனிதர்' என்கிறபோது ஏதோ முழுமை அடைந்த ஒன்றாகிவிடுகிறது. புத்தர் சொன்னார், 'நான் பிரக்ஞையாயிருக்கிறேன்' என்று. அதை விழிப்புணர்வு' என்பது நல்ல மாற்றாக இருக்கும். விழிப்புணர்வில் உட்கருத்து எதுவும் இல்லை. உட்கருத்து (motive) இருந்தால் அதில் விழிப்புணர்வு இருக்காது.

சின்னதாய் ஒரு கதை, மிகவும் அருமையான ஒன்று. முடிந்தவரை அதைக் கவனமுடன் கேளுங்கள்.

ஒரு பெண்மணியும், அவளுடைய சிறிய வயது மகனும் கரையோரமாய் சர்ஃபில் நீந்திக் கொண்டிருந்தனர். மேற்பரப்புக்கடியில் அலையின் பின்னோட்டம் கடுமையாயிருந்தது. அவள் தனது மகனின் கையை இறுக்கமாகப் பிடித்திருந்தாள். அப்போது பெரிய சுவர்போல் எழுந்த நீர் அவர்களை அச்சுறுத்துவதாயிருந்தது.

அந்தப்பேரலை அவர்கள் கண்முன்பாய் வெகுஉயரம் எழுந்து அவர்களை மோதித்தள்ளியது. அலைகள் பின்வாங்கியபோது அந்தச் சின்னப்பையனை எங்கும் காணவில்லை. திகிலடைந்த தாய் அங்குமிங்கும் நீரில் துழாவியபடி 'மெல்வின், மெல்வின் நீ எங்கே இருக்கே? மெல்வின்' என்று வீறிட்டலறினாள். குழந்தை குழந்தையை கடல் கொண்டு போய்விட்டது என்பது தெளிவானதும், மனநிலை குலைந்த அந்தத் தாய் வானைநோக்கித் தனது கண்களை

உயர்த்தினாள். 'கருணையுள்ள பிதாவே, என்மீது இரக்கம் காட்டும். என்னுடைய குழந்தையை எனக்குத்தாரும். நான் உன்னிடம் மாறாத நன்றியுடன் இருப்பேன் என்று வாக்களிக்கிறேன். என்னுடைய கணவனுக்கு மறுபடியும் துரோகம் செய்ய மாட்டேன் என்று உறுதி கூறுகிறேன். என்னுடைய மாமியாரிடம் பரிவாக இருப்பேன். நான் சிகரெட் புகைப்பதை விட்டுவிடுவேன். வருமான வரியை ஒழுங்காகக் கட்டுவேன். தாங்கள் எனக்கு ஒரே ஓர் அனுகூலம் செய்தால் போதும், என்னுடைய மகனைத் திருப்பித் தந்துவிடும்.

அப்போது மற்றொரு பேரலை அச்சுறுத்துவது போல் உயர்ந் தெழுந்தது. அவளுடைய தலைமீது மோதியது. அந்த அலை பின் வாங்கியபோது அவளுடைய குட்டிப் பையன் அங்கே நின்றி ருந்தான். அவனை இறுக்கிப் பிடித்து முத்தமிட்டாள். பிறகு ஒரு கணம் அவனைக்கூர்ந்து கவனித்தாள், மறபடியும் வானை நோக்கித் திரும்பியது அவளுடைய கண்கள். 'ஆனால் அவனுடைய தொப்பி எங்கே?' என்று கேட்டாள் அவர்.

இதுதான் மனம். குழந்தை திரும்பக் கிடைத்திருக்கிறான். ஆனால் தொப்பிதான் காணாமல் போயிற்று. தொலைந்து போன தொப்பியால் அவள் மகிழ்ச்சியற்றவளானாள் குறை கூறத் தொடங்கி விட்டாள்.

உங்கள் மனதுக்குள் இப்படி நடந்து கொண்டிருப்பதை நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? அது தொடர்ந்த நடக்கிறது. வாழ்க்கை உங்களுக்கு எதைக் கொடுத்திருந்தாலும் நீங்கள் அதற்காக நன்றி கூறவில்லை. திரும்பத் திரும்ப தொப்பியைப் பற்றியே புலம்பிக் கொண்டிருக்கிறீர்கள். எது நிகழவில்லையோ அதையே தொடர்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள், முன்பே நிகழ்ந்திருப்பதை அல்ல. நீங்கள் எப்போதுமே கவனிக்கவும், ஆசைப்படவும், எதிர்பார்க்கவுமே செய்கிறீர்கள். இலட்சக்கணக்கான செயல்கள் உங்களுக்கு நிகழ் கின்றன, ஆனால், ஒரு போதும் நீங்கள் நன்றியோடு இருக்கவில்லை. நீங்கள் குறைபடுகிறவராய், கோபமும், ஏமாற்றமும் கொண்டி ருக்கிறீர்கள்.

நீங்கள் விண்ணுலகிற்கு சென்றால்கூட, இந்த மனம் அங்கேயும் உங்களை இருக்கவிடாது. நீங்கள் எங்கிருந்தாலும் ஒரு நரகத்தை அங்கே தோற்றுவித்து விடுவீர்கள். ஓர் ஆசை நிறைவேறியதுமே,

பத்து ஆசைகள் தலை தூக்கிவிடுகின்றன. அது ஒரு போதும் முடிவுறாதபடிக்கு எண்ணற்ற ஆசைகள்.

ஆசையின் மூலம் அமைதியை யாரும் அடைந்ததில்லை. ஆசையைப் புரிந்து கொள்வதன் மூலம், செயல் தூண்டல் உணர்வை (motivation) அறிந்து கொள்வதன் மூலம் ஒருவர் மெள்ள மெள்ள கவனமுடையராகிறார். தூண்டல் உணர்வைவிட்டால் வாழ்க்கையில் ஏமாற்றம் இருக்காது என்பதை ஒருவர் அறிந்து கொள்கிறார். பிறகு எதுவும் உங்களை மகிழ்ச்சியற்றவராக்க முடியாது. அந்நிலையில் மகிழ்ச்சி இயல்பானதாயிருக்கும். நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அப்படித்தான் அதுவும். அப்போது எது நடந்தாலும் நீங்கள் மகிழ்ச்சியாகவே இருப்பீர்கள். இப்போதோ எது நடந்தாலும் மகிழ்ச்சியற்றவராகத்தான் இருக்கிறீர்கள்.

ஒரு புத்தருக்கு எந்தத் தூண்டுதலும் இருந்திருக்கவில்லை. அதனால்தான் அவர் மகிழ்ச்சியாக இருப்பது. நீங்கள் அவரிடம் 'மகிழ்ச்சியாக இருக்கிறீர்களா' என்று கேட்டால், அவர் தம்முடைய தோள்களைக் குலுக்கிக் கொள்ளுமளவிற்கு அவர் மிகுந்த மகிழ்ச்சியில் இருப்பார். மகிழ்ச்சியின்மையுடன் ஒப்பிடுகிறபோதுதான் மகிழ்ச்சியை அறிய முடிகிறது. மகிழ்ச்சியின்மையின் அனுபவத்தை அவர் மறந்துவிட்டிருப்பார், எனவே தான், 'நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கிறீர்களா?,' என்று நீங்கள் கேட்டால், அமைதியாக இருப்பது. அவர் எதையும் சொல்லாமல் இருக்கக்கூடும். காரணம், மகிழ்ச்சியின்மை மறைகிறபொழுது அத்துடன் இருபகுதிகளாகப் பகுத்தலும் (dichotomy) மறைந்துவிடுகிறது. அதனால்தான் புத்தர் பேரின்பத்தை இறுதி நிலையாய் சொல்லவில்லை. அது பேரின்பத்தினுடையது அல்ல அமைதியினுடையது என்று சொல்கிறார் அவர்.

இந்துக்களுக்கும் புத்த மதத்தினருக்கும் உள்ள வேற்றுமைகளில் அதுவும் ஒன்று. அதுவே புத்தருக்கும் பதஞ்சலிக்கும் உள்ள வேறுபாடு ஆகும். அடிப்படையான வேறுபாடுகளில் அதுவும் ஒன்று. உண்மையில் இருவருமே சரியானவர்கள்தாம். எல்லாத் துன்பங்களும், துன்பங்களுக்கான சாத்தியங்களும் மறையும் காரணத்தால் அதனை பேரின்பநிலை என்று யார் அறிவது? அது பேரின்பமானது என்று நீங்கள் எப்படி அறிவீர்கள்.

எல்லாத் துன்பங்களிலும் மறைந்தபின் ஒப்பிடுதல் இல்லை, ஒப்பிட்டு அடிப்படையில் வேறுபாடு காண்பதற்கில்லை. இரவே இல்லையென்று ஆகிவிட்டால் அது பகல் என்று எப்படி அறிவீர்கள்? அது பகலாக இருக்கும், ஆனால் அது பகல் என்று எப்படி அறிவீர்கள்? புத்தரும் சரியாகத்தான் சொல்கிறார்: அது பேரின்பமாக இருக்கலாம், அதை இன்பம் என்று சொல்ல முடியாது காரணம் அப்படிச் சொல்கிறபோது மகிழ்சியற்ற நிலையையும் நீங்கள் உள்ளே கொண்டு வருகிறீர்கள்.

தூண்டல்களின் இயக்க நுட்பத்தைப்புரிந்து கொண்ட ஒருவர்தான் புத்தாவாகிறார். தூண்டல் என்பது என்ன? – அது நிகழில் உள்ள அதிருப்தி, அது நிகழில் உள்ள அமைதிக்குலைவு, வருங்காலத்தில் உள்ள நம்பிக்கை. தூண்டல் வருங்காலத்தில் எங்கோ ஓரிடத்தில் காணும் மனநிறைவுபற்றிய கனவு.

நீங்கள் ஒரு சிறிய வீட்டில் வாழ்கிறீர்கள், அந்த வீடு சிறியது என்பதால் ஏற்பட்ட அதிருப்தி உங்களை மகிழ்ச்சியற்றவராக்குகிறது; வருங்காலத்தில் ஒரு பெரிய வீட்டைப் பெறுவோம் என்று நீங்கள் நம்புகிறீர்கள். வருங்காலம் வேண்டப்படுவதுதான். இப்போது பெரிய வீடு சாத்தியமில்லை பணம் கால, அவகாசம் என்று ஆயிரத்தியோரு சங்கதிகள் இருக்கின்றனவே. பிறகுதான் பெரிய வீடு சாத்தியப்படும். ஆக, இந்தக்கணத்தில் நீங்கள் அதிருப்தியில் இருக்கிறீர்கள், ஆனால், எதிர்காலத்தில் மனநிறைவு குறித்த கனவு இருக்கிறது உங்களிடம். நீங்கள் கடினமாய் உழைக்கிறீர்கள். பிறகு ஒரு நாள் பெரிய வீடு சாத்தியமாகிறது. ஆனால் திடீரென்று மனநிறைவுபோல் எதுவும் கிடைக்கவில்லை என்பது புரியவருகிறது. பெரியவீடு கிடைத்ததுமே, மிகப் பெரிய வீடுகளைப் பற்றி நீங்கள் சிந்திக்கத் தொடங்குகிறீர்கள். நீங்கள் தூண்டலுக்கு அடிமையாகி விடுகிறீர்கள். தற்போது தூண்டல் இல்லாமல் உங்களால் இருக்க முடிவதில்லை. பெரியவீட்டில் இருந்தாலும் மறுபடியும் நீங்கள் மகிழ்ச்சியற்றவராகி விடுகிறீர்கள். 'என்றாவதொரு நாள், எங்காவது ஒரு பெரிய அரண்மனையைக் கட்டுவேன்' மறுபடியும் நம்புகிறீர்கள்– இவ்வாறே ஒருவர் தம்முடைய வாழ்க்கை முழுவதையும் வீணடிக்கிறார்.

தூண்டலின் இயக்க நுட்பத்தை அறிந்து கொள்ளுங்கள். அது வருங்காலம் பற்றிய கனவை உங்களுக்கு வழங்கும். – கனவு

என்பது வெறும் கனவுதான்–அந்த நிகழ்–காலத்தின் பேரின்பத்தை எடுத்துச் சென்றுவிடுகிறது. உண்மையல்லாத ஒன்றுக்காக உண்மையான ஒன்றை அது அழித்துவிடுகிறது. நீங்கள் அதைப்புரிந்து கொண்டால் தூண்டலின் மூலம் வாழ்வதைவிட்டுவிடுவீர்கள். பிறகு–தூண்டல் இல்லாமல் வாழ்வீர்கள்.

தூண்டல் இல்லாமல் வாழ்வது எப்படி? இக்கணத்தில் மனநிறைவோடு வாழ்வதும், நாளையைப்பற்றிய கவலை இல்லாமல் இருப்பதுதான்.

இயேசு கூறுகிறார், 'நாளையைப்பற்றிச் சிந்திக்காதீர்கள். கண்ணெதிரே பூத்திருக்கும் லில்லி மலர்களைப் பாருங்கள். அத்தனை சிறப்புடைய சாலமன் அரசர்கூட அவ்வளவு நேர்த்தியா யில்லை. லில்லி மலர்கள் (அல்லி) நாளையைப்பற்றி எண்ணமிடு வதில்லை. அவை இந்தக் கணத்தில் வாழ்கின்றன. அவை கடவுளுடன் இருக்கின்றன. அவற்றுக்கு வருங்காலம் என்பதில்லை. அவை கடந்த காலத்தை சுமந்திருக்கவில்லை. இந்தக் கணத்தில் இருக்கிறது சகலமும்.

தூண்டலை விட்ட மனம் அதன் பிறகும் மனமாக இருக்காது. நீங்கள் தூண்டலைவிட்டுவிட்டால், சாசுவதமான மெய்மையின் ஒரு பகுதியாக விடுகிறீர்கள். அந்த மெய்ம்மை (reality) இங்கே, இந்தக் கணத்தில் இருக்கிறது. அந்நிலையில் நீங்கள் மனநிறைவுடையவராய் இருப்பீர்கள். உங்களுடைய மனநிறைவு மேலும் அதிகரிக்கும், அவை பேரலைகளால் எழும். உங்களுடைய அதிருப்தியில் இருந்து விளைவது மிகுதியான அதிருப்தியே ஆகும்.

போட்டிகளின் காரணமாய், தூண்டல் நிறைந்த உலகினுள் நீங்கள் முன்பே நுழைந்துவிட்டிருக்கிறீர்கள். அல்லது தூண்டலற்ற உலகில் நுழைவதும் உங்களுக்கு முடிகிறதுதான். எடுத்து வைக்கிற ஒவ்வோர் அடியிலும் பாதை இரண்டாகப் பிரிகிறது. நீங்கள் தூண்டல் உணர்வைவிட்டுவிட்டால், இந்தக் கணத்தில் மகிழ்ச்சியாயிருப்பது என்று தீர்மானித்து விடுகிறீர்கள். அத்துடன் 'வருங்காலம் தன்னைத் தானே கவனித்துக் கொள்ளும். நான் இக்கணத்தில் வாழ்ந்து கொள்கிறேன், அவ்வளவுதான். அதற்குமேல் எனக்கு எதுவும் வேண்டியதில்லை. எது முன்பே எனக்கு வழங்கப்பட்டிருக்கிறதோ

அதைக் காண்டு நான் மகிழ்ச்சி அடைவேன்' என்கிறீர்கள். அளவுக்கதிகமாய் முன்பே வழங்கப்பட்டிருக்கிறது உங்களுக்கு.

நான் வாழ்க்கையில் வளமில்லாத ஒரு மனிதனை இதற்கு முன் பார்த்ததில்லை, ஆனால் ஒரு செல்வந்தனைக் கண்டுபிடிப்பது கடினமாயிருக்கிறது. எல்லாருமே யாசிக்கிறவர்கள். நான் சொல்கிறேன் யாரும் யாசிக்க வேண்டியதில்லை என்று. வாழ்க்கை முன்பே பல செல்வங்களை உங்களுக்கு வழங்கியுள்ளது. அவற்றை எப்படி அனுபவிப்பது என்று நீங்கள் அறிந்து கொண்டு விட்டால், நீங்கள் இன்னும் வேண்டும் என்று கேட்க மாட்டீர்கள்.

'இந்த அளவே என்னால் அனுபவிக்க முடியவில்லை. இதுவே அதிகம். என்னால் இதை வைத்திருக்க முடியாது. என்னுடைய கைகள் சிறியவை, இதயம் அதைவிட சிறியது. என்னால் அதைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்க முடியவில்லை. எல்லையற்ற ஆடல், பாடல், இன்பம் எமக்கு அளித்திருக்கிறீர். மேற்கொண்டு நான் கேட்கமாட்டேன்.

இந்தக் கணத்தில் வாழ்வது சமயம் சார்ந்ததாகும். இந்தக் கணத்தில் வாழ்வது மனம் அற்ற நிலையில் வாழ்வதாகும். இக்கணத்தில் வாழ்வது புத்தாவாகிடத்தான். அதைத்தான் அவர் சொன்னார். 'நான் உணர்வாக இருக்கிறேன்' என்று காரணம், கடவுள்களும் தூண்டப்பட்டவர்களாயிருக்கிறார்கள், அவர்களும் பெண்களைத் துரத்திச் செல்பவர்கள்தாம். சிறந்த பெண்களாய் இருக்கக்கூடும். அவர்கள் ஒருவருக்கொருவர் போட்டி போடுகிறார்கள்.

இந்துக்கள் இந்த விசயத்தை வெகு நேர்த்தியாகச் சொல்லியிருக்கிறார்கள். எதைப்பற்றியும் விளக்குவதில் அவர்கள் பின் வாங்குவதில்லை. இந்து புராணங்களில் வரும் கடவுளின் கதைகளை நீங்கள் படித்தால் திகைப்புறுவீர்கள். அவர்கள் கிட்டத்தட்ட மனிதர்களைப் போலவே நடந்து கொண்டிருக்கிறார்கள். நீங்கள் செய்வதை எல்லாம் அவர்கள் அப்படியே செய்கிறார்கள். இன்னும் கொஞ்சம் சிறப்பான விதத்தல் என்று சொல்லலாம். அல்லது மேம்பட்ட தளத்தில் என்று கொள்ளலாம். தேவர்களின் தலைவன் இந்திரன். அவன் எப்போதும் அச்சத்தில் இருந்தான், அவனுடைய சிம்மாசனம் எப்போதுமே நிலையற்றதாயிருந்தது காரணம் அதன் கால்களை யாராவது இழுத்தபடி இருந்தனர். நீங்கள் டில்லிக்கு சென்று, மக்களிடம் கேட்டுப்பாருங்கள். நீங்கள் அதிகாரத்தில் இருந்தால்

உங்கள நாற்காலியைக் கவிழ்க்க பலபேர் முனைவார்கள். காரணம் அவர்களுக்கும் அந்த நாற்காலியில் அமர விருப்பம். இந்திரன் தொடர்ந்து நடுங்கியபடி இருந்தான். நடுங்குவது அவனுக்கு பழக்கமாகிவிட்டிருந்தது. யாராவது காலைவாரி விடுகிறார்களோ இல்லையோ அவன் நடுங்கிக் கொண்டிருந்தான். பல நூற்றாண்டுகளாய் அவன் நடுங்கிக் கொண்டிருக்கிறான். யாரேனும் ஒரு ரிஷியோ முனிவரோ தம்முடைய தவத்தால் உயரும்போது அவன் அஞ்சி நடுங்குவான்.

யாரேனும் தனக்குப் போட்டியாக வந்துவிடுவார்களோ என்கிற பயம். உடனே அவர்களின் தவத்தை கலைக்க தேவலோகத்து 'அப்சரஸ்'களை அனுப்பி வைப்பான். அந்த அழகிகள் மோகக் கிளர்ச்சியூட்டும் நடனமாடி, பரிதாபத்துக்குரிய ரிஷிகளை வசீகரித்து விடுவார்கள். 'அப்பாடா நமக்குப் போட்டியாக வரக்கூடிய ஒருவன் தொலைந்தான்' என்று நிம்மதியுடன் உறங்கச் செல்வான் இந்திரன்.

இந்துக்களின் தேவலோகத்தில் போகிற வழியெல்லாம் வைரங்கள் பதித்திருக்கும், மரங்கள் பொன் மயமாயிருக்கும், பூக்கள் வெள்ளியிலும், இலைகள் மரகதமாயும் இருக்கும். பெண்கள் ரொம்பவும் அழகாயிருப்பார்கள். அதே உலகம் அதே ஆசை, அதே சிற்றின்ப வேட்கைதான். 'புண்ணியம் தீர்ந்து போனால் தேவர்களும் பூமியில் வந்து பிறந்தேயாக வேண்டும்' என்று இந்துக்கள் சொல்கிறார்கள்.

இந்தப் புண்ணியம்' என்கிற வார்த்தை இருக்கிறதே அது மிகவும் விரும்பத்தக்கது.'புனே' என்பது புண்யம் என்ற வார்த்தையி லிருந்து வந்தது. அதன் பொருள் புண்ணிய நகரம். தேவர்களும் உலகாயதமானவர்கள் தாம். தங்களுடைய புண்ணியம் தீர்ந்ததும் அவர்கள் இவ்வுலகத்திற்கு வருகிறார்கள். புண்ணிய பலன்களை அனுபவித்துத் தீர்த்ததும் இங்கே திரும்பிவிட வேண்டியதுதான்.

புத்தர் சொல்கிறார். 'நான் தேவனில்லை, காரணம் என்னிடம் தூண்டல் எதுவும் இல்லை. 'நீங்கள் ஒரு துறவியா, மகானா? . புத்தர் சொல்கிறார், 'இல்லை, ஏனென்றால் துறவியிடமும் ஒரு தூண்டல் இருக்கும் விமோசனம் பெற்றுவிட வேண்டும் என்று. மோட்சத்தை எப்படி அடைவது, எப்படி ஆசையற்றிருப்பது எப்படி உலகியலைக் கடந்து செல்லவது என்கிற தூண்டல்.

புத்தர் சொல்கிறார், ' இல்லை, நான் உணர்வாக இருக்கிறேன்' என்று. விழிப்புணர்ச்சியில் தூண்டல் இருப்பதில்லை. ஆக; தூண்டல் ஏற்படுகிற போதெல்லாம் ஓர் ஆசை மேலெழுகிறது. எதையுமே செய்யாதிருங்கள். உணர்வுடன் இருந்தால் போதும், ஆசை பின் வாங்கி மறைவதைக் காண்பீர்கள். அது ஆவியாய் மறைந்துவிடும். விழிப்புணர்வுச் சூரியன் எழுகிறபோது ஆசைகள் காலைப்பனித் துளிகளைப் போல் மறைந்து விடுகின்றன.

## மூன்றாவது கேள்வி:

**'ஞானம் பெற்றவர்களுக்குக் குழந்தைகள் இல்லையென்றால், எங்களைப்போல் உணர்ச்சி மிகைப்புடையவர்களுக்குக் குழந்தைகளே கூடாது என்கிறீர்கள். நாங்கள் பெற்றோர்களக இருக்கத் தகுதியற்றவர்கள் என்கிறீர்கள். எது தகுதியான காலமாயிருக்கும்.**

ஞானம் பெற்றவர்களுக்குப் பிள்ளைகள் இருக்கவில்லை. உணர்ச்சி மிகைப்புடையவர்கள் (neurotic person) பிள்ளைகளைப் பெற வேண்டியதில்லை. இரண்டுக்கும் இடையே உணர்ச்சி மிகைப்பற்ற ஓர் ஆரோக்கிய மனநிலை இருக்கிறது. நீங்கள் ஞானமும் இல்லாமல், உணர்ச்சி மிகைப்பும் இல்லாமல் இருக்கும் நிலை அது. அந்நிலையில் நீங்கள் ஆரோக்கியமாக இருப்பீர்கள். அதுவே பெற்றோராக இருப்பதற்குரிய நேரம். சரியான நேரம்.

உணர்ச்சி மிகைப்பு உள்ளவர்கள் நிறைய பிள்ளைகளைப் பெற விரும்புகிறார்கள் ஆனால் அப்படி நடப்பதில்லை. அதுதான் தொல்லை. உண்மையில் அதனால் தான் மேற்கத்திய நாடுகளில் உணர்ச்சி மிகைப்புடையவர்கள் அதிகம். கிழக்கில் அத்தனை உணர்ச்சி மிகைப்பு கிடையாது. மக்கள் உணர்ச்சி மிகைப்பால் நரம்புச் சீரழிவுக்குள்ளாகவில்லை. அவர்களுக்கு பிள்ளைகள் போதிய அளவில் இருக்கின்றனர். ஒரு கூட்டுக் குடும்பத்தில் பல பிள்ளைகள். உங்களுக்குப் பைத்தியம் பிடிப்பதற்கான சாத்தியங்கள் இல்லை. அவர்கள் அதற்கு இடமளிப்பதில்லை. அப்படியே உங்களுக்குப் பைத்தியம் பிடித்தாலும் அதை உணராத அளவிற்கு அதனுடன் இசைவாகிவிடுவீர்கள். மேற்கில் கூட்டுக் குடும்ப அமைப்பே மறைந்து விட்டது. குழந்தைகள் எண்ணிக்கை கிழக்கில் உள்ள மாதிரி அங்கே இல்லை. கிட்டத்தட்ட ஒன்றிரண்டுதான்.

தொழில், வேலை எல்லாம் பழைய மாதிரி இல்லை. மக்கள் ரொம்பவும் வசதி படைத்தவர்களாகிவிட்டிருக்கிறார்கள். வேலைக் குறைவு, ஒய்வு நிறைய, ஒய்வு நேரத்தைச் செலவிடத் தெரியாமல் அவர்கள் இருக்கிறார்கள். அதானல்தான் உணர்ச்சி மிகைப்புக்குள்ளாவது. செய்வதற்கு எந்த வேலையும் இல்லாமல், வளர்ப்பதற்குக் குழந்தைகளும் இல்லாமல் இருக்கும் நிலையைக் கொஞ்சம் எண்ணிப்பாருங்கள்.

நான் முல்லா நஸ்ருதீனிடம் ஒரு முறை கேட்டேன், 'நீங்கள் இன்னமும் அதே நிறுவனத்தில்தான் பணிபுரிகிறீர்களா? என்று.

'ஆமாம் அதே நிறுவனம்தான். மனைவியும் பதினோரு பிள்ளை களும்' என்றார் அவர்.

வாழ்க்கை முழுவதும் காலையில் இருந்து மாலைவரை உழைத்து ஒரு குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டியிருக்கிறது. களைத்துப் போய் வீடுவருகிறீர்கள். உறங்கிவிடுகிறீர்கள். காலையில் மறுபடியும் அதே தடத்தில். நீங்கள் உணர்ச்சி மிகைப்புக்குள்ளாக நேரம் எது? மனநல மருத்துவரிடம் செல்ல நேரம் இருக்காது. கிழக்கில் மனநல மருத்துவர்கள் கிடையாது. குழந்தைகளே மனநல மருத்துவரின் வேலையைச் செய்துவிடுகிறார்கள்.

ஞானம் பெற்ற ஒருவருக்கு குழந்தைகளைப் பெறத் தேவை யில்லை. அவர் பிறவியின் குறிக்கோளை அடைகிறார். இன்னொன் றைப் பிறப்பிக்கும் அவசியம் இல்லை அவருக்கு. அவர் தனக்குத் தானே தந்தையும், தாயுமாகிறார். தனக்குள் கருத்தாங்கி, தானே மீண்டும் பிறக்கிறார்.

ஆனால் இரண்டு நிலைகளுக்கும் இடையில், உணர்ச்சி மிகைப்பு இல்லாதபொழுது, நீங்கள் தியானம் செய்கிறீர்கள், கொஞ் சம் எச்சரிக்கையும், விழிப்பும் கொண்டவராகிவிடுகிறீர்கள். உங்கள் வாழ்க்கை இருண்டு கிடக்கவில்லை. ஒருவர் புத்தராகிற போது கிடைக்கிற அளவு ஒளி ஊடுருவாமல் இருக்கலாம், ஆனால், ஒரு மெழுகுவரத்தியின் மங்கலான வெளிச்சம் இருக்கும். அதுவே உரிய நேரம்– அது அந்திநேரத்து அடிவானச் செம்மை. இந்த உலகில் இருந்து வெளியேறி இன்னொரு உலகில் நீங்கள் காலடி வைப்பதற்கு முன்பான கால எல்லையே குழந்தைகளைப் பெறுவதற்கு சரியான நேரம். காரணம், அந்நிலையில் உங்களுடைய இருப்புணர்வின் கணிசமான பகுதியை உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் வழங்க

முடியும். இல்லையேல், வேறு எதைத்தான் அவர்களுக்கு வெகுமதியாய் நீங்கள் வழங்குவீர்கள்? உங்களுடைய உணர்ச்சிமிகைப்பைத்தான் கொடுப்பீர்கள்.

நான் கேட்டறிந்தது; பதினெட்டு குழந்தைகள் ஒருவனுக்கு. அவர்களை அழைத்துக் கொண்டு பால்பண்ணைக் கண்காட்சிக்கு சென்றான் அவன். கண்காட்சியில் 8000 பவுண்ட் மதிப்புள்ள ஒரு காளையும் இடம் பெற்றிருந்தது. அதைப் பார்ப்பதற்கு ஐந்து பென்ஸ்கள் உபரிக்கட்டணம் வசூலிக்கப்பட்டது. அந்தக் கட்டணம் வரம்பு கடந்தது என்று நினைத்தான் அந்த ஆசாமி. ஆனால் அவனுடைய குழந்தைகளோ அந்தக் காளையைப் பார்க்க விரும்பின. எனவே அவர்கள் அதற்கான நுழைவு வாயிலில் சென்று நின்றனர். அங்குள்ள ஊழியன் கேட்டான். 'ஐயா, இவர்கள் எல்லாரும் உங்களுடைய குழந்தைகளா?' என்று.

'ஆம், அவர்கள் என்னுடைய பிள்ளைகள்தாம், எதற்காக கேட்கிறீர்?' வினவினான் அவன்.

ஊழியன் சொன்னான், 'நல்லது, இங்கேயே ஒரு நிமிடம் பொறுத்திருங்கள். உங்களைப் பார்ப்பதற்காக அந்தக் காளையைக் கூட்டி வருகிறேன்' என்று.

பதினெட்டு குழந்தைகள்! – பொலிகாளையும் பொறாமைப்படும் படியாய்.

உங்களை அறியாமல் உங்கள் நகல்களை நீங்கள் உற்பத்தி செய்து கொண்டிருக்கிறீர்கள். முதலில் சிந்தியுங்கள். ஒரு குழந்தையை நீங்கள் பிறப்பிக்கிற பொழுது உலகத்துக்கு ஒரு வெகுமதியாய் அதை வழங்கும், நிலையில் நீங்கள் இருக்கிறீர்களா? இந்த உலகத்துக்கு நீங்கள் ஒரு வாழ்த்துரையா, சாபமா? அடுத்து, ஒரு குழந்தைக்கு தாய் அல்லது தந்தைக்கு நீங்கள் தயார் நிலையில் இருக்கிறீர்களா? எவ்வித நிபந்தனையும் இல்லாமல் உங்கள் அன்பை வழங்குவதற்குத் தயார்தானா? குழந்தைகள் உங்கள் மூலம் இவ்வுலகிற்கு வந்தாலும் உங்களுக்கே உரியவர்களல்லர். உங்கள் அன்பை நீங்கள் அவர்களுக்குக் கொடுக்கலாம், ஆனால், உங்களுடைய கருத்துக்களை அவர்கள்மீது திணிக்கக்கூடாது. உங்களுடைய உணர்ச்சிமிகைப்பான நடைப்பாங்கை (styles) அவர்களுக்கு நீங்கள் வழங்கக்கூடாது. தங்களுடைய வழியில் அவர்கள் மலர்ச்சியடைய நீங்கள் இடமளிப்பீர்கள்தானே? அவர்கள்

தடையின்றிச் செயல்பட அனுமதிப்பீர்கள் தானே? நீங்கள் தயாராக இருந்தால் ரொம்பசரி. இல்லையேல் தயாராகிவிடுங்கள்.

மனிதனின் பரிணாமவளர்ச்சி உணர்வுடன் கூடியது. விலங்கு களைப்போல் உணர்வற்ற நிலையில் இனப்பெருக்கம் செய்யாதீர்கள். தற்போது ஒரு குழந்தையைப் பெற விரும்புவதற்கு முன் தயாராகி விடுங்கள். உங்களுக்குள் இருக்கும் உணர்ச்சி மிகைப்புகளில் இருந்து விடுபடுங்கள். நீங்கள் முற்றிலும் தூய்மை பெறும் தருணத் திற்கு காத்திருந்து அதன்பிறகு குழந்தை பெற்றுக் கொள்ளுங்கள். பிறகு உங்கள் ஊக்கத்தையும், அன்பையும் உங்கள் குழந்தைகளுக்குக் கொடுங்கள். சிறந்ததோர் உலகத்தை உருவாக்குவதற்குத் துணை புரியுங்கள். இல்லையேல், இந்த உலகத்தை மேலும் நெரிசலுடையதாய் செய்வீர்கள். முன்பே பித்துபிடித்தமாதிரிதான் இருக்கிறது மக்கள் கூட்டம். இந்தக்கூட்டத்தை மேலும் அதிகரிக்க எந்த அவசியமும் இல்லை. உலகெங்கும் ஊர்ந்து சென்று இடத்தை நிரப்பும் புழுக் களைப் போலில்லாமல் மனித சீவன்களை உங்களால் உலகிற்குக் கொடுக்க முடியும் என்றால், முதலில் தயாராகிவிடுங்கள்.

என்னைக் கேட்டால் ஒரு தாயாவதென்பது மிகப்பெரிய ஒழுங்கு பாடு (discipline) எனலாம், ஒரு தந்தையாவது என்பது தன்னொழுக்க முறைகளில் மிகவும் கண்டிப்பாய் இருப்பது (austerity) எனலாம். இல்லையேல் உங்களைப் போல் ஒருவரை அல்லது உங்களைவிட மோசமான ஒருவரையே உங்கள் இடத்தில் விட்டுச் செல்வீர்கள். அது உங்களைப் பொறுத்தவரை விரும்பத்தக்க செயல்முறை ஆகாது. ஞானம் பெற்றவர்கள் குழந்தைகளை பிறப்பிக்க வேண்டும் என்கிற அவசியம் இல்லை, உணர்ச்சி மிகைப்புடையவர்களும் பிறப்பித்தாக வேண்டும் என்பதில்லை. இரண்டு நிலைகளுக்கும் இடையில் உள்ளவர்கள் தாம் முக்கியத்துவம் பெறுவர்.

## கடைசிக் கேள்வி:

**தாங்கள் சொல்கிறீர்கள், உங்களுடைய முகமூடிகளைக் கழற்றிவிட்டு, நம்பத் தக்கவராயிருங்கள் என்று. காதல், சாகசம், பாலுறவு பற்றியே நான் எண்ணுகிறேன். அதைத்தவிர வேறெதுவும் எனக்குத் தெரியாது. நான் தவறான பாதையில் இருக்கிறேனா என்ன?**

பாலுறவிலோ, காதலிலோ, சாகசத்திலோ எந்தத் தவறையும் நான் காணவில்லை. நீங்கள் சரியான தடத்தில்தன் இருக்கிறீர்கள். அன்பு சரியான பாதை, அன்பை வாழ்வதன் மூலமே பிரார்த்தனை தோன்றுகிறது, வேறு எந்த மாதிரியாகவும் அல்ல. அன்பின் ஆழ்ந்த அனுபவங்களில் இருந்து, இனிப்பு மற்றும் கசப்பில் இருந்து, உவகை மற்றும் வேதனையில் இருந்து, உயர்வுமற்றும் தாழ்வில் இருந்து, சொர்க்க நரக அனுபவங்களில் இருந்து ஒருவர் உணர்வுடையவர் ஆகிறார். உங்களை உணர்வுடையவராக்க அவையெல்லாம் தேவை.

மகிழ்ச்சியைப் போலவே வேதனையும் வேண்டப்படுவதுதான் காரணம், இரண்டுமே பயன் விளைவிக்கும் வகையில் வேலை செய்கிறவை. கொஞ்சம் கொஞ்சமாய் மகிழ்ச்சிக்கும் வேதனைக்கும் இடையே ஒரு கயிற்றில் நடப்பவராகிவிடுகிறீர்கள். சமநிலையில் இருந்தாக வேண்டும் நீங்கள்.

ஆனால், பல நூற்றாண்டுகளாகவே காதல் வெறுக்கப்பட்டு வந்திருக்கிறது, உடலுறவு நிந்திக்கப்பட்டிருக்கிறது: எனவேதான் நீங்கள் தவறான பாதையில் இருப்பதாக ஒரு தவறான கருத்து உங்கள் மனதில் தோன்றியிருக்கிறது. நீங்கள் இயல்பாக இருக்கிறீர்கள். இயல்பாக இருப்பது ஒன்றும் தவறான பாதையில் இருப்பதாகாது. அந்த முறையில் நீங்கள் சிந்தித்தால், நீங்கள் தவறான பாதையில் இருப்பவர்தாம், கண்டனத்துக்குரியவர்தாம்.

சின்னதாய் சில கதைகள் சொல்கிறேன் உங்களுக்கு: அது புகழ்பெற்ற பணக்காரர் ஒருவரைப் பற்றிச் சொல்லப்பட்டது. ட்யூஸ்பெர்ரி பிரபு: தொண்ணூறு வயது அவருக்கு. பார்க்லேனின் தம்முடைய தரைத்தள வீட்டில் இருந்து, பெரிய சன்னல் வழியே வார விடுமுறையில் உலவச் செல்பவர்களை அவர் பார்த்துக் கொண்டிருந்தார். திடீரென்று அவருடைய பார்வை ப்ராமைத் தள்ளி வந்த ஒரு அழகான இளம்பெண்ணின் மீது படிந்தது. 'அடேய் ஜேம்ஸ், சீக்கிரம் ஓர் கொண்டா எனது பற்களை எனக்கு விசில் அடிக்கணும் போல் இருக்கு' என்று கூவினார்.

தொண்ணூறு வயது– ஆனால் இப்படி நிகழ்கிறது.

கிருஷ்ணப்பிரியாவிடம் இருந்து வந்த கேள்வி இது. ஞாபகமிருக்கட்டும், நீங்கள் இப்போது விசில் அடிக்காவிட்டால், என்றாவது ஒருநாள் உங்களுடைய பற்கள் எல்லாம் போனபிறகு, இளவட்டம்

ஒன்று போவதைப் பார்த்து 'சீக்கிரம் என்னோட பற்களைக் கொண்டு வா' என்பீர்கள். அது அருவருப்பானதாய் இருக்கும். இப்போது என்றால் பற்கள் சரியாக இருக்கின்றன. உங்களால் விசில் அடிக்க முடியும். எந்த ஒன்றும் அதற்கான நேரத்தில் செய்யப்பட்டுவிடவேண்டும். இல்லையேல் செய்கைகள் அருவருக்கத் தக்கதாகிவிடும்.

வண்ணத்துப்பூச்சியின் பின்னே ஒரு பையன் ஓடினால் அது சரியாக இருக்கும். ஆனால், ஒரு நாற்பது வயதுக்காரர் வண்ணத்துப் பூச்சியைத் துரத்திக்கொண்டு ஓடினால் பித்துக்குளித்தனமாக இருக்கும். இளைஞர்கள் கொஞ்சம் முட்டாள்தனமாகவே இருப்பார் கள். அது ஏற்கக்கூடியதும், எதிர்பார்க்க கூடியதும்தான் அதில் தவறேதும் இல்லை. சில சமயங்களில் முட்டாள்தனமும் வாழ்க்கையில் தேவைதான். காரணம் அறிவு நுட்பம் என்பது அந்த முட்டாள்தனத்தில் இருந்து வருவதுதான். நீங்கள் திடீரென்று அறிவாளியாகிவிடமுடியாது. நீங்கள் வழியில் இருந்து விலகி பல முட்டாள்தனங்கள் செய்த பின்பே அறிவு நுட்பம் உண்டாகிறது.

அறிவு நுட்பம் என்பது நறுமணம் மாதிரி, முட்டாள்தனத்தால் ஏற்படும் அனுபவங்கள் உரம் போன்றது. அது (உரம்) வீச்சமுடையது தான், ஆனால், அதில் இருந்தே அழகான பூக்கள் வெளியில் வருகின்றன. எனவே, வாழ்க்கையின் உரத்தைத் தவிர்த்துவிடாதீர்கள். இல்லையே அறிவின் மலர்களை நீங்கள் தவற விடும்படியாகும். நீங்கள் ஒருபக்கம் அடக்கி வைக்கிற ஆசை மறுபக்கம் தலையெடுக்கும். வாழ்க்கையை நீங்கள் வஞ்சிக்க முடியாது.

அந்த குட்டி ராட்சஸன் சொன்னான், 'அம்மா, என்னோட தலை ரொம்பப் பெரிசுன்னு பையன்கள் சொல்றாங்க' என்று.

'அப்படியொன்றும் உன்னோட தலை பெரிசில்லை. அந்த அழுக்குபிடிச்ச பசங்களைவிடு. எனக்காகக் கொஞ்சம் கடைக்குப் போகணும், உடனே கிளம்பு. பத்து பவுண்டுகளுக்கு உருளைக்கிழங்கும், ஐந்து பவுண்டுக்கு சிவப்பு முள்ளங்கியும், இரண்டிற்கு முட்டைகோசும் வாங்கணும்' என்றாள் அம்மாக்காரி.

'சரி மம்மி. கடைக்கு எடுத்திட்டு போற பை எங்கே 'ஓ, அதைப் பத்தி என் கவலைப்படறே? உன்னோட குல்லாயை யூஸ் பண்ணிக்கோ'.

ஆக, இப்படியோ அப்படியோ சிந்தியுங்கள். மறுபடியும் சிந்தியுங்கள். பத்து பவுண்ட் உருளை, ஐந்து பவுண்ட் முள்ளங்கி, இரண்டு பவுண்ட் முட்டை கோஸ். அப்படியே உன்னோட தொப்பியில் போட்டுட்டு வந்திரு. நீங்கள் ஒருபக்கம் அடக்கக்கூடும். அது மறுபக்கம் குமிழிடும். எதையும் அடக்கி வைக்கப் பார்க்காதீர்கள். பாலுறவு பற்றியதென்றால் ரொம்பவும் தாமதமாகிவிடுவதற்குமுன் இடமளியுங்கள். அதை அனுமதியுங்கள், ஏற்றிடுங்கள், செயல் படுங்கள். அது கடவுள் அளித்தது. அதில் ஆழ்ந்ததோர் காரணம் இருக்க வேண்டும். இருக்கிறது. ஒரு போதும் பொறுப்பைத் தட்டிக் கழிக்காதீர்கள், இல்லையேல் உங்கள் வளர்ச்சியைத் தட்டிக் கழித்தவராவீர்கள். இந்த நூற்றாண்டில். இந்த இருபதாம் நூற்றாண்டில் அத்தகைய கேள்விகளைக் கேட்பது முட்டாள்தனம்.

அந்த ஆறுவயதுப் பையன் முதல் முறையாய் உயிரியல் பூங்கா (Zoo)விற்குச் சென்றான். வழக்கம்போல் அருவருக்கும் படியான கேள்விகளைக் கேட்கலானான்.

'டாட், யானைக்குட்டிகள் எங்கிருந்து வருகின்றன?' என்று கேட்டான். நீங்க பழைய கால் முளைச்ச பறவைக்கதையையே சொன்னால் நான் உங்களை கிறுக்கர் என்று தீர்மானிக்கும்படி ஆகும்' என்று கூடவே சொல்லி வைத்தான்.

யானைக்குட்டிகளை ராட்சத பறவையா தூக்கிவருகிறது? நீண்ட கழுத்தும் காலும் கொண்ட பறவை (Stork)க் கதையை இம்முறையும் சொன்னால் உண்மையிலேயே நீங்கள் கிறுக்கர்தான்.

மக்கள் முட்டாள்தனமாய் தீர்ப்பு வழங்கும் நாட்கள் போயே போய்விட்டன... ஃப்ராய்டுக்குப் பிறகு மனிதன் பாலுறவை இயல்பாக ஏற்கும் நிலைக்கு வந்துவிட்டான். உலகில் மிகப் பெரிய மாற்றம் ஏற்பட்டிருக்கிறது.

கிருஷ்ணப்ரியா ஐநூறு ஆண்டுகளுக்கு முன் இந்த கேள்வியைக் கேட்டிருந்தால் சரியாக இருந்திருக்கும். ஆனால் தற்போது? தற்போது நகைக்கதக்கதாயிருக்கிறது.

அதிலும் என்னுடைய ஆசிரமத்தில்?

**சூத்திரம் – 25** **'விசேஷ தர்சின ஆத்மபாவ பாவனா நிவ்ருத்தி'**

விவேகம் உள்ளவன் சித்தத்தை ஆன்மாவாக எண்ணுவது இல்லை.

**சூத்திரம் – 26** **'ததா விவேகனிம்னம் கைவல்ய ப்ராக்பாவம் சித்தம்'**

அப்பொழுது விவேகத்துடன் கூடிய சித்தம் கைவல்யத்திற்கு முந்தைய நிலையை அடைகிறது.

**சூத்திரம் – 27** **'தத்சித் ரேஷு ப்ரத்யயாந்த ராணி சம்ஸ்காரேப்ய'**

சித்தத்திற்கு தடையாய் எழும் எண்ணங்கள் சம்ஸ்காரங்களில் இருந்து வருபவை.

**சூத்திரம் – 28** **'ஹானமேஷாம் க்லேசவதுக்தம்'**

அறியாமையையும், அகங்காரத்தையும் அழிக்கும் முறையாலேயே இவற்றையும் அழிக்கலாம்.

**சூத்திரம் – 29** **'ப்ரஸங்க்யானேப்யகு ஸீதஸ்ய ஸர்வதா விவேக கயாதேர் தர்மமேக: ஸமாதி**

உண்மை விவேகத்தில் உண்டான பயன்களைத் தியானம் செய்யும் யோகிக்கு, பரிபூரண விவேகஞானம் உண்டாகி தர்மமேக சமாதியை அடைகிறான். (ஆற்றல்களை எல்லாம் புறக்கணிக்கும் ஆற்றலே தர்ம மேக சமாதி) பந்தங்களில் இருந்தும், பந்தங்களை ஏற்படுத்திய இயற்கையிடம் இருந்தும் விடுபட விவேகம் வகை செய்யும்.

**சூத்திரம் – 30** **'தத: க்லேச கர்ம நிவ்ருத்தி'**

துன்பங்களுக்குக் காரணமான அறியாமையும், செயல்களும் நின்றுவிடுகின்றன.

**சூத்திரம் – 31** **'ததா ஸிர்வாவரண மலாபேதஸ்ய ஞானஸ்ய ஆனந்த் யாத்ஞேயம் அல்பம்'**

அப்பொழுது மறைப்புகளும் மலினங்களும் நீங்கி விடுவதால், அறிவு எல்லையற்றதாகி அறியப்படும் பொருள் சிறியதாகிறது.

சூத்திரம்– 32 *'தத: க்ருதார்த்தானாம் பரிணாமக்ரம ஸமாப்திர் குணானாம்'*

*குணங்கள் குறிக்கோளை அடையும்போது அவற்றின் பரிணாமக் கிரமமும் முற்றுப்பெறுகிறது. [முக்குணங் களையும் கடந்தவருக்கு அனுபவங்கள் தேவையில்லாமல் போய்விடும்]*

சூத்திரம்– 33 *'சணப்ரதி யோகி பரிணாமா பராந்த நிர்க்ராஹ்ய க்ரம'*

*கிரமம் ஒவ்வொரு கணங்களுடன் தொடர்புடையதும் ஒரு தொடரின் முடிவில் காணப்படுவதும் ஆகும்.*

சூத்திரம்– 34 *'புருஷார்த்த சூன்யானாம் குணாணாம் ப்ரதிப்ரஸவ: கைவல்யம் ஸ்வரூப ப்ரதிஷ்டா வா*

*எவ்வித நோக்கமின்றி, ஆத்மாவிற்காக வேலை செய்ய வேண்டுமென்ற சிந்தனையும் நீங்கி, குணங்கள் படிப்படியாய் மேலேபோய் ஒடுங்கிவிடுவது கைவல்யம். அல்லது ஆன்மா தனது சொந்த இயல்பில் நிலைபெறுவது கைவல்யம் எனப்படும்.*

**முதல் சூத்திரம்:**

*'விசேஷ தர்சின ஆத்மபாவ பாவனா நிவ்ருத்தி'*

விவேகம் உள்வன் சித்தத்தை ஆன்மாவாக எண்ணுவதில்லை. புத்த உணர்வின் இறுதி நிலையை ஆனந்தம்– இருப்புணர்வின்மை என்கிறார்.

அதைப்புரிந்து கொள்வது கடினம். நீங்கள் விடவேண்டிய கடைசி ஆசை உங்களுடைய ஆசையாக இருக்க வேண்டும் என்கிறார் புத்தர். ஆசையைத் தூண்டும் பொருட்களலான உலகம் இது. ஆனால் அடிப்படை ஆசை தொடரப்பட வேண்டியது. மரணம் தான் மிகப்பெரிய அச்சம். விடப்பட வேண்டிய கடைசி ஆசை ஆசையே.

இந்தச் சூத்திரத்தில் பதஞ்சலி கூறுகிறார்: உங்கள் விழிப்புணர்வு மிகச்சரியாக இருந்தால் விவேகம் அடையப்படும், உங்களுக்குள்ளும், வெளியேயும் எது நடந்தாலும் அதற்கு சாட்சியாக முழுக்க முழுக்க சாட்சியாக இருந்து விடுங்கள்... நீங்கள் இனியும் கர்த்தா அல்ல. நீங்கள் பார்த்துக்கொண்டிருந்தால் போதும், பறவைகள் வெளியே பாடுவதைக் கவனியுங்கள். உங்களுக்குள் நிகழும் இரத்தச் சுற்றோட்டத்தைக் கவனியுங்கள். எண்ணங்கள் உள்ளுக்குள் அசைந்தபடி இருக்கின்றன– கவனியுங்கள், எங்கேயும் நீங்கள் தொடர்பு படுத்தப்படவில்லை' நான் உடலாக இருக்கிறேன்' என்று சொல்லாதீர்கள். எதையுமே நீங்கள் சொல்லாதீர்கள். எந்தவொரு பொருளுடனும் உங்களை அடையாளப்படுத்திக் கொள்ளாமல் தொடர்ந்து கவனித்திருங்கள். நீங்கள் செயல்விளைவிக்கப்படுகிறவராக (Subject) மட்டுமே இருக்கிறீர்கள். நீங்கள் கவனித்திருப்பவர், சாட்சி– இந்த சாட்சி பாவம் நிலைபெற்றதும் ஆசை மறைகிறது.

ஆசை மறைகிறபோதே இறப்பும் மறைந்து விடுகிறது. நீங்கள் தொடர்ந்திருக்க விரும்புவதால் மரணம் இருக்கிறது. நீங்கள் இறப்பதற்கு விரும்பவில்லை என்பதாலேயே மரணம் இருக்கிறது.

நீங்கள் பரம்பொருளுக்கு எதிராகப் போராடுவதால் மரணம் இருக்கிறது. நீங்கள் சாகத் தயாராகிற கணத்திலேயே மரணம் பொருளற்றதாகிவிடும். நீங்கள் சாகத் தயாராகிற பொழுது. எப்படிச் சாவீர்கள்? மரணத்தின் அத்தனை சாத்தியமும் உங்களுடைய தயார் நிலையில் வெல்லப்பட்டுவிடுகிறது. இதுவே மதத்தில் காணப்படும் முரண்பாடு.

இயேசு கூறுகிறார், 'நீங்கள் உங்களைப்பற்றிக் கொள்வீர் களாயின், உங்களை நீங்கள் இழந்துவிடுவீர்கள். நீங்கள் உங்களை அடைய விரும்பினால் உங்களைப் பற்றிக் கொள்ளாதீர்கள். அப்படிப் பற்றிக்கொள்ள முயல்பவர்கள் அழிக்கப்பட்டுவிடுகிறார்கள்: உங்களை அழிப்பதற்காக அங்கே யாரும் இருக்கவில்லை. இருப்பதற் கான உங்களுடைய முயற்சியே அழிக்கக்கூடியதுதான், காரணம், 'நான் தொடர்ந்தாக வேண்டும்' என்கிற கருத்து தோன்றிய கணத்திலேயே நீங்கள் பரம்பொருளுக்கு எதிராகப் போகத் தொடங்கி விடுகிறீர்கள். அது கடலுக்கெதிரான போக்கை மேற்கொள்ள முயலும் அலையைப் போன்றதாகும். அந்த முயற்சியே இப்போது கவலையையும், துன்பத்தையும் உண்டுபண்ணுவதாயிருக்கிறது. அலை மறைந்து விடுகிற கணமொன்று வரவே செய்யும். ஆனால், தற்போது, அலை கடலுக்கெதிராய் போராடுகிற காரணத்தாலேயே, மறைதல் காட்சியளிக்கிறது மரணத்தைப் போன்று. அந்த அலை உணர்வோடு, தயார் நிலையில் இருந்தால்; நான் கடலன்றி வேறில்லை எனவே தொடர்ந்து முயற்சிப்பதில் என்ன இருக்கிறது? நான் எப்போதும் இருந்திருக்கிறேன், தொடர்ந்து இருப்பேன். நான் ஓர் அலையாக இருக்கவில்லை– அலை என்பது ஒரு கணப் பொழுதிற்காக நான் எடுத்த வடிவம். வடிவம் மறையும், ஆனால் என்னுடைய உள்ளுறை (Content) மாறாது. நான் இந்த அலையாக இல்லாமலிருக்கலாம், இன்னொரு அலையாகிவிடக்கூடும் அல்லது அலையாகவே இல்லாமலும் போகலாம். கடலின் அலையற்ற ஆழப்பகுதியாக நான் மாறக்கூடும்.

ஆனால்,. உள்ளார்ந்த மெய்ம்மை (reality) அப்படியேதான் இருக்கக்கூடும், காரணம், பரம்பொருள் உங்களுள் ஊடுருவிப் பரவுகிறது. அந்தப் பரம்பொருள்தான் நீங்கள், பரம்பொருளின் வெளிப்பாடு. விழிப்புணர்வு நிலைபெற்றதும், 'நான் இதுவாகவும்

இருக்கவில்லை, அதுவாகவும் இருக்கவில்லை' என்கிற தனித் தன்மையை ஒருவர் புரிந்து கொண்டு, எந்தவொன்றுடனும் தன்னை அடையாளப்படுத்திக் கொள்ளாமல் வெறும் உணர்வாக அவர் மாறி விடுகிற பொழுது, ஆத்மாவில் தங்கியிருக்கும் ஆசை முற்றுப் பெற்று விடுகிறது' என்கிறார். பதஞ்சலி. பிறகு, கடைசி ஆசையும் மறைந்து விடுகிறது. எனவேதான் புத்தர் சொல்கிறார், 'நீங்கள் பணத்துக்கான ஆசை,. செல்வம், அதிகாரம், கவுரவம் இவற்றின் மீது வைக்கிற ஆசையைவிட முடியும்– அது ஒன்றுமேயில்லை: உலக ஆசையை நீங்கள் விட முடியும், அது ஒன்றுமேயில்லை: காரணம் அவையெல்லாம் இரண்டாம் தரமானவை.

அடிப்படை ஆசை 'இருப்பது', எனவேதான், உலகை துறப்பவர் கள் விமோசனத்துக்கு (liberation) ஆசைப்படத் தொடங்கி விடுகிறார் கள். அவர்கள் மோட்சத்தில், விடுவிக்கப்பட்ட நிலையில் இருப்பார் கள். அங்கே வலியும் வேதனையும் இருக்காது என்று அவர்கள் நம்புகிறார்கள். அவர்களை முழுமையான பேரின்பத்தில் திளைத்தி ருப்பார்கள். 'அவர்கள் அங்கே இருந்தாக வேண்டும்' என்பதற்கு அழுத்தம் கொடுக்க வேண்டும்.

அதனால்தான் இந்த நாட்டில் புத்தர் வேரூன்ற முடியவில்லை. தன்னை மிகவும் சமயம் சார்ந்ததாய் கருதிக்கொண்டிருக்கிற நாடு இது. சமயத்தில் (religion) ரொம்பவே ஈடுபாடு கொண்ட ஒருவரால் இந்த நாட்டில் வேர்பிடிக்க முடியாமல் போய்விட்டது. என்ன ஆயிற்று. வாழ வேண்டும் என்கிற ஆசையை விடுங்கள்' என்று அழுத்தமாய் சொன்னார் அவர். இருப்புணர்வு அற்றவராயிருங்கள்'. அவர் சொன்னார், விடுலையை வேண்டி நிற்காதீர்கள், உங்களுக்குச் சுதந்திரம் இல்லை. சுதந்திரம் உங்களிடமிருந்து நீங்கள் சென்றால் தான் ஆனால் உங்களுக்கு இல்லை' என்று.

உங்களிடமிருந்து நீங்கள் விடுவித்துக் கொள்வதே விடுதலை. இந்த வேறுபாட்டைக் கவனியுங்கள். அது உங்களுக்கானது அல்ல. விடுபட்டது இருக்காது. விடுபட்டதும் மறைந்துவிடும் புத்தர் சொன்னார்.'பிணைக்கின்ற தளை மட்டுமே எஞ்சிநிற்கும்' என்று. நான் அதை உங்களுக்குச் சொல்ல முயல்கிறேன்.

நீங்கள் எப்போதாவது ஆரோக்கிய நிலையை எதிர்கொண்டிருக்கிறீர்களா? நீங்கள் பலமுறை ஆரோக்கியமாக இருந்திருக்கிறீர்கள் ஆனால் ஆரோக்கியம் என்றால் என்னவென்று உங்களால் சொல்ல முடியுமா? பிணி மட்டுமே உளதாயிருக்கிறது. ஆரோக்கியம் உளதாயிருக்கவில்லை. உங்களுக்குத் தலைவலி இருந்தால் அதை நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். ஆனால், அது இல்லாமல் இருப்பதை நீங்கள் எப்போதாவது அறிந்ததுண்டா? உண்மையில் தலைவலி இல்லை என்றால் தலையும் மறைந்துவிடுகிறது. அதனைச் சிறிதும் நீங்கள் உணர்ந்திருப்பதில்லை. உங்கள் தலையை நீங்கள் தொடர்ந்து உணர்ந்து கொண்டிருப்பீர்களாயின், உள்ளுக்குள் ஏதோவொறு இறுக்கம் இருப்பதையே அது காட்டுகிறது. ஒரு வகை தலைவலி தொடர்ந்து இருக்க வேண்டியதாயிருக்கிறது.

உங்களுடைய முழு உடம்பும் ஆரோக்கியமாயிருந்தால் உடம்பு மறைந்துவிடுகிறது. உடம்பு இருப்பதையே நீங்கள் மறந்துவிடுகறீர்கள். 'ஜென்' மார்க்கத்தில் தியானிப்பவர்கள் ஆண்டுக்கணக்கில் எதையும் செய்யாமல், அப்படியே அமர்ந்திருக்கிறார்கள். தாங்கள் உடம்புடன் இருப்பதையே அவர்கள் மறந்துவிடுகிற ஒரு நேரம் வருகிறது. அதுதான் முதல் சடோரி. உடம்பு அங்கே இல்லை என்பதல்ல, உடம்பு இருக்கிறது ஆனால் எவ்வித இறுக்கமும் இருப்பதில்லை. ஆக அதை எப்படி உணர்வது? நான் ஒன்றைச் சொன்னால் கேட்க முடிகிறது? ஆனால் நான் அமைதியாக இருந்தால் என்ன கேட்பீர்கள்? அமைதி இருக்கிறது– அது நிறையவே உங்களுக்குச் சொல்ல முடியும்– ஆனால் அமைதியை– நிசப்தத்தை உங்களால் கேட்க முடியாது. சில நேரங்களில், ஆம், அமைதியை என்னால் கேட்க முடிகிறது' என்று நீங்கள் சொல்கிற போது அந்நிலையில் ஏதோ ஒரு சப்தத்தை நீங்கள் கேட்கிறீர்கள். அது ஒரு இருண்டு இரவின் ஓசையாயிருக்கலாம். ஆனாலும் அது சப்தந்தான். அது முற்றிலும் ஓசையற்றதாயிருந்தால் உங்களால் எதையும் கேட்க முடியாது. உங்கள் உடம்பு முழுமையான ஆரோக்கியத்துடன் இருந்தால், நீங்கள் அதை உணரமாட்டீர்கள். உடம்பில் ஏதேனும் ஒரு இறுக்கம், பிணி, உபாதை ஏற்பட்டால் அந்நிலையில் நீங்கள் கேட்கத் தொடங்குகிறீர்கள். எல்லாமே இணக்கமாய் இருக்குமெனில் அப்போது வலியோ வேதனையோ இருக்காது, சற்றும்

எதிர்பாராதவிதமாய் நீங்கள் வெற்றாகி (சூன்யம்)விடுகிறீர்கள். ஒரு 'இன்மை' (nothingness) உங்களை ஆட்கொண்டு விடுகிறது.

கைவல்யம் முடிவான ஆரோக்யம. எல்லாக் காயங்களும் குணப்பட்டிருக்கும் முழுமை. எல்லாக் காயங்களும் (மனப்புண்) ஆறிய பின் நீங்கள் எப்படி இருப்பீர்கள்? சுயம் என்பது இறுக்கங் களின் திரட்சியின்றி வேறேயென்ன. சுயம் என்பது அத்தனை வகை நோய்களும் உபாதைகளுமின்றி வேறில்லை. சுயம் என்பது நிறைவேற்றப்படாத ஆசைகள் ஏமாந்துபோன நம்பிக்கைகள், எதிர் பார்ப்புகள், கனவுகள் தானேயன்றி வேறில்லை எல்லாமே உடைந்து போனவை, நொறுங்கிக்கிப்போனவை.

சடோரி (Saoori) திடீர் என்று ஏற்படுகிற ஞானோதயம்.

குவிக்கப்பட்ட நோய்களே சுயம் எனப்படுகிறது. அல்லது இப்படிப் புரிந்து கொள்ளுங்கள், இணக்கமான நேரங்களில் நீங்கள் இருப்பதையே நீங்கள் மறந்து விடுகிறீர்கள். பிறகு ஆகா எத்தனை அருமையானது, எத்தனை நேர்த்தியானது என்று நீங்கள் நினைவு படுத்திக்கொள்வீர்கள். உங்களைவிட பெரிதான ஒன்று உங்களை அடக்கியாள்கிறது, உங்களைவிட உயர்ந்த ஒன்று உங்களை சுவாதீனப்படுத்திக் கொண்டு விடுகிறது. உங்களைவிட ஆழமான ஒன்று மேலே குமிழிடுகிறது. நீங்கள் மறைந்து போகிறீர்கள். காதலின் ஆழ்ந்த கணங்களில் காதலர்கள் மறைந்து விடுகிறார்கள். அமைதியின் ஆழ்ந்த கணங்களில் தியானிப்பவர்கள் மறைந்து விடுகிறார்கள். ஆடிப்பாடிக் கொண்டாடுககிற நேரத்தில் கொண்டாடுகிறவர்கள் மறைந்து விடுகிறார்கள். இதுவே கடைசிக் கொண்டாட்டம், முடிவானது, உச்சநிலை –கைவல்யம்.

பதஞ்சலி கூறுகிறார்– 'ஆசையும் மறைகிறது, இருப்பதற்கான ஆசையும் மறைய வேண்டியிருக்கிறது' என்று. இருப்புணர்வு பற்றியே எண்ணமிடாத அளவுக்கு ஒருவர் பெருமளவில் நிறைவுற்றுவிடுகிறார். நீங்கள் நாளையும் இருக்க விரும்புவது எதற்காக? காரணம் இன்றைய பொழுது நிரப்பப்படாமல் இருக்கிறது. 'நேற்று' என்பது விரக்தியாயிருந்தது. 'இன்று' என்பது மறுபடியும் விரக்தியில் இருப்பது. எனவேதான் 'நாளை' தேவைப்படுகிறது. ஏமாற்றத்துக் குள்ளான மனம் வருங்காலம் என்பதைத் தோற்றுவித்துக்

கொள்கிறது. வஞ்சிக்கப்பட்ட மனம் வருங்காலத்தைப் பற்றிக் கொண்டுவிடுகிறது. ஏமாற்றமடைந்த மனம் இருக்க விரும்புவதற்குக் காரணம், எந்தப்பூவும் மலராத நிலையில் மரணம் வந்துவிடக்கூடாதே என்பதற்காகத்தான். இதுவரை எதுவும் நடந்தபாடில்லை. எந்தவித பயனுமின்றி காத்திருந்ததுதான் மிச்சம்: தற்போது நான் எப்படி இறக்க முடியும்? நான் இன்னும் வாழ்ந்து பார்க்கவில்லையே, வாழ்ந்து பார்க்காத வாழ்க்கை தோற்றுவிக்கிறது இருப்பதற்கான ஆசையை.

மக்கள் மரணம் குறித்து ரொம்ப பயப்படுகிறார்கள்: இவர்கள் வாழ்க்கையை இன்னமும் வாழாதவர்கள். ஒரு வகையில் இவர்கள் முன்பே இறந்தவர்கள். வாழ்ந்து பார்த்த ஒருவர், வாழ்க்கையை முழுமையாய் வாழ்ந்து விட்ட ஒருவர் சாவைப்பற்றிச் சிந்திக்கவே மாட்டார்.

அது வருகிறதா, வரட்டும் நல்லதுதான் என்று வரவேற்பவராகி விடுவார். அதையும் அவர் வாழ்வார். அதையும் அவர் கொண்டாடவே செய்வார். வாழ்க்கைக்கு ஒரு வரப்பிரசாதம் மரணம். மரணத்தை ஏற்றுக் கொள்ளுமளவிற்கு அதுவோர் பேரின்ப நிலை. வாழ்க்கை மிகப்பெரிய ஓர் அனுபவம். ஒருவர் மரணமடையவும் தயாராகிற அளவிற்கு ஒருவர் அச்சமற்றிருப்பதற்குக் காணரம் நாளை தேவைப்படவில்லை. இன்று முழுமையாய் நிரப்பப்பட்டதாயிற்று என்பதால்தான். ஒருவர் மலர்ச்சியடைந்து, பழம் தரும் நிலை (frui-tion)க்கு வருகிறார். தற்போது நாளை பற்றிய ஆசை மறைகிறது. நாளை பற்றிய ஆசை அச்சத்தின் விளைவாய் வந்தது. அன்பு நேரிடாத காரணத்தால் அங்கே அச்சம் இருக்கிறது. தொடர்ந்து இருக்க வேண்டும் என்கிற ஆசை, உங்கள் அடியாழத்தில் நீங்கள் முக்கியத்துவமற்றவராய் உங்களை உணர்வதையே காட்டுகிறது. ஏதோ ஒரு முக்கியத்துவதிற்காக நீங்கள் காத்திருக்கிறீர்கள். அந்த முக்கியத்துவம் நேரிட்டதும் நீங்கள் அமைதியாக நேர்த்தியான விதத்தில் சாகத் தயாராகி விடுகிறீர்கள்.

'இருப்பதற்கான கடைசி ஆசை மறைகிறபோது கைவல்யம் நிகழ்கிறது' என்கிறார் பதஞ்சலி. ஒட்டு மொத்த பிரச்சினையுமே இருப்பதா இல்லையா என்பதுதான். இப்படியிருக்க வேண்டும்,

நீங்கள் இல்லை என்கிறபோதுதான் முடிவான குறிக்கோளாய் அமைந்த ஒன்று (Ultimate) நிகழ்கிறது.

'இந்த வேறுபாட்டை ஒருவர் புரிந்து கொண்டதுமே ஆன்மாவில் தங்கியிருப்பதற்கான ஆசை நின்று விடுகிறது?.

சுயம் என்பது அகந்தையின் தூய்மை செய்யப்பட்ட வடிவமே யன்றி வேறில்லை. அதுவே சிரத்தை, உளைச்சல், இறுக்கம் இவற்றின் மிச்சமாகும். நீங்கள் இன்னமும் முழுமையாய் மலர்ச்சி யுற்று விடவில்லை, ஏதோ ஒன்று இன்னமும் மூடியபடி இருக்கிறது. நீங்கள் முற்றிலும் மலர்ச்சியுற்றபின், ஒரு மலைமீது நின்று கவனிப்ப வரைப்போல், ஒரு சாட்சியாயிருங்கள், சாவதற்கான ஆசைகூட மறந்துவிடும். ஆசை மறைந்ததும் முற்றிலும் புதிய ஒரு வாழ்க்கை நிகழ்கிறது. ஒரு புதிய நடைமுறை செயல்படத் தொடங்குகிறது.

'ஈர்ப்பு விதி' பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். அருளின் விதி பற்றிக் கேள்விப்பட்டிருக்கமாட்டீர்கள்.

ஈர்ப்புவிதி கீழ்நோக்கி விழுவதுபற்றியது. அருள் விதியில் எல்லாமும் மேல் நோக்கி எழத் தொடங்குகிறது. ஒவ்வொன்றும் எதிரிடையான ஒன்றால் சமநிலையில் வைக்கப்படுகிறது என்கிற காரணத்தால் அந்தவிதி இடம் பெறுகிறது. அறிவியல் ஈர்ப்பு விதியைக் கண்டுபிடித்தது. நியூட்டன் தோட்டத்து பெஞ்ச்சில் அமர்ந்திருந்த போது, ஆப்பிள்பழம் ஒன்று விழுவதைக் கண்டார். அந்த பழம் விழுகிறபோது அவருக்குள் ஓர் எண்ணம் தோன்றியது. 'பொருட்கள் ஏன் கீழ்நோக்கி விழுகின்றன? ஏன் வேறுமாதிரியாக இருந்திருக்கவில்லை? பழுத்தபழமொன்று ஏன் மேல் நோக்கி விழுந்து, அந்த வான் வெளியில் மறையவில்லை? பக்கவாட்டில் கூட விழாமல் கீழ்நோக்கி விழ வேண்டும்? அவர் ஆழ்ந்து சிந்திக்கத் தொடங்கினார், அதன்பிறகு ஒரு விதியைக் கண்டுபிடித்தார். பூமியானது எல்லாவற்றையும் தன்னைநோக்கி ஈர்த்துக் கொள்கிறது என்பதுதான் அந்த விதி. பொருள்களை ஈர்க்கும் புலத்தை (Gravitation) அது கொண்டிருக்கிறது. காந்தத்தைப்போன்று, எல்லாவற்றையும் அது கீழ்நோக்கி இழுத்துக் கொள்கிறது.

பதஞ்சலி, புத்தர், கிருஷ்ணர், இயேசு– இவர்களும் புவி ஈர்ப்பு சக்தியைவிட மேம்பட்ட ஓர் அடிப்படை விதியைத் தெரிந்து

வைத்திருந்தனர். புவிஈர்ப்பு சக்தி போலவே, அக வாழ்க்கையிலும் உணர்ச்சி நிலை மேல் நோக்கி எழுகிற ஒரு தருணம் வருகிறது என்பதை அவர்கள் உணர்ந்திருந்தனர். ஆப்பிள் மரத்திலேயே தொங்கிக் கொண்டிருந்தால் விழுந்திருக்காது. அது கீழ் நோக்கி விழாமல் இருக்க மரம் உதவியிருக்கும். பழம் மரத்தைத் துறந்ததுதான், அந்நிலையில் அது கீழ்நோக்கி விழுகிறது.

மிகச் சரியாக அதுவேதான. உங்கள் உடம்பை நீங்கள் பற்றியிருந்தால் மேல் நோக்கி எழமாட்டீர்கள். உங்கள் மனதை நீங்கள் பற்றியிருந்தால் மேல் நோக்கி எழமாட்டீர்கள். ஆன்மாவின் கருத்தை நீங்கள் பற்றியிருந்தால் புவியீர்ப்பின் தாக்கத்தில் இருப்பீர்கள்– காரணம் உடம்பு புவியீர்ப்பின் தாக்கத்தில் இருப்பது. மனமும் அப்படித்தான். மனம் நுட்பமான சரீரம். சரீரம் ஒட்டு மொத்த மனம். அவையிரண்டுமே புவியீர்ப்பு தாக்கம் கொண்டவை. நீங்கள் அவற்றைப் பற்றியிருந்தால் புவியீர்ப்பின் தாக்கம் உங்களிடம் இல்லை, ஆனால் புவியீர்ப்புதாக்கம் உள்ள ஒன்றை நீங்கள் பற்றி யிருக்கிறீர்கள். அது கல்லைக் கட்டிக் கொண்டு ஆற்றில் நீந்த முயல்வது போன்றதாகும், கல் உங்களைக் கீழ் நோக்கி இழுக்கும். அது நீங்கள் நீந்துவதற்கு இடமளிக்காது. அந்தக் கல்லை நீங்கள் விட்டுவிட்டால் நீந்துவது எளிதாக இருக்கும்.

புவியீர்ப்பு விதியின் கீழ் செயல்படுகிற ஒன்றை நாம் பற்றிக் கொண்டிருக்கிறோம்: உடல், மனம். பதஞ்சலி சொல்கிறார்,' இந்த உடம்போ மனமோ நீங்களல்ல என்பதை உணரும்போது, சற்றும் எதிர்பாராத விதமாய் நீங்கள் மேல்நோக்கி எழத் தொடங்குகிறீர்கள்' என்று வானத்தில் உள்ள ஏதோவொரு மையம் உங்களைப் பிடித்திழுக்கிறது. அந்த விதி கடவுளின் எல்லையற்ற அன்பு. கடவுள் உங்களை மேல் நோக்கி இழுக்கிறார். அப்படியொரு விதி இல்லை யெனில் ஈர்ப்பு விசை இருந்திருக்காது. இயற்கையில் நேர்மின்னாற்றல் உள்ளது. நேர் மின்னாற்றல் என்பது இருக்குமாயின் எதிர் மின்னாற்றல் என்பதும் இருக்கவே செய்யும். ஆண் இருப்பதால் பெண்ணும் இருக்கிறாள். நம்பிக்கையின் ஆதாரம் இருப்பதால் உள்ளுணர்வும் இருக்கிறது. இரவு இருப்பதால் பகல் என்கிற ஒன்றும் இருக்கிறது. வாழ்க்கை இருப்பதால் மரணமும் இருக்கிறது. ஒவ்வொன்றும் அதன் சமநிலையைப் பராமரிக்க எதிரிடையான

ஒன்று தேவைப்படுகிறது. புவியீர்ப்பு விதி என்கிற ஒன்றை அறிவியல் அறிந்து வைத்திருக்கிறது. அறிவியல் இன்னொரு பரிணாமத்தை அடைவதற்கு பதஞ்சலி மீண்டும் தேவைப்படுகிறார். அந்நிலையில்—மேல் நோக்கி எழும் பரிமாணத்தை அடையும் நிலையில் வாழ்க்கை முழுமை அடையும்.

அன்பும் ஈர்ப்பு சக்தியும் எதிர்கொள்ளும் ஒரு இடமாக நீங்கள் இருக்கிறீர்கள். உங்களுக்குள் அன்பும், ஈர்ப்பு சக்தியும் குறுக்குக் கோடுகளில் சந்திக்கின்றன. உங்களுக்குள் மண் சார்ந்த ஒன்றும் விண்சார்ந்த ஒன்றும் இருக்கிறது. விண்ணும் மண்ணும் சந்திக்கிற எல்லையாக (தொடுவானம்) நீங்கள் இருக்கிறீர்கள். நீங்கள் மண்ணையே மிகவும் பற்றியிருந்தால் நீங்கள் விண்ணுலகுக்குரியவர் என்பதை ஒரேயடியாய் மறந்துவிடுவீர்கள். மண்ணுடன் உள்ள பிணைப்பை உதறியதும் மேல் நோக்கி எழும்பத் தொடங்கி விடுவீர்கள்.

> 'ஒருவர் இந்த வேறுபாட்டைப் புரிந்து கொள்ளுகிறபோது, ஆன்மாவில் தங்கியிருக்கும் ஆசை நின்றுவிடுகிறது. அந்நிலையில் மனம் வேறுபடுத்தி உணரத் தொடங்குகிறது, விடுதலை (மோட்சம்) யை நோக்கி இழுபடுகிறது.

ஒரு புதிய ஈர்ப்பு விசை செயல்படத் தொடங்குகிறது. விடுதலை என்பது அன்பின் ஓட்டத்தில் பிரவேசிப்பதன்றி வேறேயென்ன. உங்களை நீங்களே விடுவித்துக்கொள்ள முடியாது, தடுப்புகளைத்தான் உங்களால் விடமுடியும். காந்தத்தைப் பார்த்திருக்கிறீர்களா? சிறிய இரும்புத் துண்டுகளை அது தன் பால் ஈர்த்துக் கொள்ளும். இரும்புத் துண்டுகள் காந்தத்தை நோக்கிச் செல்வதைப் பார்த்திருப்பீர்கள். உண்மையில் இரும்புத்துண்டுகள் காந்தத்தால் இழுபடுகின்றனவே யன்றி, அவை தாமாகச் செல்வதில்லை மேலாகப் பார்க்கிறபோது காந்தத்தை நோக்கி இரும்புத்துண்டுகள் செல்கிறமாதிரி இருக்கும் ஆனால், அடியாழத்தில் எதிரிடையான ஒன்று நிகழ்கிறது. கந்தம் தான் அவற்றைத் தன்பால் இழுத்துக்கொள்கிறது. காந்த மண்டலத்தின் ஈர்ப்பு சக்தியில் அது நிகழ்கிறது. இரும்புத் துண்டுகள் ஒரு பாறைக்கல்லில் இருக்குமாயின் காந்தத்தால் அவற்றை ஈர்க்க

முடியாது. அவை கல்லுடன் இணையாமல் இருந்தால் காந்தம் அவற்றை எளிதாய் ஈர்த்துக் கொண்டுவிட்டிருக்கும்.

மிகச்சரியாக அதுவேதான் நிகழ்கிறது:' இந்த உடம்பல்ல நீங்கள் என்பதை வேறுபடுத்தி உணர்ந்ததும், நீங்கள் இனியும் எந்த வொரு பாறைக்கல்லிலும் பிணைந்திருக்க மாட்டீர்கள். நீங்கள் இனியும் மண்ணுடன் பிணைப்புற்றிருக்கமாட்டீர்கள். கடவுளின் காந்தம் உடனடியாய் செயல்படத் தொடங்கிவிட்டிருக்கும் கடவுளை நீங்கள் அடைவதில்லை. கடவுள் முன்பே உங்களை வந்தடைந்து விட்டார். அவருடைய காந்த மண்டலத்தில் நீங்கள் இருக்கிறீர்கள், ஆனாலும், ஏதோ ஒன்றைப்பற்றிக் கொண்டிருக்கிறீர்கள். அந்தப் பற்றினை விடுங்கள், நீங்கள் தொடர்ந்து ஆற்றோடு செல்ல வேண்டியவர். புத்தர் 'ஸ்ரோத்தாபன' என்கிற வார்த்தையை பயன்படுத்துகிறார். ஆற்றில் விழுதல். நீங்கள் ஆற்றில் விழுந்தவுடன் ஆறு உங்களைக் கடல் நோக்கிச் செலுத்துகிறது. அந்நிலையில் நீங்களாக எதுவும் செய்ய வேண்டியதில்லை.

ஆற்றில் குதிக்கிற ஒரே செய்கைதான். நீங்கள் கரையில் அமர்ந்திருக்கிறீர்கள். நீங்கள் ஆற்றில் பிரவேசியுங்கள், மிச்சத்தை ஆறு பார்த்துக்கொள்ளும். ஓர் உயர்ந்த கட்டடத்தின் கூரைமீது, நிலத்துக்கு முந்நூறு அல்லது ஐநூறு அடி உயரத்தில் நீங்கள் நிற்பது போலத்தான் அதுவும். நீங்கள் நின்றிருக்கிறீர்கள். ஈர்க்கும் தன்மை உங்களை வந்தடைகிறது. ஆனால் நீங்கள் குதித்ததும் அதன்பின் எதுவும் செய்ய வேண்டியிருக்காது. 'நான் இப்போது என்ன செய்யும்படி இருக்கும்? என்று, நீங்கள் கேட்க வேண்டி யிருக்காது. நீங்கள் முதல் நடவடிக்கையை எடுத்தீர்கள். முதலாவதே கடைசியுமாகும். 'The first and the last freedom' என்கிற நூலை கிருஷ்ணமூர்த்தி எழுதியிருக்கிறார். அதன்பொருள். முதல் நடவடிக்கையே கடைசி நடவடிக்கை காரணம் நீங்கள் ஆற்றில் விழுந்தவுடன் மற்றதெயெல்லாம் ஆறுபார்த்துக் கொள்கிறது. நீங்கள் அவசியப்படமாட்டீர்கள். முதல் நடவடிக்கைக்குத்தான் துணிவு தேவை.

**வேறுபடுத்தி அறிய விருப்பம் கொண்ட மனம்**
**விமோசனத்தை நோக்கி இழுபடுகிறது.**

நீங்கள் மெள்ள மேல் நோக்கி நகரத் தொடங்குகிறீர்கள். உங்களுடைய உயிர்ச்சக்தி மேல் நோக்கி எழும்பத் தொடங்குகிறது. இதுவரை நீங்கள் அறிந்திருந்த விதிகளுக்கு மாறாக நிகழ்வதால் இது நம்பமுடியாததாகவே இருக்கும். இது புவியீர்ப்பு அல்ல, புவியீர்ப்பு சக்தியை எதிர்த்து காற்றில் மிதப்பது (levitation) உங்களுக்குள் இருக்கிற ஏதோ ஒன்று திடீரென்று மேல்நோக்கி நகரத் தொடங்குகிறது. அதன்போக்கை எதுவும் தடுப்பதில்லை.

நான் வேறொன்றைச் சொல்கிறேன் உங்களுக்கு ஒழுக்கமற்ற வட்டம் (Vicious circle) என்றொரு சொல்லை நீங்கள் கேள்விப் பட்டிருக்கிறீர்களோ என்னவோ. இன்னொரு சொல்லை நாம் உருவாக்கலாம்: ஒழுக்கமுள்ள வட்டம் (virtuous Circle) என்பதை. ஒழுக்கமற்ற வட்டத்தில் ஒரு கெடுதலான சமாச்சாரம் கெடுதலான ஒன்றை நோக்கியே இட்டுச்செல்லும். உதாரணமாக நீங்கள் அடைந்த கோபம் அதிக கோபத்துக்கே உங்களைச் கொண்டு செல்லும். கோபம் வலுப்பட்டு மிகுதியான கோபத்தை ஏற்படுத்தும்.

ஒழுக்கமற்ற வட்டம் மேலும் மேலும் வலுப்படுகிறது.

ஒழுக்கமான வட்டம் என்ற சொல்லை ஆராய்வோம். நீங்கள் தெரிநிலையோடு இருந்தால் விவேகம் வருகிறது. நீங்கள் தெரிநிலையோடு இருந்தால் வைராக்யம் வருகிறது. வேறுபடுத்தி உணர்வதில் உண்டாகிறது விருப்பங்களைத் துறத்தல். நீங்கள் உணர்வுடையவரானால், 'இந்த உடம்பல்ல நீங்கள் என்பதை உடனே புரிந்து கொள்வீர்கள். உடம்பை நீங்கள் உதற வேண்டும் என்பதல்ல, உங்களுடைய விழிப்புணர்வில் அது உதறப்பட்டுவிடும். விழிப்புணர்வில் எண்ணங்கள் உதறப்படுகின்றன. நீங்கள் இனியும் அதற்கு ஆற்றலைக் கொடுப்பதில்லை. உங்களுடைய ஒத்துழைப்பு, நின்றதும். அவற்றால் வாழ முடிவதில்லை. உங்கள் ஆற்றலைச் சுரண்டியே அவை வாழ்ந்தன. அவற்றுக்கென்று சொந்தமாய் ஆற்றல் இருந்ததில்லை. உங்களுக்குள் நுழைகிற ஒவ்வொரு எண்ணமும் உங்கள் ஆற்றலில் ஒரு பகுதியை எடுத்துச் சென்று விடுகின்றது. உங்கள் ஆற்றலைக் கொடுக்க நீங்கள் உடன்பட்டதால் அது வாழ்கிறது. நீங்கள் கொஞ்சம் தெரிநிலையோடு (aware) இருந்தால் விவேகம் வைராக்கியத்தைக் கொண்டு வரும், விழிப்புணர்ச்சி

துறத்தலைக் கொண்டுவரும். விழிப்புணர்வு மிகுந்தால் வைராக்கியம் மிகும்.

இதனையே நான் 'ஒழுக்கமுள்ள வட்டம்' என்கிறேன். ஒவ்வொரு ஒழுக்கமும் இன்னொரு ஒழுக்கத்தை நோக்கி உங்களை இட்டுச்செல்லும். அவை ஒவ்வொன்றும் மேலும் பலவற்றைத் தோற்றுவிக்கும்.

'கடைசி நிமிடம் வரை இத நிகழ்கிறது' என்கிறார் பதஞ்சலி. இதனை 'தர்மயோக சமாதி' என்கிறார் அவர். நாம் அதனை பிற்பாடு காண்போம். 'ஒழுக்கம் என்கிற மேகம் உங்கள்மீது வர்ஷிக்கும்' என்கிறார் அவர். விவேகம் என்கிற ஒழுக்க வட்டம் வைராக்கியத்தை நோக்கி உங்களை இட்டுச்செல்லும், வைராக்கியம் மறுபடியும் விவேகத்துக்கான அதிக சாத்தியங்களை உண்டுபண்ணும். ஒழுக்கத்தின் உச்ச நிலையில் ஏற்படு பொழிவே தர்மமேக சமாதி.

> **முந்தைய பதிவுகளின் நிர்ப்பந்தத்தில் மேலும் பல கருத்தாக்கங்கள் வேறுபடுத்தி உணர்தலி இடைவெளிளில் தோன்றும்.**

இன்னும் பல இடைவெளிகள் உள்ளன. எனவே, ஊக்கமிழந்து விடாதீர்கள். நீங்கள் மிகுந்த உணர்வோடு இருந்தால் அந்த இழுப்பை உணர்வீர்கள். அன்பு மேல் நோக்கி இழுப்பதை. இடைவெளிகள் இருந்தாலும் நீங்கள் எவ்வித முயற்சியும் இல்லாமல் ஆற்றில் மிதந்து செல்வீர்கள், எல்லாமே தடங்கலின்றி சென்று கொண்டிருக்கும். சமயத்தில் பழக்க வாசனையில் திடீரென்று நீங்கள் கரையில் இருக்கக் காண்பீர்கள். பல பிறவிகளாய் அந்தக் கரையில் தான் நீங்கள் இருந்து கொண்டிருந்தீர்கள். பழக்க வாசனையால் கடந்த காலம் உங்கள்மீது மீண்டும் மீண்டும் அதிகாரம் செலுத்துகிறது. அதானல் அதைரியப்பட்டு விடாதீர்கள். மறுபடியும் கரையில் இருப்பதை நீங்கள் புரிந்து கொண்டதும், திரும்பவும் ஆற்றுக்குள் நுழைந்துவிடுங்கள். இதுபற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. கவலையால் நீங்கள் மறுபடியும் ஒழுக்கமற்ற வட்டத்திலேயே உழலும்படி ஆகும். பலமுறை குறிப்பிட்ட இடத்துக்கு நெருக்கமாக வந்தும், தேடுகிறவர் தன்னுடைய பாதையைத் தொலைத்துவிடுகிறார். கவலைப்படவேண்டியதில்லை, மறுபடியும் விழிப்புணர்வைக் கொண்டு

வாருங்கள். பல முறை இப்படி ஆகிவிடுகிறது, அது இயல்புதான். இலட்சோபலட்சம் ஆண்டுகளாய் உணர்வற்ற நிலையில் நாம் வாழ்ந்து வந்தோம். பழைய பழக்கம் வேலை செய்யத் தொடங்குவது இயல்புதான். சின்னதாய் சில கதைகள் சொல்கிறேன் உங்களுக்கு.

தம்முடைய செயலாளினியுடன் ஒரு ஓட்டலின் வரவேற்பறைக்குச் சென்றார் நிறுவன முதலாளி ஒருவர். பதிவேட்டில் திரு மற்றும் திருமதி என்று பெயர்கள் எழுதி கையொப்பமிட்டார்.

எழுத்தர் கேட்டார்,'இரண்டு படுக்கைகளா', அல்லது இரட்டைப்படுக்கை ஓ.கே.யா?' என்று கேட்டார்.

'சரி, சார்' என்று அவளிடம் இருந்து பதில் வந்தது.

'சரிசார்' ஒரு மனைவி கணவனிடம் சொல்கிற வார்த்தை! ஒரு செயலாளினியாய் இருந்து வருவதில் ஏற்பட்ட பழக்க வாசனை. 'எஸ் சார், எஸ் சார்' என்று தொடர்ந்து சொல்வதால் ஏற்பட்ட பழக்கம். நீங்கள் கவனமாக இல்லையென்றால் பழக்கங்கள் உங்களை அறியாமலே மனதில் ஆழப்பதிந்துவிடும்.

ஒரு பள்ளிக்கூட ஆசிரியை, இளம் குண்டர்கள் சிலர் தன்னுடைய வீட்டு வாசலில் நான்கெழுத்து வாசகங்களை எழுதி வைத்திருப்பதாய் உள்ளூர் காவல் நிலையத்துக்கு 'போன்' செய்தாள். அவர்கள் அத்தோடு விடவில்லை, அதை ஏகப்பட்ட எழுத்துப் பிழைகளுடன் எழுதி வைத்திருக்கிறார்கள்' என்று தெரிவித்தாள்.

பள்ளிக்கூட ஆசிரியை பள்ளிக்கூட ஆசிரியைதான் அவள் நான்கெழுத்து வாசகங்கள் பற்றிக் குறைப்பட்டுக் கொண்டாள், ஆனால் புகார், அடிப்படையில் எழுத்துப்பிழைகள் பற்றியதாகவே இருந்தது.

**'முந்தைய பதிவுகளின் நிர்ப்பந்தத்தில் மேலும் பல கருத்தாக்கங்கள் தோன்றும் வேறுபடுத்தி உணர்தலின் இடைவெளிகளில்?**

பலமுறை நீங்கள் பின்னுக்கு இழுக்கப்படுகிறீர்கள், மறுபடியும் மறுபடியும். போராட்டம் கடுமையானது என்றாலும் முடியாததல்ல. அது கடினமாய், மேலும் வலிமை தேவைப்படுவதாய் இருக்கிறது

ஆனாலும் வருத்தப்பட வேண்டியதில்லை, ஊக்கமிழக்க வேண்டியதில்லை. எப்போது நினைவுபடுத்திக் கொண்டாலும் நடந்ததுபற்றி வருந்த வேண்டாம். உங்கள் விழிப்புணர்வை மறுபடியும் நிலைபெறச் செய்யுங்கள் அவ்வளவுதான்.

'ஞானத்தின் மிகப்பல மகிழ்ச்சி நிலைகளை அடைந்தபோதும், மாறாத ஆசையற்ற நிலையைப் பராமரிக்க முடிகிற ஒருவருக்கு, வேறுபடுத்தி உணர்தலைத் தொடர்ந்து மேற்கொள்ள முடியும். அவர் தர்மமேக சமாதி நிலையில் பிரவேசிக்கிறார்.

ஆசையற்ற நிலையை ஒருவர் தொடர்ந்து பராமரிக்க முடிவதை பரவைராக்கியம் என்கிறார் பதஞ்சலி. அது முடிவான துறத்தல் ஆகும். இந்த உலகத்தை நீங்கள் துறக்கிறீர்கள். பேராசையைத் துறக்கிறீர்கள், பணத்தைத் துறக்கிறீர்கள், அதிகாரத்தைத் துறக்கிறீர்கள், புறத்தேயுள்ள அனைத்தையும் துறக்கிறீர்கள். உங்கள் சரீரத்தையும், மனத்தையும் கூட துறந்துவிடுகிறீர்கள், ஆனால் கடைசியாய் துறப்பது கைவல்யத்தைத் துறப்பது, மோட்சத்தை நிர்வாணத்தைத் துறப்பது ஆகும்.

தற்போது விடுதலைபற்றிய எண்ணத்தையே துறந்துவிடுகிறீர்கள். காரணம் அதுவும் ஓர் ஆசை என்பதால்தான். ஆசையின் நோக்கம் எதுவாயினும் அடிப்படையில் ஒன்றுதான். நீங்கள் பணத்தை விரும்புகிறீர்கள், நான் மோட்சத்தை விரும்புகிறேன். உண்மையில் உங்களுடைய இலக்கைவிட என்னுடையது சிறந்தது. ஆனால் என்னுடைய ஆசையும் உங்களுடையது போலத்தான். ஆசை சொல்கிறது ' நான் இருக்கிற நிலையில் திருப்தி அடையவில்லை. மிகுதியான அளிவல் பணம் வேண்டும். அதன்பிறகே நான் மனநிறைவு கொள்வேன்' எனறு. ஆசையின் தன்மை வேறுபடுகிறது ஆனால் பிரச்சனை ஒரே மாதிரிதான். வருங்காலம் என்கிற ஒன்று தேவைப்படுவது தான் பிரச்சனை. இருக்கிறபடி போதாது. இன்னும் கூடுதலாய் நிகழவேண்டும். அப்போதுதான் நான் மகிழ்ச்சியாக இருக்க முடியும். இது ஆசையின் இயல்பு. உங்களுக்குப் பணம் வேண்டியிருக்கிறது, இன்னொருவருக்குப் பெரிய வீடு. சிலர் அதிகாரத்தைப்பற்றி எண்ணமிடுகிறார்கள். சிலருக்கு அரசியலில். சிலர் சிறந்த ஒரு மனைவியை அல்லது சிறந்த ஒரு கணவரைப்

பற்றி சிந்திக்கிறார்கள். சிலருடைய சிந்தனை அதிக படிப்பு, அதிக அறிவு பற்றியதாய் இருக்கிறது. சிலருக்கு சித்து வேலைகள் ஆனால் அது எவ்விதத்திலும் வேறுபாட்டை உண்டு பண்ணுவதில்லை.

நீங்கள் முற்றிலும் ஆசையற்றவராய் இருக்கலாம். ஆனால் மோட்சத்துக்கான ஆசையும் அதில் உட்பட்டிருக்க வேண்டும். மோட்சத்துக்கும் ஆசைப்படாத ஒரு நேரம் வரவே செய்யும், அப்போது கடவுளுக்கும் ஆசைப்படமாட்டீர்கள். நீங்கள் ஆசைப்படுவதையே விட்டுவிடுவீர்கள். நீங்கள் இருக்கிறீர்கள், ஆசை இருப்பதில்லை. இது ஆசையற்றிருக்கும் நிலை. இந்நிலையில் மோட்சம் நேரிடுகிறது. மோட்சத்தின் இயல்பே அது விரும்பமுடியாததாய் இருப்பதுதான் காரணம் ஆசையற்ற நிலையிலேயே அது அடையப்படுகிறது. விடுதலை ஒரு தூண்டலில் வருவதல்ல. அது தூண்டுதல்கள் மறைந்த நிலையிலேயே வருகிறது. நீங்கள் கடவுளை உங்கள் ஆசையின் இலக்காக்கிக் கொண்டு விடமுடியாது காரணம் ஆசைப்படுகிற மனம் தெய்வபக்தி அற்றதாகும். ஆசைப்படுகிற மனம் புனிதமற்றதாயிருக்கும். நீங்கள் கடவுளுக்கு ஆசைப்படாதபோது, கடவுள் தொடர்ந்து இருப்பதை அறிவீர்கள்.

அவரை நீங்கள் இனம்கண்டு கொள்வீர்கள்.

ஆசைகள் தடுப்புகளாய் வேலை செய்கின்றன. கடைசிவிருப்பம், மிகவும் நுட்பமான விருப்பம் விடுபடுவதற்கான விருப்பமே ஆகும். ஆசையற்றிருத்தலே கடைசி ஆசை.

> **ஞானத்தின் பல மகிழ்ச்சி நிலைகளை அடைந்தபோதும், நிலையான ஆசையற்ற நிலையைப்பராமரிக்க முடிகிற ஒருவருக்கு, வேறுபடுத்தி உணர்தலைத் தொடர்ந்து மேற்கொள்ள முடிவும்'.**

வேறுபடுத்தி உணர்தலில் (discrimination) ஒரு உயர்ந்த வகை வேண்டப்படுகிறது. அத்தனை துன்பங்களில் இருந்தும் விடுபடுகிற ஆசை, அத்தனை தளைகளில் இருந்தும் விடுபடுகிற ஆசை, அத்தனை தளைகளில் இருந்தும் விடுபடுகிற ஆசை – இவையும் எழாத அளவுக்கு நீங்கள் உணர்வுடன் இருந்தாக வேண்டும். உங்கள் இருப்புணர்வின் எந்தவொரு மூலையிலும் இருட்டு இல்லை என்கிற அளவிற்கு உங்கள் விழிப்புணர்வு முழுமையாயிருக்கிறது.

உங்களுக்குள் அறிவு விளக்கம் பெற்றிருக்கிறது. அறிவு பிரகாசிக்கிறது. அதனால்தான், புத்தரிடம், 'ஞானமுற்ற ஒருவருக்கு என்ன நேரிடுகிறது' என்று மீண்டும் மீண்டும் கேட்கப்பட்ட போதெல்லாம் அவர் அமைதியாகவே இருந்தது. அவர் பதிலளிக்கவில்லை. 'நீங்கள் ஏன் பதிலளிக்கவில்லை' என்று மீண்டும் மீண்டும் கேட்கப்படவும், அவர் சொன்னார்,' நான் பதிலளித்தால் அதன் பேரில் ஒரு ஆசையை நீங்கள் தோற்றுவித்துக்கொண்டு வருவீர்கள், பிறகு, அதுவே ஒரு தடுப்புச் சுவராகிவிடும். என்னை அமைதியாயிருக்க விடுங்கள் என்று. 'அது சச்சிதானந்தம்' என்று நான் சொல்வதாயின் அது சாத்தியமாயிருக்கிறது. விழிப்புணர்வாயிருக்கிறது. அவபேரின்ப நிலையுமாய் இருக்கிறது. அவ பேரின்பநிலையுமாய் இருக்கிறது. ஒரு ஆசை உடனடியாய் உங்களுக்குள் தோன்றுகிறது. கடவுளில் இருக்கும் பரவசநிலைபற்றி நான் பேசுவேனாயின் உடனடியாய் ஒரு பேராசை அதை எடுத்துக் கொண்டு விடுகிறது. உங்கள் மனம், 'நீ கவனமாக அதைத் தேடு. எப்படியும் அதைக் கண்டடைய வேண்டும். எந்த விலை கொடுத்தேனும் நீ சுகப்பட வேண்டும்' என்கிறது. புத்தர் சொல்கிறார். 'நான் அதைப்பற்றி எதுவும் சொல்லமாட்டேன், காரணம் நான் எதைச்சொன்னாலும் உங்கள் மனம் அதில் தாவிக்குதித்து, அதில் இருந்து ஓர் ஆசையை உருவாக்கிக் கொள்ளும். அதுவே காரணமாகிவிடும், நீங்கள் அதை அடையக்கூடியவராய் இருக்க மாட்டீர்கள்.

'மோட்சம் என்பதாக எதுவும் இல்லை' என்று புத்தர் அழுத்தமாய் சொல்கிறார். விழப்படைந்த ஒருவர் அப்படியே மறைந்து விடுவதாக அவர் அழுந்தக்கூறுகிறார். நீங்கள் விளக்கை அணைத்ததும் வெளிச்சம் மறைந்துவிடுகிறது. அப்படித்தான் அவரும் மறைகிறார். அந்நிலையில் சுவாலை எங்கே போயிற்று. சுவாலைக்கு என்னவாயிற்று என்று நீங்கள் கேட்கமாட்டீர்கள் அது மறைந்து விட்டது, அடியோடு இல்லாமல் போய்விட்டது. நீங்கள் ஞானம் பெற்றதும் எல்லாமும் மறைந்துவிடும். எதுவும் மிஞ்சாது என்கிறார் புத்தர் ஏன்? பெரிய அளவில் மறுத்துரைப்பது போல் தெரிந்தாலும்– ஆசைக்கான இலக்கை – பொருளை (Object) உங்களுக்கு வழங்க அவர் விரும்பவில்லை. பிறகு மக்கள் கேட்கத் தொடங்கிவிட்டனர். ' அப்படியானால் அத்தகைய நிலைக்கு நாங்கள் ஏன் முயலவேண்டும்?' என்று,

'அதைவிட இருக்கிறபடிக்கு இருந்துவிட்டுப் போகலாமே. உங்களுடைய இன்மை நிலை (nothingness) எங்களைக் கவரவில்லை' என்றும் அவர்கள் தெரிவித்தனர்.

இந்தியாவில் புத்தமதம் மறைந்துவிட்டது: சீனாவிலும், பர்மா விலும், சிலோனிலும் ஜப்பானிலும் அது மறுதோற்றம் பெற்றுவிட்டி ருக்கிறது. ஆனால் தன்னுடைய தூய்மையுடன் அது மறுபடியும் தோன்றப்போவதில்லை புத்த மதத்தினர் ஒரு படிப்பினையைப் பெற்றிருக்கிறார்கள்: மனிதன் ஆசையின் மூலமே வாழ்கிறான். ஞானத்துக்கப்பால் எதுவும் இல்லை, எல்லாமே மறைந்துவிடுகிறது என்றால் மக்கள் அவர்களைப் பின்பற்றமாட்டார்கள் என்பதை பிறகென்ன, எல்லாமும் இருக்கும். அவர்களுடைய மதம் மட்டுமே மறைந்துவிடும். எனவேதான் அவர்கள் ஒரு தந்திரத்தை கற்றுக் கொண்டது. ஜப்பானிலும், சீனாவிலும், சிலோனிலும், பர்மாவிலும் ஞானத்திற்குப்பின் அடையக்கூடிய நேர்த்தியான நிலைகள் பற்றி அவர்கள் பேசத் தொடங்கினர். அவர்கள் புத்தரை ஏமாற்றிவிட்டனர். புனிதம் தொலைந்தது. மதம் விரிவடைந்தது. புத்தமதம் உலகின் மிகப் பெரிய மதங்களுள் ஒன்றாயிற்று. மனித மனத்தின் சூழ்ச்சித் திறத்தை அவர்கள் கற்றுக்கொண்டனர். உங்கள் ஆசையை அவர்கள் நிறைவேற்றியிருக்கிறார்கள். 'ஆமாம்... மிகவும் அழகான நிலம், புத்தாவின் பேரெல்லை, நிலையான பேரின்பம் ஆட்சி செய்கிற சொர்க்கபூமி' என்றெல்லாம் அவர்கள் சொல்கின்றனர்.

அவர்கள் நம்பிக்கையூட்டும் சொற்களில் பேசுகிறார்கள். மக்களின் பேராசை மறுபடியும் கொழுந்துவிட்டெரிகிறது. ஆசை மேலெழுகிறது. மக்கள் புத்தமதத்தைப் பின்பற்றத் தொடங்கினர், ஆனால் புத்தமதம் தன்னுடைய அழகை இழந்துவிட்டது. அதன் அழகு, ஆசையூட்டும் பொருளை உங்களுக்கு வழங்காமல் இருந்தது தான்.

முடிவான குறிக்கோளாய் அமைகிற மெய்பொருள் பற்றி பதஞ்சலி மிகுச்சிறப்பாக எழுதியுள்ளார், அவரைச் சுற்றி எந்தவொரு தேவாலாயமும் எழுப்பப்படவில்லை. எப்பேர்ப்பட்ட ஓர் ஆசான், எப்பேர்ப்பட்ட ஒரு குரு தம்மைப் பின்பற்ற எவரும் இல்லாமல் இருந்திருக்கிறார். சின்னதாய் ஓர் ஆலயம் கூட அவருக்காகக்

கட்டப்படவில்லை. என்ன ஆயிற்று. அவருடைய யோக சூத்ரங்கள் வாசிக்கப்படுகின்றன, வியாக்கியானங்கள் செய்யப்படுகின்றன. ஆனால் புத்தமதம், சமண மதம், இந்துமதம், கிறித்துவ மதம், இஸ்லாமிய மதம் போன்று பதஞ்சலிபற்றி எதுவும் இருக்கவில்லை– காரணம் எந்தவொரு நம்பிக்கையையும் அவர்கள் உங்களுக்கு வழங்கவில்லை. உங்கள் ஆசைக்கு அவர் துணையாக இருந்திருக்கவில்லை.

'ஞானத்தின் மிகப்பல மகிழ்ச்சி நிலைகளை அடைந்த போதும், மாறாத ஆசையற்ற நிலையைப் பராமரிக்க முடிகிற ஒருவருக்கு, வேறுபடுத்தி உணர்தலை தொடர்ந்து மேற்கொள்ள முடியும். அவர் தர்மமேக சமாதிநிலையில் பிரவேசிக்கிறார்'.

தர்ம மேகசமாதி:

இந்த வார்த்தை புரிந்து கொள்ளப்பட வேண்டியது. அது ரொம்ப சிக்கலான சமாச்சாரம். பதஞ்சலியின் பேரில் பல உரைகள் செய்யப்பட்டிருந்தாலும் அவர்கள் முக்கியக் கருத்தை வெளியிட்டிருக்கிறார்கள்: தர்மமேக சமாதியின் பொருள்: ஆசைகள் மறைந்துபோகிற ஒரு நேரம் வருகிறது. ஆன்மா அதற்கு மேலும் விரும்பப்படாத பொழுது, மரணம் அஞ்சப்படாத பொழுது ஒழுக்கம் உங்கள் மீது வர்ஷிக்கிறது. உங்கள் தலைக்குமேல் ஒரு மேகம் கவிந்து கொண்டது போல் ஒழுக்கம் மழைப்பொழிவாகி, ஆசீர்வதிக்கிறது, அது ஒரு பேரின்ப நிலா... ஆனால், பதஞ்சலி அதை மேகம் என்கிறார்? அது இன்னமும் மேகந்தான். ஒருவர் அதைக் கடந்து செல்ல வேண்டும்.

முன்பு உங்களுடைய கண்களில் தீமை இருந்தது, தற்போது அவை ஒழுக்கத்தால் நிரம்பியுள்ளது. ஆனாலும் இன்னமும் நீங்கள் பார்க்கும் திறனற்றவராகவே இருக்கிறீர்கள். முன்பு துன்பத்தையன்றி வேறெதுவும் உங்கள்மீது பொழியப்படவில்லை. நரகந்தான் உங்கள்மீது பொழியப்பட்டிருந்தது. தற்போது நீங்கள் சொர்க்கத்தில் நுழைந்து விட்டிருக்கிறீர்கள், எல்லாமே நேர்த்தியாக இருக்கிறது. குறைபட்டுக் கொள்ளும்படியாய் எதுவும் இல்லை. ஆனால் இன்னமும் அது ஓர் மேகமாகவே உள்ளது– ஒருவர் அதைக்கடந்து செல்லவும் வேண்டும். அதனால்தான் அவர் அதனை 'மேகம்' என்றது.

அதுவே கடைத்தடை உண்மையில் அது மிகவும் நேர்த்தியானது. ஒழுக்கத்தின்பாற்பட்டது. அது தங்கச் சங்கிலியில் பதிக்கப்பட்ட வைரம். அவை சாதாரண சங்கிலிகளைப் போன்றவை அல்ல. சங்கிலிகள் என்பதைவிட அழகை அலங்கரிப்பது எனலாம். ஒருவர் அவற்றைப் பற்றிக்கொள்ள விரும்புவார். முடிவற்ற, பெருமகிழ்ச்சி தம்மீது பொழியப்படுவதை யார்தன் வேண்டாமென்று சொல்லப்போகிறார்கள்? இந்தப் பரவச நிலையை யார்தான் விரும்பாமல் இருந்துவிடுவார்கள்? ஆனால் இதுவும் ஒரு மேகம்தான்– அழகான, வெண்மையான மேகம் ஆனால், உண்மையான ஆகாயம் அதற்கடியில் மறைந்துகிடக்கிறது.

உயர்மதிப்புடைய இந்தப்பகுதியில் இருந்து பின்னாக விழுகிற சாத்திய இருக்கவே செய்கிறது. நீங்கள் ரொம்பவே தர்ம மேக சமாதியில் பிணைந்திருந்தாலும், அதை நீங்கள் மிகவே அனுபவித்து மகிழ்ந்தாலும், 'நான் அதுவும் அல்ல' என்று வேறுபடுத்தி உணரா விடில் நீங்கள் திரும்பி விடுவதற்கான சாத்தியம் இருக்கிறது.

கிறிஸ்துவ, யூத, இஸ்லாமிய மதங்களில் இரண்டு நிலைகள் மட்டுமே உள்ளன: சொர்க்கம், நரகம் என்கிற நிலைகள். கிறிஸ்தவர்கள் இதனை விண்ணகம் என்கிறார்கள். பதஞ்சலி தர்மமேக சமாதி என்கிறார். மேற்கில், அதற்கப்பால் எந்தமதமும் சென்றதில்லை. இந்தியாவில் நாம் நரகம், சொர்க்கம், மோட்சம் என்கிற மூன்று சொற்களைப் பயன்படுத்துகிறோம். நரகம் முழுமை யான துன்பத்துடன் கூடியது. சொர்க்கம் முற்றிலும் மகிழ்ச்சியால் நிரம்பியது. மோட்சம் இரண்டுக்கும் அப்பாற்பட்டது. அது நரகமுமல்ல, சொர்க்கமுமல்ல. மேற்கத்திய மொழியில் மோட்சம் என்பதற்கு இணையான சொல் இருக்கவில்லை.

கிறிஸ்தவம் விண்ணகத்துடன்– தர்மமேக சமாதியுடன் நின்றுவிடுகிறது. அதற்கும் அப்பால் செல்லவேண்டும் என்று யார் கவலைப்படப்போகிறார்கள்? அது அத்தனை அழகானது, நீங்கள் நெடுங்காலமாகவே துன்பத்தில் வாழ்ந்திருக்கிறீர்கள். நீங்கள் அதே வாழ்க்கையை வாழக்கூடும் எப்போதைக்குமாய் ஆனால், பதஞ்சலி சொல்கிறார். 'நீங்கள் அதனைப் பற்றிக் கொள்வீர்களாயின் ஏணியின் கடைசிப்படியில் இருந்தும் விழ வேண்டியதுதான். நீங்கள்

வீட்டுக்கு வெகு அருகில் இருந்தீர்கள். இன்னும் ஓர் அடி எடுத்து வைத்திருந்தால், மீண்டும் திரும்பாத நிலையை அடைந்திருப்பீர்கள்– ஆனால், சறுக்கி விட்டீர்கள். நீங்கள் வாசலருகே நின்றிருந்தீர்கள். ஒரு தட்டு தட்டினால் கதவு திறந்திருக்கும். ஆனால் நீங்கள் நுழைவாயிலை மாளிகையாய் எண்ணிக்கொண்டு அங்கேயே வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். சற்று முன்பாகவோ, பின்பாகவோ அந்த நுழைவாயிலையும் நீங்கள் செல்பவர்களுக்காக அமைக்கப் பட்டது. அதுவே முயன்றால் முன்பின்னாக என்றாலும் அங்கிருந்து தூக்கியெறியப்படுவீர்கள். அடுத்தவர் வாசலில் யாசித்து வாழ்கிற யாசகனைப் போன்றவர் நீங்கள். தகுதயில்லை உங்களுக்கு.

நீங்கள் மாளிகைக்குள் நுழைவதாயின், அந்த நுழைவாயில் உங்களுக்கு அனுகூலமாயிருக்கும். ஆனால், நுழைவாயிலிலேயே நின்றிருந்தால் அதுவும்கூட நீக்கப்பட்டுவிடும். நாம் இதற்குமுன் அறிந்திராத அனவு, அழகானது அந்த நுழைவாயில். எனவேதான் நுழைவாயிலையே மாளிகையாய் நாம் தவறாகிக் கருதிக் கொண்டுவிட்டோம். நாம் தொடர்ந்து வருத்தத்தில், துன்பத்தில் மன இறுக்கத்தில் வாழ்ந்து வந்திருக்கிறோம். நுழைவாயிலையே மாளிகையாய் கருதிக்கொள்ளுமளவிற்கு அது மெய்மைக்குச் சமீபமாய், அமைதியாய், பேரின்பநிலையாய் அதைவிட சிறந்ததைக் கற்பனை செய்ய முடியாது என்பதால் அங்கேயே இருந்துவிட நீங்கள் விரும்புவீர்கள்.

பதஞ்சலி சொல்கிறார், 'விழிப்புடன் இருங்கள்' என்று. அதனால்தான் அவர் அதனை மேகமென்று அழைப்பது. அது உங்கள் பார்வையை மறைக்கும். நீங்கள் அதில் காணாமல் போய்விடக்கூடும். இந்த மேகத்தை உங்களால் கடக்க முடிந்தால் அந்நிலையில் வேதனைகளில், கர்மங்களில் இருந்துவிடுபடும் நிலை தொடர்கிறது.

தர்மமேக சமாதியை நீங்கள்கடக்க முடிந்தால், சொர்க்கத்தை உங்களால் கடந்து செல்ல முடியும் என்றால் அப்போது மட்டுமே... வேதனைகளிலும் கர்மாக்களிலும் இருந்து விடுதலை பெறும் நிலை ஏற்படுகிறது. இல்லையேல், திரும்பவும் நீங்கள் உலகத்தையே சார்ந்திருக்கும்படியாகும். சிறுவர்கள் ஆடும் பரமபத விளையாட்டை

நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? ஏணிகளில் இருந்து அவர்கள் மேலேறிக் கொண்டே போவார்கள், அப்போது பாம்புகளிடம் இருந்து தப்பிப்பதற்காக அவர்கள் பின்னுக்கு வந்தபடி இருப்பார்கள். தொண்ணூற்றியொன்பதில் இருந்து நூறு புள்ளிகளை எடுத்துவிட்டால் அந்த விளையாட்டில் அவர்கள் வெற்றி பெறுவார்கள். ஆனல் தொண்ணூற்றியொன்பதாம் புள்ளியில் ஒரு பாம்பு இருக்கும். நீங்கள் தொண்ணூற்றியொன்பதை அடைந்தால், உடனே இந்த உலகத்துக்கு திரும்பிவிட வேண்டியதுதான்.

தர்மமேக சமாதி தொண்ணூற்றியொன்பதாவது புள்ளி, ஆனால், அங்கே பாம்பு இருக்கிறது. பாம்பு உங்களை விழுங்குவதற்கு முன் நீங்கள் நூறாவது புள்ளியில் குதித்துவிட வேண்டும். அப்போது தான் முழுமையான சுற்றை முடித்து, நீங்கள் வீட்டுக்குத் திரும்ப முடியும்.

> அப்போது வேதனைகளில் இருந்தும் கர்மாக்களில் இருந்தும் விடுபடும் நிலை ஏற்படுகிறது. மறைப்புகளும், திரிபுகளும், தூய்மையற்றவைகளும் அகற்றப்பட்டு உண்டாகிற ஞானத்துடன் மனதின் மூலம் அறியப்பட்டது எதுவோ அது ஓரளவே ஒப்பிடப்படுகிறது.

சில சூத்திரங்களுக்கு முன்பாக பதஞ்சலி சொன்னார் மனம் முடிவற்ற அறிவுடையது, பெரிய அளவில் அறியக்கூடியது என்று. தற்போது அவரே சொல்கிறார். மனதால் அறியப்படும் அறிவு மிகச் சிறியது, ஞானத்தில் பெறப்படுகிற பேரறிவுடன் ஒப்பிடுகையில் ரொம்பவும் சிறியது என்று.

நீங்கள் மேலும் முன்னேறுகிறபோது, முதலில் கடந்து வந்த நிலையைவிட ஒவ்வொரு நிலையும் மேலும் பெரியதாகவே இருக்கும். ஒருவர் தமது புலன்களில் தம்மை இழக்க நேரிட்டால் மனம் முடமாகவே செயல்படும். அவர் புலன்களில் தொலையாமல், உடம்புடன் ஒரேயடியாய் தம்மைப் பிணைத்துக் கொள்ளாமல் இருந்தால் மனம் முழுமையான ஆரோக்கியத்துடன் செயல்படும். அது முடிவுற்றவைகளையும் அறிந்து கொள்ளும் திறனுடையதாகிவிடும்.

ஆனால் மனம் அற்ற நிலையுடன் ஒப்பிடும்போது, அது ஒன்றுமேயில்லை தான். நீங்கள் மனமே இல்லாமல் செயல்படத்

தொடங்கிவிட்டால் ஊடகம் எதுவும் தேவைப்படாது. எல்லா சிக்கல்களும் மறைந்து நீங்கள் பரம்பொருளுக்கு சமீபமாகி விடுவீர்கள். மனம்கூட அங்க முகவராயிருக்காது. இடையில் எதுவும் இருக்காது. நீங்களும் பரம்பொருளும் மட்டுமே இருப்பீர்கள். ஞானத்தின் விளைவாகக் கிடைத்த அறிவுடன் ஒப்பிடுகிற பொழுது மனதின் மூலம் பெறப்பட்ட அறிவு ஒன்றுமே இல்லை.

**தங்கள் நோக்கம் நிறைவேற்றப்பட்டதும் முக்குணங்களில் மாறுதலை ஏற்படுத்தும் செயல்முறை ஒரு முடிவுக்கு வந்துவிடும்.**

ஞானிக்கு உலகம் நின்றுவிடுகிறது, அதற்குமேல் தொடரும் அவசியம் இல்லாமல் போய்விடுவதுதான் காரணம் முடிவான குறிக்கோள் எட்டப்பட்டுவிடுகிறது. உலகம் ஒரு செயல் நிலையாய் இருக்கிறது. அது உங்கள் வளர்ச்சிக்காகவே இருக்கிறது. கற்பதற்காக இருக்கிறது பள்ளிக்கூடம். நீங்கள் பாடத்தைப் படித்தபின் தேவைப்படாது பள்ளிக்கூடம்.

நீங்கள் பட்டதாரியாகிவிடுகிறீர்கள். ஞானம் பெறுகிற ஒருவர் உலகில் இருந்து பட்டதாரியாக வெளியேறுகிறார். தற்போது உலகம் அவருக்கு அதற்கு மேலும் செய்யக்கூடியது எதுவும் இல்லை. தற்போது கல்விக்கூடத்தை அவர் மறக்கக்கூடும், கல்விக்கூடமும் அவரை மறந்துவிடும். அவர் வளர்ந்து விடுகிறார், மேம்பட்டவராகிறார். முந்தைய செயல்நிலை இனியும் தேவைப்படாது.

உலகம் ஓர் செயல் நிலை:

காரணம் அங்கே ஒரு நுட்பமான விதி இருக்கிறது. உங்ககளால் கடவுளை மறக்க முடியாது என்றால் அவரை நினைப்பதும் முடியாத காரியந்தான். மறப்பதற்கு சாத்தியம் இல்லையெனில் எப்படி நினைவில் கொள்வீர்கள். எது தொடர்ந்து கிடைக்கக் கூடியதாயிருக்கிறதோ அதை எளிதில் மறந்துவிடுகிறோம். கடலில் வாழ்கிற மீன் கடலை அறிந்திருப்பதில்லை. அது கடலில் பிறந்து கடலில்தான் வாழ்கிறது, மடிகிறது ஆனால் ஒரு போதும் கடலை அறியவில்லை. ஆனால் அது கடலை அறிந்து கொள்ளக்கூடிய ஒரு நிலை இருக்கிறது: அது கடலுக்கு வெளியே எடுத்துச் சொல்லப்படும்

நிலை. கரையில் வீசியெறியப்படுகிற மீன் அறிந்து கொள்ளும் கடலைப்பற்றி.

கடவுள் என்கிற கடலில் இருந்து நாம் வீசியெறியப்பட வேண்டியதாயிருக்கிறது.

அவரை அறிந்து கொள்ள வேறு வழி இருந்திருக்கவில்லை. உலகில் வலி, வேதனை எல்லாம் இருக்கிறது, ஆனால் எல்லாமே ஒரு அர்த்தத்துடன் இருக்கிறது. அர்த்தமற்றதாய் எதுவும் இல்லை இந்த உலகில். துன்புறும் நிலையிலும் அர்த்தம் உண்டு. அந்தத் துன்புறும் நிலை கரையில் துடிக்கிற மீனின் நிலை போன்றது. அது கடலுக்கு மீள எல்லா முயற்சிகளையும் மேற்கொள்ளும். அது கடலுக்குள் மீண்டால் அது அறிந்து கொண்டுவிடும். எதுவும் மாறி விடவில்லை. கடல் இருக்கிறபடிதான் இருக்கிறது. மீனும் அப்படியே தான் இருக்கிறது. ஆனால், அவற்றுக்கிடையே இருந்த உறவு பெருமளவில் மாறிவிடுகிறது. தற்போது மீன் அறிந்து கொள்ளும், 'இது கடல்' என்று தான் அந்தக் கடலிடம் நன்றியோடிருக்கவேண்டும் என்பதைத் தெரிந்து கொள்கிறது. துன்புறும் நிலை ஒரு புதிய புரிதலை உண்டுபண்ணுகிறது. மீன் தான் இருந்த அதே கடலில்தான் இருக்கிறது என்றாலும் கடல் முன்பிருந்த கடலல்ல. காரணம் ஒரு புதிய புரிதல், புதிய உணர்வு, புதிய அங்கீகாரம் வந்திருக்கிறது.

மனிதன் கடவுளுக்கு வெளியே வீசியெறியப்பட வேண்டிய நிலையில் இருக்கிறான். உலகினுள் வீசியெறியப்படுவது என்பது கடவுளுக்கு வெளியே வீசியெறியப்படுவதன்றி வேறேயென்ன? அது இரக்கத்தின் பாற்பட்டது. பரம்பொருள் உங்கள் மீது கொண்ட பரிவில்தான் உங்களை வீசியெறிகிறது. அப்போதுதானே உங்கள் வழியை மீண்டும் நீங்கள் காண முடியும். நீங்கள் அதை அடைவதற்கு பெரு முயற்சி எடுக்கிறீர்கள். முயன்று அடைகிறீர்கள். உங்கள் முயற்சிக்குப்பலன் இருந்தாக வேண்டுமே. அந்தப் பலனை வழங்காவிட்டால் கீழ்த்தரமானவராகி விடுவார். கீழத்தரமான ஒன்று எப்படி உங்களுக்கு மகிழ்ச்சியளிப்பதாய் இருக்கும். இல்லையேல் கடவுள் வெளிப்படையாக, ரொம்பவும் வெளிப்படையாக இருக்கும்படி ஆகும். ரொம்பவும் வெளிப்படையான ஒன்றை நீங்கள் மறக்கவே செய்வீர்கள். இல்லையேல் கடவுள் உங்களுக்கு ரொம்பவும்

நெருக்கமாயிருப்பார் அப்போது அவரை அறிந்து கொள்ள இடமே இல்லாமல் போய்விடும். உலகின் துன்பம் துன்பமே அல்ல. அது மாற்றுருக்கொண்டு வரும் வாழ்த்து. உங்களுடைய துன்பமல்லவா மெய்ப்பொருளை நீங்கள் நேருக்கு நேர் கண்டு மகிழும் வாய்ப்பை, காண்பதால் உண்டாகும் பேரின்பத்தை வழங்குகிறது.

**'முக்குணத்தில் மாற்றத்தை ஏற்படுத்தும் செயல்முறை தங்கள் நோக்கம் நிறைவேறியதும் ஒரு முடிவுக்கு வந்து விடுகிறது'.**

சத்துவம், ராஜசம், தாமசம் என்கிற முக்குணங்களின் உலகம் ஒரு முடிவுக்கு வந்துவிடுகிறது. ஞானம் பெற்றவருக்கு உலகம் முடிந்துவிடுகிறது. மற்றவர்கள் கனவு காண்கிறார்கள் கரையில் வீசப்பட்ட பல மீன்களில் ஒன்றபெரு முயற்சி செய்து கடலுக்குள் குதித்து விடுகிறது. தனது பூர்வ இடத்துக்கு அது வந்தவின் வெயிலின் கொடுமையும், சுடுமணலின் சுட்டெரிப்பும் மறையக் காண்கிறது. அதனுடைய அத்தனை துன்பங்களும் மறைந்து விடுகின்றன.

புத்தர், பதஞ்சலி போன்ற மீன்கள் கடலுக்குள் குதிக்கின்றன. உலகம் அவர்களுக்கு மறைந்துவிடுகிறது. கடலின் குளிர்ச்சி பொருந்திய கருவறைக்கு அவர்கள் மீண்டும் திரும்பிவிடுகிறார்கள். முடிவற்ற வாழ்க்கையுடன் இணைந்து கொள்கிறார்கள். அதற்கு மேலும் அவர்கள் தொடர்பற்றவராய், அந்நியமாய் இருப்பதில்லை. அவர்கள் உணர்வோடு இருப்பவர்கள். ஒரு புதிய புரிதலுடன் அவர்கள் திரும்பி வந்திருக்கிறார்கள். கவனமும், ஞானமும் கொண்டவர்களாய்– ஆனால் மற்றவர்களுக்கு உலகம் தொடர்ந்தபடி இருக்கிறது.

தனது பூர்வ இடத்துக்குத் திரும்பிவிட்ட ஒரு மீனின் கதையன்றி வேறில்லை பதஞ்சலியின் சூத்திரங்கள். கரையில் துன்புற்றி ருப்பவர்களுக்கு ஏதோ ஒரு செய்தியை அவை சொல்கின்றன. அவர்கள் கடலுக்கு வெகு சமீபமாய். அதன் விளிம்பில் இருந்தாலும் எப்படி அதனுள் பிரவேசிப்பது என்பதை அறியமாட்டார்கள். அவர்கள் போதிய முயற்சி மேற்கொள்வதில்லை அல்லது தவறான போக்கை மேற்கொண்டிருப்பார்கள், அல்லது, துன்பத்தில் தொலைந்து

விட்டிருப்பார்கள். அல்லது இதுதான் வாழ்க்கை என்று ஏற்றுக் கொண்டிருப்பார்கள். அல்லது ஊக்கமற்றவராய் விரக்தியில் இருப்பார்கள். எந்த மெய்மையுடன் நாம் தொடர்பற்றவராய் இருக்கிறோமோ அதனுடன் நம்மை இணைக்கிற முயற்சியே யோகா. யோகி மீண்டும் இணைக்கப்பட்டவர். யோகா என்றால் மறு இணைப்பு, மறுபடியும் இரண்டறக் கலத்தல்.

**'க்ரம' என்கிற செயல்முறை உணத்துக்கும் கணம் ஒன்றன் பின் ஒன்றாய் வருகிற மாற்றங்கள், முக்குணங்களின் அந்த மாற்றங்கள் முடிவில் புரிந்து கொள்ளத் தக்கவையாகும்'. நவீன அறிவியலின் கண்டுபிடிப்புகளை ஒரு சிறிய சூத்ரத்தில் பதஞ்சலி சொல்லிவிட்டார்.**

பதஞ்சலி ஒட்டு மொத்த இயற்பியலையும் இந்தக் கடைசி சூத்ரத்தில் சுருக்கித் தந்திருக்கிறார். கதிரியக்க அலைவீச்சும் கோட்பாடு (Quantum theory) தான். இந்த நூற்றாண்டில் அறிவியலை வந்தடைந்திருக்கும் மனதால் அறியும் திறன் ஆகும்.

மாக்ஸ் ப்ளான்க் ஒரு நம்ப முடியாத விசயத்தைக் கண்டு பிடித்திருக்கிறார். வாழ்க்கை தொடர்ச்சியுடையதல்ல என்பதுதான் அது. ஒவ்வொன்றும் தொடராமல் நின்றுவிடும். காலத்தில் ஒரு கணப்பொழுது மற்றொரு கணத்தில் இருந்து வேறுபட்டதாகவே இருக்கும். ஒரு அணு மற்றொரு அணுவில் இருந்து வேறுபடுகிறது, இரண்டுக்கும் இடையில் மிகப்பெரிய இடைவெளி இருக்கும். அவை ஒன்றோடொன்று தொடர்புடையதாய் இருப்பதில்லை. இதனையே அவர் க்வாண்ட்டா (Quanta): வேறுபாடு என்கிறார். அணுக்கள் தனித்தனியானவை; அவை ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்கவில்லை. அவை குறிப்பிட்ட இடத்தில் மிதந்தபடி இருந்தாலும் தனித்தனியானவை. ஓர் அட்டைப்பெட்டியில் சேர்ந்தாற் போல் இருக்கும் நிலக்கடலை, மற்றொரு பெட்டிக்கு கொட்டிக் கவிழ்க்கப்படும் போது தனித்தனியாகவே விழுகிறது.

பிரபஞ்ச இருப்பு (Existence) தனித்தனியானது கடலையைப் போன்று. பதஞ்சலி எதற்காக இதனைக் குறிப்பிடுகிறார்? ஒரு அணு, மற்றொரு– இப்படித்தான் உலகம் உருப்பெற்றிருக்கிறது. உலகத்தைப் போலவே கடவுளும் அண்டம் என்று அழையுங்கள், கடவுள் என்று

அழையுங்கள், புருடன் என்றோ அல்லது நீங்கள் எப்படி விரும்பினாலும் அழைத்துக் கொள்ளுங்கள். உலகம் வேறுபட்ட அணுக்களைக் கொண்டது, பரம் பொருள் இரண்டுக்கும் இடையே மிகப்பெரிய இடைவெளியை ஏற்படுத்தி வந்திருக்கிறது.

இயற்பியலார் சொல்கிறார்கள், இந்த உலகத்தை நாம் அழுத்தம் கொடுத்து நசுக்கினால், அண்ட வெளியை அதில் இருந்து நசுக்கி வெளியே எடுத்துவிட்டால், சந்திர சூரியர்களும் அழுத்தப்பட்டு ஒரு சிறிய பந்து போலாகிவிடும். இந்த உலகத்தை நாம் நசுக்கினால் ஒரு சின்ன தீப்பெட்டி சைசுக்கு வந்துவிடும், 'ரொம்பவும் அழுத்தி னால் அதுவும் மறைந்துவிடும்' என்கிறார் பதஞ்சலி. பருப்பொருள் மறைகிற போது கரும் துளைகளை (black holes) விட்டுச் செல்வதாக இயற்பியலார் தெரிவிக்கின்றனர்.

ஏதுமற்றதில்– இன்மை (nothingness)யில் இருந்தே எல்லாமும் வருகின்றன. இங்கே ஆடி முடித்தபின் அவை மீண்டும் இன்மையில் மறைகின்றன. பூமி, சூரியன், நட்சத்திரங்கள் இருப்பதைப் போலவே வெற்றான இடங்களும், கருந்துளைகளும் இருக்கின்றன. இந்தக் கருந்துளைகள் இன்மையைச் சுருக்கி வைத்திருப்பவை. தன்னை நெருங்கிவரும் விண்மீனை கருந்துளை விழுங்கிவிடும். ஆக ஒரு கருந்துளை இன்மையில் இருந்தாலும் சுறுசுறுப்பாகவே இருக்கிறது. வெறும் வெற்றிடமாய் இருந்தாலும் ஆற்றலுடன் இருக்கிறது. ஒரு விண்மீனை அது உறிஞ்சுகிறது, அந்த விண்மீன் இன்மையில் மறைந்துவிடுகிறது. எல்லாப் பொருள்களிலும் மிகப் பெரிய இன்மை யில் இருந்தே வந்தன; இன்மையில் விழுந்து மறைகின்றன.

முக்குணங்களும் தங்கள் குறிக்கோளை அடையும்போது அவற்றின் பரிணாமக் கிரமம் முற்றுப்பெறுகிறது. அவை கருத்துரை களில், இன்மையில் மறைகின்றன. அதனால்தான் யோகிகள் உலகை மாயம்–மாயாஜாலக் காட்சி என்கின்றனர். ஜாலவித்தைக்காரர் ஒரு மாஞ்செடியை உண்டாக்கிக் காட்டுவதை நீங்கள் பார்த்திருக்கிறீர்கள். சில நொடிகளில் அது வளர்ந்துவிடுகிறது, அது மட்டுமா, மாங்காய்களும் அதில் காணப்படுகிறது... ஏதும் இன்மையில் இருந்து? அது வெறும் பிரமை– இல்லாத ஒன்றை இருப்பதாய் காட்டுகிற மாயம்' உங்களுடைய உணர்வற்ற மனதுக்கு சில

ஆழமான செய்திகளை அவர் அனுப்பக்கூடும். அறிதுயிலில் (hypnosis) ஆழ்த்துகிற மாதிரிதான் அதுவும். நீங்கள் எதைப் பார்க்க வேண்டும் என்று அவர் விரும்புகிறாரோ அதையே பார்க்கிறீர்கள். ஒரு கருத்தைத் தோற்றுவிக்கிறார், உங்கள் உணர்வற்ற மனதில் அதைப் பதியச் செய்கிறார். அவர் விரும்பியவாறே நீங்கள் பார்க்கிறீர்கள். மிகப்பெரிய கற்பனையில் இருந்து ஒரு மரத்தையும் அதில் மாங்காய்களையும் படைப்பது சாத்தியமாகிறது. அது மட்டுமா ஒரு மாங்காயைப் பறித்து உங்களிடம் அவர் கொடுக்கிறார். நீங்களும் 'ரொம்ப ருசியாயிருக்கிறது' என்று சொல்கிறீர்கள்.

இந்துக்கள் உலகம் ஒரு மாயை, மாயாஜாலம் என்கிறார்கள். அது கடவுளின் கற்பனை. பரம்பொருள் காணும் கனவு பிரபஞ்சத்தில் வெளிப்படுகிறது.

நீங்கள் ஒரு சினிமா பார்க்கிறீர்கள். மிகப் பெரிய திரையில் ஒரு சிறந்த படம். கதை நடித்துக் காட்டப்படுகிறது.

எல்லாமே தொடர்வது போல் இருக்கிறது, ஆனால், அப்படியில்லை படம் கொஞ்சம் மெதுவாக நகர்ந்தா எல்லாமே தொடர்ச்சியற்றதாய் இருக்கும். ஒரு காட்சிக்கும் இன்னொரு காட்சிக்கும் இடையே இடைவெளி இருக்கும். இடைவெளியில் உண்மையான திரையை நீங்கள் காண முடியும். காட்சிகள் வேகமாய் செல்லும்போது தொடர் இயக்கம் போன்று ஒரு பிரமை இருக்கும். உண்மையில் ஒரு திரைப்படம் நகர்வதில்லை. ஒரு புகைப்படத்தைப் போல் அதுவும் நகராமல் இருப்பதுதான். நிலையான படங்கள் தொடர்ந்து ஒன்றன் பின் ஒன்றாய் செல்கிறபோது அதன் வேகம் ஒரு தொடர் இயக்கமாய் தோற்றகிறது. அவற்றுக்கிடையே உள்ள இடைவெளி மிகச் சிறியது. நீங்கள் அந்த இடைவெளியைப் பார்க்க முடியாத அளவுக்கு அது சிறியதாயிருக்கும். எனவே, ஒரு தொடர்ச்சி தெரியும்.

பதஞ்சலி சொல்கிறார், 'இந்த உலகம் ஒரு திரைப்படமின்றி வேறேயென்ன. ஒருவர் புரிதலின் கடைசிப் பகுதியை அடைகிற போதுதான், இந்தப் புரிதல் தோன்றுகிறது. அத்தனை குணங்களிலும் முற்று பெற்று விடுகிறபோதுதான் அவர் முழுக்கதையும் ஒரு மாயம் என்பதை உணர்ந்து கொள்கிறார். நவீன இயற்பியலில் இதுதான் நிகழ்கிறது.

முதலில் அவர்கள் சொன்னார்கள், 'இதுவே இறுதி. அணுவை இதற்குமேல் பிளக்க முடியாது' என்று. ஆனால் பிற்பாடு அணுவைப் பிளக்கச் செய்தனர். அடுத்து மின்னணுவிற்கு வந்தார்கள். தற்போது, அதைப் பிளக்க முடியாது என்றனர். பிறகு அதையும் பிளந்துவிட்டனர். தற்போது ஏதுமற்ற ஒன்றிற்கு (notingness) வந்திருக்கின்றனர். அது என்னவென்றே அவர்களுக்கு தெரியவில்லை. அறிவியலார் பொருளின் வழியே இன்மை (nothing)க்கு வருகிறார்கள். பதஞ்சலியும் மற்ற யோகிகளும் விழிப்புணர்வின் வழியே அந்தப் பகுதிக்கு வந்து சேருகிறார்கள். கடைசி சூத்திரத்துக்கு முந்தைய சூத்ரம் வரையில் அறிவியலார் வர முடிந்தது, ஒரு புரிதலை ஊடுருவலை அவர்களால் மேற்கொள்ள முடிந்தது. கடைசி சூத்திரம் அவர்களுக்குச் சாத்தியமாகவில்லை. காரணம் அந்தச் சூத்திரம் விழிப்புணர்வின் மூலம் சென்றால் மட்டுமே அடையக்கூடியதாயிருக்கிறது. அது புறப்பொருள்களின் (Objects) மூலம் அடையப்படுவதில்லை.

> **'எவ்வித நோக்கமின்றி ஆத்மாவிற்காக வேலை செய்ய வேண்டும் என்ற சிந்தனையும் நீங்கி, குணங்கள் படிப்படியாய் மேலேபோய் ஒடுங்கி விடுவது கைவல்யம். அல்லது ஆன்மா தனது சொந்த இயல்பில் நிலைபெறுவது கைவல்யம் எனப்படும்.**

கைவல்யம் என்பது ஞானம் பெற்ற நிலை.

உலகம் நின்றுவிடுகிற பொழுது, உலகின் ஒழுங்குச் செயல்முறை (கிரமம்) முடிந்துவிடுகிறபொழுது, காலத்தின் இருவேறு நகர்வுகளுக்கிடையே உங்களால் காண முடிகிற பொழுது, வெற்றிடங்களுக்கிடையில் நீங்கள் நகர முடிகிற பொழுது அண்டத்தில் தோன்றியது எல்லாம் அண்டத்திலேயே முடிவதை நீங்கள் காண முடிகிறபோது, ஒரு கனவைப் போல் திடுமென்று இவ்வுலகம் மறைவதை நீங்கள் உணர்கிற பொழுது அந்நிலையில் இடம் பெறுகிறது கைவல்யம். அப்போது நீங்கள் தூய விழிப்புணர்வாக இருக்கிறீர்கள். அந்நிலையில் நீங்களே அடிப்படையாய், முக்கியமானவராய் இருக்கிறீர்கள். இந்தத் தூய ஏகாந்தத்தில் நீங்கள் நிலை பெறுகிறீர்கள்.

பதஞ்சலி சொல்கிறார், 'கைவல்யம் என்பது ஞானம் பெற்ற நிலை, மறைந்திருந்து வெளிப்படும் குணங்களைத் தொடர்வது'

என்று இந்நிலையில் புருடன் தன்னுடைய உண்மையான இயல்பில் இருக்கும். நீங்கள் வீட்டுக்கு (பூர்வநியம்) த்திரும்பி விட்டீர்கள். பயணம் வெகு நீண்டதாய், அளவுக்கு மீறிய வேதனையைக் கொடுப்ப தாய், கடினமானதாய் இருந்திருக்கிறது. முழுமையான விழிப்புணர்வு என்கிற கடலில் மீன் துள்ளிக் குதித்திருக்கிறது. பதஞ்சலி மிகுதியாய் எதையும் கூறவில்லை. காரணம், 'மிகுதி' யானதைப்பற்றிச் சொல்ல முடிவதில்லை. பதஞ்சலி 'அவ்வளவுதான் முடிந்தது' என்று சொல்கிறபோது முடிவது பதஞ்சலி சூத்ரம்மட்டுமல்ல, சொல்லில் வெளிப்படுத்துக்கூடிய அத்தனை சாத்தியங்களுந்தான். அதற்கும் அப்பால் எவராலும் சொல்ல முடியாது–எவருந்தான். மனித விழிப்புணர்வு வரலாற்றில் ஒரேயொரு விதிவிலக்குகூட இருக்க வில்லை. பதஞ்சலி அடைந்த இடத்தை வெகுசிலரே அடைந்தி ருக்கிறார்கள். ஆனால் பதஞ்சலிக்கும் அப்பால் எவரும் செல்ல முடிந்ததில்லை.

அதனால்தான் நான் சொல்கிறேன். அவரே தொடக்கமும் முடிவுமாய் இருக்கிறார் என்று. அவர் ஆதியில் இருந்தே தொடங்கு கிறார், அதைவிட சிறந்த தொடக்கத்தை யாரும் கண்டுபிடித்திருக்க முடியாது.

அவர் மிகச்சரியான இடத்தில் தொடங்கி மிகச்சரியான இடத்தில் முடிக்கிறார். அவர் முடிந்தது என்கிறபோது, வெளிப் படுத்துதல், விளக்குதல், விவரணை செய்தல் என்று எல்லாமும் முடிந்தது என்றே சொல்கிறார். அதற்குமப்பால் இருப்பது அனுபவம் மட்டுமே. தற்போது இருத்தலியல் தொடங்குகிறது. ஒருவர் இருக்க முடியும், ஆனால் அதுபற்றிக் கூற முடியாது. ஒருவர் அதனை வாழ முடியும் ஆனால் அது பற்றி விளக்க முடியாது, அதை வரையறுக்க முடியாது. அந்த வகையில் வார்த்தைகள் உதவாது. இந்த முனைக்கு அப்பால் வார்த்தைகள் வலுவற்றுப் போய்விடும். ஒருவர் தமது உண்மையான இயல்பைச் சென்று அடைகிறார் என்பதோடு பதஞ்சலி நிறுத்திக் கொள்கிறார். தன் இயல்பை அறிந்து ஒருவர் அதை வாழ்வதே குறிக்கோள் ஆகும். நம்முடைய இயல்பை நாம் அடையாவிடில் துன்பத்திலேயே வாழ வேண்டியதுதான். நாம் இயல்பற்ற முறையில் வாழ்வதையே நம்முடைய துன்பங்கள் சுட்டிக்காட்டுகின்றன. துன்பம் நமக்குப் பகையல்ல; அது ஒரு குறிப்பு

(symptom) அது சுட்டிக்காட்டுகிறது. அது ஒரு வெப்பமானி போன்றது. நீங்கள் தவறான ஏதோ தவறான இடத்துக்குச் சென்று கொண்டிருக்கிறீர்கள் என்பதையே அது காட்டுகிறது. எல்லாத் துன்பங்களும் மறையும்போது ஒருவர் தமது இயற்கையுடன் இசைவாகிவிட்டார் என்றே கொள்ள வேண்டும். அந்த இயல்பையே லாவோட்சு 'தாவோ' (Tao) என்கிறார். பதஞ்சலி அதையே கைவல்யம் என்கிறார். மகாவீரர் அதனை 'மோட்சம்' என்றும், புத்தர் 'நிர்வாணம்'– என்றும் சொல்கின்றனர். நீங்கள் அதை எப்படி அழைக்க விரும்பினாலும் –அதற்கொரு பெயரில்லை, வடிவமில்லை என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்– அது உங்களுக்கு இருக்கிறது, நிகழில் இந்தக் கணத்தில் இருக்கிறது. நீங்கள் கடலை இழந்துவிட்டீர்கள், காரணம் உங்கள் சுயத்தைவிட்டு நீங்கள் வெளியே வந்து விட்டீர்கள். வெளியுலகில் நீங்கள் வெகுதூரம் சென்று விட்டிருக்கிறீர்கள். உள் நோக்கிச் செல்லுங்கள். உள்நோக்கிச் செல்வதும் ஒரு பயணம்.

பயாஸித் ஒரு சுஃபி ஞானி, மெக்காவிற்கு புனிதப்பயணம் மேற்கொண்டிருந்தார். அது கடினமான ஒன்று. அவர் ஏழை, பல வருடங்கள் யாசித்துதான் பயணச்செலவை அவர் திரட்ட வேண்டியிருந்தது. தற்போது அவர் மிகவும் மகிழ்ச்சியாயிருந்தார். மெக்காவிற்குச் செல்ல போதிய பணம் கிடைத்திருந்தது, பயணப்பட்டு விட்டார்.

மெக்கா அருகில் சென்றபொழுது ஒரு புனித யாசகரை (Fakir) அவர் சந்தித்தார். அவருடைய குருதான் அது. அந்த மனிதர் ஒரு மரத்தடியில் அமர்ந்திருந்தார். இவரைக் கண்டதும், 'முட்டாளே, எங்கு செல்கிறாய்?' என்று கேட்டார். பயாஸித் அவரை உற்று நோக்கினார். அப்பேர் கொத்த ஒளிவிடும் சீவனை அதுவரை அவர் கண்டதில்லை. 'உன்னிடம் இருக்கிறவைகளை என்னிடம் கொடுத்து விடு. நீ எங்கோ போய்க கொண்டிருக்கிறாய்.?' அந்த குருவானவர் கேட்டார். பயாஸித் சொன்னார், 'நான் யாத்திரையாக மெக்கா போய்க் கொண்டிருக்கிறேன்' என்று. 'முடிந்தது. அதற்கு இப்போ அவசியம் இல்லை. என்னை வழிபட்டாலே போதும். நீ என்னைச் சுற்றி வந்தாலே மெக்கா போய் வந்ததாகிவிடும்' என்று. அந்த மனிதர்பால் ஈர்க்கப்பட்ட பயாஸித் தம்மிடம் இருந்த பொருளனைத்

தையும் அவரிடம் கொடுத்து விட்டார், அவரை வழிபட்டார். அந்த முதியவர் அப்போது சொன்னார், ‘இப்போது நீ வீட்டுக்குத் திரும்பலாம்‘ என்று.

பயாஸித் ஊருக்குத் திரும்பினார். ஊரில் உள்ளவர்கள் அவரைப்பார்த்து, ‘நீர் மெக்கா சென்று வந்ததில் உமக்கு என்னவோ ஆகிவிட்டிருக்கிறது. உம்மைப் பார்த்தால் ரொம்பவும் ஒளி பொருந்திய வராய் தெரிகிறீர், ஒளிமயமாகி விட்டிருக்கிறீர்’ என்று வியந்தனர். அவர் சொன்னார், ‘முட்டாள் தனமாய் பேசாதீர்கள். முதியவர் ஒருவர் என்னைப் பார்த்தார், அவரைச் சந்தித்ததுமே என்னுடைய மெக்கா பயணம் மாறிவிட்டது. அவர், ‘உன்னுடைய இருப்பிடத்துக்குச் செல்’ என்றார். அப்போதிருந்தே நான் உள்நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறேன். தற்போது நான் வந்தாயிற்று, என்னுடைய மெக்காவுக்கு நான் வந்தாயிற்று.

உண்மையான மெக்கா உங்களுக்குள் இருக்கிறது. நீங்களே கடவுளின் ஆலயம். முடிவான குறிக்கோளாய் அமைந்த ஒன்றிற்கு (Ultimate) நீங்கள் இருப்பிடமாகிறீர்கள். ஆக நீங்கள் மெய்ப்பொருளை எங்கே கண்டறிந்தீர்கள் என்பதல் கேள்வி. அதை எப்படித் தொலைக்கப்போயிற்று என்பதுதான். கேள்வி எங்கே போகவேண்டும் என்பதல்ல, நீங்கள் முன்பே அங்குதான் இருந்து கொண்டிருக்கிறீர்கள்.

எல்லாப் பாதைகளையும் விடுங்கள். அத்தனை பாதைகளும் ஆசை, ஆசையின் விரிவு, ஆசையின் வெளிப்பாடே ஆகும். எங்கோ போய்க் கொண்டிருக்கின்றன, அவை எங்கெங்கோ போய்க்கொண்டிருக்கின்றன ஒரு போதும் இந்த இடத்துக்கு வரவில்லை.

பாதைகள் எங்கோ செல்கின்றன. ஆனால் அவரோ (கடவுள்) இங்கிருக்கிறார்.

## முதல் கேள்வி:

**'ஒவ்வொருவரும் ஏன் இத்தனை பிரச்சினைகளுடனும், மகிழ்ச்சியின்மையுடனும் இருப்பது?'**

முதல் விசயம்: மனிதன் மிகப் பெரிய அளவில் மகிழ்ச்சியாய் இருக்க முடிந்த காரணத்தாலேயே, அவன் மகிழ்ச்சியற்றிருக்கிறான். மனிதனைப்போல் விலங்குகளோ, பறவைகளோ, மரங்களோ, கருங்கற் பாறைகளே அத்தனை மகிழ்ச்சியாயிருப்பதில்லை. நீங்கள் மகிழ்ச்சியாயிருக்க, நிலையான மகிழ்ச்சியுடனிருக்க, முடிகிறது, பேரின்பத்தின் சிகரத்தில் இருக்க முடிகிறது என்பதாலேயே மகிழ்ச்சி யின்மையும் உண்டாகிறது. உங்களைச் சுற்றி நீங்கள் பார்க்கிற பொழுது, நீங்கள் பள்ளத்தாக்கில், இருண்ட பள்ளத்தாக்கில் இருக்கிறீர்கள், ஒரு சிகரத்தின் மீது இருக்கவும் உங்களால் முடியும்: ஒப்பீடு, சாத்தியமும், உண்மைநிலையும்.

நீங்கள் புத்தர்களாகப் பிறந்திருந்தால் அப்போது மகிழ்ச்சியின்மை இருக்காது.ஆக மனிதன் எந்த அளவிற்குக் கண்டுணர்கிறானோ அந்த அளவிற்கு கவலை கொண்டு விடுகிறான். எந்த அளவு நுட்பமாயிருக்கிறானோ அந்த அளவு அவனுக்கு கவலை வந்து விடுகிறது. ஒருவன் எத்தனைக்குக் கவனமாக இருக்கிறானோ அத்தனைக்கு வருத்தம் கொண்டு விடுகிறான்.

மனிதன் பெரிய அளவில் மகிழ்ச்சியாய் இருக்க முடிவதாலேயே மிகவும் கவலை கொண்டுவிடவும் நேர்கிறது. கவலை ஒன்றும் மோசமானதல்ல. அது உங்களைச் சிகரத்துக்கு கொண்டு செல்லும் உந்து சக்தி எனலாம். உங்களுக்குள் கவலை இல்லாவிட்டால் நீங்கள் அசைந்து கொடுக்க மாட்டீர்கள். உங்களுடைய இருண்ட பள்ளத்தாக்கில் நீங்கள் கவலையோடு இருக்கக் கொண்டுதானே மலைமீது எற முயல்வது? உச்சியில் சூரிய ஒளி இல்லாவிடில் அது கடினமாகிவிடும். ஒரு உந்துதல் இல்லாவிடில், தேடிக் கண்டடை வதற்கான தூண்டுதல் இல்லாவிடில் இல்லாவிடில் அந்தச்சவாலை

உங்களால் எதிர்கொள்ள முடியாது. முட்டாள் ஒருவன் மகிழ்ச்சி யுற்றிருப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? முடியாது. ஒரு முட்டாளால் மகிழ்ச்சியுற்று இருக்க முடியாது, காரணம், தான் சுமந்திருக்கும் சாத்தியத்தை தன்னால் முடிக்கக்கூடியதை அவன் உணர்ந்திருப்பதில்லை.

நீங்கள் ஒரு விதையாக இருக்கிறீர்கள், மரமாகக்கூடும் என்பதை நீங்கள் உணர்ந்திருக்கிறீர்கள். குறிக்கோள் வெகு தொலை வில் இல்லை. அதுவே உங்களைக் கவலைக்குள்ளாக்குகிறது. அது ஒரு சரியான சுட்டுதல். மிகவும் கவலையாய் உணர்வது முதல்படி. புத்தர் உங்களைவிட அதிகமாகவே உணர்ந்திருப்பார் என்பது நிச்சயம். அதனால்தான் அவர் பள்ளத்தாக்கைத் துறந்து, மலையுச்சிக்குச் செல்ல முனைந்தது. அன்றாட வாழ்வில் நீங்கள் எதிர்கொள்ளும் சின்னச்சின்ன சங்கதிகள் எல்லாம் அவருக்குப் பெரிய தூண்டல் களாயிருந்தன. நோயுற்ற மனிதனைக் காண்பது, கோலூன்றி நடக்கும் முதியவனைக் காண்பதும், ஒரு பிணத்தைப் பார்ப்பதும் தம்முடைய அரண்மனையைவிட்டு வெளியேறப் போதுமானதா யிருந்தது அவருக்கு.

தம்முடைய நிலையை அவர் உணர்ந்திருந்தார்: 'இதே காரியம் எனக்கும் நடக்கிறதுதான். சற்று முன்பின்னாக என்றாலும் நானும் நோய் வாய்ப்படுவேன், முதுமை அடைவேன், செத்துப்போவேன், ஆக இங்கே இருப்பதில் என்ன முக்கியத்துவம் இருக்கிறது? என்னிடமிருந்து வாய்ப்பு பறிக்கப்பறிக்கப்படுவதற்கு முன், நான் நிலைபேறுடைய ஒன்றை (eternal) அடைந்தாக வேண்டும்'.சிகரத்தை அடைய வேண்டும் என்கிற வேட்கை தோன்றியது அவருக்குள். அந்தச் சிகரத்தை நாம் கடவுள் என்கிறோம், அந்தச் சிகரத்தை நாம் கைவல்யம் என்கிறோம். அதனை மோட்சம் என்றும், நிர்வாணம் என்றும் சொல்கிறோம். ஆனால், அந்த மலைமுகடு உங்களுக்குள் ஒரு விதையைப் போன்று இருக்கிறது. அதை வெளிப்படுத்தியாக வேண்டும். எனவேதான் எளிதில் உணர்ச்சி வயப்படுகிற ஆன்மாக்கள் அதிகம் துன்புறுவது. முட்டாள்கள் துன்பப்படுவதில்லை, மந்தமானவர்கள் துன்பப்படுவதில்லை. தங்களுடைய வழக்கமான வாழ்க்கையில் முன்பே அவர்கள் மகிழ்ச்சியடைந்துவிட்டிருக்கிறார்கள்.

கொஞ்சம் பணம், சொந்தமாய் ஒரு வீடு– முடிந்தது. அவர்களால் முடிவது அவ்வளவுதான்.

'இது குறிக்கோளாக முடியாது, இது விதியாக முடியாது' என்பதை நீங்கள் உணர்ந்திருந்தால் அந்நிலையில் ஒரு கூரியவாளைப் போல் மிகப் பெரிய துன்பம் உங்கள் இருப்புணர்வில் நுழைந்துவிடும். உங்கள் இருப்புணர்வின் மையப்பகுதியில் அது ஊடுருவும். உங்கள் இதயம் வீறிட்டலறும், அதுவே புதிய வாழ்க்கையின் தொடக்கமாகும்.

அதுவே ஒரு புதிய வாழ்க்கை முறையின் தொடக்கமாய், வாழ்வின் புதிய அடித்தளமாயிருக்கும்.

எனவே, முதலாவதாய் நான் சொல்ல விரும்புவது இதுதான்: மகிழ்ச்சியற்றவராய் உணர்வதும் பாக்கியமே. மகிழ்ச்சியின்மையும் ஒரு பேரின்பநிலையே அப்படி உணர முடியாமல் இருப்பது மந்தநிலை.

இரண்டாவது: மனித சீவன்கள் துயரத்தில் இருக்கின்றன காரணம் அவை தாங்களே தங்களுடைய துன்பங்களைத் தோற்றுவித்துக் கொள்கின்றன.

முதலாவது அதைப் புரிந்து கொள்ளுங்கள். மகிழ்ச்சியற்றிருப்பதும் விரும்பத்தக்கதே, ஆனால், உங்களுடைய கவலைகளை மேலும் மேலும் நீங்களே உண்டு பண்ணிக் கொள்ளுங்கள் என்று நான் கூறவில்லை. அது நீங்கள் கடந்து செல்வதற்குத் தூண்டும் என்பதால் நல்லது என்கிறேன் ஆனால் அதையும் கடந்து செல்லுங்கள்.

தங்களுடைய துன்பத்தை மக்களே வடிவமைத்துக் கொள்கிறார் கள். அதற்குக் காரணம் இருக்கிறது. மனம் மாற்றத்தை எதிர்ப்பது. மனம் வழி வழியாய் வரும் கோட்பாடுகளில் நம்பிக்கை உடையது. அது பழைய பாதையையே தொடர விரும்புகிறது, காரணம் பழையது முன்பே தெரிந்தது. நீங்கள் இந்துவாகப் பிறந்தால் இந்துவாகவே இறக்கவேண்டும். கிறிஸ்தவராகப் பிறந்தால் கிறிஸ்தவராகவே இறக்கவேண்டும். மக்கள் மாறுவதில்லை. ஒரு குறிப்பிட்ட கருத்தியல் உங்களுக்குள் ஆழப்பதிந்துவிடுகிறது. நீங்கள் அதில் இருந்து மாறுவதற்கு அஞ்சுகிறீர்கள். புதியது–யாருக்குத் தெரியும்? பழையது

போல் அத்தனை நிறைவாக இல்லாமல் இருக்கலாம். பழசு என்றால் நன்கு பரிச்சயமாயிருக்கும். அது மகிழ்ச்சியற்ற தாயிருந்தாலும் பழக்கமானது. வாழ்க்கையின் ஒவ்வொரு படியிலும், ஒவ்வொரு கணத்திலும், நீங்கள் அறிந்தோ அறியாமலோ ஏதோ ஒன்றைத் தீர்மானிக்கிறீர்கள். அந்த முடிவு உங்களுக்குள் மோதலை ஏற்படுத்துகிறது. பழைய பாதையையே தொடர்வதா அல்லது புதிததாய் ஒன்றைத் தெரிவு செய்து கொள்வதா என்று. ஒவ்வொரு தப்படியிலும் பாதை இரண்டாகப் பிரிகிறது. மக்கள் இரண்டு வகை: பழைய சுவட்டினைத் தெரிவு செய்து கொண்டவர்கள். அவர்கள் ஒரு வட்டத்துக்குள்ளாகவே சுற்றிவருகிறவர்கள். அது அவர்கள் பழகிய வட்டம்.

தங்களுடைய கடந்த காலத்தையே எதிர்காலத்திலும் காண விரும்புகிறவர்கள் அவர்கள். ரோபோக்கள் (Robots) மாதிரி செய்ததையே திரும்பத் திரும்ப செய்து கொண்டிருப்பார்கள்.

மற்றொரு வகையினா் விழிப்புணா்வு கொண்டவர்கள். அவர்கள் புதியதையே கவனமுடன் தெரிவு செய்கிறவர்கள். புதியது துன்பத்தை ஏற்படுத்தலாம், வழி தவறிப் போகச் செய்யலாம். ஆனாலும் புதியது. அது கடந்த காலத்தின் பிரதியாயிருக்காது தானே.

நீங்கள் புதிய வழியில் செல்கிறபோது எடுத்து வைக்கிற ஒவ்வோா் அடியிலும் எச்சரிக்கையாய் இருக்க வேண்டியிருக்கும்.

புதியதைத் தெரிவு செய்யுங்கள். அது விழிப்புணர்வைத் தரும். வளர்ச்சி ஒரு போதும் வசதியாயிருக்காது. வளர்ச்சியில் வலி உண்டு, வேதனை உண்டு. வளா்ச்சியில் துன்புறும் நிலை இருக்கிறது. நீங்கள் அக்கினிப் பிரவேசம் செய்கிறீர்கள், ஆனால் அதன்பிறகே புடம் போட்ட தங்கமாகிறீர்கள். எது தூய்மையானதோ அது எஞ்சி யிருக்கும். நீங்கள் பழசைத் தொடரும்படியாகத்தான் அறிவுறுத்தப் பட்டீா்கள் காரணம் பழசில் தவற்றுக்கான வாய்ப்பு குறைவு. ஆனால் ஓர் அடிப்படைத் தவறை நீங்கள் செய்துவிடுகிறீர்கள். அடிப்படைத் தவறு இதுதான். நீங்கள் புதிய ஒன்றுக்கு அனுகூலமாய் இருந்தால் மட்டுமே வளர்ச்சி நேரிடுகிறது. புதிய தவறுகளின் மூலம் புதிய சாத்தியங்கள் கண்டறியப்படும். உண்மையில் புதிய தவறுகளைச் செய்வதற்கான துணிவும், திறனும் கொண்டவராயிருங்கள். காரணம்,

ஒவ்வொரு புதியவனும் ஒருபடிப்பினை. நீங்கள் வழி தவறிப்போகிற போதெல்லாம், வீட்டுக்குத் திரும்பும் வழியை நீங்கள் கண்டுபிடிக்க வேண்டியிருக்கும்.

எப்போதும் புதியதையே தெரிவு செய்யுங்கள். அது பழையதை விட மோசமானதாயிருந்தாலும் புதியதைத் தெரிவு செய்யுங்கள் என்றுதான் நான் சொல்வேன். அதில் அசவுகர்யம் இருக்கும், அத்தனை பாதுகாப்பாக இருக்காது ஆனாலும் புதியதையே தேர்வு செய்யுங்கள். அது புதிது என்பதல்ல முக்கியம், நீங்கள் அதிக விழிப்புணர்வைப் பெறுவதற்கு அதுவோர் வாய்ப்பு என்பதுதான்.

திறப்பாடு (efficiency) ஒரு குறிக்கோளாகவே உங்களுக்குக் கற்பிக்கப்பட்டிருக்கும். எச்சரிக்கை குணமே குறிக்கோளாயிருக்க வேண்டும்.

திறப்பாடு மறுபடியும் மறுபடியும் பழைய பாதையிலேயே சுற்றி வரும்படி செய்யும். காரணம் பழைய பாதையின் அத்தனை மூலை முடுக்குகளிலும் உங்களுக்கு நன்றாகத் தெரியும். பழைய பாதையில் நீங்கள் மிகுந்த திறமையுடன் செயல்படமுடியும். ஒரு எந்திரம் திறப்பாட்டுடன் (efficient) இருக்கிறது. ஆனால் ஒரு மனிதன்? மனிதன் ஒன்றும் எந்திரமல்ல. ஒரு மனிதன் மிகுந்த உணர்வுடன் இருக்க வேண்டும், விழிப்புணர்வில் இருந்து திறமை வெளிப்படுமாயின் அது தகுதியாயும், நேர்த்தியாயும் இருக்கும். ஆனால், விழிப்புணர்வில்லாத திறமையால் நீங்கள் மகிழ்ச்சியற்றவராகி விடுவீர்கள்.

விழிப்புணர்வைப் போலவே மகிழ்ச்சியின்மையும் ஒரு வரம்தான், ஆனால் மகிழ்ச்சியின்மை ஒரு வாழ்க்கை முறையாகிவிட்டால் அதுவே ஒரு சாபம். அதை உங்கள் வாழ்க்கை முறையாக்கிக் கொண்டுவிடாதீர்கள். கவலையை வாழ்க்கை முறையாக்கிக் கொண்டுவிட்ட பலரை நான் அறிவேன். நீங்கள் எந்தச் சொன்னாலும் அவர்கள் கேட்கமாட்டார்கள். தாங்கள் ஏன் கவலைப்படும்படியானது என்று ஓயாமல் கேட்டுக் கொண்டிருப்பார்கள். ஒவ்வொரு நொடியிலும் தாங்களே கவலைகளைத் தோற்றுவித்துக் கொண்டிருப்பதை அவர்கள் உணர்வதில்லை. கர்மா பற்றிய கோட்பாட்டின் பொருள் அதுவே.

நடப்பதுவும் உங்கள் செயலின் விளைவே என்கிறது கர்மசட்டம். எங்கோ உணர்வற்ற தளத்தில் அதை நீங்கள் உண்டு பண்ணுகிறீர்கள், காரணம் வெளியில் இருந்து எதுவும் உங்களுக்கு நடப்பதில்லை. எல்லாச் செயல்களும் உள்ளிருந்தே குமிழிடுகின்றன. நீங்கள் துயரத்தில் இருந்தால் உங்கள் உள்ளார்ந்த இருப்புணர்வில் இருந்தே அந்தத் துயரத்தை தோற்றுவித்துக் கொள்கிறீர்கள். அங்கிருந்தே அது வருகிறது. உங்கள் ஆன்மாவின் ஏதோவோர் இடத்தில் நீங்கள் அதை உற்பத்தி பண்ணியிருப்பீர்கள். நீங்கள் துயரத்தில் இருந்தால், அதை எப்படித் தோற்றுவித்துக்கொண்டீர்கள் என்பதை ஆழ்ந்து சிந்தியுங்கள். உங்களையன்றி வேறு யாரும் அதற்குப் பொறுப்பில்லை. நீங்கள் கணவராயிருந்தால் துன்பத்துக்குக் காரணம் உங்கள் மனைவியென்றே உங்கள் மனம் அடித்துச் சொல்லும். நீங்கள் ஒரு மனைவியாயிருந்தால் உங்கள் கணவர்தான் உங்களுடைய துன்பத்துக்குக் காரணம் என்று அது தொடர்ந்து சொல்லும்.

அது எப்போதுமே அடுத்தவர் தலையில் சுமத்தவே வழிபார்க்கும்.

இது மிகவும் அடிப்படையான புரிதல்: உங்களைத் தவிர வேறுயாரும் அதற்குப் பொறுப்பில்லை. நீங்கள் இதனைப் புரிந்து கொண்டுவிட்டால் செயல்கள் மாறத் தொடங்கும். உங்களுடைய துன்பத்தை நீங்கள் தோற்றுவித்துக் கொள்வதோடு அதை விரும்பவும் செய்வீர்களாயின், தொடர்ந்து உண்டு பண்ணிக்கொண்டே இருப்பீர்கள். உங்கள் வழியில் குறுக்கிடுவது இன்னொருவரின் வேலையல்ல. நீங்கள் துயர்ப்படுவதை விரும்பினால் துயரத்தில் அப்படியே தோய்ந்திருங்கள். ஆனால் துயரத்துக்குக் காரணமானவற்றைத் தோற்றுவிக்க வேண்டாம். மக்கள் தங்கள் மனோபாவங்களைத் தொடர்ந்து தோற்றுவித்தபடி இருக்கிறார்கள். நீங்கள் அடுத்தவர் தலையில் பொறுப்பைச் சுமத்துகிறீர்கள். அந்நிலையில் இருந்து நீங்கள் ஒரு போதும் மாறுவதில்லை. அந்நிலையில் நீங்கள் துன்புறுவீர்கள். பொறுப்பை மற்றவர் தலையில் கட்டுவதன் மூலம் நீங்கள் ஒரு அடிமையாகி விடுகிறீர்கள். பொறுப்பேற்பவராயிருங்கள்.

சில நாட்களுக்கு முன் ஒரு சந்நியாசினி என்னிடம் சொன்னார். 'தன்னுடைய கணவர் தொடர்ந்து தனக்குப் பிரச்சினைகளை உண்டு

பண்ணுகிறார்' என்று தன்னுடைய கதையை அவர் சொல்லும் போது பார்த்தால் உண்மையில் அவருடைய கணவர்தான் பொறுப்பு என்பது போல் தெரிந்தது. அந்தப் பெண்மணிக்கு அவருடைய கணவர் மூலம் எட்டு குழந்தைகள் வேறொரு பெண் மூலம் அவருடைய கணவருக்கு மூன்று குழந்தைகள், அந்த மனிதருக்கு தம்முடைய செயலாளினி மூலமும் ஒரு குழந்தை. தமது வழியில் எதிர்ப்படுகிற எந்தவொரு பெண்ணுடனும் சிறு பிள்ளைத்தனமாக அவர் சுற்றிக் கொண்டிருப்பார். பாவம் அந்தப் பெண்மணி எல்லாருடைய இரக்கத் தையும் அவர் பெற்றிருந்தார். அவர் நிறையவே துன்பப்பட்டுவிட்டார், ஆனாலும் அந்த ஆட்டம் தொடர்ந்தது. அவருடைய கணவன் அதிகம் சம்பாதித்துக் கொண்டிருக்கவில்லை. அந்தப் பெண்மணி ஈட்டுகிற பொருளைக் கொண்டுதான் தன் குழந்தைகளை மட்டு மின்றி மற்ற குழந்தைகளைக் கவனித்தாக வேண்டும் என்கிற நிலை. உண்மையில் அவர் துன்பப்படுகிறார், அதற்குயார் காரணம்? நான் அவரிடம் சொன்னேன் 'உண்மையிலே உங்களுக்குத் துன்பம் என்றால், ஏன் தொடர்ந்து அவருடன் (கணவர்) வாழ வேண்டும்?'– அத்தகைய நபருடன் வாழ்க்கையைத் தொடர வேண்டிய தில்லையே.''

அவர் புரிந்து கொண்டார் – மிக அரிது. பெண்கள் உடனே அதுபோல புரிந்து கொள்வது மிகவும் அரிது. மிகவும் தாமதமாக, இருப்பினும் காலம் தாழ்ந்து போய்விடவில்லை. அவளுடைய வாழ்க்கை இன்னும் உள்ளது. இப்போது அவள் தன்னுடைய கணவருடனேயே வாழ முடிவெடுத்தால், அவள் தனது துன்பத்துடன் வாழ முடிவெடுப்பதாக பொருள். அப்போது அவர் தன்னுடைய துன்பத்தை விரும்புகிறார். கணவனை வெறுப்பதில் உள்ள மகிழ்ச்சி ஒருபுறம்; தான் துன்பப்படுகிறோம் என்பதில் உள்ள மகிழ்ச்சி ஒருபுறம்; மற்றவர்களிடம் இருந்து பெறப்படும் இரக்கத்தினால் ஏற்படும் மகிழ்ச்சி ஒருபுறம்.

ஒரு போதும் அடுத்தவருடைய இரக்கத்தை வேண்டி நிற்காதீர்கள். அந்நிலையில் உங்கள் துன்பத்தின் மீதே நீங்கள் முதலீடு செய்கிறீர்கள். நீங்கள் துன்பப்படுவதால்தான் மற்றவர்கள் உங்கள்மீது இரக்கம் காட்டுகிறார்கள். நீங்கள் அதற்குமேலும்

துன்புறவில்லை என்றால், அவர்களுக்கும் உங்கள் மீது இரக்கம் உண்டாகப்போவதில்லை. நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? மகிழ்ச்சியாக இருப்பவர் மீது யாருக்கும் இரக்கம் காட்டத் தோன்றாது. உண்மையில் மகிழ்ச்சியாய் இருப்பவர் மீது குரோதம் கொண்டுவிடுவது மக்கள் சுபாவம். மகிழ்ச்சி ஆபத்தானது. நீங்கள் மகிழ்ச்சியாயிருந்து, உங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்துகிறபோது உங்களை நீங்களே ஆபத்துக்குள்ளாக்கிக் கொள்கிறீர்கள்.– எல்லாரும் உங்களுக்கு விரோதியாகி விடுகிறார்கள். காரணம் அவர்கள்,' நான் கவலையில் இருக்க, நீர் மட்டும் மகிழ்ச்சியாயிருப்பதா' என்று எண்ணமிடுகின்றனர். இல்லை இது சகிக்ககூடிய விசயமே அல்ல. இதனை அனுமதிக்கக் கூடாது என்ற எண்ணம் அவர்களுக்கு.

துன்புறும் மக்கள் வாழும் சமூகத்தில் மகிழ்ச்சியோடு இருப்பவன் அந்நியனாகி விடுவான். அதனால்தானே நாம் சாக்ரடீசுக்கு நஞ் சூட்டியது, இயேசுவை சிலுவையில் அறைந்தது. மகிழ்ச்சியாயிருப்பவர் களுடன் நாம் ஒரு போதும் சவுகரியமாய் உணர்வதில்லை. எப்படியோ நம்முடைய அகந்தையை அவர்கள் புண்படுத்திவிட்டனர். மக்கள் இயேசுவை சிலுவையில் அறைந்தனர். அவரை உயிரோடு கொன்றனர். அவர் மிகவும் இளையவராய் முப்பத்தியைந்து வயதில் இருந்தார். அவர் இன்னமும் வாழ்க்கையை முழுமையாய் புரிந்து கொண்டிருக்கவில்லை. அப்போதுதான் தம்முடைய வாழ்க்கையை ஒரு மொட்டு இதழ்விரிப்பது போல் தொடங்கியிருந்தார். ஏனோ மக்களால் அவரைச் சகித்துக் கொள்ள முடியவில்லை, கொன்று விட்டனர். மகிழ்ச்சியா? இல்லை எல்லாருமே துன்பத்துக் குள்ளாயினர்.

இந்த மனிதரை அவர்கள் கொன்று போட்டனர். அதன்பிறகோ அவரை வழிபடத் தொடங்கவிட்டனர். பாருங்கள்... இரண்டாயிரம் ஆண்டுகளாய் அவரை வணங்கிக் கொண்டிருக்கின்றனர். ஆனால், சிலுவையில் அறையப்பட்ட இயேசுவிற்காக உங்களால் இரக்கப்பட முடிகிறது, மகிழ்ச்சியான இயேசுவிடமோ பகைமை கொண்டு விடுகிறீர்கள்.

அதேதான் இங்கும் நடக்கிறது. நான் மகிழ்ச்சியானவன் நான் வணங்கப்பட வேண்டும் என்று நீங்கள் விரும்பினால் ஒரு சிலுவையில் அறைவதை நீங்கள் நடத்த வேண்டியிருக்கும். வேறு வழியில்லை. அந்நிலையில், அதுவரை எனக்கு எதிராக இருந்தவர் களெல்லாம் என்னைப் பின்பற்றுகிறவராகிவிடுவார்கள். ஆனால், அவர்களுக்கு முதலில் என்னைச் சிலுவையில் பார்த்தாக வேண்டும். மகிழ்ச்சியோடு இருப்பவனை யாரும் வழிபடுவதில்லை. முதலில், மகிழ்ச்சியோடிருப்பவன் அழிக்கப்படவேண்டும். உண்மையில் அப்போதுதான் அவன் கையாளக்கூடியவனாயிருப்பான். இப்போது இயேசு மீது உங்களுக்கு இரக்கம் உண்டாகிறது. 'பாவம், எவ்வளவு துன்பப்பட்டார், துயரத்துக்குள்ளானார்' உங்களுடைய கண்களில் நீர்முட்டுகிறது. ஆனந்தமாய் ஆடுகிற இயேசு ஒரு தொல்லையாய் தெரிவார்.

'ஜீஸஸ் தமேன்'– என்கிற திரைப்படத்தை எடுப்பதற்கு ஸ்வீடனைச் சேர்ந்த ஒருவர் முயற்சி பண்ணிக் கொண்டிருந்தார். பத்து ஆண்டுகளாய் தொடர்ந்து முயன்றார், ஆயிரத்தியோரு தடைகள். 'ஜீஸஸ் தமேன்?' இல்லை அனுமதிக்க முடியாது என்றது அரசு. மேரிமக்தலேனாவுடன் இயேசு கொண்டிருந்த நேசத்தை இந்த மனிதர் வெளிப்படுத்திவிடக்கூடும் என்பதால்தான். இயேசுவிற்கு பெண்களிடம் பிரியம் இருந்தது. அது இயல்பு. அதில் தவறேதும் இல்லை. அவர் மகிழ்ச்சியானவர். சில சமயங்களில் அவருக்கு ஒயின்மீதும் விருப்பம். அவர் கொண்டவராயிருந்தார். 'ஜீஸஸ்தமேன்' என்ற பெயரில் இந்த ஆள் படமெடுப்பதென்றால், தேவ மைந்தனை மனித குமாரனாக அல்லவா சித்திரித்துவிடுவார். அப்போது வேண்டாத தொல்லைகள் வரக்கூடும். அரசு அந்தப் படத்தயாரிப்பாள ருக்கு எதிராக இருந்தது, தேவாலயம் அவருக்கு எதிராயிருந்தது. இயேசு மகிழ்ச்சியாயிருந்தார். அவர் வாழ்க்கையை அனுபவித்து மகிழ்ந்தார். அது கடவுளின் ஆசீர்வாதம். கடவுள் நம்பிக்கை உடைய எவரும் கொண்டாடுகிற ஆன்மாதான்.

அவரைக் கொன்றார்கள், சிலுவையில் அறைந்தார்கள். அதில் இருந்து அவரை வழிபடலாயினர். சிலுவையில் அறையப்பட்டிருக்கிற இயேசு, போதி மரத்தடியில் அமர்ந்திருக்கும் புத்தரைவிட ஈர்க் கத்தக்கவராய் தெரிகிறார். குழலூதும் கிருஷ்ணரைவிட சிலுவையில்

அறையப்பட்ட இயேசு மிகவும் வசீகரிப்பவராயிருக்கிறார். கிருஷ்ணர்? கிருஷ்ணரைப் பற்றி யார் கவலைப்படப் போகிறார்கள்? பதினாறாயிரம் பெண்களுடன் கிருஷ்ணர் ஆடிக் கொண்டிருப்பது இந்துக்களுக்கே குற்ற உணர்வை ஏற்படுத்துவதாக அல்லவா இருக்கிறது! 'இருக்காது, கட்டுக்கதை'– இந்துக்கள் அதனை ஒரு அழகிய கவிதையாகவே விவரிக்கிறார்கள். அவர்கள் சொல்கிறார்கள், 'பதினாறாயிரம் பெண்களும் உண்மையில் பெண்களல்ல, பதினாறாயிரம் நாடிகள் அவை, மனித சரீரத்தில் உள்ள பதினாறாயிரம் நாடி நரம்புகளின் குறியீடு' என்று. கிருஷ்ணர் என்கிற ஆன்மாவைச்சுற்றி பதினாறாயிரம் நரம்புகளும் கோபியராகி நடனமிடுகின்றன. அப்படியானால் அது சரி. ஆனால் உண்மையான பெண்களாயிருந்து விட்டால் கடினந்தான், அதை ஏற்பது கடினம்.

இந்தியாவில் உள்ள இன்னொரு மதமான சமணம் கிருஷ்ணரை நரகத்தில் தூக்கியெறிந்துவிட்டது, அந்தப் பதினாறாயிரம் பெண்கள் தான் காரணம். சமணர்களின் புராணத்தில், 'கிருஷ்ணர் ஏழாவது நரகத்தில் இருக்கிறார்' என்று சொல்லப்படுகிறது. அதுவே கடைசி நரகம். அவர் அத்தனை சீக்கிரம் வெளியே வந்துவிடமாட்டார். அடுத்த பிரளயம் ஏற்படும்வரை அவர் அங்கேயே இருப்பார். மீண்டும் படைப்பு தொடங்கப்படுகிறபோதுதான் அவர் வருகை தருவார். இலட்சோபலட்சம் ஆண்டுகள் அவர் காத்திருக்கும்படியாகும். அவர் மிகப்பெரிய குற்றத்தைச் செய்துவிட்டார். அவர் செய்த குற்றம் (பாவம்) நடனமாடியதுதான்.

மகாவீரர் மிகவும் ஏற்கத்தக்கவராக இருக்கிறார். புத்தர் அதைவிட ஏற்கத்தக்கவர். கிருஷ்ணரோ கொள்கையற்றவர், அவர் தீவிரத் தன்மைக் கொண்டவர்களை ஏமாற்றிவிட்டார். அவர் மகிழ்ச்சியாய் இருந்தார். அவரிடம் தீவிரத் தன்மை இருந்திருக்க வில்லை. அவர் கவலை மிக்கவராயில்லை, அவருடைய முகம் வாட்டத்தில் தொங்கிப் போகவில்லை – அவர் சிரித்துக் கொண்டும் ஆடிக்கொண்டும் இருந்தார்.

நான் சொல்வேன், 'நீங்கள் சிரித்த முகத்தோடு செல்லுங்கள். அவருடைய முன்னிலையில் ஆடிப்பாடுங்கள். முகத்தைத்

தொங்கப்போட்டுக் கொண்டு போகாதீர்கள்' என்று கடவுள் முன்பே அத்தகையவர்களை பார்த்து சலிப்படைந்து விட்டிருக்கிறார்.

இரக்கம் ஒரு பெரிய முதலீடு. நீங்கள் தொடர்ந்து இரக்கத்தைப் பெறுவதெனில் தொடர்ந்து துன்பத்தில் இருந்தாக வேண்டும். எனவேதான் ஒரு துன்பம் தீர்ந்ததும் மற்றொரு துன்பத்தை தோற்றுவித்துக் கொள்கிறீர்கள். கவனியுங்கள், ஒரு ஆபத்தான விளையாட்டை நீங்கள் மேற்கொண்டிருக்கிறீர்கள்.

உங்களுடைய ஆற்றல்களைக் கொண்டு மகிழ்ச்சியாக இருக்கப்பாருங்கள், மற்றவர்களைப் பற்றிய கவலை வேண்டாம். உங்கள் மகிழ்ச்சி உங்களுக்கு விதிக்கப்பட்டது. அதில் குறுக்கிட யாருக்கும் உரிமையில்லை. ஆனால், சமூகம் தொடர்ந்து குறுக்கிட்ட படி இருக்கிறது. அது ஓர் ஒழுக்கமற்ற வட்டம். முன்பேஉள்ள சமூக அமைப்பில் நீங்கள் பிறந்திருக்கிறீர்கள். உணர்ச்சிமிகைப்புடையர் களும், துன்புறுகிறவர்களும், மகிழ்ச்சியற்றவர்களும் இடம் பெற்றி ருக்கிற சமூகம் அது. உங்கள் பெற்றோர்களும், குடும்பத்தினரும், சமூகத்தினரும், நாட்டவரம் உங்களுக்காக முன்பே காத்திருக்கிறார்கள். ஒரு சின்னக் குழந்தை பிறந்ததும், சமூகமே அதன்மீது பாய்ந்து அதைப்பயன்படுத்தத் தொடங்கிவிடுகிறது. உண்மையில் அவர்கள் அந்தக் குழந்தைக்குத் துணை நிற்பவர்களாய் இருந்திருக்க வேண்டும். உலகத்தைப்பற்றி ஏதுமறியாத சின்னக்குழந்தை அது. ஆனால், அந்தப் பைத்தியக்காரர்கள் தங்கள் பெற்றோர்கள் தங்கள்மீது திணிப்பதையெல்லாம் அந்தக் குழந்தை மீது திணிக்க முற்படுகிறார்கள். ஒரு குழந்தை அசட்டுத்தனமாக சிரித்து வைக்கிறபோது நீங்கள் பேசாமல் இருக்க மாட்டீர்கள். 'வாயை மூடு' என்று உடனே சொல்ல விரும்புவீர்கள். குழந்தை அங்குமிங்கும் ஓடியாடுவதற்கும், முழு அளவில் மகிழ்ச்சியை வெளிப்படுத்துவதற்கும் நீங்கள் இடமளிப்பதில்லை.

மணமாகாத இரண்டு அமெரிக்கப் பெண்கள் பற்றி நான் கேள்விப்பட்டது. அவர்கள் இத்தாலியில் உள்ள பழம்பெரும் தேவாலயம் ஒன்றுக்குச் சென்றிருந்தனர்.

தேவாலயத்தில் ஒரு இத்தாலியப் பெண்மணி பிரார்த்தனை செய்து கொண்டிருப்பதையும், அவளுடைய குழந்தைகள் நாலைந்து

பேர் தேவாலயத்துக்குள் அங்குமிங்கும் சப்தமிட்டபடி ஓடுவதையும் கண்டனர். அமெரிக்கப் பெண்மணிகள் இருவராலும் அதைச் சகித்துக் கொள்ள முடியவில்லை. 'இது ரொம்ப அதிகம், புனிதமான இடத்தை மதியாமல் நடத்தும் அவச்செயல்' என்று அவர்களுக்குப்பட்டது அந்த இத்தாலியத் தாயிடம் சென்று 'இவர்கள் உங்களுடைய குழந்தைகள்தானா? இது 'சர்ச்' அல்லவா, இங்கே கட்டுப்பாடு இருக்க வேண்டும். அவர்களைக் கட்டுப்படுத்தி வையுங்கள்' என்றனர். கண்களில் நீர் வழிய பிரார்த்தித்துக் கொண்டிருந்த அந்தப்பெண்மணி முகத்தில் மகிழ்ச்சி பொங்கக் கூறினாள், 'இது அவர்களுடைய தந்தையின் வீடு. இங்கே அவர்கள் விளையாடக் கூடாதா?'' என்று. ஆனால் அந்த மனோபாவம் அரிதானது, மிகவும் அரிதானது.

மனிதகுலம் பைத்தியக்காரர்களின் அதிகாரத்திற்கு உட்பட்டிருக்கிறது: அரசியல் வாதிகள் சமய குருக்கள் இவர்கள் எல்லாம் பேராவல் கொண்டவர்கள், பேராவல் பைத்தியக் காரத்தனம். ஒரு குழந்தை மகிழ்ச்சியில் ஆனந்தத்தில் நிரம்பி வழிகிறது. நீங்கள் அவனைக் கட்டுப்படுத்தத் தொடங்குகிறீர்கள். 'சிரிப்பதற்கு ஏற்ற நேரம் இருக்கிறது' என்று நீங்கள் சொல்கிறீர்கள். சிரிப்பதற்கென்றே ஒரு நேரம், வாழ்வதற்கென்றே ஒரு நேரம் இருக்கிறதா என்ன? குழந்தை ஓடவும், குதிக்கவும், ஆடவும் விரும்புகிறது. ஆனால் அது வெளியே செல்லவிடாமல் தடுக்கப்படுகிறது. அந்நிலையில் வழிந்தோடத் தயாராயிருந்த ஆற்றல், அப்படியே முடங்கி உறைந்து போகிறது. அதனால் தான் ரொம்ப்பேர் வளர்ந்து பெரியவர்களானதும் ஒரு நிலையில் நின்றுவிடுவது. தொடர்ந்து அடக்கி வைக்கப்படுகிற குழந்தைகளால் அழக்கூட முடிவதில்லை. அவர்களால் சிரிக்கவும் முடிவதில்லை. அழுவது ஆம்பிள்ளைத்தனமாயிருக்காது, வாய்விட்டுச் சிரிப்பது நாகரிகமாயிருக்காது. ஒரு குழந்தை வயதில் மூத்த ஒருவரைப்போல் நடந்து கொள்ள வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள்.

தொண்ணூறு வயதான ஒரு சீமாட்டியைப்பற்றி நான் கேள்விப் பட்டிருக்கிறேன். அவளுக்குப் பெரிய வீடும், ஏராள நிலங்களும் இருந்தன. அவள் ஒரு நாள் நிலங்களைப் பார்வையிடச் சென்றிருந்தாள். அது பெரிய நிலப்பரப்பு. ஒரு குளத்துக்கும் அப்பால்

இருந்த தோப்பில் இரண்டு இளசுகள் புணர்ச்சிப் பழகிக் கொண்டிருந்தன.

'அவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்?'– அவர் காரோட்டியிடம் கேட்டாள். தொண்ணூறு வயதாயிற்றே மறந்து போயிருக்கும். காரோட்டி உண்மையைச் சொல்லவேண்டிய நிலை. ஆனால் அதை நாசூக்காகச் சொன்னான் 'அவர்கள் இளைஞர்கள் உடலுறவை மேற்கொண்டுள்ளனர்' என்று. இந்த உலகில் அது இன்னமும் நடக்குதா?' என்று கோபத்துடன் கேட்டாள் அவள்.

உங்களுக்கு வயதாகிவிட்டால் உலகத்துக்கும் வயதாகிவிடுமா, என்ன? நீங்கள் செத்தால் உலகமும் செத்துவிடும் என்றா நினைக்கிறீர்கள்? உலகம் தனக்குத்தானே புதுப்பித்துக் கொண்டிருக்கிறது. அதனால்தான் அது கிழவர்களை எடுத்துக் கொண்டு, குழந்தைகளை உலகிற்கு வழங்குகிறது. அது கிழங்களை குழந்தைகளாய் மாற்றிவிடுகிறது.

பிரபஞ்ச இருப்பு உலகத்தை புதிய மனிதர்களால் நிரப்பிக் கொண்டிருக்கிறது. தடையின்றித் தொடரும் வகையறியாமல் ஒரு நிலையில் இருப்பவர்களை, நத்தை போல் சுருங்கிவிடுகிறவர்களை, பூமிக்கு பாரமாகிவிட்டவர்களை அது அகற்றிவிடுகிறது. அவர்கள் பிரபஞ்சத்துக்குரியவர்கள். அவர்கள் அழிக்கப்படுகிறார்கள். மண்ணுக்குரியது மண்ணுக்கும், வானுக்குரியது வானையும், நீருக் குரியது நீரையும் சென்றடைகிறது. பிறகு அந்த மண்ணில் இருந்து, நீரில் இருந்து, நெருப்பில் இருந்து ஒரு குழந்தை தோன்றுகிறது. அது மீண்டும் புத்தம் புதியதாய் ஆடிப்பாடி வாழ்கிறது. மரத்துக்குப் பூக்கள் வருவதைப்போல், மரங்கள் பூப்பதுபோல், இந்தப்பூமி புதிய குழந்தைகளை உருவாக்கியபடி இருக்கிறது.

நீங்கள் உண்மையிலேயே மகிழ்ச்சியாயிருக்க விரும்பினால் இளமையும் உயிரோட்டமும் உடையவராய், அழுகை சிரிப்பு என அத்தனை பரிமாணங்களுக்கும் கிடைக்கக்கூடியவராய், தடையற்று அமைதியாய் தொடர்கின்றவராய் இருங்கள். அந்நிலையில் நீங்கள் மகிழ்ச்சியாயிருப்பீர்கள். ஆனால் எவ்வித இரக்கத்தையும் உங்களால் பெற முடியாது என்பது நினைவிருக்கட்டும். மக்கள் உங்கள் மீது கற்களை வீசலாம் ஆனால் அதுவும் தகுதியானதே. நீங்கள் சமய

நம்பிக்கையற்றவர்கள் என்று மக்கள் நினைத்திருக்கலாம். அவர்கள் உங்களை வெறுக்கலாம் அதைப்பற்றிக் கவலைப்படாதீர்கள். உங்கள் மகிழ்ச்சிதான் முக்கியம்.

நீங்கள் சிலவற்றைச் செய்யாமலும் இருக்க வேண்டும் அப்போதுதான் நீங்கள் மகிழ்ச்சியடைவீர்கள்.

சமூகம் எதையெல்லாம் செய்ததோ அதையெல்லாம் தலை கீழாக்கிட வேண்டும். நீங்கள் ஏதோ யோசனையில் சிரித்துக் கொண்டிருப்பீர்கள். உங்கள் தந்தை கோபத்துடன் சொல்வார் 'நிறுத்து' என்று நீங்கள் அங்கிருந்து மறுபடியும் தொடரும்படி ஆகும். தந்தையிடம் சொல்லுங்கள், 'ப்ளீஸ், நான் மறுபடியும் சிரிக்கப் போகிறேன்' என்று. உங்கள் மூளையில் ஏதோ ஓரிடத்தில் உங்கள் தந்தை உங்களை கட்டுப்படுத்தியபடி இருக்கிறார். 'நிறுத்து' நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? தியானத்தில் இருக்கும்போது உங்கள் பெற்றோர்களின் குரல் ஒலிக்கக் கேட்டிருப்பீர்கள். நிபந்தனை விதிக்கும் பெற்றோர்களைத்தான் நீங்கள் சார்ந்திருக்கிறீர்கள். இல்லையேல் அவர்கள் உங்களுக்கு பால், உணவு கொடுக்க மாட்டார்கள், அவர்களுடைய ஆதரவும் உங்களுக்குக் கிடைக்காது. ஒரு சின்னக்குழந்தை எப்படி ஆதரவில்லாமல் இருக்க முடியும்? அவன் சமரசம் பண்ணிக் கொள்வான். 'சரி, நீங்கள் எதைச் சொன்னாலும் நான் அப்படியே அதைப் பின்பற்றுகிறேன்' என்று சொல்கிறான். தாக்குப்பிடித்தாகவேண்டுமே. ஆக, மெள்ள மெள்ள அவனிடம் போலித்தனம் வந்துவிடுகிறது. காலப்போக்கில் அவன் தன்னுடனேயே மாறுபாடு கொண்டவனாகிறான். அவன் சிரிக்க விரும்புகிறான்,. தந்தையோ அதை அனுமதிப்பதில்லை. எனவே, அவன் அமைதியாகிவிடுகிறான். ஒரு பாசாங்குக் காரனாய் வடிவெடுக்கிறான்.

பாசாங்குக்காரன் ஒரு போதும் மகிழ்ச்சியாயிருப்பதில்லை. காரணம் மகிழ்ச்சி உங்கள் பிராணசக்திக்கு உண்மையாயிருப்பதாகும். மகிழ்ச்சி என்பது எங்கோ இல்லை, நீங்கள் அதை வாங்கி வருவதற்கு. மகிழ்ச்சி என்பது உங்களுக்காக எங்கோ காத்தி ருக்கவில்லை. அதைத் தேடிக் கண்டடைவதற்கு இல்லை, மகிழ்ச்சி என்பது உண்மையாகவும், நம்பகமாகவும் இருக்கிற செயல். நீங்கள்

உண்மையாயிருக்கிற போதெல்லாம் மகிழ்ச்சியாக இருப்பீர்கள். உண்மையற்ற நிலையில் கவலைக்குரியவராகிவிடுவீர்கள்.

நீங்கள் உண்மைற்றவரயிருந்தால் உங்களுடைய அடுத்த பிறவியில் கவலைக்குரியவராகி விடுவீர்கள் என்று நான் சொல்ல மாட்டேன். நீங்கள் பொய்யராயிருந்தால் இப்போதே அல்லவா கவலைக்குரியவராகியிருக்க வேண்டும். கவனியுங்கள், நீங்கள் பொய்யராயிருந்தால் உங்களுக்குள் சக்தியின் ஓட்டம் தொடராது, அது காரணமாய் நீங்கள் கவலையோடும் அசவுகரிய உணர்வோடும் இருப்பீர்கள்.

சக்தி ஆறு போன்றிருக்காது, அது நிலையாய் உறைந்து விட்டிருக்கும். நீங்களோ தடையின்றித் தொடர விரும்புவீர்கள். உயிர் தொடர்ச்சி உடையது, மரணம் உறைந்து போய்விடுவது. கவலை வருவதற்குக் காரணம் உங்களுடைய பாகங்களில் பலவும் உறைந்து போய்விடுவதுதான். தற்போது உங்கள் உடம்பில் உள்ள மூலங்களை (roots) நீங்கள் இழந்துவிட்டிருக்கிறீர்கள்.

மக்கள் ஆவிகளை (ghosts)போல் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள், அதனால்தான் அவர்கள் துன்பப்படுவது நான் உங்களுக்குள் பார்க்கிற பொழுது ஓர் உயிர்த்துடிப்புள்ள மனிதனை அரிதாகவே காண்கிறேன். மக்கள் ஆவிகளைப்போல் மாயாவிகளைப்போல் இருக்கிறார்கள். உங்கள் உடம்பினுள் நீங்கள் இல்லை, ஒரு ஆவியைப் போல் எங்கோ திரிந்தலைகிறீர்கள். ஒரு சின்ன நூலிழை உங்களை உடம்போடு இணைத்திருக்கிறது. அந்த நூலிழை உங்களை உயிரோட்டத்துடன் வைத்திருக்கிறது, அவ்வளவுதான். ஆனால், அதுவே மகிழ்ச்சியளிப்பதாகிவிடாது. நீங்கள் அத்தனை கட்டுப்பாடுகளையும் விட்டு, உணர்வுடையவராய், தியானத்தில் ஈடுபடவேண்டும்.

உண்மையில் ஒழுங்குபாடு தேவை ஆனால் கட்டுப்பாடு மாதிரியல்ல; விழிப்புணர்வு. நீங்கள் விழிப்புடன் எச்சரிக்கையா யிருந்தால் ஓர் ஒழுங்கு தானே வந்துவிடும். நீங்கள் அதுபற்றி திட்டமிடவோ, கட்டாயப்படுத்தவோ தேவையில்லை. எப்படி எதிர்ச் செயல்பட வேண்டும் என்பதை ஒவ்வொரு கணத்திலும் உங்கள் விழிப்புணர்வு தீர்மானிக்கிறது. கவனமாய் செயல்படுகிறவர் மற்றவர்களைக் கவலைக்குள்ளாக்குவது கிடையாது.

மகிழ்ச்சியாயிருங்கள் மற்றவர்களைக் கவலைக்குள்ளாக்கும் நிலையைத் தோற்றுவிக்காதீர்கள். உங்களால் உதவ முடியுமெனில் மற்றவர்களையும் மகிழ்ச்சியாயிருக்கச் செய்யுங்கள். உங்களால் முடியாவிட்டால், குறைந்தபட்சம் உங்களையாவது மகிழ்ச்சியாய் வைத்திருங்கள்.

## இரண்டாவது கேள்வி:

*'நான் பறப்பது போல் தொடர்ந்து கனவு காண்கிறேன். என்ன நடக்கிறது?'*

ஜி.கே. செஸ்டர்டன் கூறுவார். தம்மை இலேசாக எண்ணிக் கொண்டதால் தேவதைகள் பறக்கின்றன' என்று.

உங்களுக்கும் அதுதான் நடந்திருக்கவேண்டும். உங்களை எத்தனைக்கு இலேசாக உணர்கிறீர்களோ அத்தனைக்கு மகிழ்ச்சி தான், ஈர்ப்புசக்தியின் இழுப்பும் அந்த அளவு குறையும் ஈர்ப்புசக்தி கல்லறைகளை உருவாக்கும். பாவம் ஒரு பாரம்,வாழ்ந்து பார்க்காத அனுபவங்களும், பூர்த்தியாகாத அனுபவங்களும் உங்களை கனக்கச் செய்யும். நீங்கள் ஒரு பெண்ணைக் காதலிக்க விரும்புகிறீர்கள் ஆனால் மகாத்மாகாந்தி அதற்கு எதிராக இருக்கிறார். விவேகானந்தரும் அதற்கு எதிராக நிற்பதால் அது கடினமாகிவிடுகிறது. மிகப்பெரிய ஞானிகளும் மகான்களும் பிரும்ச்சர்யத்தைப்பற்றி உரைத்திருக்கிறார்கள். நீங்கள் காதலிக்க விரும்புகிறீர்கள், ஞானிகளோ அதற்கு குறுக்கே நிற்கிறார்கள். எனவே, நீங்கள் எப்படியோ உங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளும்படி ஆகிறது. நீங்கள் மதிப்பற்ற தேவையற்ற பொருள்களைச் சுமந்து கொண்டிருக்கிறீர்கள். என்னைக் கேட்டால் நீங்கள் காதலித்திருக்க வேண்டும் என்பேன். இப்போது ஒன்றும் முழுகிவிடவில்லை, நீங்கள் காதலிக்க வேண்டும். ஞானிகளும் மகான்களும் சரியானவர்கள்தாம். ஆனால் அதற்காக நீங்கள் தவறானவர்கள் என்று நான் சொல்லமாட்டேன்.

சிக்கலை நான் தீர்த்துவைக்கிறேன். ஞானிகளும் மகான்களும் அதிக அளவில் அனுபவித்து முடித்தபின்பே இந்தப்புரிதலை அடைந்திருப்பது. அதன்பிறகுதான் அவர்கள் பிரும்மச்சர்யம் பற்றிப் பேசுவது. பிரும்மச்சர்யம் காதலுக்கு மாறானதல்ல, காதலின்

வழியேதான் பிரும்மச்சர்யம் இதழ்விரிக்கிறது. தற்போது பல நூல்களை நீங்கள் படித்திருக்கிறீர்கள், அவற்றின் மூலம் பல கருத்துக்களை உருவாக்கிக் கொள்கிறீர்கள். அந்தக் கருத்துக்கள் உங்களை முடக்கிப்போட்டுவிட்டன. கருத்துக்கள் தவறானவை அல்ல ஆனால் நூல்களில் இருந்து அவற்றை நீங்கள் பெற்றீர்கள். ஞானிகளோ தங்களுடைய சொந்த வாழ்க்கையில் இருந்தே அவற்றைப் பெற்றார்கள். வரலாற்றிலும், புராணங்களிலும் பாருங்கள். ஞானிகள் மிகுதியாகவே வாழ்ந்து அனுபவித்திருக்கிறார்கள் என்பதை அறிவீர்கள். சராசரி வாழ்க்கையை தீவிரத்துடனும் ஆற்றலுடனும் அவர்கள் வாழ்ந்திருக்கிறார்கள். அதன் பிறகே கொஞ்சம் கொஞ்சமாய் அவர்கள் ஞானம் பெற்றது.

வாழ்க்கைதான், வாழ்க்கை மட்டுமே ஞானத்தை வழங்கு கிறது.

நீங்கள் கோபப்படவிரும்புகிறீர்கள், ஆனால் மறைநூல்களோ அதனை எதிர்க்கின்றன. எனவே, நீங்கள் கோபத்துக்கு இடமளிப்ப தில்லை. தற்போது அந்தக் கோபம் ஒரேயடியாய் குவிந்துவிட்டி ருக்கிறது, அந்தக் குவியல்களை நீங்கள் சுமந்திருக்கிறீர்கள். அதனால்தான் நீங்கள் கனத்த உணர்வைக் கொண்டிருப்பது. அதனை விடுங்கள். வீசியெறியுங்கள். யாருமில்லாத அறைக்குள் சென்று, உங்கள் கோபத்தை வெளியே கொட்டி விடுங்கள். தலை யணையை அடித்து உதையுங்கள். அவற்றிடம் பேசுங்கள். நீங்கள் சொல்ல விரும்பி சொல்லாமல் வைத்திருந்தவைகளை வெளியே தள்ளுங்கள். பேரொலியுடன் வெடித்து சிதறடியுங்கள், புயலுக்குப்பின் அமைதி உங்களை வந்தடையும் அந்த அமைதி கவலையைக் குறைப்பதால், முன்பு ஒரு போதும் நீங்கள் அறிந்திராதாயிருக்கும். திடீரென நீங்கள் இலேசாக உணர்வீர்கள்.

வித்யா இந்தக் கேள்வியைக் கேட்டிருந்தார். அவர் இலேசாக உணர்கிறார் என்பதை நான் கண்டு கொண்டிருக்கிறேன். இன்னும் ஆழத்துக்குச் செல்லுங்கள் கனவில்மட்டுமல்லாது நிஜத்திலும் உங்களால் பறக்கமுடியும். நீங்கள் நிலத்தைத் தொடாமலே நீங்கள் வாழ்கிறீர்கள். நிலத்தில் எந்தவொரு தடத்தையும் நீங்கள் விட்டுச் செல்வ்தில்லை. நீங்கள் வாழ்கிறீர்கள் ஆனால் எதன்மீதும் சிறு

கீறலைக்கூட ஏற்படுத்தவில்லை. நீங்கள் வாழ்கிறீர்கள் ஆனால் எதன்மீதும் சிறு கீறலைக்கூட ஏற்படுத்தவில்லை. நீங்கள் இலேசாகி விடுகிறீர்கள் என்பதோ, உங்கள் தொடர்பில் வருகிற எதுவும் அழகும் பொலிவும் பெற்றுவிடுகின்றன. உங்களைச் சுற்றி பூக்கள் பொழிகின்றன, இந்த உலகத்தினுடையதல்லாத ஒரு நறுமணத்தை நீங்கள் பெறுகிறீர்கள். ஆனால், உங்களுடைய சுமை நீங்கப் பெற்றாலே அது நிகழ்கிறது.

மகாவீரர் இந்தச் சுமை நீக்கத்தை நிர்ஜரம் என்கிறார். எல்லா வற்றையும் விட்டுவிடுவது. கோபப்படக்கூடாது என்று நீங்கள் போதிக்கப்பட்டிருக்கிறீர்கள். எப்படி கோபப்படாமல் இருப்பது என்பதை நானும் போதிக்கிறேன். கோபமுடையவராயிருங்கள், ஆனால், எதன்மீதும் யார்மீதும் கோபம் கொள்ள வேண்டாம் அது சிக்கலை ஏற்படுத்தும். வெற்றிடத்தில் கோபப்படுங்கள் என்றே நான் சொல்கிறேன். யாருமில்லாத ஆற்றங்கரையில் உங்கள் கோபத்தை வெளிப்படுத்துங்கள். அடங்கிக் கிடந்த கோபத்தை வெளிப்படுத்திய பின் மணலின்மீது விழுகிறீர்கள். நீங்கள் பறந்து கொண்டிருப்பதைக் காண்பீர்கள். ஒரு கணமே யென்றாலும் கடந்தகாலம் மறைந்து விடுகிறது.

கோபம் வெளிப்படுத்தப்பட்டபின் நீங்கள் வருத்தமாய் உணருகிறீர்கள்– அந்த வருத்தத்தையும் அழுகையின் மூலம் வெளிப் படுத்திவிடுங்கள். கண்ணீர்வழிந்தோடட்டும். அழுவதில் எந்தத் தவறும் இல்லை. உலகிலுள்ள நேர்த்தியானவைகளில் கண்ணீரும் ஒன்று. எனவே கடுமை தளர்ந்து, துணிவு நிலையை அடையுங்கள். அழுகை நின்றபின் திடீரென்று வேறொரு உணர்ச்சியைக் காண்பீர்கள். உங்கள் அடியாழத்தில் எங்கோ புன்னகை பரவிக் கொண்டிருக்கும். காரணம், வருத்தம் நீங்கினால் ஒருவர் மகிழ்ச்சியை உணரத் தொடங்குகிறார். சுவாமி சர்தார் குருதயாள் சிங் மாதிரி நீங்களும் வயிறு குலுங்கச் சிரியுங்கள். அவர் நம்முடைய ஆசிரமத்தில் உள்ள கிரேக்கரான சோர்பாதான். எப்படிச் சிரிப்பதென்பதை அவரிடம் கற்றுக் கொள்ளுங்கள்.

மக்கள் சிரிப்பதற்கு அறிவைப் பயன்படுத்துகிறார்கள், நான் சொல்கிறேன் வயிறைப் பயன்படுத்துங்கள் என்று. உரக்கச்

சிரியுங்கள். சிரித்து முடித்ததும் நீங்கள் இலேசாய், எடையற்றவராய் பறப்பதாய் உணர்வீர்கள். முதலில் அது உங்கள் கனவில் தோன்றும். மெள்ள மெள்ள விழித்திருக்கும் நிலையிலம் நீங்கள் நடக்கவில்லை பறக்கிறீர்கள் என்பதை உணர்வீர்கள்.

ஆம், செஸ்டர்டன் 'தேவதைகள் தங்களை இலேசாக உணர முடிவதால் பறக்கின்றன'– என்றது சரிதான்.

உங்களை இலேசாய் கருதிக் கொள்ளுங்கள்.

அகந்தை ஒரு தீவிரத்தன்மையைக் கொண்டிருக்கும். அதில் ஒரு பிரச்சினை இருக்கிறது. அகந்தை உள்ளவர்கள் மதத்தில் ஆர்வம் காட்டுகிறார்கள். உண்மையில் அவர்களால் சமயப்பற்றுடன் இருக்க முடிவதில்லை. தீவிரமில்லாதவர்களால் மட்டுமே சமய நம்பிக்கை உடையவராக முடியும். ஆனால் அவர்கள் சமயத்தில் அக்கறை காட்டுவதில்லை. எனவே ஒரு சிக்கல், பிரச்னை எழுகிறது உலகில். தீவிரமானவர்களும், வருத்தமுற்றவர்களும், சரி நுட்பமில்லாதவர்களும் சமயத்தில் அக்கறை காட்டுவதற்குக் காரணம் சமயம் அவர்களுடைய அக்நதையை ஒரு கொண்டாட்ட மாக்கிவிடுவதால்தான். மற்றவர்கள் எல்லாம் நரகத்துக்குப் போவதாகவும் தாங்கள் மட்டுமே சொர்க்கத்துக்குப் போவதாகவும் அவர்கள் எண்ணிக் கொள்கிறார்கள். ஆனால் இத்தகையவர்கள்தான் உலகில் உள்ள அத்தனை மதங்களையும் பாழாக்கியது.

ஒரு புத்தர் தோன்றுகிறபோதெல்லாம் இவர்கள் ஒன்று கூடுகிறார்கள். அவர் உயிரோடு இருக்கும்போது இவர்கள் அதிகாரம் பண்ண அவர் விடுவதில்லை. ஆனால் அவர் போனபின் அவர்கள் தீவிரமாக மற்றவர்களை ஆட்டிப்படைக்கத் தொடங்கிவிடுகிறார்கள். அப்படித்தான் எல்லா மதங்களும் ஒழுங்குபடுத்தப்பட்டன, பாழ்படுத்தப்பட்டன.

பலமுறை அந்தக் கதையை நான் உங்களுக்குக் கூறி யிருக்கிறேன். ஒரு நாள் புத்தர் தம்முடைய கையில் ஒரு மலருடன் வருகிறார். வந்து அமைதியாய் அமர்கிறார். நிமிடங்கள், மணிகள் என்று நேரம் ஓடிக்கொண்டிருக்கிறது. எல்லாரும் அசவுகர்யமாய், கவலையாய் உணருகிறார்கள். 'அவர் ஏன் பேசாமல் இருக்கிறார்?' அதற்கு முன் ஒரு போதும் அவர் அப்படி இருந்ததில்லையே. அவர்

சொல்வதைக் கேட்க ஆயிரக்கணக்கானவர்கள் கூடியிருப்பதையே மறந்தவராய் அந்தப்பூவையே பார்த்துக்கொண்டிருக்கிறார்! அப்போது மகாகாசியபர் என்கிற சீடர் மட்டும் சிரிக்கிறார், வயிறு குலுங்கச் சிரிக்கிறார். அந்த அமைதியான சூழ்நிலையில் அவருடைய சிரிப்பொலி பரவுகிறது. புத்தர் அவரைப் பார்க்கிறார். தம் அருகே அழைத்து, தாம் கையில் வைத்திருந்த மலரை அவரிடம் கொடுக்கிறார். 'நான் வார்த்தைகளால் சொல்லக்கூடியவைகளை எல்லாம் உங்களுக்குச் சொல்லிவிட்டேன். வார்த்தைகளால் சொல்ல முடியாதவைகளை நான் காசியபனுக்கு கையளிக்கிறேன். சிரித்துக் கொண்டிருக்கிற காசியபனிடம்' என்றார் புத்தர். தம்முடைய மரபுரிமையைச் சிரிப்புக்கு வழங்குகிறாரா? ஆனால், காசியபர் மறைந்துவிடுகிறார். புரிந்து கொள்ள முடியாதவர்கள் ஆட்டிப்படைப்பவராகிறார்கள். புத்தர் மறைந்தபின், மகா காசியபர் பற்றியாரும் கேள்விப்படவில்லை. அமைதியிலும் சிரிப்பிலும் மட்டுமே அறிந்து கொள்ளக்கூடிய வார்த்தைகளால் விவரிக்க முடியாத ஒன்றை புத்தர் அவருக்கு வழங்கினார். பேரமைதியில் இருந்து பெருஞ்சிரிப்புக்கு அது வழங்கப்பட்டது. அவ்வாறே அது பெறப்பட்டது. மகா காசியபருக்கு என்ன ஆயிற்று– புத்தரின் மறைவிற்குப்பிறகு அவர் மறக்கப்பட்டுவிடுகிறார். சிரிப்பை விரும்புகிறவர், தொங்கிப்போன முகத்தை உடைய பைத்தியக்கும்பலில் இருந்து போய்விட்டார். புத்தருடைய வாரிசா புத்த சங்கத்துக்கு தலைமை வகிக்கப்போகிறவர் யார்? சூழ்ச்சித் திறமும் அறிவுக்கூர்மையும் முண்டத் தொடங்கிவிட்டன.

மகா காசியபரைக் காணவில்லை. எங்கானும் செத்துவிட்டிருப்பாரா? புத்தரின் உண்மையான வாரிசு யார்? என்பதை எவரும் அறியவில்லை. அப்போது போதி தர்மர், ஆறு நூற்றாண்டுகளுக்குப் பிறகு சொல்கிறார். 'நான் ஆறாவதாய் வந்திருக்கிறேன்' என்று இடையில் இருந்த நான்கு பேர் யார்? ஆனால் அது ஓர் இரகசியமாகி விட்டது. பேராவல் கொண்ட பைத்தியங்களின் சூழ்ச்சி வலுப்படுகிற போது, சிரிப்பு மறைந்துவிடுகிறது, அது ஓர் இரகசியமாகிவிடுகிறது. மகாகாசியபரிடமிருந்து ஒரு செய்தி வேறொருவனுக்கு சொல்லப் பட்டிருக்கவேண்டும். அவரிடமிருந்து இன்னொருவருக்கு, அடுத்து

ஒருவருக்கு என்று சொல்லப்பட்டு அது போதி தர்மருக்கு வந்து சேர்ந்திருக்கும்.

போதி தர்மர் எதற்காக சீனாவிற்கு சென்றார்? பல நூற்றாண்டு களாகவே புத்த–ஜென் பிரிவினர் இந்தக் கேள்வியைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். அதற்கொரு காரணம் உண்டு. அதை நான் அறிவேன். இந்தியர்களைவிட சீனர்கள் மகிழ்ச்சியானவர்கள். அவர்களுடைய வாழ்க்கை வண்ணமயமானது, உவகை நிரம்பியது. போதி தர்மர் அந்த நீண்ட பயணத்தை மேற்கொள்ள அதுதான் காரணமாயிருந்திருக்க வேண்டும். தம்மோடு சேர்ந்து சிரிக்கக் கூடியவர்களைத் தேடித்தான் அவர் இமயமலைத் தொடரைக் கடந்து அத்தனை தொலைவு சென்றது. இந்தியாவைப் போல் மிகப்பெரிய தத்துவ மேதைகைள சீனா உற்பத்தி செய்திருக்கவில்லை. லாவோட்சு, சுவாங்சு போன்ற ஒரு சில மறைஞானிகளை மட்டுமே அது உருவாக்கியிருந்தது. போதிதர்மர் சீனாவிற்கு சென்றது தீவிரத்தன்மையற்ற, மனத்தெளிவு உடையவர்களைத் தேடித்தான்.

என்னுடைய ஒட்டுமொத்த முயற்சியும் உங்களை தீவிரமற்ற வராக்கி, இலேசாக உணரவைக்கவும் சிரிக்கவைக்கவுந்தான். என்னிடம் வருகிறவர்களில், குறிப்பாக இந்தியர்கள் ‘என்ன மாதிரியான சந்நியாசத்தை நீங்கள் உருவாக்கியிருக்கிறீர்கள். அவர்கள் சந்நியாசிகளைப் போல் காட்சியளிக்கிறார்களா, இல்லையே, ஆடிப்பாடி, ஒருவரையொருவர் கட்டித் தழுவிக்கொள்கிறார்கள். இது நம்பக்கூடியதாக இல்லையே! சந்நியாசிகள் இதையெல்லாம் செய்வார்களா?’– என்று. சந்நியாசி என்றால் தீவிரத்தன்மையோடு, ஒரு சவம்போல் இருக்க வேண்டும் இவர்களுக்கு.

எனவே, வித்யா சிரிப்பதும், மகிழ்ச்சியாயிருப்பதும் விரும்பத்தக்கது. மிகவும் இலேசாகிவிடுங்கள்.

## மூன்றாவது கேள்வி:

**ஒவ்வொரு உரையும் ஊக்கத்தையும் ஆர்வத்தையும் உட் செலுத்துவதாயிருக்கிறது. சில நேரங்களில் நான் குழப்பத்துக் குள்ளாகி விடுகிறேன். எனினும், புதுமையாய் உணர்கிறேன். நான் நேசிப்பதையும், வாழ்க்கையால் நேசிக்கப்படுவதையும்**

**என்னால் உணர முடிகிறது. இருந்தும் தங்களுடைய இனிய தரிசனம் கிடைக்கப்பெற்ற பிறகும் நான் மிகுந்த ஏமாற்றத்தை உணர்கிறேன். தாங்கள் அதைப்பற்றி ஏதேனும் கூறமுடியுமா?**

ப்ராப்தியின் கேள்வி இது.

ஆம், இப்படி ஆகிவிடுவதை நானும் அறிகிறேன். இப்படி நடந்தாக வேண்டியிருக்கிறது. அந்த முறையில் அது நிகழ வேண்டும் என்றே நானும் விரும்புகிறேன். என்னுடைய காலை உரையில், தனிப்பட்ட முறையில் நான் யாரோடும் பேசுவதில்லை. நான் யாருடன் குறிப்பாகப் பேசுவதில்லை, அது உரையாடல்அல்ல. அது உரைக்கப் படுவது, நீங்கள் அதைக் கேட்கிறீர்கள். நான் உங்கள் தலையில் குட்டினாலும், 'நல்லது, பகவான் மற்றவர்களுக்காகவே இதனைச் செய்கிறார்' என்பீர்கள். உங்களால் சாக்குகளைக் கண்டுபிடித்துக் கொள்ள முடிகிறது. எப்போதுமே உங்களைத் தவிர்த்துக் கொண்டு விடுகிறீர்கள்.

ஆனால் மாலைநேர தரிசனத்தின் போது நான் உங்களுடன் தனிப்பட்ட முறையில் பேசுகிறேன். ப்ராபத்தி நான் தனிப்பட்ட முறையில் பேசுகிறேன். அப்போது நான் உங்களைத் தாக்குவதை உங்களால் தவிர்க்க முடியாது. உங்களுக்கு அதிர்ச்சி வைத்தியம் தேவைப்படுகிறது என்பதை நான் அறிவேன், காரணம், உங்களை விழிக்கச்செய்வதற்கு வேறு வழியில்லை.

நான் உங்கள் விரோதியல்ல. உங்கள்மீதுள்ள அக்கறையின் காரணமாகவே உங்களை நான் தாக்குகிறேன். இரக்கவுணர்ச்சியே மோதலை மேற்கொள்கிறது. என்னை நீங்கள் புரிந்து கொண்டால் என்னிடம் நன்றி பாராட்டவே செய்வீர்கள். சின்னதாய் சில கதைகள் சொல்கிறேன் உங்களுக்கு.

ஒருவன் பெரிய பலசரக்கு கடைக்குச் சென்று சில மளிகைப் பொருட்களை வாங்கினான். அவன் சில்லறைக்காகக் காத்திருந்தபோது, அவன் கடை ஊழியரை காலால் உதைத்து விட்டான். அடுத்து அதற்காக மன்னிப்பு கேட்டுக் கொண்டான். நான் வருந்துகிறேன், ஐயா. உணர்ச்சி மிகைப்பில் (nervous) அப்படி நடந்து கொண்டுவிட்டேன்.

'அப்படியானால் ஒரு மருத்துவரை ஏன் பார்க்கக்கூடாது?' பணியாளர் கேட்டார்.

சில நாளைக்கெல்லாம், மறுபடியும் அந்தக் கடைக்குச் சென்றான் அவன். இந்த முறை எவ்வகையிலும் எதுவும் நடக்கவில்லை.

பணியாளர் கேட்டார், 'உங்களுக்குக் குணமாகிவிட்டது என்று நினைக்கிறேன். மனநல மருத்துவரைப்பார்த்தீர்களா?

'ஆமாம்' என்றான் அவன்

'அவர் எப்படி உங்களைக் குணப்படுத்தினார்?' பணியாளர் கேட்டார்.

'நல்லது நான் அவரைக் காலால் உதைத்தபோது அவரும் என்னை பதிலுக்கு உதைத்தார், ரொம்பவும் கடுமையாயிருந்தது.'-

எனவே, என்னிடம் வரும்பொழுது ஒன்றை நினைவில் வையுங்கள். நீங்கள் என்னை உதைத்தால், நான் உங்களைக் கடுமையாய் உதைத்துவிடுவேன். சில நேரங்களில் நீங்கள் உதைக்காவிட்டாலும் நான் உதைக்கிறேன். உங்களுடைய அகந்தை நொறுங்கிவிடும். அதனால்தான் ஏமாற்றம், ஏமாற்றம் அகந்தை யினுடையது, உங்களுடையது அல்ல, உங்களுடைய அகந்தையை நான் அனுமதிப்பதில்லை. நான் நேர் முகமாகவோ மறைமுகமாகவோ உங்களைத் தாங்கி நிறுத்தமாட்டேன். ஆனால், காலை உரைகளில் அது ரொம்பவும் எளிதாயிருக்கும்.

மற்றொரு கதை

அவள் : என்னை நீங்கள் இதயபூர்வமாக, உயிருக்குயிராக நேசிக்கிறீர்களா?

அவன் : ஊம்

அவள் : இந்த உலகிலேயே நான் தான் அழகானவள் என்று நினைக்கிறீர்களா?

அவன் : ஆமாம்

அவள் : என்னுடைய உதடுகள் ரோஜா இதழ்கள், என்னுடைய கண்கள் களங்கமற்ற நீரூற்று, என்னுடைய தலை முடி பட்டு போன்றது என்று நினைக்கிறீர்களா?

அவன் : ம்...

அவள் : ஆகா, வெகு அருமையாகச் சொன்னீர்கள்.

காலை உரையில் அது எளிதாயிருக்கிறது. நான் சொல்வது எதுவாயினும் அதை விரும்பி ஏற்கிறீர்கள். ஆனால் மாலை தரிசனத்தின் போது அது சாத்தியமற்றதாகிவிடுகிறது.

ஆனால் ஒன்றை நினைவில் வையுங்கள் உங்களுக்கு உதவவே நான் உங்களைத் தாக்குகிறேன். அயலாள் ஒருவன் என்னிடம் என்னிடம் வரும்போது நான் அவனைத் தாக்குவதில்லை. உண்மையில் நான் எந்தத் தொடர்பும் மேற்கொள்வதில்லை. காரணம் என்னுடைய தொடர்பு மின் அதிர்ச்சியை ஏற்படுத்துவது போன்றது.

சந்நியாசிகளிடம் மட்டுமே நான் கடுமை காட்டுகிறேன். உங்களுடைய நிகழும் தன்மை (Potentiality) பெரிய அளவில் இருப்பதாலேயே நான் கடுமை காட்ட வேண்டியிருக்கிறது. ப்ராபத்தியின் நிகழும் தன்மை அதிகம். அவரால் வளர்ச்சி அடைந்து, அழகாய் மலர முடியும். ஆனால் கொஞ்சம் தேவையற்றவை களை அகற்றி, அழகூட்ட வேண்டியிருக்கிறது ஆனால், அதில் வேதனை இருக்கும். அந்த வேதனையை உணர்வது நீங்களல்ல, உங்களுடைய அகந்தை. ஒரு நாள் அதில் இருந்து நீங்கள் வெளித் தோன்றுவீர்கள், மேகங்களுக்கப்பால் மேலெழுவீர்கள். அந்நிலையில் என்னுடைய அன்பையும், பரிவையும் நீங்கள் புரிந்து கொள்வீர்கள், அதற்கு முன்பாக அல்ல.

'நாங்கள் சந்நியாசிகளாக இல்லாவிட்டால் எங்களுக்கு உதவமாட்டீர்களா?' என்று மக்கள் கேட்கிறார்கள். நான் உதவத்தயார், ஆனால் அது உங்களுக்குக் கடினமாயிருக்கும். நீங்கள் சந்நியாசி யாக இருந்தால் என்னில் ஒரு பகுதியாகிவிடுவீர்கள். அந்நிலையில் நான்எதைச் செய்ய விரும்பினாலும் என்னால் செய்ய முடியும். நீங்கள் சந்நியாசியாகி விட்டதுமே அதற்கான அனுமதியை எனக்கு வழங்கி விடுகிறீர்கள். அதிகாரத்தை தந்துவிடுகிறீர்கள். 'தற்போது நான் இங்கிருக்கிறேன். விரும்பியதைச் செய்து கொள்ளலாம்' என்று சொல்கிறீர்கள். உண்மையில் உங்களிடம் உள்ள வேண்டாதவைகளை நான் வெட்டியெறிய வேண்டியிருக்கும். அது கிட்டத்தட்ட ஒரு அறுவை சிகிச்சையாகும். பலவற்றை நீக்க வேண்டியிருக்கிறது. புதிதாய் பலவற்றைச் சேர்க்க வேண்டும். உங்களுடைய ஆற்றலை

மறுபடியும் நெறிப்படுத்தும்படி இருக்கும். அது தவறான போக்கில் இருக்கிறது. அதனை புனரமைப்பு செய்யவேண்டும். ஆனால் ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள். பெருங்குழப்ப நிலையில் இருந்தே ஆடிக்களிக்கும் நட்சத்திரங்கள் தோன்றிற்றென்பதை.

**கடைசிக் கேள்வி:**

**'கிழக்கில் ஒருவர் காதல் உறவை ஒருவரிடம் மட்டுமே கொண்டிருக்க வேண்டும் என்று வலியுறுத்தப்படுகிறது. மேற்கில் அவர்கள் ஒன்றில் இருந்து மற்றொன்றுக்கு தாவிக்கொண்டேயிருக்கிறார்கள். நீங்கள் எதற்கு சார்பாக இருப்பீர்கள்?'**

நான் காதலுக்குச் சார்பாக இருப்பேன். நான் அதனை உங்களுக்கு விளக்குகிறேன். காதலுக்கு உண்மையாயிருங்கள், துணைவருக்கல்ல.

துணைவர் ஒருவரோ அதற்கும் மேற்பட்டவரா என்பதல்ல கேள்வி. நீங்கள் நேசிக்காமலே ஒருவருடன் வாழ்கிறீர்கள் என்றால் நீங்கள் இறையாணையை மீறி இருக்கிறீர்கள். ஒருவரை மணந்து கொண்டு, அவரிடம் அன்பில்லாமல், உடலுறவு மட்டும் வைத்துக் கொள்வது அன்பிற்கெதிராக செய்கிற குற்றம். 'அன்பே கடவுள்' என்கிற போது அது இறையாணையை மீறிய செயல்தானே.

சமூகம் சார்ந்த வசதிகளை, சவுகரியங்களை சம்பிரதாயங் களை கருத்தில் கொண்டே அன்புக்கெதிராய் நீங்கள் தீர்ப்பு செய்கிறீர்கள். நீங்கள் காதல் கொண்டிராத ஒரு பெண்ணைக் கற்பழிப்பது போன்றதுதான் அது. கற்பழிப்பு ஒரு குற்றம். அந்தப் பெண் உங்களை நேசிக்கவில்லை, உங்களுக்கும் அவளிடம் நேசம் இல்லை. நீங்கள் அன்பில்லாத ஒரு பெண்ணுடன் நடத்துகிற வாழ்க்கையும் அப்படிப்பட்டதுதான். அது சமூக அங்கீகாரத்துடன் கூடிய கற்பழிப்பு.

ஆக, கிழக்கில் தங்கள் வாழ்க்கை நெடுகிலும் ஒருவரையே வாழ்க்கைத் துணையாய் கொள்வதென்று மக்கள் தீர்மானித்து விட்டிருக்கிறார்கள், அதில் தவறேதுமில்லை. நீங்கள் காதலுக்கு உண்மையானவர் என்றால் ஒருவருடனேயே இருப்பது அருமையான விசயம், காரணம் அது நெருக்கத்தை வளர்க்கும். ஆனால்

தொண்ணூற்றியொன்பது சதவீதம் அன்பில்லாமல் இருப்பதற்கே சாத்தியங்கள் உள்ளன. இருவர் சேர்ந்து வாழ்வதற்கும், அன்பாக வாழ்வதற்கும் வேறுபாடு இருக்கிறது. சேர்ந்து வாழ்வதில் அன்பிருக்கும் என்று சொல்வதற்கில்லை. நீங்கள் நேசிக்கிற ஒருவருடன் வாழ்க்கை முழுவதும் ஒன்றாக வாழ முடிந்தால் அந்த நேசம் ஆழமானதாகிவிடும், ஆழ்ந்த விதத்தில் உங்கள் உணர்ச்சிகளை நீங்கள் வெளிப்படுத்த முடியும். துணைவரை (partner) நீங்கள் அடிக்கடி மாற்றிக் கொண்டிருந்தால் அது சாத்தியமில்லை. அது ஓரிடத்தில் இருந்து வேறு இடத்திற்கு ஒரு மரத்தை இடம் பெயரச் செய்ததாகவே இருக்கும். ஒரே இடத்தில் இருந்தால்தான் மரம் நிறைய வேர்விட்டு நிலைக்க முடியும். நெருக்கம் நல்லது, ஒரே உறவுடன் வாழ்வது நேர்த்தியான விசயந்தான் ஆனால் அடிப்படையில் அன்பு இன்றியமையாதது. அப்போதுதான் அது வலிமையுடன் திகழ முடியும். பாறைகளின் நடுவே ஒரு மரம் வேரூன்றி நிலைக்க முடியாது, காரணம், பாறைகள் மரத்தைக் கொன்றுவிடும், அந்நிலையில் அதை அகற்றி விடுவதே நல்லது.

மேற்கில், மக்கள் உறவுகளை மாற்றிக் கொண்டேயிருக்கிறார்கள். அன்பு இரண்டு வழிகளிலும் கொல்லப்படுகிறது. கிழக்கில், மாற்றிக் கொள்ளத் தயங்கியே அவர்கள் அன்பைக் கொன்றுவிடுகிறார்கள். மேற்கில்தொடர்ந்து ஒருவருடன் நீண்டகாலம் வாழ்வதற்கு அஞ்சியே அன்பைக் கொன்றுவிடுகிறார்கள். நீண்ட காலம் ஒன்றாக வாழ்கிறபோது அதில் பொறுப்பேற்பு (Commitment) ஏற்பட்டுவிடும். பொறுப்பை ஏற்பதற்கு முன்பே, மாறிவிடவேண்டும், வாழ்க்கைத் துணையை மாற்றிக் கொண்டுவிட வேண்டும் அவர்களுக்கு. அங்கே சுதந்திரம் என்கிற பெயரில் அன்பு நசுக்கப்பட்டு விடுகிறது. அன்பு இருவகையிலும் துயருறுகிறது. கிழக்கில் பத்திரத்தன்மை, சவுகரியம், சம்பிரதாயம் இவற்றை மக்கள் இறுகப்பற்றிக் கொண்டு விடுகிறார்கள். மேற்கில் அகந்தை தன் செயலைத் தானே முடிவு செய்து கொள்ளும் போக்கு.

நான் அன்புக்கு அனுகூலமானவன். நான் கிழக்கையோ மேற்கையோ சார்ந்தவன் அல்ல. நான் எந்தவொரு சமூகத்துக்கும் சொந்தமானவன் அல்ல. நான் அன்புக்கு அனுகூலமானவன்.

எப்போதும் நினைவில் வைத்திருங்கள்: அன்புடன் கூடிய உறவே நிறைவளிக்கும்.

அன்பில்லாதவருடன் தொடர்ந்து வாழ வேண்டும் என்பதில்லை. மாற்றிவிடுவது நல்லது. ஆனால் மாற்றிக் கொண்டேயிருக்கும் போக்கிற்கு அடிமையாகி விடக்கூடாது. மாற்றிக் கொண்டிருப்பதையே பழக்கமாய் கொள்ளக்கூடாது. இரண்டு அல்லது மூன்று வருடங்களுக்கு ஒரு முறை காரை மாற்றுகிற எந்திரகதியில் அதைக் கொண்டுவிடக்கூடாது. ஒரு புதிய மாடல் வந்ததும் நீங்கள் காரை மாற்றுகிறீர்கள். ஒரு புதிய பெண்ணை எதிர்கொள்கிறீர்கள். அதில் பெரிய வேறுபாடு எதுவும் இல்லை. பெண் பெண்தான், ஆண் ஆண் தான். வேறுபாடு இரண்டாம்பட்சம் காரணம் அது ஆற்றல் குறித்த பிரச்சனை. பெண்ணின் ஆற்றல் ஒரு பெண்ணுக்குரியதாகவே இருக்கும். ஒவ்வொரு பெண்ணிலும் எல்லாப் பெண்களும் உருப் படுத்தப்படுகிறார்கள். ஒவ்வொரு ஆணிலும் எல்லா ஆண்களும் உருப்படுத்தப்படுகிறார்கள். வேறுபாடுகள் மேலோட்டமானவை. என்ன மூக்கு கொஞ்சம் நீண்டிருக்கும் அல்லது நீளமற்றதாயிருக்கும். தலைமுடி செம்பட்டையாகவே வெளிறியோ இருக்கும். மேற்பரப்பில் சின்னச்சின்ன வேறுபாடுகள். அடியாழத்தில் ஆண், பெண் ஆற்றல் தான் பிரச்சினை. எனவே அன்பிருந்தால் அதில் நிலைத்திருங்கள், அது வளரட்டும்.

அது வளர்வதற்கு ஒரு சந்தர்ப்பத்தைக் கொடுங்கள். ஆனால் அதில் அன்பில்லை என்றால், அன்பில்லாத வாழ்க்கைக்கு அடிமையாகு முன்பே உறவை மாற்றிக்கொண்டு விடுங்கள்.

ஓர் இளம் மனைவி பாவமன்னிப்பு கேட்கும் கூண்டில் நின்று கொண்டு, கருத்தடை மாத்திரைகள் பற்றி பாதிரியாரிடம் கேட்டாள். பாதிரியார் சொன்னார், 'நீ அவற்றை பயன்படுத்தக்கூடாது– அவை கடவுளின் கட்டளைக்கு எதிரானவை. ஒரு கிளாஸ் தண்ணீர் குடித்துவிடு' என்று.

'முன்பாகவோ அல்லது பின்பாகவோ?' என்று கேட்டாள் அந்த இளம் மனைவி.

'பதிலாக' என்றார் பாதிரியார்.

கிழக்கிந்திய முறையைப் பின்பற்றுவதா, மேற்கத்திய முறையைப் பின்பற்றுவதா என்று நீங்கள் என்னிடம் கேட்கிறீர்கள். இரண்டும்

அல்ல. கடவுளின் முறையைப் பின்பற்றுங்கள். கடவுளின் முறை என்ன? அன்புக்கு உண்மையாய் நடந்து கொள்வது. உங்கள் மனைவியிடம் உங்களுக்கு அன்பில்லை என்றால் அவளைத் தீண்டாதீர்கள், அது அத்துமீறல் ஆகும். நீங்கள் நேசிக்காத ஒரு பெண்ணுடன் படுக்கையைப் பகிர்ந்து கொள்ளாதீர்கள். அது அன்பின் விதிக்கு மாறானது. நீங்கள் அன்பு கொண்டிருக்கும் பட்சத்தில் எல்லாவற்றுக்கும் அனுமதி உண்டு.

அகஸ்டினிடம் யாரோ கேட்டார்கள். 'நான் படிப்பறிவு இல்லாதவன், என்னால் மறைநூல்களையே, புராணங்களையோ, வாசிக்க முடியவில்லை. சின்னதாய் ஒரு செய்தியை எனக்கு வழங்குங்கள். நான் ஒரு முட்டாள், ஞாபகசக்தி இல்லாதவன், எனவே சாரத்தை எனக்கு சுருக்கமாய் சொல்லுங்கள். நான் அப்படியே அதைக் கடைப்பிடிப்பேன்' என்று. அகஸ்டின் பெரிய தத்துவ ஞானி, சிறந்த அருட்தொண்டர், அருமையான சொற்பொழிவுகளை வழங்கியிருக்கிறார். ஆனால், சாரத்தை சுருக்கமாய் சொல்லும்படி யாரும் அவரிடம் கேட்டிருக்கவில்லை. அவர் கண்களை மூடி மணிக்கணக்கில் ஆழ்ந்த சிந்தனையில் இருந்தார்'. அந்த மனிதன் அவரிடம்; தயவு காட்டுங்கள். நீங்கள் கண்டுபிடித்துவிட்டிருந்தால் உடனே சொல்லுங்கள்; போய்விடுவேன். நான் மணிக்கணக்கில் காத்திருக்கிறேன்' என்றான். அகஸ்டின் அவனிடம் சொன்னார்; எனக்கு ஒன்றுதான் தோன்றுகிறது. அன்பு. அது இருந்துவிட்டால் எல்லாமே இசைவாகிவிடும்' என்று.

இயேசு கூறினார். 'கடவுள் அன்பின் வடிவம்' என்று.

நான் உங்களுக்குச் சொல்கிறேன், கடவுளைப் பற்றிய எல்லாவற்றையும் மறந்துவிடுங்கள். அன்பாயிருங்கள், அதுவே போதுமானது. நீங்கள் அன்பைக் கணக்கில் கொண்டால் எல்லாமும் சாத்தியமாகிவிடும்.

முதலாவது, அன்பில்லாத ஒருவருடன் உறவுவைத்துக் கொள்ளாதீர்கள். வெறும் இச்சைக்கு முக்கியத்துவம் அளிக்கக்கூடாது. ஓர் ஆழமான தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளும் பக்குவம் உங்களிடம் இருக்கிறதா? காரணம், அந்தத் தொடர்பு உங்களுடைய ஒட்டு மொத்த வாழ்க்கையையுமே மாற்றிவிடும். ஒரு தொடர்பை ஏற்படுத்திக் கொள்கிற போது அது உண்மையாயிருக்க வேண்டும்

என்பதைக் கருத்தில் கொள்ளுங்கள். எல்லா முகமூடிகளையும் கழற்றி எறியுங்கள். உங்கள் இதயத்தை முழுமையாய் வெளிப் படுத்துங்கள். காதல் கொண்ட இருவரிடையே எவ்வித ஒளிவுமறைவும் இருக்கக்கூடாது. இல்லையேல் அது காதலாக இருக்காது. எல்லா இரகசியத் தன்மைகளையும் விட்டுவிடுங்கள். இரகசியம் என்றாலே சூழ்ச்சி. அது காதலில் இருக்கக்கூடாது. நீங்கள் எதையும் மறைக்க வேண்டியதில்லை. உங்கள் மனதில் தோன்றுகிற எதுவும் உங்கள் பிரியமானவருக்கு தெளிவாகக் காணும்படி இருக்க வேண்டும். இருவரும் ஒருவருக்கொருவர் வெளிப்படையாகிவிட வேண்டும்.

புறத்தேயிருக்கும் பெண்ணைச் சந்திப்பதன் மூலம் உண்மை யிலேயே அவளைச் சந்தித்து காதலித்து, அவளுடைய இருப்புணர்வில் உங்களை ஒப்படைத்து, படிப்படியாய் அவளில் கரைந்து மறைவதன் மூலம் நீங்கள் மெள்ள மெள்ள உங்களுக்குள் இருக்கும் பெண்ணை எதிர்கொள்கிறீர்கள், நீங்கள் அவ்வாறே உள்ளிருக்கும் ஆணை எதிர் கொள்கிறீர்கள். வெளியே இருக்கும் ஆண் உள்ளிருக்கும் ஆணுக்கு பாதையாகிறான். உங்களுக்குள் இருக்கும் ஆணும் பெண்ணும் கூடுகிற போது உச்சக்கட்ட பரவசம் (Orgasm) உண்டாகிறது. அதுவே இந்திய அர்த்தநாரீஸ்வர தத்துவத்தின் அடையாளக் குறிப்பாகும். பாதி ஆணும் பாதி பெண்ணுமான சிவனை நீங்கள் பார்த்திருக்க வேண்டும். ஒவ்வொரு ஆணும் அரை வாசி ஆணும் அரைவாசி பெண்ணுமாக இருக்கிறான். ஒவ்வொரு பெண்ணும் சரிபாதி பெண் சரிபாதி ஆணாக இருக்கிறாள். அது அப்படித்தான், காரணம் உங்கள் இருப்புணர்வில் பாதியை உங்கள் தந்தையிடம் இருந்தும் பாதியை உங்கள் தாயிடம் இருந்தும் நீங்கள் அடைந்திருக்கிறீர்கள்.

நீங்கள் இரண்டுமாக இருக்கிறீர்கள். ஒரு உள்ளார்ந்த பரவச நிலை, உள்ளார்ந்த சந்திப்பு, உள்ளார்ந்த சேர்க்கை தேவைப்படுகிறது. ஆனால், அந்த உள்ளார்ந்த சேர்க்கை நிகழ வேண்டுமாயின் உள்ளி ருக்கும் பெண்ணுடன் எதிர்ப்புச் செயல்புரியும் ஒரு பெண்ணை உங்களுக்குப் புறத்தே நீங்கள் கண்டடைய வேண்டும். அவள் உங்களுடைய இருப்புணர்வில் ஏற்படுத்தும் அதிர்வில் உங்களுக்குள் அயர்ந்தபடி இருக்கும் பெண் விழிப்படைவாள். அதே போலத்தான் பெண்ணுக்கும்.

ஆக, உறவு நீண்ட காலம் நீடிப்பது நல்லது, காரணம் உள்ளிருக்கும் பெண் விழித்துக்கொள்வதற்குக் கொஞ்சம் அவகாசம் தேவைப்படும். மேற்கில்'சந்திப்போம் பிரிவோம்' சமாசாரம் என்பதால் உள்ளிருக்கும் பெண்ணுக்கு நேரம் இருந்திருக்காது, உள்ளிருக்கும் ஆணும் விழிப்படைந்திருக்கமாட்டான். அவனுடைய உணர்வு கிளர்ச்சி அடைகிறபோது அவள் இருக்கமாட்டாள். இன்னொருத்தி எதிர்படுவாள். இன்னொரு அதிர்வு. நீங்கள் பெண்களை மாற்றிக் கொண்டே போனால் உணர்ச்சி மிகைப்பு (neurotic)க்குள்ளாவீர்கள். என்பதே உண்மை. காரணம் பற்பல செய்கைகள், பற்பல சப்தங்கள் உங்கள் இருப்புணர்வுக்குள் நுழையும். அதிர்வுகளும் பல்வேறு தன்மை கொண்டனவாகி உங்களுடைய உள்ளிருக்கும் பெண்ணை நீங்கள் கண்டடைய முடியாமல் போய்விடும். நீங்கள் மாற்றத்துக்கு அடிமையாவது மட்டுமே சாத்தியமாயிருக்கும். மாற்றம் மகிழ்ச்சி தரும் என்றாலும் பிறகு நீங்கள் மறைந்து போவீர்கள்.

புறத்தேயிருக்கும் பெண் உள்ளிருக்கும் பெண்ணை அடைவதற்கு வழியாயிருக்கிறாள், அதே போன்று வெளியே இருக்கும் ஆண் உள்ளிருக்கும் ஆணை அடைய வழியாயிருக்கிறான். இறுதியான யோகா உங்களுக்குள் நிகழ்கிறது. அது நிகழும்போது நீங்கள் அத்தனை ஆண்கள் மற்றும் பெண்களில் இருந்து விடுபட்டவராவீர்கள். பிறகு – நீங்கள் ஆண் பெண் என்கிற நிலைகளுக்கப்பால் சென்று விடுவீர்கள். அந்நிலையில் நீங்கள் இரண்டில் எதுவாகவும் இருப்பதில்லை. இது எல்லை கடந்த சிறப்பு ஆகும். இதுவே பிரும்மச்சர்யமும் ஆகும். அப்போது உங்களுடைய தூய்மையான பூர்வநிலையை மறுபடியும் நீங்கள் அடைகிறீர்கள். உங்களுடைய அசலான பண்பு மறுபடியும் பெறப்பட்டுவிடும். பதஞ்சலியின் சொல்லாட்சியில் அது 'கைவல்யம்' எனப்படும்.